# முன்னுரை

தமிழக வரலாற்றிலேயே சங்க காலம் ஒரு பொற்காலமாகத் திகழ்வதைக் காணலாம். அக்காலம் இற்றைக்கு ஈராயிரம் ஆண்டுகட்கு முற்பட்டது. சங்க கால மக்களின் அகவாழ்வையும், புறவாழ்வையும் ஒரு சேரக் காட்டும் காலக் கண்ணாடியாக, மனித இனத்தின் படப்பிடிப்பாகப் பத்துப்பாட்டும், எட்டுத் தொகையும் சிறந்து விளங்குகின்றன. இச் சங்க இலக்கியங்களில் புனைந்துரை குறைந்து உள்ளது உரைத்தல் மிகுந்துள்ளது என்பதைப்,

*"பத்துப்பட் டாதிமனம் பற்றினார் பற்றுவரோ*
*எத்துணையும் பொருட்கிசையும் இலக்கணமில் கற்பனையே"*

(மனோன்மணீயம் - தமிழ்த்தாய் வணக்கம், தாழிசை - 10)
என்னும் பேராசிரியர் சுந்தரம் பிள்ளையின் கூற்றும் வெளிப்படுத்தும். மனிதனுடைய உள்ளத்தில் எழுகின்ற சிறந்த சிந்தனைகள் எல்லாம் சங்க காலத்திலேயே தோன்றியுள்ளன எனலாம்.

சங்க நூல்களை அடிக்கடி ஆர்வத்துடனும், ஊக்கத்துடனும் கற்றதன் பயனாக, சங்க காலச் சமுதாயத்தையும், சமுதாயத்தில் தனிமனிதனின் தன்மைகளையும் அப்படியே தர இயலும் என்று என் உள்ளத்தில் தோன்றிய எண்ணத்திற்கு, முனைவர் பட்டம் முயற்சி தந்தது. எனவே சங்க காலத்தில் இருந்த தமிழ்ச் சமுதாய நிலையினையும், மனிதநல மேம்பாட்டினையும், மனித நல பண்பாட்டுக் கூறுகளையும் எடுத்துரைக்க இயலும் என்ற நோக்கத்தில் 'சங்க இலக்கியங்களில் மனிதநேயம்' என்ற தலைப்பில் இவ்வாய்வினை மேற்கொண்டேன். சங்க இலக்கியங்கள் பேசும் மனிதநேயக் கருத்துகளை ஆய்வதன் மூலமாக, சங்கத் தமிழர் தம் பண்பாடு, இவ்வாய்வால் போதருமாதலின் அதனை உலகிற்கு உணர்த்துதலும் இவ்வாய்வின் நோக்கமாகும்.

இவ்வாய்வை நிகழ்த்துவதற்குச் சங்க இலக்கிய ஆய்வு முன்னோடி நூல்களாகப் பல ஆய்வேடுகள் வெளிவந்துள்ளன. எனினும் சங்க இலக்கியங்கள் உணர்த்தும் மனிதநேயத்தைப் பற்றி இதுவரை ஆய்வேடாகத் தனித்து வரவில்லை. இவ்வகையில் இவ்வாய்வு முதல் முயற்சியாகும். 'சங்க இலக்கியங்களில் மனிதநேயம்' என்பது ஆய்வுக்குரிய தலைப்பாயினும், இங்குப் பத்துப்பாட்டு, எட்டுத் தொகை ஆகிய சங்க நூல்களும், இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்பினர் ஆதலின், இலக்கியம் கூறும் செய்திகளே இலக்கணங்களும் உரைக்கின்றன என்பது பற்றித் தொல்காப்பியம்

என்ற இலக்கண நூலும், ஆய்வுக் கருத்துகளை நிறுவுவதற்குக் கொள்ளப்பட்டன.

இவ்வாய்வேடு முன்னுரையும், ஐந்து இயல்களும் நிறைவுரையுமாகப் பகுத்து அமைக்கப்பட்டுள்ளது. இவற்றுள் ஐந்து இயல்களாவன:

1. மனிதநேயம் - ஒரு விளக்கம்
2. வாழ்வியற் கூறுகளில் மனிதநேயம்
3. அரசியல் கூறுகளில் மனிதநேயம்
4. சமூகவியல் கூறுகளில் மனிதநேயம்
5. இறையியல் கூறுகளில் மனிதநேயம்

என்பதாகும்.

முதல் இயலில் மனிதனின் வரலாறு, மனிதப் பிறவி ஏதேனும் ஒன்றிலிருந்தே தோன்றியிருத்தல் வேண்டும் என்பது, மனிதனின் தோற்றம், மனித விளக்கம், மனிதப் பிறவியின் நோக்கம், மனிதப் பிறவியின் சிறப்பினைக் கூறுகின்ற சான்றோர் கருத்துகள், தொல்காப்பியம், திருக்குறள் முதலான நூல்கள் சுட்டுகின்ற பகுத்தறிவு உடையவர்கள் மக்கள், அஃது இல்லாதவர்கள் மாக்கள் என்ற இரண்டிற்குள்ள வேறுபாடு முதலான செய்திகளை எடுத்துரைக்கின்றன.

மனிதம் என்ற சொல்லே (Humanism) என்பதற்கு இணையாகக் கையாளப்படுகிறது. என்சைக்ளோப்பிடியா அமெரிக்கானா என்ற ஆங்கில அகராதி, டாக்டர் ஏ.சி. செட்டியாரின் ஆங்கில - தமிழ் அகராதி, பால்ஃபசல் என்ற ஆங்கில அறிஞரின் அகராதி, பகவத் கீதை போன்றவை 'மனிதம்' என்ற சொல்லிற்குரிய பல்வேறு விளக்கங்களைத் தருகின்றன. அகஸ்டே. டி. தாந்தே, க.த. திருநாவுக்கரசு போன்ற பெரியோர்களும் 'மனிதம்' என்பதற்குப் பல்வேறு விளக்கங்களைக் கொடுத்துள்ளனர்.

தியாகம், வாய்மை, மனத்தூய்மை, பொறுமையின் இயல்பு, பொறுமை- பொறாமை இவை இரண்டிற்குமுள்ள வேறுபாடு, ஆத்ம சக்தி பெறுதல், மெய்வழி நிற்றல், அன்பு, அடக்கம், உள்ள நிறை, உண்மை முதலான மனிதநேயப்பண்புகளும், உண்மையைக் கடைப்பிடிப்பவர்களுள் மார்க்கண்டேயர், பிரகலாதன், அரிச்சந்திரன், லோக்தரர், புத்தர், முகமது, கிறிஸ்து ஆகியோர் உணர்த்திய மனிதநேயமும் எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

இரண்டாவது இயலில், சங்க அக இலக்கியங்களில இடம் பெற்ற அகத்திணை மாந்தர்கள் தங்கள் வாழ்க்கையில் கடைப்பிடித்த மனிதநேயத்தைப் பற்றி இயம்புகிறது.

அறத்தொடு நிற்றல் என்ற துறையில் உயர்ந்த தன்மையை குறிஞ்சிப் பாட்டு கொண்டும். பெண்கள் போர்க்களம் புகுந்து சுதந்திர வாழ்வு நடத்திய பான்மையை முல்லைப் பாட்டு கொண்டும், தமிழர் தம் எல்லார்க்கும் எல்லாம் என்னும் பொதுவுடைமைப் பண்பும் சங்க கால மக்கள் வாழ்வியலில் மேற்கொண்ட மனிதநேயக் கருத்துகளாகத் திகழ்வதைக் காணலாம்.

அன்பின் பண்பு, தலைவி, தலைவன்மீது கொண்ட அன்பு, கணவனைப் போற்றும் பண்பு, பிரிவில் ஆற்றியிருக்கும் மனப்பாங்கு, தலைவியின் அரும் உள்ளம், தலைவன் தலைவி மீது கொண்டுள்ள நேயம், தலைவியைச் சிறப்பிக்கும் பண்பு, தலைவனின் அருள் உள்ளம், தலைவன் பிற உயிர்களிடத்துக் கொண்ட இரக்கம், அறிவாற்றல், சொல்வன்மை, இடித்துரைக்கும் பண்பு, தலைவனின் உளப்பாங்கை அறிதல் முதலான பண்புகளை உடைய தோழியின் அன்பின் ஆழம் ஆகிய இவற்றின் மூலம் அகவாழ்வில் ஒருவருக்கொருவர் காட்டிய மனிதநேயம் புலப்படுத்தப்பட்டுள்ளன.

தலைவிக்கு உணவூட்டும் தாய்மை, தலைவியின் பிரிவினைத் தாங்காமை போன்ற பண்புகளில் சிறந்த செவிலித்தாயின் அன்பின் ஆழம், பரத்தமை ஒழுக்கம், பெண்ணுக்குப் பெண்ணின் மேல் பரிவு காட்டும் தன்மை, இருவரையும் சந்து செய்விக்கும் பாணன் பெறுமிடம், அஃறிணை உயிர்களிடத்து நிலவிய நேயத்தைக் கண்டு தலைவன் திருந்துவது, உயிர்களின் இன்ப நுகர்ச்சிக்கு இடையூறு ஏற்பட்டு விடக் கூடாது என்பதன் அடிப்படையில் நிகழும் அருள் உணர்வு ஆகியவற்றின் மூலம் மனிதநேயம் உரைக்கப்பட்டுள்ளது.

இல்லறச் சிறப்பில் மகளிரின் விருந்தோம்பல் பண்பு, தலைவன், தலைவியின் கடமை, கருத்தொருமித்த ஒன்றுபட்ட அன்பு, தலைவி இல்லிற்குப் பெருமை சேர்க்கும் பண்பு, துயரை மறைக்கும் மாண்பு, தன்னலமற்றதன்மை, நட்பின் பெருமை, இல்லற அறத்தில் கற்புநெறிபேணும் குலமகளிரின் ஒழுக்கம், மங்கல மனையறம், இல்லற இன்பத்தில் அடைந்த மகிழ்ச்சி முதலான இல்லற வாழ்க்கையில், ஒருவர் மீது மற்றொருவர் காட்டிய மனிதநேயம் பற்றிய செய்திகள் உணர்த்தப்பட்டுள்ளன.

சங்க காலத் திருமணத்தில் காதலின் பெருமையும், நட்பின் திறனும் உடன்போக்குத் திருமணத்திலும், ஆயர்களின் வீரமும், அஞ்சாமையும், தலைவியின் காதல் திண்மையும் ஏறுதழுவி திருமணம் செய்து கொள்வதிலும், இருமனமும் இணைந்து சென்ற எழிற் காட்சியினைப் பெற்றோர் முடித்து வைக்கும் திருமணத்திலும் காண முடிகிறது.

அகத்திணை மாந்தர்களிடையே நிலவிய மனிதநேயமும், இழிந்தோர் காதல் வாழ்வில் மேற்கொண்ட மனிதநேயமும் அன்னைக்கும், தந்தைக்கும் இணைப்புப் பாலமாக விளங்கும் மழலையிடத்துக் கொண்ட நேயமும் போற்றப்பட்டுள்ளன.

வாழ்வியில் கூறுகளில் நம்பிக்கைகள் மூலம் உணர்ந்த மனிதநேயம், கயமைப் பண்புடையவர்கள், விலங்குகளின் அன்பு வாழ்க்கை இவற்றின் மூலம் மனிதநேயத்தை உணர்த்துதல், உவமை, உள்ளுறை, இறைச்சி வாயிலாக அறக்கருத்துகளை வெளிப்படுத்தி மனிதநேயத்தை உணர்த்துதல், பண்டைத் தமிழரின் அறம் தோய்ந்த நெஞ்சின் ஆழம், மனிதர்கள் எப்படி வாழவேண்டும் என்று அறிவுரை கூறும் பாடல்கள், வாழ்வியல் தத்துவத்தின் மூலம் மனிதநேயத்தை உணர்த்தும் முறை போன்ற மனிதநேயக் கருத்துகளும் இடம் பெற்றுள்ளன. இவ்வாறு மனிதர்கள் மனிதர்களிடத்துக் காட்டும் நேயமும், மனிதர்கள் மற்ற உயிர்களிடத்துக் காட்டும் நேயமும் இவ்வியலில் சிறப்பாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

மூன்றாவது இயலில் அரசர், அமைச்சர், புலவர், வீரர்கள், வீரமகளிர் ஆகியோர் அரசியலில் கடைப்பிடித்த மனிதநேயம் பற்றிக் கூறப்பட்டுள்ளன. சங்ககால அரசர்கள் கடமையில் கொண்ட ஈடுபாடு, போர், கொடை இவற்றின் மூலம் மனிதநேயத்தை சமுதாயத்திற்கு உணர்த்தினர். சங்க கால அரசனுக்குரிய இயல்புகள் வள்ளுவரின் இலக்கணத்திற்கு வரம்பாக அமைகிறது. அக்கால அரசியலில் மக்களின் நன்மை கருதி நேர்மைக்கும், நீதிக்கும் உட்பட்டு மனிதநேயத்தோடு ஆட்சி புரிந்தனர். நடுவு நிலைமை தவறாத உள்ளம், இறைமாட்சி, அரசியலுக்கு அடிப்படையாக அமைந்த அருட்பண்பு, அரச குணங்கள், அரச உரிமை, சான்றாண்மைப் பண்பு, அறம் தழுவிய மனிதநேயம், வஞ்சினம் கூறுதல் ஆகியவற்றின் மூலம் மனிதநேயம் அரசியல் வாயிலாக உணர்த்தப்பட்டுள்ளன.

நாட்டின் அமைதியை அறம் வளரும் அரசியல் முறையால் குடிமக்களின் வாழவினைக் காக்கப் பெரிதும் முயன்றுள்ளனர். அமைச்சர்கள் நாட்டிற்குச் செய்து வந்த தொண்டு, அமைச்சர் பெருமை, அரசனிடத்தில் ஏற்பட்ட மதிப்பு, அரசருக்கும், அவருக்கும் இடையே உள்ள உறவு, அவ்விருவரும் கடைப்பிடிக்க வேண்டிய நெறிமுறைகள் போன்ற செய்திகளின் மூலம் அரசருக்கும், அமைச்சருக்கும் இடையே நிலவிய மனிதநேயம் பற்றிக் கூறுகிறது.

அக்காலப் புலவர்கள் தம் நலனையோ, இன்பத்தையோ கருதி, மன்னர்களின் புகழ்பாடியே, காலம் தாழ்த்தாது குற்றத்தை மன்னர் முன்னிலையில் எடுத்துக் கூறும் மனத்திண்மை பெற்றிருந்தனர். புலவர்களின் பரிசில் வாழ்க்கை, நடுவுநிலை தவறாப் பண்பு, மன்னர்களைத் திருத்தும் கடமை, செல்வத்துப் பயன் ஈதலே என்ற பண்பினை எடுத்துரைத்தல், புலவர்கள் உணர்த்தி புரவலர்கள் உணர்ந்த தன்மை, செய்ந்நன்றி போற்றியமை, வடதிசை நோக்கி உயிர் துறந்த தன்னலமற்ற பண்பு, பொது நலத்தை விரும்பியமை, ஆகிய பண்புகளின் வாயிலாக அரசியல் சிறந்த முறையில் நடைபெறுவதற்கான மனிதநேயக் கூறுகளை எடுத்துரைக்கின்றன.

வீரர்கள், போரில் கடைப்பிடித்த மனிதநேயம், அரசர்களிடத்துக் காட்டிய நேயம், அவர்களின் வீர நெஞ்சம், வீரத் தாய்மார்களின் தன்னலமற்ற குணம், சமுதாய உணர்ச்சி, அரசியல் உணர்ச்சி, நாட்டுப்பற்று, ஒற்றுமையின் உயர்வு ஆகியவற்றின் மூலம் இவ்வியலில் மனிதநேயம் உணர்த்தப்பட்டுள்ளது.

நான்காவது இயல், சங்ககாலச் சமுதாயத்தில் ஐவகை நிலத்தைத் தவிர, தொழிலால் மட்டுமே பிரித்துக் காட்டப்பெற்ற பிரிவினர், பாணர், கூத்தர், பொருநர் போன்ற கலைப் பெருமக்களும் இருந்தமை, அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற நால்வகை வருணத்தாருள் அந்தணர்கள் உயர்ந்த நிலையில் இருந்த தன்மை, அந்தணர் மீது கொண்ட நேயத்தினால் மன்னர்கள் கூட அவர்களுக்குத் துன்பம் செய்யாமை போன்ற செய்திகளைக் கூறுகின்றன.

அறத்தில் மனிதநேயம், தாய், தந்தை, கொல்லன், வேந்தன், காளை ஆகியோர் கடமைகளில் கொண்ட மனிதநேயம், அவலச் சுவை மூலம் சமுதாயத்திற்கு மனிதநேயத்தை உணர்த்துதல், நட்புணர்வில் மனிதநேயம், வஞ்சப் புகழ்ச்சியில் மனிதநேயம், நிலையாமைப் பொருளில் மனிதநேயம், ஊழ் வினையில் மனிதநேயம், பொது வாழ்வில் மன்னர்கள் குடிமக்களிடத்தும், இரவலர்களிடத்தும் கொண்ட மனிதநேயம், ஆற்றுப்படை இலக்கியங்கள் உணர்த்தும் மனிதநேயம், உலகளாவிய மனிதநேயம் போன்ற பல்வேறு வகைகளில் மனிதநேயக் கருத்துகள் சமுதாயத்தில் மலர்ந்திருப்பதை இவ்வியலில் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

புலவரின் தனி உரிமை, தனி வாழ்வு, அவர்களின் செந்நெறி, தன்மானம், புலவரைப் புலவர் போற்றும் பண்பு, பெண்பாற் புலவர்களின் பண்பு நலன், முதலான புலவர்களின் மனிதநேயமும், இவர்கள் சமுதாயத்திற்கு உணர்த்திய மனிய நேயமும்

விளக்கப்பட்டுள்ளன. சமுதாயம் தழுவிய பண்பு, விருந்தோம்பும் பண்பு, அருள், அறிவு, அறம் இவற்றின் மூலம் மனிதநேயத்தை உணர்த்துதல், இரக்க உணர்வு, மானப்பண்பு, சங்க காலக் கல்வி மூலம் சமுதாயத்திற்கு மனிதநேயத்தை உணர்த்தும் பாங்கு, முதலான வாழ்க்கை நிகழ்ச்சிகளில் சங்ககால மக்கள் பின்பற்றிய மனிதநேயத்தினால் சங்ககாலச் சமுதாயம் சிறந்து விளங்கியிருப்பது இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளன.

ஐந்தாவது இயலில், சங்க காலத்தில் எல்லோர்க்கும் சம உரிமையை நாட்டுவதே இறையியல் கொள்கையாக மேற்கொள்ளப்பட்டமையும், சங்கப் பாடல்களில் கடவுட் கருத்துகளும், இறை உணர்வுகளும் ஆங்காங்கே காணப்படுவதால் அவற்றின் மூலம் மனிதநேயமும் தெளிவுறுத்தப்பட்டுள்ளன. இறையியல் மூலம் முருகன், திருமால், சிவபெருமான், கொற்றவை, திருமகள் போன்ற பல்வேறு கடவுளர்களின் வழிபாட்டினால் மனிதநேயத்தை உணர்ந்த தன்மையை இவ்வியலில் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. இந்திரன், வருணன், பிரமன், அறக்கடவுள், பாம்பு வழிபாடு, கூற்றுவன், மலையுறை தெய்வம், நீர்த்துறைக் கடவுள், பாவை வழிபாடு, கடல் தெய்வம், மாலை நேர வழிபாடு, இயற்கை வழிபாடு, நடுகல் வழிபாடு, மனிதநேயத்தால் கொண்டிருந்த தெய்வ நம்பிக்கை, போன்ற பல்வேறு வகையான வழிபாட்டு முறைகளில் சங்க கால மக்கள் கடைப்பிடித்த மனிதநேயக் கருத்துகளையும் எடுத்தியம்புகின்றன.

அந்தணர் பள்ளியில் அந்தணர்கள் துறவு மேற்கொண்டு பொதுப்பணி ஆற்றிய தன்மை, சமணர் பள்ளியாகிய அமண் பள்ளியில் சமணர்கள் புரிந்த தொண்டு, அரசர்கள் யாகம் செய்வதற்கு அந்தணர்கள் உற்றதுணையாக இருந்தமை அக்கால அரசர்களை இயற்கை தெய்வங்கட்குப் புலவர்கள் ஒப்பிட்டுக் கூறுவதிலிருந்து அரசனை தெய்வமாகப் போற்றிய பண்பு, சங்க கால மக்கள் தெய்வங்கட்குச் சிறப்பும், பூசனையும், திருவிழாவும் செய்து மனிதநேயத்தை வளர்த்த செயல், அவர்கள் இறைவன் மீது கொண்ட அளவற்ற பக்தியாகிய அன்பு, அரசநீதியில் இறைமைப் பண்புகளைக் காண்பது, நல்லற வேந்தனை மனிதத் தெய்வமாகப் போற்றுவது, அறம் தழுவா அரசன் அழிவான் என்று எச்சரிப்பது, இறை நம்பிக்கையின் மூலம் மனிதநேயம் வளர்ந்த நெறி ஆகிய செய்திகளைப் பற்றி இவ்வியலில் விரிவாக ஆராயப்பட்டுள்ளன.

இவ்வாய்வேட்டின் நிறைவுரையில் ஐந்து இயல்களிலும் கூறப்பட்ட மனிதநேயக் கருத்துகளைப் பற்றிய ஆய்வு முடிவுகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. பின்னர் துணை நூற்பட்டியலில் இவ்வாய்வுக்குப் பயன்பட்ட முதன்மை நூல்கள், துணை நூல்களின் நூற் பட்டியல் தரப்பட்டுள்ளன.

பண்புகளைக் காண்பது, நல்லற வேந்தனை மனிதத் தெய்வமாகப் போற்றுவது, அறம் தழுவா அரசன் அழிவான் என்று எச்சரிப்பது, இறை நம்பிக்கையின் மூலம் மனித நேயம் வளர்ந்த நெறி ஆகிய செய்திகளைப் பற்றி இவ்வியலில் விரிவாக ஆராயப்பட்டுள்ளன.

இவ்வாய்வேட்டின் நிறைவுரையில் ஐந்து இயல்களிலும் கூறப்பட்ட மனித நேயக் கருத்துகளைப் பற்றிய ஆய்வு முடிவுகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. பின்னர் துணை நூற்பட்டியலில் இவ்வாய்வுக்குப் பயன்பட்ட முதன்மை நூல்கள், துணை நூல்களின் நூற் பட்டியல் தரப்பட்டுள்ளன.

# மனிதநேயம் - ஒரு விளக்கம்

மனிதன் என்பவன் உடல், உள்ளம், உயிர், இறை ஆகிய இவை அனைத்தும் சேர்ந்த ஒருவன் ஆவான். அவன் தன்னந்தனியனாய் வாழ்வதில்லை. மண், கல், செடி, கொடி, மீன், பாம்பு, விலங்கு முதலிய சூழல்களிடையே வாழ்கின்றான். மனிதனுக்கும், அவனைச் சூழ்ந்து நிற்பனவற்றிற்கும் உள்ள தொடர்பை அறிவதற்கு மனிதனின் தோற்றத்தைப் பற்றித் தெரிதல் வேண்டும். மனிதனின் வரலாறு கடல் போலப் பரந்து நிற்கிறது.

**மனிதனின் தோற்றம்**

உலகத்தில் எந்த ஒரு பொருளும் திடீரென்று புதிதாகத் தோன்றுவது கிடையாது. அதேபோல மனிதப் பிறவியும் திடீரென்று தோன்றியிருக்காது. ஒன்றிலிருந்து ஒன்று தோன்றுவது இயற்கை. புதுமையான தனித்த தோற்றம் எதற்கும் கிடையாது. ஆகவே மனிதப் பிறவி ஏதேனும் ஒன்றிலிருந்தே தோன்றியிருத்தல் வேண்டும். அவ்வொன்றுதான் விலங்காகிய குரங்கு.

மனிதன் தன்னைச் சூழ்ந்துள்ள ஒவ்வொன்றாய், படிப்படியாய் வளர்ந்தவன். பின்னர் குரங்காகி அதையும் கடந்து முதிர்ந்தவன். இதுவே மனிதத் தோற்றத்தின் வரலாற்றுச் சுருக்கம் என்று கூறலாம். இதனால் மனிதனுக்கும், அவன்தன் சூழல்கட்கும் உள்ள தொடர்பு நமக்குத் தெரிய வருகிறது.

இத்தொடர்பைக் காணும் அளவில் மனிதனின் முயற்சி நின்றதில்லை. அவனுடைய முயற்சி மேலும் மேலும் வளர்ந்து சென்றது. மற்றொரு தொடர்பு மனிதனுக்குத் தென்பட்டது. அத்தொடர்பு மனிதன் - அவனுடைய சூழல் முதலிய அனைத்துத் தோற்றத்திற்கும் நிலைக்களனாய் இருப்பது. எல்லாவற்றிற்கும் நிலைக்களனாய் உள்ள ஒன்றே இறை என்பது. இறை என்பது மனிதன் உள்ளிட்ட எல்லாவற்றிலும் நீக்கமற நிற்கும் தொடர்பு கொண்டது. இறைத் தொடர்பற்ற உயிரும், பொருளும், இடமும் எதுவுமில்லை.

இத்தகைய ஒரு பெரும் தொடர்பைத் தெளிந்த மனிதனுக்கு ஏதாவது ஒன்று வேறாகத் தோன்றாது. ஏதாவது ஒன்றிற்கு தீங்கு செய்வதாயிருந்தால் அவன் மனம் எழாது. அருளறம் இன்னதென்று அவனுக்குப் புலனாகும். இப்போது மனிதன் என்பவன் யாரென்று சற்று நினைத்துப் பார்த்தால் அவன் தனியாக வாழ்பவன்

அல்லன். அவன் மண் முதல் - இறை வரை தொடர்பு உடையவன். மனிதன் அருள், அறநெறியில் நிலைத்து நிற்பவன். சிறந்த அருளாளன். எனவே, மனம் உடையவன் மனிதன் ஆவான்.

அருளறம் சிறந்து விளங்குவதற்கு ஏதுவாக இருப்பது மனிதப்பிறவி. இப்பிறவி மிகச் சிறந்த பிறவியாகும். உலகத்தில் தோன்றிய அறிஞர்கள் பலரும் 'மனிதப்பிறவி விழுமியது' என்று ஒருமுகமாக உரைத்துப் போந்தனர்.

**மனிதப் பிறவியின் சிறப்பு**

மனிதப் பிறவியின் சிறப்பைக் குறித்து எல்லா இடத்திலும் ஒரே கருத்து நிலவுதல் வெள்ளிடைமலை. இஃது ஒன்றே மனிதப் பிறவியின் சிறப்பை உறுதி செய்வதற்குத் தக்க சான்றாகும். இந்த ஒருமித்த கருத்து நம் தமிழ்ச் சான்றோர் மனத்திலும் மலர்ந்திருப்பதைக் காணலாம்.

> *"மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே"*[1]
>
> *"இன்னம் பாலிக்கு மோவிப் பிறவியே"*[2]
>
> *"அரிது அரிது மானுடராதல் அரிது"*[3]

பற்பல பிறவிகளுள் மனிதப்பிறவி மட்டும் சிறந்து விளங்குவதற்குக் காரணம், அப்பிறவியில் அருளறம் செய்வதற்குக் கருவி, கரணங்கள் அமைந்திருப்பதால் அப்பிறவி சிறந்ததாகத் திகழ்கின்றது.

உலகத்தில் உயிர்கள் பல திறத்தன. அவற்றில் எந்த விதமான வேறுபாடும் இல்லை. உயிர்கள் அனைத்தும் உடலைப் பெற்ற பின்னரே அவைகளிடத்துப் பலவிதமான வேற்றுமைகள் உருவாகின்றன. வேற்றுமை உயிரைப் பற்றியும், உடலைப் பற்றியும் நிற்கவில்லை. அது உயிரும், உடலும் ஒன்றுபட்டு வாழ்க்கை நடத்தும் காலத்தே உண்டாகிறது. உயிரும் உடலும் ஒன்றுபடும் காலத்து அறிவு விளக்கம் பெறுகின்றது. அவ்வறிவு உயிர்கள் புகும் உடலுக்கேற்றவாறு படிப்படியாக விரிந்து வளர்கிறது. இதனால் தான் உயிர்களின் கூட்டம் ஆறு பிரிவாக நம் முன்னோரால் பிரிக்கப்பட்டுள்ளது என்பது தெரிகிறது.

தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் மரபியலில் உயிர்கள் ஆறு வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளதைக் காணலாம்.

*"ஒன்றறி வதுவே உற்றறி வதுவே*
*இரண்டறி வதுவே அதனொடு நாவே*
*மூன்றறி வதுவே அவற்றொடு மூக்கே*
*நான்கறி வதுவே அவற்றொடு கண்ணே*
*ஐந்தறி வதுவே அவற்றொடு செவியே*
*ஆறறி வதுவே அவற்றொடு மனனே*
*நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத் தினரே'*[4]

அவை ஓரறிவு உயிர்களாகிய தாவரங்கள் முதல் ஆறறிவு உயிர்களாகிய மனிதர் ஈறாக உள்ளன. அவ்வுயிர்களின் அறிவு விளக்கத்தில் முறையாக வேற்றுமை இருப்பதைக் காணலாம். மனிதனுக்கு அடுத்தபடியாக உள்ள விலங்குகட்கு ஐந்தறிவு உண்டு. மனிதனுக்கோ ஆறறிவு உண்டு. ஆறாவது அறிவே மன உணர்வு எனப்படும். இவ்வுணர்வு விலங்குகளிடத்தும், ஏனைய உயிர்களிடத்தும் முழுமை பெறாமல் இருக்கும். அவ்வுணர்வு மனிதப் பிறவியில் தான் சிறந்து விளங்குவதைக் காணலாம். எனவே, மன உணர்வு உடையோன் மனிதனாவான்.

சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐந்தறிவும் மனிதனுக்கும், விலங்குக்கும் பொதுவாய் இருப்பன. பகுத்தறிவு என்னும் மன உணர்வு மனிதப் பிறவியில் மட்டும் சிறந்து நிற்பது. இவ்வொன்றை மனிதன் சிறப்பாகப் பெற்றிருத்தலால், அவன் விலங்கைக் காட்டிலும் மேலாகப் போற்றப்படுகிறான். மனித உடலைப் பெற்றவர்கள் அனைவரிடத்திலும் பகுத்தறிவு இருப்பதில்லை. அப்பகுத்தறிவு விளங்கப்பெறுவோர் பலர் அதன்வழி நின்று நடப்பதில்லை. இவ்விரு சாராரும் ஓரினத்தவரே ஆவர். இவரல்லாத பிறரே மனிதராவர்.

**மக்கள் - மாக்கள்**

இக்காரணம் பற்றியே மனித உருவம் பெற்றவர்கள் இருவகையாகப் பிரிக்கப்பட்டுள்ளனர். ஒரு பிரிவினர் மக்கள். மற்றொரு பிரிவினர் மாக்கள். மன உணர்வு என்னும் ஆறாவது அறிவாகிய பகுத்தறிவு உடையவர் மக்கள். அஃது இல்லாதவர் மாக்கள். இதனை,

*"மக்கள் தாமே ஆறறி வுயிரே*[5]
*மாவும் மாக்களும் ஐயறி வினவே'*[6]

என்றார் தொல்காப்பியர். வரலாற்றுக் காலத்திற்கு முன்னரே நம் தமிழ் மக்கள் மெய்ப்பாட்டாலும், அகத்திணையாலும் உயிர்களின் அகப்புற நிகழ்ச்சிகளையும் அறிந்து, உயிர்க் கூட்டங்களை அவைகளின் அறிவு விளக்கத்திற்கு ஏற்றவாறு வகுத்துத் தொகுத்திருப்பதைக் காணலாம். மனிதப் பிறவியில் சிறந்து விளங்கும் மன உணர்வு என்னும் ஆறாவது அறிவுவழி நின்று ஒழுகுவோரே மனிதர் ஆவர். ஏனையோர் விலங்கு அனையராவார். இதனை,

> *"விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்*
> *கற்றாரோடு ஏனை யவர்'*[6]

என்றார் பொய்யாமொழிப் புலவர்.

**மனிதம் - சொல்விளக்கம்**

தமிழ் மொழியில் சொற்களை உருவாக்கும்போது பலவகையில் அறிஞர்கள் உருவாக்குகின்றனர். அதாவது, புதிதாக ஒரு சொல்லை தோற்றம் பெறச் செய்தல், இருவகைச் சொற்களை இணைப்பது, விகுதிகளைச் சொற்களின் இறுதியில் சேர்ப்பது முதலான பல வகைகளிலும் புதிய சொல்லாக்கம் செய்கின்றனர்.

ஆங்கிலச் சொற்களைத் தமிழில் மொழிபெயர்க்கும்போது சில விகுதிகளை இணைத்துச் சொல்லாக்கம் செய்கின்றனர். அதாவது (driver, conductor, director, supervisor போன்ற) சொற்களுக்கு இணையான தமிழ்ச் சொற்களை ஆக்கும்போது (or, er என்ற) ஆங்கில விகுதிகளுக்கு ஏற்ப 'அர்' என்ற தொழிற்பெயர் விகுதியை இணைத்து ஓட்டுநர், நடத்துநர், இயக்குநர், மேற்பார்வையாளர் போன்ற சொற்களை ஆக்கம் பெறச் செய்துள்ளனர். இதைப்போலவே பின்னொட்டுச் சொல்லாகிய (logy என்ற) ஆங்கில விகுதிக்கு ஏற்ப 'இயல்' என்ற விகுதியை ஈற்றில் அமைத்து (Archaeology, Indology, Tamilology, Sociology முறையே) தொல்லியல், இந்தியவியல், தமிழியல், சமூகவியல் முதலான சொற்களைப் பெற வைக்கின்றனர்.

இங்கு ('Humanism') என்ற ஆங்கிலச் சொல்லின் ஈற்றில் உள்ள ('ism') என்ற விகுதிக்கேற்ப 'அம்' என்ற விகுதியைச் சேர்த்து 'மனிதம்' என்ற நிலையில் இச்சொல் கையாளப்பட்டுள்ளது என்று கூறலாம். திரு. வி. கல்யாணசுந்தரனார் 1959 ஆம் ஆண்டிலேயே 'பொதுமை வேட்டல்' என்னும் கவிதைத் தொகுப்பில் ('Humanism') என்பதற்கு 'மனிதம்' என்ற சொல்லைக் கையாண்டுள்ளார். டாக்டர் க.த. திருநாவுக்கரசு அவர்களும், 'தமிழ் நிலவு' என்னும் நூலில் (Humanism என்பதற்கு)

'மனிதம்' என்பதையே கட்டுரைத் தலைப்பாகப் பயன்படுத்தியுள்ளார். எனவே, 'மனிதம்' என்ற சொல்லே (Humanism) என்பதற்கு இணையாகக் கையாளப்படுகிறது.

**மனிதம் - பல்வகை விளக்கம்**

1. 'என்சைக்ளோப்பிடியா அமெரிக்கானா' என்ற ஆங்கில அகராதியில், 'மனிதம்' என்பதற்குத் தரப்பட்டுள்ள விளக்கம் வருமாறு:[7]

> *''கிரேக்க உரோமானிய இலக்கியத்தின் புதிய மறுமலர்ச்சிக்குக் கலை, இலக்கியத் தொடர்புடைய புதிய மறுமலர்ச்சி 'மனிதம்' என்றே கூற வேண்டும். மறுமலர்ச்சி என்பது உண்மையில் இங்கு மறுமலர்வுக்காகவே ஏற்பட்டது.*
>
> *மனிதன் சுயமாகத் தன் சிந்தனையில் மனதைச் செலுத்தி நல்லது, தீயது போன்றவற்றைத் தானே நிர்ணயம் செய்தல். மதத்தின் உதவியோ, மற்றொன்றின் தேவையோ இன்றித் தானே தனித்துச் சுதந்திரமாகப் பொறுப்புணர்ச்சியுடன் சிந்தித்து மனித மதிப்பீடுகளை வளர்த்தனர். அதனால் இந்தப் பழமையான கிரேக்க உரோம இலக்கியங்களை மனிதப் பண்புகளுக்கு இடம் தந்த ஒரு மறுமலர்ச்சியாகவே கருதினர்.*
>
> *பதினைந்தாம் நூற்றாண்டில் வழங்கி வந்த ('Humanista') என்ற இத்தாலி மொழிச் சொல்லிலிருந்து ('Humanism') என்ற ஆங்கிலச் சொல் படைத்துக் கொள்ளப்பட்டது. மனிதன் சம்பந்தப்பட்ட செய்திகளைக் கற்றுத் தருகின்ற ஆசிரியனை 'ஹ்யூமனிஸ்டா' என்றனர். 'மனிதம்' என்பது பழமை வாய்ந்த கிரேக்கத்தைப் போல பழமையான இன்றைய இருபதாம் நூற்றாண்டில் புதுமையுடையதாய் விரிந்த பொருளில் பயன்படுகிறது.*
>
> *தேர்ந்தெடுத்துச் செயல்களைச் செய்வதற்கு மனிதன் மட்டுமே துணையாகிறான். அதாவது அவனுடைய உண்மை நெறிக்கு இயல்பாக உள்ள பகுத்தறிவு தான் கைகொடுக்கிறது. அந்தப் பகுத்தறியும் திறன்தான் அவனுக்கு ஆதாரம். மற்ற எந்த*

*வெளியுலக ஆதாரத்தையும் அவன் ஏற்பதில்லை. மனிதம் மதம், அறிவியல், குறிப்பிட்ட அரசியல் அமைப்பு போன்றவற்றைச் சார்ந்தும், சாராமலும் இருத்தல் உண்டு. ஆனால், இவற்றைச் சார்ந்துதான் இருக்க வேண்டும் என்ற கட்டாயமில்லை. மனிதம் எதையும் சார்ந்திராது. தனித்துச் சுதந்திரத்துடன் கல்வியறிவோடு செயல்படுவது என்று ஆங்கில அகராதி விளக்கம் தந்துள்ளது.*

2. ஆங்கில - தமிழ் அகராதியில் டாக்டர் ஏ.சி. செட்டியார் தரும் விளக்கம் பின்வருமாறு:

   *''மனித இனநலக் கோட்பாடு, மனித உலக வாழ்க்கை இயல், மனிதப் பொதுமை நல இயல், மனித இன பொதுச் சமய அமைதி, மனித இன இயல் பண்பாய்வுத்துறை, பண்டை கிரேக்க, உரோமக் கலை இலக்கியப் பண்பு.''*[8]

3. மனிதத் தன்மை, மனிதப் பற்றுக்கோட்பாடு என்று ஆங்கிலத் தமிழ் கையகராதியில் கா. அப்பாதுரை அவர்கள் பொருள் தருகின்றார்.[9]

4. பால் ஃபசல் (Paul Fussell) என்ற ஆங்கில அறிஞர் The Rhetorical World of Augustae Humanism - என்ற நூலில் [10] 'மனிதம்' என்பதற்குப் பின்வரும் விளக்கங்களைக் கூறுகின்றார்.

   அ. தொல்லைகளும், தோல்விகளும் மனித இனத்திலிருந்து பிரிக்க முடியாதவை. அதனால் மனிதாபிமானி எல்லா மனிதச் சிக்கல்களுக்கும் விடைகாண முடியும் என்று நம்புவதில்லை.

   ஆ. பர்க் (Burke) என்ற அறிஞர் கூறுவதுபோல மனிதாபிமானி தன் கற்பனை வளத்தை மிகவும் அதிகமான முறையில் ஆக்கபூர்வமான செயல்களுக்கே பயன்படுத்துவான். ஆதலால் அவனுடைய கற்பனைத் திறனும், ஆக்க சக்தியும் இன்றியமையாத பண்புகளாகும்.

   இ. மனிதாபிமானி, ஒழுக்க நீதியை அறிவுறுத்துவதையே தனது முதல் கடமையாகக் கொள்கிறான். விளக்கிக் கூறுவதை விடவும் அறிவுறுத்துதலையே முதல் கடமையாகக் கொள்கிறான்.

ஈ. மனிதாபிமானி, மனிதனது இயல்பான பண்பு எத்தகைய ஆற்றல் படைத்ததாக இருந்தாலும் அது மாசு படிந்ததாகவே உள்ளது. அதாவது, தீய எண்ணங்களைச் சுலபமாக நினைத்துச் செயல்படக் கூடியதாக உள்ளது. ஆனால், அவனுக்குரிய சிறப்பான பண்பு அதை எதிர்த்துச் செயல்படுவதில் தான் உள்ளது.

உ. மனிதாபிமானி, மனிதன் தன் குறைகள் உள்ள இயற்கையினாலும், அதன் விளைவுகளாலும், பாதிக்கப்படுவதினால் பிறகு அதிலிருந்து திருத்த முயலும் பண்பு இருப்பதாலும், அவனுடைய இலக்கியத் தொடர்பு ஒழுக்க நெறியைப் பற்றி இருந்ததே தவிர, மன மகிழ்ச்சியைப் பற்றி அவ்வளவாக இல்லை. அவனது இலக்கியம் கலையைப் பற்றியதாக இருந்ததும் அதற்கு அடுத்தபடியாகத்தான்.

ஊ மனிதாபிமானி, மனித இனம் ஒரு தனிச்சிறப்புடையதாகக் காண்கிறான். மற்ற இனங்களை விட முற்றிலும் மாறுபட்டதாகவே காண்கிறான்.

எ. மனிதன் ஒருவன் தான் சிரிக்கிறான்; அழுகிறான்; வெட்கப்படுகிறான்; காறி உமிழ்கிறான். அவன் ஒருவன்தான் நிமிர்ந்து நிற்கிறான். இந்த மனிதன் ஒருவன் தான், பொது இடங்களில் பெண் இனத்துடன் கூடுவதில்லை.

ஏ. மனிதன் ஒருவனுக்குப் பரிதாபத்திற்குரிய திறமைகள் எதுவெனில் நினைவாற்றல், நம்பிக்கை, முன்னோக்கிப் பார்த்தல், பின்னோக்கிப் பார்த்தல், இல்லாதவற்றைக் குறித்து ஏங்குதல் என்பனவற்றைக் கூறி மேலும் பல விளக்கங்களையும் தந்துள்ளார்.

அடுத்து, அகஸ்டே டி. தாந்தே என்பவர் ''மனித இன நலத்தை மையமாகக் கொண்டு அமைவதே மனிதம்''[11] என்ற கருத்தைத் தெரிவிக்கின்றார். ''மனிதம் என்பது ஒரு வாழ்க்கை நெறி. மனிதப் பண்புகளை மதித்துப் போற்றுகின்ற ஒரு நெறி. மனித உரிமைகளைப் போற்றிக் காக்கின்ற ஒரு நெறி...''[12] என்று டாக்டர் க.த. திருநாவுக்கரசு அவர்கள் 'மனிதம்' என்பதற்கு விளக்கம் தருகின்றார். இப்படிப் பலரும் 'மனிதம்' என்பதற்குப் பல்வேறு வகையான விளக்கங்களைத் தந்துள்ளனர்.

**பகவத்கீதை கூறும் விளக்கம்**

> *"அபயம் ஸத்வஸம் சுத்திர் ஞானயோகவ் யவஸ்திதி!*
> *தானம் தமஸ்ச யக்ஞஸ்ச் ஸ்வாத்யா யஸ்தப ஆர்ஜவம்!!*
> *அஹிம்ஸா ஸத்யமக்ரோ தஸ்த்யாக! சாந்திரனபசுனம்!*
> *தயா பூதேஷ் வலோலுப்த்வம் மார்தவம் ஹ்ரீரசாபலம்!!*
> *தேஜ! ஷமாத்ருதி! சௌசமத்ரோஹோ நாதி மானிதா!*
> *பவந்தி ஸம்பதம் தைவீமபிஜா தஸ்ய பாரத!!*[13]

> *"அஞ்சாமை, உள்ளத்தூய்மை, ஞானயோகத்தில் உறுதி, ஈகை, தன்னடக்கம், யாகம், சாஸ்திரம் படித்தல், தபசு, நேர்மை, தீங்கு இழையாமை, உண்மை, சினமின்மை, துறவு, அமைதி, கோள் சொல்லாமை, உயிர்களிடத்து இரக்கம், பிறர் பொருள் விரும்பாமை, இனிமை, நாணம், மனம் சலியாமை, தைரியம், பொறை, மன உறுதி, தூய்மை, வஞ்சகமின்மை, செருக்கின்மை ஆகிய இவைகள் தெய்வ சம்பத்துடன் பிறந்தவனுக்கு இயல்பாகின்றன"*[14]

என் பகவான் நல்ல செயல்களைப் பற்றிக் கூறுகிறார். இத்தகைய மனநிலை உடையவனை தெய்வ சமபத்துடன் பிறந்தவன் என்று மதிப்பிடுகிறார். இவ்வாறு மனித நேயத்தைப் பற்றி பகவத்கீதை விளக்கமாகக் கூறுகின்றது.

**மனம் என்பதன் விளக்கம்**

மனித வாழ்விற்கு அடிப்படையாக அமைந்து மனிதனை இயக்கிக் கொண்டிருப்பது மனமாகும். மனத்தை மனிதன் பெற்றிருப்பதாலேயே அவனால் மன்னுதலாகிய நிலை பேறுடைய செயல்களைச் செய்ய இயலுகின்றது. ஏனைய உயிரினங்களைக் காட்டிலும் உயர்ந்து நிற்க முடிகின்றது. எனவேதான் தொல்காப்பியர்,

> *"ஆறறி வதுவே அவற்றொடு மனனே"*[15]

என மனத்திற்குச் சிறப்பளித்துச் செல்கின்றார். உலகில் தோன்றும் உயிரினங்களில் நிலைபேற்றை அடையும் தகுதி மனித உயிர்க்கு மட்டுமே உண்டு. அதனை அவன் மனத்தின் மாண்பினாலேயே அடைய முடிகின்றது. நினைத்தல், சிந்தித்தல் போன்ற செயல்கள் எல்லாம் மனத்தால் நிகழ்கின்றன. மனத்தின் செயல்களே வினை

ஆற்றலுக்கு அடிப்படையாதலால் மனத்தின் நல் எண்ணங்களை உருவாக்கப் பழகிக் கொள்ள வேண்டும். 'மனம்போல் வாழ்வு' என்ற முதுமொழியில் நல் எண்ணங்களை வளர்த்தலே சிறப்பாக வேண்டப்படுகிறது.

**சிந்தனை**

மனத்தின் செயலாகிய 'சிந்தித்தல்' என்ற தொழிற்பெயரின் அடியாக இச்சொல் தோன்றியிருக்க வேண்டும். சிந்தித்தல் என்பது பொதுவாக 'ஆழமாக நினைத்தல்' என்ற பொருளில் இன்று வழக்கில் உள்ளது. சிந்தையிலிருந்து தோன்றும் உண்மைகளின் முடிபுகளையே 'சிந்தனை' என்கிறோம். சிந்திக்கும் ஆற்றல் மனிதனுக்கு உரியது. தெளிந்த மனநிலையும், மதி நுட்பமும் வாய்க்கப் பெற்றவர்களுக்கே சிந்தனை செய்யும் ஆற்றல் அமையப்பெறும். மனித சிந்தனையின் பயனால் தான், இன்றைய அறிவியல் சாதனைகளை எட்ட முடிந்திருக்கிறது. கனவு நனவாகும் நிலை சிந்தனையால் செயல்படுத்தப் பட்டிருப்பதனை அன்று பாரதியார்,

*"சந்திர மண்டலத்தியல் கண்டு தெளிவோம்"*[16]

என உரைத்தமையினை இன்றைய ஐரோப்பியர் சந்திரமண்டலத்தியல் கண்டு உணர்த்திய தன்மை கொண்டு அறிய முடிகின்றது.

மனிதனின் எண்ணங்கள் தான் மனிதனை உருவாக்குகின்றன. மனிதனுக்கு எண்ணங்கள் காலம், இடம், சூழல் ஆகிய காரணிகளால் மாற்றம் பெறுவதுண்டு. எண்ண அமைப்பு முறைதான் வெற்றிக்கு வழி வகுக்கின்றது. அதேபோல் எண்ணங்களை ஒருமுகப்படுத்தும்போது தான் பயன் கிடைக்கிறது. நம் எண்ணங்கள் விதைகள் என்றால் நாம் செய்யும் செயல்கள் எண்ணங்களின் கனிகள் எனலாம். சிந்தனைகள் தான் உணர்ச்சியாக உடலில் மாறுகின்றன. ஆகவே நாம் பயன்தரும் சிந்தனைகளை மேற்கொள்வதன் மூலம் நினைப்பதைச் சாதிக்க முடிகின்றது.

**மனித விளக்கம்**

ஆறாவது அறிவைப் பெற்று அதன்வழி நிற்கும் மனிதன் தன் உயிரைப் போலவே மன்னுயிரையும் மதிப்பான். இரக்கமே அவன் உள்ளத்தில் குடிகொண்டு நிலவும். அவன் தனக்கென்று வாழாமல் தன் வாழ்க்கை 'மற்றவர்க்கே' என்று அவன் கருதுவான். மனிதன் என்பவன் கொலை, களவு, கள், காமம், பொய் என்னும் ஐம்பெருங்குற்றங்களுக்கு அஞ்சுபவன். அவன் செயல்கள் எல்லாம் அன்பு

வண்ணமாகப் பொலியும். விலங்குகளின் இயல்பு மனிதனிடத்தில் தோன்றுவது அருமை. அப்படிப் பட்டவன் பிற உயிர்களின் துன்பத்தைத் தன் துன்பமாகக் கருதுவான். இத்தகைய இயல்புகள் வாய்ந்த ஒருவனையே மனிதன் என்று கூறலாம்.

மனிதப் பிறவி எடுத்தவர்கள் தமது உடலையே பொருளாகக் கொண்டு, தன்னலம் கருதி உலகத்தில் வாழ்தல் தவறு. அங்ஙனம் வாழ்பவர் விலங்குக்கு ஒப்பாவார். அவர்கள் மாக்கள் எனப்படுவர். அந்தக் கூட்டம் உள்ளவரை உலகத்தில் போரும், சண்டை சச்சரவும், நியாய மன்றங்களும், சிறைக்கூடங்களும், மருத்துவ மனைகளும் இவை போன்ற பிறவும் பெருகிக் கொண்டே போகும். இப்போது பாரில் பலர் மனிதச் சட்டை போர்த்து விலங்குகளாகத் திரிதல் உள்ளங்கை நெல்லிக்கனி. அவர்கள் இன்னும் மனிதராய் வாழவில்லை.

உலகத்தில் மாக்கள் கூட்டம் அருகி, மக்கள் கூட்டம் பெருக வேண்டுமென்றால், அது மனிதனின் முயற்சியைப் பொறுத்து நிற்பது. மனிதனுடைய முயற்சி என்றால் கடவுள் என்ன செய்கிறார் என்று சிலர் கேட்கலாம். எனவே, கடவுள் துணையை அடைய வேண்டுவது பகுத்தறிவு பெற்றுள்ள மனிதனுடைய கடமையாகும். உயிர், உடல் போலக் கடவுளும், இயற்கையும் இருக்கின்றன. இயற்கையின் வழி மனிதன் செல்லச் செல்ல அவன் இறைவனின் அருட் துணையைப் பெற்று அருளாளன் ஆகின்றான். இயற்கைக்கு மாறுபட்டு நிற்பவன் இறைவனுடைய துணை பெறாது மருளனாய்த் துன்பப்படுவான். மற்றவரையும் துன்பப் படுத்துவான்.

எனவே, உலகம் முழுமையும் இயற்கையைப் பின்பற்றி நிற்கும் நாள் எந்நாளோ, அந்நாளே அருள் உலகம் முழுமையாக மலரும் நாளாகும். அந்நாளை மிக விரைவாகக் காணவேண்டுமென்றால் அது மனிதன் கொள்ளும் வாழக்கையைப் பொறுத்து அமைகிறது.

## மனிதப் பிறவியின் நோக்கம்

மனித உருவ, உடல் பெற்ற அளவில் ஒருவனது பிறவி நோக்கம் நிறைவேறி விடாது. மனிதப் பிறவியின் நோக்கம் உயிரை, அறியாமை என்னும் கட்டினின்றும் விடுதலை செய்து, அதை அருள் நெறியில் நிறுத்தி, முழுமையான அறிவுநிலை என்னும் கடவுள் நிலையை அதற்குக் கூட்டுதல் வேண்டும். இதுவே வீடுபேறு என்று அழைக்கப்படும். உலகத்தில் உள்ள எல்லா உயிர்களும் இயற்கையோடு இயைந்த வாழ்க்கையில் ஈடுபட வேண்டும். அப்போதுதான் இயற்கையாகிய தாய்

தண்ணருள் ஈந்து அவனது அறியாமையை முற்றும் போக்குவாள். இயற்கைத்தாயின் துணையால் பெற்ற பகுத்தறிவு விளக்கத்தை வேறு செயற்கைத் துறைகளில் செலுத்தும் மனிதன் முழு அறிவு விளக்கத்திற்கு அவளது திருவருளைப் பெற முடியாது. அவன் பிறவி நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ள முடியாத மறவோன் ஆகி விடுகிறான். பிறவியின் நோக்கத்தை நிறைவேற்றுவதற்கு உடலோம்பல் மிகவும் இன்றியமையாதது.

ஆகவே, மனிதன் பிறவியின் நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ள வேண்டுமென்றால், இயற்கையோடு இயைந்த வாழ்க்கையினை மேற்கொள்ள வேண்டும். மனிதனுக்குரிய வாழ்க்கை எப்படி இருக்க வேண்டும் என்று சிறிது சிந்தித்துப் பார்த்தோமானால், இயற்கையானது தன்னலம் கருதாது பிற உயிர்கள் மீது அருளைச் செலுத்துவது போல, இயற்கையோடு இயைந்து வாழும் மனிதனும், தனக்கென வாழாது பிறர்க்கென வாழ வேண்டும். இதுவே மனிதனுக்குரிய அருள் நெறியாகும். மீண்டும் பிறவாத நெறியை விரும்பி அதைப் பெறுவதே பிறவியின் நோக்கமாகும்.

உலகத்தில் உள்ள சிறந்த நூல்களுள் பகவத்கீதையும் ஒன்று. அந்நூலின் திரண்ட கருத்து, உலகத்தில் மனிதன் தன்னலம் கருதாது, பிறர்நலம் கருதி வாழ வேண்டும் என்பதாகும். 'நாம் பிறர்க்காக வாழ்கிறோம்' என்ற எண்ணம் கொண்டு வாழ்வதே ஞானியின் இயல்பாகும். மனிதன் எந்த ஒரு செயலைச் செய்தாலும் அவ்வினையின் பயன் பிறர்நலம் நாடியதாக இருக்க வேண்டும்.

ஒருவன் திருமணம் செய்தலும், பிள்ளை பெறுதலும்கூட தம் பொருட்டு என்று அவன் நினைக்கக் கூடாது. எவன் ஒருவன் காம விருப்பத்திற்கென்று பெண்ணை விரும்பித் திருமணம் செய்கிறானோ அவன் நரகத்தை அடைவான் என்றும், எவன் ஒருவன் பிள்ளைப்பேறு கருதி இல்வாழ்க்கையில் ஈடுபடுகிறானோ அவன் அருளாளனாய் இம்மை, மறுமை பயன்களைப் பெற்று அழியா இன்பத்தைப் பெறுவான் என்றும் கூறலாம்.

இல்லறத்தைப் பயன் கருதாத நெறியில் நடத்தப்புகும் ஒருவனது வாழ்வும், அவனுக்குப் பிறக்கும் பிள்ளைகளும் பிறர்நலம் நாடுவோராக வாழ்வர் என்று சொல்வது மிகையாகாது. பிறர்நலம் நாடும் செம்மையான நெறி வளர்ந்து வந்தால், ஒவ்வொரு குடும்பமும், ஒவ்வொரு தெருவும், ஒவ்வொரு நகரமும், ஒவ்வொரு

கிராமமும், ஒவ்வொரு நாடும், உலகமும் ஒப்புரவைக் குறிக்கொண்டே நிலவும். இவ்வாறு தனக்கென்று வாழாது, பிறர்க்கென்று வாழ்பவனே மனிதனாவான். அவனுடைய வாழ்க்கையே வாழ்க்கையாகும்.

பகவத்கீதையின் அறிவுறுத்தல், பயன் கருதாத இயற்கையோடு இயைந்த வாழ்க்கை நடத்தி மக்கள் உய்திபெற வேண்டும் என்பது கீதையின் நுட்பமான பொருளாகும். மனிதன் பிறர் நலம் கருதும் அருளாளனாய் வாழ்தல் வேண்டும் என்னும் உண்மையைச் சங்க இலக்கியங்களும், திருக்குறளும் நமக்கு அறிவுறுத்துகின்றன. வேதங்கள் முதலாக இதிகாசம், புராணம் ஈறாக உள்ள எல்லாக் கலைகளின் உட்பொருளும் பயன்கருதாத் தொண்டைக் குறித்து நிற்பதைக் காண முடிகிறது.

**உலகம் ஒரு சமுதாயம்**

பகவத்கீதை அறிவுறுத்தும் ஓர் அறத்தையே உலகில் தோன்றிய அறவோர் பலரும் கூறியுள்ளனர். அறவோர் அனைவரும் உலகத்தைச் சார்ந்தவர்கள். சாதி, மதம், நிறம், மொழி, நாடு முதலியவற்றைக் கடந்தவர்கள். அவர் அருளிய 'தனக்கென வாழாப் பிறர்க்கென வாழ்தல்' என்னும் அறம் மக்கள் வாழ்க்கையில் ஒன்றிவிட்டால் சாதி, மதம் முதலியவற்றைப் பற்றி எழுந்த சிறுமைச் சமூகங்கள் எல்லாம் மறையும்.

*''யாதும் ஊரே யாவரும் கேளிர்''*[17]

என்ற கணியன் பூங்குன்றனாரின் கூற்றுப்படி உலகமே ஒரு சமுதாயமாகும்.

**இல்லறம்**

கல்வியும், தாய், தந்தையர் வழிபாடும், மனிதன், பிறர் பொருட்டு வாழ்தல் வேண்டும் என்னும் பெருவாழ்விற்குக் கடைக்கால் போன்றன. அக்கால் மீது இல்லறம் என்னும் நிலையம் எழுப்பப்படல் வேண்டும். அந்நிலையத்தில் அன்பு என்னும் தெய்வம் கோயில் கொள்ளும். அன்பு அரும்புதற்குரிய இடம் இல்வாழ்க்கை என்று கூறுவது மிகையாகாது. அன்பு வளர்வதற்கு நிலைக்களனாய் உள்ள இல்வாழ்க்கை உலகில் இனிது நடைபெறல் வேண்டும் என்னும் அருட் பெருக்கால் இறைவன் உயிர்களை ஆண், பெண், வடிவமாகப் படைத்திருக்கிறான். ஆணும், பெண்ணும் கூடிக்குலாவி அன்புநெறி காண வேண்டும் என்பது இறைவனுடைய படைப்பு நோக்கம். இல்லறம் அன்பு வளர்வதற்குரிய இடம் ஆகும். ஒருவரிடத்துக்

கட்டுப்பட்டுக் கிடக்கும் அன்பைப் பிறகு இருவரிடத்தும், பின்னர்ச் சில உயிர்களிடத்தும், பிறகு பல உயிர்களிடத்தும், முடிவில் எல்லா உயிர்களிடத்தும் பரப்பும் தன்மையுடையது இல்லறமாகும்.

## இல்லற வாழ்க்கை

கல்வி என்பது வாழ்க்கைப் பொருளை - பண்பாட்டை உணர்த்துவது. அவ்வுணர்வைச் செயலாக்குவது இல்லற வாழ்க்கை. மனிதனிடத்திலுள்ள விலங்கின் இயல்புகளைப் படிப்படியாக அழித்து அவனை அன்பனாக்குவது அவ்வற வாழ்க்கை. மனிதன் பிறர்க்கு உழைத்தற்குரிய அறநெறிக்கு வேண்டப்பெறும் கூறுகளை எல்லாம் திரட்டி அவன்பால் சேர்ப்பது அப்பெருவாழ்க்கை. இல்லற வாழ்க்கையில் ஈடுபடாத ஒருவன் அன்பின் இயல்பையும், அருளின் தன்மையையும் எவ்வாறு உணர்ந்து கொள்வான் என்றால், கூடி வாழ்தல் என்னும் சேர்க்கை வாழ்க்கையில் அச்சீரிய பொருளைப் பெறமுடியும் என்பது தெரிகிறது.

## தியாகம்

இல்லறத்தின் உயிர்நிலை தியாகத்தில் பொருந்தியிருக்கிறது எனலாம். தியாகமில்லாத இல்லறம் இல்லறமாகாது. தியாகம் முதிர முதிர அன்பு பெருகிப் பெருகிப் பொங்கும். தன்னலத்தில் அன்பு, அருள் இல்லாததால் இல்லறத்திற்கு இன்றியமையாதது தியாகம். ஒருவனது ஆத்ம சக்தியை ஒளிரச் செய்வது தியாகம்தான். தனக்குள்ள எல்லாவற்றையும் மகிழ்ச்சியோடு பிறர்க்கு அளிக்கும் மனமுடைமை தியாகத்தின் இயல்பாகும்.

'தனக்கென்று ஒன்றுண்டு' என்று கருதுபவன் தியாகி ஆகான். உள்ளதைப் பிறர்க்குக் கொடுத்து மகிழ்பவன் தியாகியாவான். அவன் பிறர் பொருட்டு வாழாத காரணத்தினால் அவனை உலகம் போற்றிப் பாராட்டும். ஏனென்றால், அவன் எண்ணம், பேச்சு, செயல், பிறர் நலம் குறித்து எழுதலால் என்று கருதலாம். பொய்மையை விடுத்து, செம்மை நெறிச் செல்லும் பயிற்சியில் காந்தியடிகள் மேற்கொண்டதால் அவர்க்குத் தியாகத்தில் விருப்பும், ஆத்ம சக்தியில் உறுதியும் ஏற்பட்டன.

ஆண்டவன் அருள் காந்தியடிகளைத் தன்னல வாழ்வினின்றும், தடுத்தாட் கொண்டது. 'பகைவரை நேசி' என்பது கிறிஸ்துவின் திருமொழி. இதற்கு

இலக்கியமாகத் திகழ்ந்தது காந்தியின் வாழ்க்கை. இவர் 1893 முதல் 1913 வரை தென்னாப்பிரிக்காவில் தங்கி, எல்லா நலத்திற்கும் அடிப்படை 'தியாகம்' என்னும் உண்மை கண்டு அதைச் செயலிற்கொண்டுவந்து, ஆன்ம சக்தியால் சாத்வீகப் போர் புரிந்து முடிவில் வெற்றி பெற்றார். தியாகமே வெற்றிக்குக் காரணமாகும்.

## அன்பின் ஒற்றுமை

இயற்கை வாழ்வு நடத்தும் ஒருவனும், ஒருத்தியும் உயிர், உடல் போலவும், அரசு, அமைச்சர் போலவும் ஒன்றிய அன்பால் இன்ப வாழ்வை நடத்துவோர் ஆவார். அன்பால் பிணைக்கப்பட்டவர்கள் ஒருவருக்கொருவர் காதல் தொண்டு செய்வது இயல்பாகும். அன்பு பொழியும் இல்வாழ்க்கையில் அனைத்து அறங்களும் சிறக்கும். அன்பால் பிணிக்கப்பட்ட இருவரும் தமக்கெனப் பிறரை வேண்டார். ஒருவருக்கொருவர் பணி செய்து கொள்வர். இருவர் மனமும் அன்பில் தோய்ந்து கிடத்தலால் அம்மனம் பிற செயல்களில் தோய்தல் அரிது. அப்படிப்பட்ட அருள் உடைமையே மனிதனுக்குத் தேவை.

## உயிர்களைச் சார்ந்திருத்தல்

மனிதன் இல்வாழ்க்கையில் ஈடுபட்டு மற்றவரோடும் கூட்டுறவு கொள்ள வேண்டும். மனிதன் கலந்து வாழும் உயிர்களைச் சார்ந்தவனன்றி தனித்து வாழும் இயல்பு உடையவன் அல்லன். மனிதன் தன்னிடமுள்ள தன்னலம் என்னும் கொடுமையை அகற்ற, பிற மக்களோடு கலந்து, பல வழிகளிலும் வாழ்ந்து பின் வருந்துவான். அங்ஙனம் வருந்த அவனுக்குப் பிறர் துன்பத்தை அறியும் உணர்வு பிறக்கும். அவ்வுணர்வு துன்புறும் பிறர்க்கு அவனாலியன்ற உதவி புரிய அவனைத் தூண்டும். பிறர் துன்பத்தை உணர்வது தன் துன்பத்தைப் போக்க அடிகோல்வதாகும்.

பிறர் துயரைப் போக்க கடனாற்றுகிறவன் தன் துயரைப் போக்கிக் கொண்டவன் ஆவான். மனிதனின் துன்பத்தைப் போக்க வல்லது ஒப்புரவு. எவ்வுயிரையும் தன்னுயிர் எனக் கொண்டு உயிர்கள் நலன் கருதி உழைக்கும் ஒருவன் உள்ளத்தில் ஒப்புரவிற்குரிய அன்பாகிய தெய்வம் விளங்கும். அவனே துன்பமறியாத் தூயவன்.

*''இன்பமே எந்நாளும் துன்பமில்லை''*[18]

என்றார் அப்பர். இன்பத்திற்கு உயிர்களைச் சார்ந்திருத்தல் இன்றியமையாதது. இல்வாழ்க்கையிலிருந்து தொழில் பல புரிந்து அறவழியில் பொருளீட்டி உயிர்ச்சார்பு

கொண்டு, எல்லா உயிர்களையும் நேசித்து இயன்ற உதவி செய்து வாழும் வாழ்வே மக்கட்குரிய சிறந்த வாழ்வாகும்.

**வாய்மை**

மனிதன் புறத்தூய்மை காப்பதுடன் அகத்தூய்மையும் காத்துவரல் வேண்டும். அகத்தூய்மை காக்காது, புறத்தூய்மை காப்பதால் மனித வாழ்வின் நோக்கம் நிறைவேறாது. வாய்மை என்பது அகத்தூய்மைக்கு அச்சாணி போன்றது. இதனை,

> *''புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை*
> *வாய்மையால் காணப் படும்''*[19]

என்பார் திருவள்ளுவர். வாய்மை என்னும் அறத்தை ஒருவன் கடைப்பிடித்தால் அவன்பால் பிற அறங்கள் எல்லாம் தாமே அமையும். அறத்துள் முதன்மையான அறம் வாய்மை. அதைப் பெறவே மனிதன் நல்ல ஒழுக்கம் நிறைந்த வாழ்க்கையை மேற்கொள்ளக் கடமைப்படுகிறான்.

உலகில் தோன்றிய சான்றோர் அனைவரும் வாய்மையைக் காத்து பெரியோராயினர். வாய்மையை மனிதன் எப்படிப்பட்ட துன்பம் நேரும்போதும் அதனைப் பாதுகாக்க பயிற்சி செய்தல் வேண்டும். அரிச்சந்திரன் வாய்மையின் பொருட்டு பதி, நிதி, மைந்தன், மனைவி எல்லாவற்றையும் இழந்த அவனது வாழ்வு வாய்மைக்கோர் இலக்கியமாகத் திகழ்வதைக் காணலாம். வாய்மை இல்லையேல் மனித வாழ்வும் இல்லை. அதனால் வாய்மையை உயிர்போன்று நினைக்க வேண்டும். எவ்வழியிலாவது அதைப் பெறுவது மனிதனுடைய கடமையாகும். வாய்மை உள்ள இடத்தில் கொலை, களவு, காமம் முதலிய தீய செயல்கள் தலை காட்டா. பாவங்களை எல்லாம் போக்கும் ஆற்றல் வாய்மைக்கு உண்டு. இதனை,

> *''வாய்மையின் வழாது மன்னுயிர் ஓம்புநர்க்கு*
> *யாவதும் உண்டோ எய்தா அரும்பொருள்''*[20]

என்றார் இளங்கோவடிகள்.

**மனத்தூய்மை**

ஒருவனது மனம் அவன் வாழ்விற்குக் குருபோலவும், அரசு போலவும் வழிகாட்டுவதாய் இருத்தல் வேண்டும். அத்தகைய மனத்தைப் பெற்ற ஒருவன்

தவறு செய்து விடுவானாயின் அதை மறைக்க முயல மாட்டான். அதை வெளியிடவும், அதைக் குறித்து வருந்தவும் முயற்சி செய்வான். புறத்தே நல்லவன்போல் நடிக்க அவன் மனம் ஒருபோதும் சம்மதிக்காது. அவனுக்கு அகமே புறம். அகமும், புறமும் ஒத்த வாழ்வை நடத்தவே அவன் விரும்புவான். அதனால் மெய்யறிவு பெற மனிதன் மனத்தில் உள்ள ஆசையினை அறுத்தல் வேண்டும்.

மனிதன் இல்வாழ்க்கையின் நுட்பங்களைக் கண்டு அவ்வாழ்வை நேர்மையான முறையில் நடத்தினால் அவன் அன்பனாய் உண்மையான அறிவைப் பெறலாம். பிறர் துன்பம் செய்யும்போது, திரும்பி அவர்க்குத் துன்பம் செய்ய விரும்புவது விலங்கின் இயல்பாகும். விலங்குகளுக்கு ஆறாவது அறிவு என்னும் பகுத்தறிவு இல்லை. பிறர் துன்பம் செய்யும்போது பகுத்தறிவு, தன்னை உடையவனை சினம் கொள்ளாதவாறு காக்கும். காப்பதோடு மாற்றான் மீது இரக்கம் கொள்ளுமாறு ஏவும்.

பகுத்தறிவு பிறரை வெறுக்க மாட்டாது. அவர்தம் இன்னாச் செயலை இனிய முகம் கண்டு ஏற்கவும் துணை புரியும். மறந்தும் பிறர்க்குக் கேடு மனம், மொழி, செயலால் நிகழாதவாறு காத்து வருவது பகுத்தறிவு. இவ்வறிவு பிறர் தவறு செய்வதைக் காணும்போது அவரைத் திருத்தாது தன்னை உடையானை உண்ணாவிரதம் மேற்கொள்ளவும், அதுபோன்ற பல வினைகள் ஆற்றவும், கூடுமானால் உயிரைவிடவும் அறிவுறுத்தும். இதனால் மனிதன் பகுத்தறிவைப் பெற ஆசைகளை அறவே அகற்றி மனத்தைத் தூய்மையாக வைத்துக் கொள்ள வேண்டும்.

## பொறுமையும் கடவுளும்

பகுத்தறிவால் மனிதன் பெறும் நல்லியல்புகளுள் பொறுமையும் ஒன்று. பகுத்தறிவு விளக்கமில்லாத இடத்தில் விளங்கும் பொறுமை பொறுமையாகாது. பகுத்தறிவால் விளங்கும் பொறுமையே பொறுமை. மனிதன் எவ்வியல்பையும் முயற்சியால் பெற்று விடுவான். ஆனால், பொறுமை என்னும் பண்பைப் பெறுவது அருமையினும் அருமை. பொறுமை என்பது எளிய பொருளன்று. பொறுமையைப் பெற்றவன் கடவுளைப் பெற்றவன் ஆவான்.

பொறுமை வேறன்று. கடவுள் வேறன்று. வேதங்கள் ஈஸ்வரனை 'சாந்தம் சாந்தம்' என்று அழைக்கின்றது. அச்சாந்தமே பொறுமை என்பது. மனிதன் தன் வாழ்வில் முடிவாகப் பெற வேண்டிய செம்மையான பொருள் பொறுமையாகும். கல்வி கற்றலும், மனைவி மக்களோடு வாழ்தலும், பிறர்க்கு உழைத்தலும், வாய்மை காத்தலும்,

பகுத்தறிவு பெறுதலும் ஆகிய இவை யாவும் பொறுமை என்னும் பொருளைப் பெறுவதற்காக உழைக்கும் உழைப்பாகும். அதனால் பொறுமை உடையவர்கள், எல்லாம் உடையவர் என்று கருதுவதற்கு இடமுண்டு.

## பொறுமையின் இயல்பு

நல்ல பண்புகள் நிறைந்த பொறுமை உடையவன் ஒருவன். பிறர் நலம் நாடுவதிலேயே கண்ணும் கருத்துமாயிருப்பான். அஃது அவனது இயல்பாகிவிடும். நெருப்பில் வெம்மை இருப்பது போலவும், மலரில் மணம் இருப்பது போலவும், மெய்யறிவு உடைய பொறுமை உடையவன்பால், பயன் கருதாது, பிறர்நலம் நாடி உழைத்தல் இயல்பாய் அமைந்து விடுகிறது. இவ்வியல்பு வாய்ந்த பொறுமையுடையவர்கள் உலகம் வேறு, ஏனையோர் உலகம் வேறு. பின்னைய உலகம் அழிந்து முன்னைய உலகத்தோடு ஒன்றுபடும் நாளே இவ்வுலகம் உய்யும் நாள் எனலாம். பொதுவாக மக்களிடத்தில் பொறுமை, உண்டா இல்லையா என்று எண்ணிப் பார்த்தால் பொறுமை எல்லாரிடத்திலும் உண்டு. ஆனால், அஃது ஒவ்வொருவரிடத்தும் ஒவ்வொரு விதமாய்ப் பொலிகிறது.

## பொறுமை - பொறாமை

உலகம் பொறுமை, பொறாமை என இருவகையாகப் பிரிந்து நிற்பினும், பொறுமையே பொறாமையை வெல்லும். பொறாமையுலகில் வாழும் மனிதன் தன்னால் இயன்ற அளவு பறந்து பறந்து முயன்று தன் முயற்சியால் தனக்கே கேடு விளைவது கண்டு பொறுமை உலகில் வாழத் தானே விரும்பும் காலம் சேய்மையில் இல்லை. இச்சமயத்தில் பொறுமை வளர்ச்சிக்குரிய முறைகளை மனிதன் தன் வாழ்வில் கடைப்பிடித்து ஒழுகக் கடமைப்பட வேண்டும்.

பொறுமை உள்ளவனுக்கும், பொறாமை உள்ளவனுக்கும் உள்ள வேறுபாடுகள் பல. பொறுமை உடையவன் ஆன்ம சக்தி துணை கொண்டு வாழ்வான். உண்மையும், அஞ்சாமையும் இவனுக்குரிய கருவிகளாகும். பொறாமை உடையவன் உடல் வலிமை துணை கொண்டு வாழ்வான். கத்தி, ஈட்டி, துப்பாக்கி, பீரங்கி முதலியன இவனுக்குரிய கருவிகளாகும். பொறுமை உடையவன் உள்ளத்தில் அருட்தன்மை சுரந்துகொண்டே இருக்கும். பொறாமை உடையவன் உள்ளத்தில் வன்கண் என்னும் வெம்மை எறிந்து கொண்டே இருக்கும்.

பொறுமை உடையவன் எண்ணமும், சொல்லும், செயலும் பிறர்க்கு நன்மை புரிவதில் குறிக்கொண்டு நிற்கும். பொறாமை உடையவன் முக்கரணமும் முற்றும் மாறுபட்ட வினை நோக்கி நிற்கும். பொறுமைக் குணமுடைய ஒருவன், பிறர் தன்னைத் துன்புறுத்தும்போது அத்துன்பத்தை நீக்க வேறு ஒருவர் உதவியைத் தேட மாட்டான். அவன் அஞ்சி ஓடுவான் அல்லது கருவி கொண்டு எதிர்க்க முயல்வான். பொறுமையுடைய மனிதன் இனிய செயல்களைச் செய்யவே முற்படுவான். பொறுமையில்லாத புன்மையனோ இனிய செய்வோர்க்கும் இன்னா செய்யச் சூழ்ச்சி தேடுவான். அவனுக்கும், இவனுக்கும் உள்ள வேற்றுமை கடலினும் பெரிது எனலாம்.

## ஆன்ம சக்தி

பொறுமை உடையவன் நல்லியல்புக்குக் கருவியாக நிற்பது அவனிடமுள்ள ஆன்ம சக்தியே ஆகும். ஆன்ம சக்தி விளங்க ஒண்ணாதவாறு அதை மூடிக் கொண்டிருப்பன, பொறாமை, ஆசை, வெகுளி முதலிய தத்துவக் குப்பைகளாகும். அக்குப்பைகளைக் கல்வியால் இல்லறத்தால் - வாய்மையால் - மெய்யறிவால் கூட்டிப் பெயர்த்தெடுத்தும், பொறுமை என்னும் மணி ஒளி வீசும். அதன் வாயிலாக வீசும் உள் ஒளியே ஆத்ம சக்தி என்பது.

ஆத்ம சக்தி கைவரப் பெற்றவன் தனக்கென உடல், தனக்கென பொருள், தனக்கென ஆவி என்று தன்னல வாழ்வு நடத்தாது அவற்றைப் பிறர்க்கு எனக் கொண்டு ஒப்புரவு வாழ்வு நடத்துவான். உடல், பொருள், ஆவி மூன்றையும் பிறர் நலத்திற்கென தானம் செய்தவன் ‘எல்லாம் ஆண்டவன் செயல்’ என்றிருக்கும் மெய்யறிஞன் ஆகிறான். அவன் இன்பத்தையும், துன்பத்தையும் ஒன்றாகக் கருதுவான். அவன் இன்பம் வரும்போது பெரும் மகிழ்ச்சி அடைய மாட்டான். துன்பம் வரும்போது துயருற்று வருந்த மாட்டான். எல்லாம் அவன் செயல் என்றிருப்பான். முழு ஆத்ம சக்தி உடையவன் தன் பெருமையைத் தானே அறியாத பெரியவன். அவனே அச்சமில்லாத ஆண்டகை என்று கருதப்படுவான். உண்மை உணர்ந்த உத்தமன் ஆவான். ஆத்ம சக்தி உடையவர் வலிமை கொண்டு தமக்குக் கேடு இழைத்தவர்க்கு கேடு இழைக்க மாட்டார். சமயம் பார்த்து நன்மையே செய்வார்கள். இஃது ஆத்ம சக்தி உடையார் இயல்புகளாகும்.

## நல்ல பண்புகள்

மனிதனிடத்தில் அடக்கம், உள்ள நிறை, உண்மை, அன்பு என்ற நான்கு

குணங்களும் இருத்தல் வேண்டும். இவை மனித நேயத்திற்குரிய இன்றியமையாத நற்குணங்களாகும். இவையில்லாத ஒருவனிடத்துப் பொறுமையாகிய குணம் இருப்பது அரிது. இவற்றுள் அடக்கம் என்ற நற்பண்பு மனிதனிடத்துள்ள ஒழுங்கு முறையை அளிப்பது. மனிதனைச் சிறுமையாகிய குழியில் வீழ்த்தி துன்பப்படுத்துவது. வரையறைக்குட்பட்ட ஒழுங்கு முறை முயற்சியின் வழி தற்பெருமை எழும். தற்பெருமைக்கு முதலாயுள்ள முயற்சியை அழிப்பது அடக்கமாகும்.

நிறைவான நெஞ்சத்தை உடையவன் சிறுபொருளுடையனாயினும் அவன் செல்வம் உடையவனே ஆவான். அந்நெஞ்சு பெறாது, மிகுதியான பொருள் உடையவனாயிருந்தும் அப்பொருளுடையான் வறியவனே ஆவான். நிறைவான உள்ளம் ஆசையை அழிக்கிறது. ஆதலால் பொறுமைக்கு, உள்ள நிறை இன்றியமையாதது. இல்லையென்றால் ஆசை என்னும் பேய்க்கு இரையாகிப் பொறாமை என்னும் தீயிடை வெந்து வீழ்ந்து வருந்துதல் நேரும். அடக்கத்தால் ஆசையற்று உள்ளம் நிறைவு அடைகிறது.

ஆசையற்ற இடத்தில் உண்மை ஒளிரும். உண்மை அஞ்சாமையை அளிக்கும். பொறுமை என்னும் குணத்திற்கு உயிர் போன்றது அச்சம் இல்லாமை. இதைப் பெறுவது உண்மை என்று கூறுதல் மிகையாகாது. அவரவர் அனுபவம் அவரவர்க்கு இவ்வுண்மையை அறிவுறுத்தும். ஆதலால் பொறுமைக்கு உண்மை என்ற நற்பண்பு இன்றியமையாதது.

அன்புக்கு அடிப்படை உண்மையே. அன்பு என்ற நற்பண்பு எவ்வுயிர்க்கும் தீங்கு செய்யாமை, வருந்தும் உயிர்கட்கு இரங்கி இயன்ற உதவி புரிதல் முதலிய நல்லியல்புகளைப் பெறச் செய்கிறது. அன்பில்லாப் பொறுமை பொறுமையாகாது. ஆகவே, பொறுமை உடையவர்களிடம் சிறப்பாக விளங்க வேண்டியது அடக்கம், உள்ள நிறை, உண்மை, அன்பு என்ற நான்கும் ஆகும். இவையே மக்கள் மனத்தைப் பலவழியிலும் பண்படுத்தும் எனலாம்.

## தீங்கு செய்யாமை

தீங்கு செய்யாமை என்பது பிறரைத் துன்பத்திற்கு உட்படாமல் இருப்பது மட்டுமன்று. தன்னைப் பிறர் துன்புறுத்தும் போது, அவர்மீது காழ்ப்புக் கொள்ளாது, அக்கொடுமையினின்று அவரைக் காத்து, அவர்மீது அன்பு கொண்டு துன்பம் பொறுத்தலும் தீங்கு செய்யாமையின் பாற்பட்டதே. பிறர்க்குத் தீங்கு செய்யாமையும்,

பிறர் தீங்கை அன்பால் பொறுத்தலும் அகிம்சை எனில், அகிம்சா தர்மத்தில் எவ்வளவு நன்மைகள் பொருந்தி இருத்தல் வேண்டும். எல்லா நன்மைகளும் பொருந்தியிருக்கும் உள்ளமுடையாரிடத்து அன்புப் பொறுமை எனும் புனிதம் பொலிவு அடையும். எனவே, எல்லா அறமுறைகட்கும் உறையுள் தீங்கு செய்யாமை என்று சொல்லலாம்.

இந்நாளில் உலகைப் பழைய அருளறத்தில் நிறுத்தச், சில பெரியோர் ஆங்காங்கே தோன்றினர். அவருள் சிறப்பாக ருஷ்யாவில் தோன்றிய டால்ஸ்டாயும், நம் நாட்டில் தோன்றிய காந்தியடிகளும் குறிப்பிடத்தக்கவர்கள். டால்ஸ்டாய் பெரிதும் பேச்சளவில் - எழுத்தளவில் - தம்மளவில் அகிம்சா தர்மத்தை வளர்த்துச் சென்றார். காந்தியடிகள் தம்பால் அவ்வறத்தை வேரூன்றச் செய்து உலகிலும் அதை நிலை நிறுத்த முயன்றார் என்று கூறலாம்.

தென்னாப்பிரிக்கா வெள்ளையர்க்கு சகோதர நேயம் பிறப்பிக்கத் தம்மோடு இந்திய மக்களையும், துன்பம் பொறுக்கும் அருள் வழியில் காந்தியடிகள் நிறுத்தினார். அவர் அருளறத்தை உலக உயிர்களுக்குப் புகுத்த முயன்றது மறக்கக் கூடிய செயலன்று. ஏழை மக்கள் துயரம் கண்டு இரங்கும் வாயிலாகவும் அத்துயரத்திற்குக் காரணமாக நிற்கும் பகைவரை வருத்தாது அவரை ஈர நெஞ்சினராக்கத் தான் உண்ணா நோன்பு மேற்கொண்டதன் வாயிலாகவும் அவருடைய அருளறத்தை நம்மால் உணர முடிகிறது.

## மெய்யறிவின் சிறப்பு

வாய்மையை மேற்கொண்டால் ஒருவனுக்கு மெய்யறிவு மிளிரும். மெய்யறிவு மனிதனிடத்து இயல்பாக இருந்தாலும் அது பொய்மை, பொறாமை, அவா, வெகுளி முதலியவற்றால் மறைந்திருக்கிறது. வாய்மையானது இவற்றைக் களைந்து மெய்யறிவைத் தருகிறது. மெய்யறிவு என்பது மனிதனின் ஆறாவது அறிவு என்னும் மன உணர்வு. பகுத்தறிவைப் பெற்று ஐந்தறிவோடு வாழ்பவன் மக்கட் பிறவி எய்த மாட்டான்.

ஐயறிவு உடைய விலங்குகளும் உண்கிறது; உறங்குகிறது; குட்டி போடுகிறது. மெய்யறிவில்லாத ஒரு மனிதனும் உண்கிறான்; உறங்குகிறான்; பிள்ளை பெறுகிறான். விலங்குகளும் தன் பொருட்டுப் பிறரை வருத்த எண்ணுகிறது; செய்கிறது. மனிதனும் அவ்வாறு எண்ணுகிறான்; செய்கிறான். எனவே, மெய்யறிவு பெறாதவன் உருவத்தால் மனிதனாக இருந்தாலும் எண்ணத்தால் - செயலால் வேறுபடுவதில்லை. மெய்யறிவு

விளக்கமடைந்தால் தன்னலப்பேய் ஒடுங்கி ஒழியும். அப்பேயை ஓட்ட ஒவ்வொரு மனிதனும் முயல வேண்டும். மெய்யறிவால் மனிதன் தெய்வமாகிறான் என்று கூறலாம்.

தெய்வம் என்பது இங்கு அன்பைக் குறிக்கிறது. மெய்யறிவு உடைய ஒருவன் அன்பனாகிறான். அன்பின் மூலம் திருவருள் உருவாகிறது. மெய்யறிவு உடையவன் உள்ளத்தில் அருள் ஊற்றெடுத்து ஓடும். எவ்வுயிரையும் தன்னுயிர்போல் கருதுவான். அவன்மீது அருள் உள்ளம் கொண்டு தன்னால் இயன்ற உதவிகளைச் செய்வான். தீய செயலுக்கு இடம் தராது காக்குமாறும், ஒரு சமயம் ஆற்ற நேர்ந்தால் அதனை உடனே தடுக்குமாறும், தன்னலத்தைத் தானே ஒறுக்குமாறும், மனத்தைப் பண்படுத்தும் ஆற்றல் மெய்யறிவிற்கு உண்டு. அம்மனம் பெறாதவன் மக்கள் இனத்தைச் சார்ந்தவனாகக் கருதப்பட மாட்டான். அவன் இன்னும் மனிதப் பிறவியைப் பெறவில்லை என்று கூறலாம்.

### மெய்வழி நிற்றல்

உண்மையைக் கடைப்பிடித்து நிற்றலும், சத்தியத்தை ஆக்கிரகித்து நிற்பதும் 'மெய்வழி நிற்றல்' என்பதாகும். இதனை உண்மை கடைப்பிடித்தல் என்று கூறலாம். அதைச் செயலில் கொண்டு வருவது அரிது. உலகில் இம்மனித நேயக் கொள்கையைச் சமயம்போலக் கடைப்பிடித்தால் அதன்கண் அல்லல் விளைதற்கு இடமே இராது. உண்மையைக் கடைப்பிடிப்பவர்கள், செந்நெறிக்கு நேரும் துன்பத்தைப் போக்க முயல்வார்களே அன்றித் தீய நெறிக்கு என்றும் துணைபோக மாட்டார்கள்.

ஒரு குடும்பமோ, ஓர் ஊரோ, ஓர் அரசோ செம்மை நெறி பிறழ்ந்து நடக்குமாயின் அதை ஒழுங்குபடுத்த மெய்வழி நிற்கும் முறைகளைக் கையாளலாம். கொடுங்கோல் அரசன் ஒருவன் அறநெறி விடுத்து தன் விருப்பப்படி கொடுமை செய்து வருவானாயின் அவனை நல்வழிப்படுத்தி நல்ல அரசாட்சி காண குடிமக்கள் உண்மை நெறி முறைகளைப் படிப்படியாக நிகழ்த்தலாம். துன்பவழி நின்று ஒருவனை அச்சுறுத்தி, அவனுடைய மனச்சான்றுக்கு மாறுபட்டு நடக்குமாறு அவனைக் கட்டாயப்படுத்துவது உண்மை நெறியாகாது. தான் பிற உயிர்களுக்குத் தீங்கு செய்யா வழி நின்று பலவகைத் துன்பத்திற்குத் தான் உட்பட்டும், துன்பங்களை ஏற்றும், பிறருடைய மனம் இரங்கும் வழி, அவனுடைய மனநிலையை மாற்ற முயல்வது மெய்வழி நிற்றலாகும்.

உண்மையைக் கடைப்பிடிப்பவன் தனக்கு எக்கேடு நேர்ந்தாலும், தான் கொண்ட உறுதியினின்றும் பிறழாது உண்மை கடைப்பிடித்து பிற உயிர்களைக் கொல்லா நெறியைக் காத்து வருவான். உண்மை நெறிக்கும், அருள் நெறிக்கும் மாறுபாடு நிகழும் இடங்களில் எல்லாம் உண்மை கடைப்பிடிப்பவன் வலிந்து சென்று தன் கடனாற்ற முற்படுவான். உண்மை அல்லாதவற்றையும், துன்பத்தையும் ஒழிக்கவே உண்மை கடைப்பிடிப்பவன் உலகில் வாழ்கிறான். அதுவே அவனுடைய சமயத் தொண்டாகும். மெய்வழி நிற்றலுக்கு இன்றியமையாதது தியாகம் என்பது. தியாக உணர்வு இல்லாத இடத்தில் மெய்வழி நிற்றல் பயன் தராது எனலாம்.

## உண்மையைக் கடைப்பிடிப்பவர்கள்

அன்பை அடிப்படையாகக் கொண்ட பிணக்கே ஊடல் என்பது. ஊடல் ஒவ்வோர் இல்லத்தும் நிகழும் செயலாகும். ஊடலால் வரும் பிணக்கு பிறகு பேரன்பை வளர்ப்பதாகும். பகைப் பிணக்கு மக்களைக் கொலை முதலிய கொடுமைகளுக்கு உட்படுத்தும். நமது நாட்டுப் பெண்கள் ஊடலால் பிணங்கி, மீண்டும் இணங்குவதைத் தங்களுக்குரிய அறஒழுக்கமாகக் கொண்டு வாழ்ந்தார்கள். அவர்கள் பகையால் ஊடல் கொண்டு தலைவனை விட்டுவிட்டு வேறு ஒருவனை அடைவதை அறமாகக் கொண்டாரில்லை. இல்லங்களிலேயே பண்டை நாளில் சத்தியாக்கிரகப் பயிற்சி செயலில் இருந்தது.

நமது நாட்டு முனிவர்கள் பலர் சத்தியாக்கிரக நெறி நின்று பேறு பெற்றவர். முனிவர் என்பதற்குப் பொதுவாக எல்லாத் தீய குணங்களையும், சிறப்பாகச் சினத்தையும் ஒழித்தவர் என்று பொருள். முனிவர்கள் உண்மையைக் கடைப்பிடிப்பவர்கள் ஆதலால், அவர்கள் காடுகளிலும், மலைகளிலும், விலங்குகளிடையும், பறவைகளிடையும் சிறிதும் அச்சமின்றி வாழ்ந்து நாட்டுக்கு நன்மை புரிந்து வந்தனர்.

மன்னருள்ளும், மற்றவருள்ளும் எத்துணையோ பேர் சத்தியாக்கிரகிகளாக இருந்தனர். அந்நெறி பற்றித் தம் கருத்தை முற்றுறச் செய்த பெண்மக்களும் உளர். இத்தகைய சத்தியாக்கிரகிகள் இல்லையேல் உலகில் அன்பும், அறமும் நிலைத்து நிற்காது. அவர்கள் வழியில்தான் உலகம் நடைபெறுகிறது. அவர்களுள் ஒரு சிலர் வரலாற்றைக் காண்போம்.

**மார்க்கண்டேயர்**

இம்முனிவரைப் பற்றி அறியாதவரில்லை. அவர் சத்தியாக்கிரக வழிநின்று முனிவரானார். மார்க்கண்டேயர் தாய், தந்தையரைத் தொழுது 'விதியை வெல்வேன்' என்று உறுதிகொண்டு அதைத் தவத்தால் முழுமை பெறச் செய்தார். சத்தியாக்கிரகத்திற்குத் தவம் செய்வது சாலச் சிறந்தது. தவத்தால் மார்க்கண்டேயனார் இன்றும் போற்றப்படுகிறார்.

**பிரகலாதன்**

பிரகலாதன் என்ற சத்தியாக்கிரகி உலகறிந்தவன். மார்க்கண்டனார், பிரகலாதன் இவ்விருவரும் ஆத்ம சக்தியில் உறுதி கொண்டனரே அல்லாமல் மூர்க்கசக்தியில் உறுதி கொள்ளவில்லை. அவர்தம் நிலையினின்றும் பிறழாது சத்தியாக்கிரக நெறி நின்று நிறை காத்தனர். இவ்விருவரும் பயன் கருதாத அறவோர்கள். அவர்கள் தங்களைப் பொறுத்த அளவில் அகிம்சா தர்மத்தையே கடைப்பிடித்து நிற்பார்கள். அவ்வறத்தை வளர்க்கவே முற்படுவார்கள். இயமனும், இரணியனும் முனைப்பால் துன்பத்தைக் கடைப்பிடித்து ஒழுகினமையால் அவர்கள் வினையே அவர்களை அழித்தது. இயம - இரணியர் மரணத்திற்கும் மார்கண்டேயர் - பிரகலாதர் சத்தியாக்கிரகத்திற்கும் தொடர்பில்லை.

**அரிச்சந்திரன்**

இவன் உண்மையைக் கடைப்பிடிப்பதில் பேர் பெற்றமை உலகறிந்த ஒன்று. சத்தியம் என்னும் இலக்கணத்திற்கு இலக்கியம் அரிச்சந்திரன். இவன் சத்தியத்தின் பொருட்டு எத்துணை இன்னலுக்கு உட்பட்டும், எல்லாத் தியாகமும் செய்ய ஒருப்பட்ட ஒருவனது சத்தியாக்கிரகம் போற்றுதற்குரியது.

**புத்தர்**

மருள் செறிந்த உலகுக்கு அருள் ஒளி வழங்க நமது நாட்டிடைத் தோன்றிய அறச்சுடர் புத்தர் பெருமான் என்று கூறினால் மிகையாகாது. இவர் வாழ்வும், அறமும் சத்தியாக்கிரகத்தை அடிப்படையாகக் கொண்டனவேயாம். 'கொல்லாமையே பேரறம்' என்னும் உண்மையை அஞ்சாது அறிவுறுத்தியவர். ஒரு யாகத்தின்போது 'ஆட்டை வெட்ட வேண்டா; என் தலையை வெட்டுங்கள்' என்று வேள்வித் தீயிடை மண்டியிட்டு நின்ற ஒருவரது ஆத்ம சக்தியின் திறத்தைக் காணலாம். அவர் 'ஒரு

கொலைஞன் ஒரு கூர்மையான வாள் கொண்டு உன் தோள் மேல் ஏறி உன்னைச் சிறுகச் சிறுகக் கொத்தினாலும் நீ அதைத் தாங்கிக் கொண்டு பொறுமையாகவே இரு. அவனுக்குக் கேடு சூழாதே' என்று உலகுக்கு அறிவுறுத்தியிருக்கிறார்.

**லோக்தரர்**

கிறிஸ்து பிறப்பதற்கு முன்னரே ஐரோப்பாவில் கிரீஸ் தேசத்தில் ஒரு சிறந்த சத்தியாக்கிரகி வாழ்ந்தார். அவர் திருப்பெயர் லோக்தரர் என்பது. அப்பெரியார், 'எவன் தனது அறியாமையை உணர்கிறானோ, அவனே மெய்யறிவுக்கு அடிகோலுகிறவன்' என்று அறிவுறுத்துவதன் வாயிலாக நாட்டைத் தூய்மைப்படுத்த முயன்றார். அவர் தாம் கண்ட உண்மையில் உறுதி கொண்டு நீதிமன்றத்தார் தீர்ப்பின்படி நஞ்சுண்டு சாகவே முற்பட்டார். சத்தியாக்கிரகிகள் உயிரைப் பொருளாக மதிக்க மாட்டார்கள். உடலினின்றும் உயிர் பிரிவதை அவர்கள் துன்பமாகக் கருதுவதில்லை. லோக்தரர் எவர் தடுத்தும் கேட்காது நஞ்சுண்ட சத்தியாக்கிரகத்தை உலகிடை நிலைபெறச் செய்தார்.

**கிறித்து**

இவர் 'தன்னுயிர்போல் மன்னுயிரைக் கொள்ளல்' என்னும் பேரறத்தை அவர் அறிவுறுத்தியதோடு, அவ்வறவழி நின்று அதைச் செயலில் நடத்தியும் காட்டினார். உண்மை கடைப்பிடித்த இப்படிப்பட்ட ஒருவரை இவ்வுலகம் கண்டும், இன்னும் இங்கே அருள்நெறி பெருகாதிருப்பது விந்தையான செயலாகும்.

**முகமது**

அரேபியாவில் தோன்றிய முகமதுவும் தம் வாழ்நாளில் மிகுதியான துன்பங்களால் சூழப்பட்டார். இவர் துன்பம் நிகழ்த்தியவர்க்குக் கேடு விளைவிக்காது அவரை அறவழியில் திருத்த முயன்றார். அவர் வாழ்விலும் சத்தியாக்கிரக நிறைகள் உண்டு.

**பெண்கள்**

சீதை, சாவித்திரி, திரௌபதை, மணிமேகலை முதலியோர் அடக்கம், அன்பு, அறம், ஈகை, அறப்போர் முதலிய சத்தியாக்கிரக நெறி நின்று உலகில் அறம் வளர்த்தார்கள். சீதை அசோக மரத்தடியில் கொண்டது சத்தியாக்கிரக விரதமே. சாவித்திரி யமதருமனை விடாது தொடர்ந்து சென்றதும் சத்தியாக்கிரகமே. துரியோதனன் அவைக் களத்தில் திரௌபதியின் துகிலைத் துச்சாதனன் உரித்தபோது,

அவள் உள்ளம் சீற்றச் சேற்றில் வீழாது கற்பு நெறியில் படிந்து நின்றதும், மணிமேகலை தவத்தால் சிறந்ததும் பிறர்க்கு இன்னா செய்யாத பேரறத்தில் நின்றவர்கள் என்பது தெரிகிறது.

நமது தமிழ்நாட்டிலும் சில சத்தியாக்கிரகிகள் இருந்தார்கள். அப்பர் என்ற திருநாவுக்கரசு இளமை தொட்டு அறநூல்களைப் பயின்று தமது உள்ளத்தில் உண்மை எது என்று படுகின்றதோ, அவ்வுண்மையைக் கடைப்பிடித்து வாழ்ந்தார். பிற உயிர்களைக் கொல்லாத உண்மையைக் கடைப்பிடித்து வாழ்ந்தவருள் ஒருவர் மெய்ப்பொருள் நாயனார். உண்மையைக் கடைப்பிடித்து வாழும் வாழ்க்கை மனித வாழ்விற்கு இன்றியமையாத ஒன்று. மனித வாழ்க்கையை செந்நெறியில் நடத்த ஏற்பட்ட இயற்கை அறம் சத்தியாக்கிரகம் என்பது. இது அன்பு, தியாகம், பொறுமை, எவர்க்கும் தீங்கு செய்யாமை முதலியவற்றால் ஆக்கப்பட்ட ஒன்றாகலின், அது மனித வாழ்க்கையை செம்மைப்படுத்தும் இயல்பினை உடையது என்று கூறலாம்.

**தன்னலமற்றவர்கள்**

உண்மையைக் கடைப்பிடிக்கும் நெறி மனிதனை செந்நெறியில் நடாத்தி முடிவில் அவனைச் சாதுவாக்குகிறது. சாது நிலை எய்தியவன் மனித வாழ்வின் எல்லையைக் கண்டவனாகிறான். சாது நிலை பெறாத மட்டும் மனித வாழ்க்கையின் நோக்கம் நிறைவேறுவதில்லை. உலகுக்கு உழைக்கத் தன்பாலுள்ள குறைகளை அறவழியில் போக்கிக் கொண்டவனும், மனிதனை விலங்காக்கி அலைக்கும் தீய நீர்மைகளினின்று விடுதலை அடைந்தவனும், பிறர்க்கு உழைப்பவனும், முழு குணநலமுடைய ஒருவனையும் சாது என்று கூறலாம். சாது நிலை என்பது தனக்கென வாழாது பிறர்க்கென வாழும் செயலாகும். இப்பெரு நிலையை அளிக்கவல்ல சத்தியாக்கிரகம் மனித வாழ்க்கைக்கு எவ்வளவு இன்றியமையாதது என்பது விளங்குகிறது.

மனித வாழ்க்கைக்குரிய சத்தியாக்கிரக ஒழுக்க நெறியில் நிற்பவர் இந்நாளிலும் சிலர் ஆங்காங்கே இலைமறைகாய் என இருக்கின்றனர். அவருள் ஒருவர் நம் காந்தியடிகள். மகாத்மாக்கள் தமக்கென்று வாழாமல் பிறர்க்கென்று வாழ்பவர்கள். பல துறைகளில், மகாத்மாக்கள் பலரைக் காண்டல் அரிது. கொல்லாமை அடிகளின் நோன்பு. பொறுமை அவருடைய அணிகலன். தியாகம் அவருடைய செல்வம். அவருடைய தொண்டு பிறர்க்கு உழைத்தல். தம் பெருமை தாம் உணராதிருந்தது அவர் பெருமை.

உலகிடைத் தோன்றும் ஒருவன் தன் பொருட்டு வாழ்வானாயின் அவனைத் துன்பம் சூழ்ந்து துயருறுத்தும். அவனுக்குப் பிறவித் துன்பமாகவே தோன்றும். பிறர் பொருட்டு வாழ்வு நடாத்தும் ஒருவன், பிறவியை இன்பம் என்றே கருதுவான். கிடைத்த அளவு உள்ள நிறை கொள்ளல், பிறர் குற்றம் மன்னிக்கும் நீர்மை, மன அடக்கம், தூய்மை, ஐம்புல அடக்கம், உண்மையில் நாட்டம், வாய்மை, கோபமின்மை ஆகிய இந்த நற்பண்புகளை ஒருவன் வாழ்க்கையில் முறையாகப் பயின்று வருவான் என்றால் அவன் மேலான நிலையை அடைவான் என்பது திண்ணம்.

மனித இயல்பு

மனிதன் என்பவன் உடல் மட்டுமல்லாமல் சிறந்த உயிராகத் திகழ்கிறான். அவன் தன்னை உயிரென்று நினைத்தால் தான் அவன் இயல்பாகிய அகிம்சை, என்ற பண்பு விளங்கும். அகிம்சா தர்மம் என்பது மனிதனுக்குரிய இயற்கை அறம். தன்னைப்போலப் பிறரைக் கருதுதலே மனிதனின் இயல்பாகும்.

*''தன்னுயிர் தான்பரிந்து ஓம்புமாறு போல்*
*மன்னுயிர் வைகலும் ஓம்பி வாழுமேல்'*[21]

என்றார் திருத்தக்கதேவர்.

'எவ்வுயிர்க்கும் தீங்கு செய்யாதே; தீமைக்குத் தீமை செய்யாதே; துன்பம் பொறு; பகைவரிடத்தும் அன்பாயிரு; தீச்செயல்களில் வெறுப்புக் காட்டு. அச்செயல் புரியும் மனிதரிடத்தில் வெறுப்புக் காட்டாதே; இயற்கையோடு இயைந்து வாழ்' ஆகிய போதனைகள் காந்தியடிகளிடமிருந்து பிறந்தன. அவர் இப்போதனைகளைத் தம் வாழ்க்கையில் கடைப்பிடித்து, செயலில் நிகழ்த்திக் காட்டிய பெருமை வாய்ந்தவர்.

காந்தியடிகள் அறிவுறுத்திய அறம் ஒரு காலத்தில் நமது நாட்டில் ஒவ்வொரு வீட்டிலும் நிலவியிருந்தது. இப்போது இடையில் நுழைந்த செயற்கை வாழ்வு, மனிதனின் பழைய நிலையை மறக்கச் செய்தது. அம்மறப்பாகிய இருளை ஓட்ட எழுந்த உண்மைக் கதிரவன் நம் காந்தியடிகள். அக்கதிரவன் அருள், அஞ்சாமை, தியாகம், பொறுமை, நோன்பு, பயன் கருதாமை, மன்னிப்பு என்னும் ஏழு கதிர்களைப் பரப்பிக் கொண்டிருக்கிறது. அவ்வொளியில் மூழ்க உலக மக்கள் விழித்து எழவேண்டும். இத்தகைய பெரியோரின் - சான்றோரின் அறிவுறுத்தல் மனிதனைச் செந்நெறியில் நடத்தும் கருவி எனலாம்.

# குறிப்புகள்

## இயல் - ஒன்று

1. தேவா. திருநாவு. நான்காம் திருமுறை, திருவிருத்தம், பதி.81, பா.4:4.
2. தேவா. திருநாவு. ஐந்தாம் திருமுறை, திருக்குறுந்தொகை, பதி.115, பா.1:4.
3. தனிப். பா. திரட்டு - முதற்பகுதி, பு.அ.மாணிக்கம், ஔவையார் பாடல்கள், பா.57:2.
4. தொல். பொருள். மர. நூ.27.
5. தொல். பொருள். மர. நூ.33.
6. தொல். பொருள். மர. நூ.32.
7. குறள்: 410.
8. Encyclopaedia Americana - Vol.14, Page : 553.
9. ஆங்கில - தமிழ் அகராதி - ஏ. சிதம்பரநாத செட்டியார், பக்.504.
10. ஆங்கிலத் தமிழ் கையகராதி - கா. அப்பாதுரை, பக்.245.
11. The Rhetorical World of Augustae Humanism - Paul Fussell, Page : 5-10.
12. The concept of man in Tagore - Augustae T. Dhanthae, Page : 174.
13. தமிழ் நிலவு - டாக்டர்.க. த. திருநாவுக்கரசு, பக்.135.
14. பகவத்கீதை : 16-1,2,3.
15. குறளும் கீதையும் - கெம்பு ஆறுமுகம், பக்.64.
16. தொல். பொருள். மர. நூ. 27:6.
17. பா.கவி. தேசியப் பாடல்கள், பாரததேசம், 11:3.
18. புறம், 192:1.
19. தேவா. திருநாவு. ஆறாம் திருமுறை, மறுமாற்றத் திருத்தாண்டகம், பதி. 312, பா.1:2.
20. குறள் : 298.
21. சிலம்பு. காடு. கா. 11:158-159.
22. சீவக. சிந். முக். இலம். 509.

# வாழ்வியற் கூறுகளில் மனிதநேயம்

உலகில் இனத்தாலும், மொழியாலும் தனித்தன்மை உடையவரே தமிழர் ஆவார். சங்க காலம் தமிழரின் வரலாற்றில் தலைசிறந்த காலம். தமிழ் நெஞ்சத்தின் உயர்வினைக் காட்டும் காலம். சங்க காலத்தில் மாசற்ற வாழ்க்கை நெறியை நாம் காண முடிகிறது. சங்க இலக்கியங்கள் கருத்து வளமும், கற்பனைச் சிறப்பும் பொருந்திய அழகான பாடல்கள் பலவற்றைப் பெற்று மிளிர்வன. ஈராயிரம் ஆண்டுகட்கு முன்னே தமிழர் வாழ்ந்த வாழ்க்கையின் பெற்றியினை விளக்கி நிற்பன. தமிழ் மக்கள் பலமுறை பயின்று படித்துப் பயன்பெறும் வற்றாத செல்வங்கள் அவை. புறத்தே தோன்றும் காட்சிகளையும், அகத்தே தோன்றும் கருத்துகளையும் புனைந்து நிற்கும் அழகு ஓவியங்கள் அவை. சொல் வளமும், இனிமையான ஓசையும் கொண்டு மனித மனத்தை ஆராய்ந்து கூறுவதில் திறந்த புத்தகம் போல வெளிப்படையாய் இருப்பதால் சங்க நூல்கள் சிறப்பு மிக்கதாயுள்ளன.

சங்க இலக்கியங்கள் என்று கூறப்படும் பத்துப் பாட்டும், எட்டுத் தொகையும் தமிழரின் பொற்கால இலக்கியங்களாகப் போற்றப் பெறுகின்றன. அவைகள் பண்டைத் தமிழர்தம் வாழ்வில் கொண்டிருந்த சிறந்த கொள்கைகளையும், எண்ணங்களையும் நமக்கு உணர்த்தி வருகின்றன. இன்றைய உலகில் எவ்வளவோ நூல்கள் நாள்தோறும் வெளிவந்த வண்ணமிருந்தாலும் அவைகள் எல்லாம் சங்க நூல்களுக்கு ஒப்பாக விளங்க முடியவில்லை. மனித மனத்தில் தோன்ற வேண்டிய விழுமிய எண்ணங்கள் எல்லாம் சங்க காலத்திலேயே தோன்றியுள்ளன எனலாம்.

சங்க கால வாழ்வு உயர்ந்து நின்றாலும், அக்கால வாழ்விலும் சில குறைபாடுகள் இல்லாமல் இல்லை. சங்க இலக்கியங்கள் அக்குறைபாடுகளை ஏற்றுக் கொண்டுள்ளன. பழந்தமிழர் இலக்கியத்தினை அகம், புறம் என இரு பிரிவுகளாகப் பகுத்தனர். ஒத்த தலைவனும், தலைவியும் உள்ளம் கலந்து ஒன்றுகூடி வாழும் வாழ்க்கையைக் கூறும் பாடல்கள் அகம் எனப்பட்டன. போர், கொடை, வெற்றிச் சிறப்பு முதலியவற்றைக் கூறும் பகுதிகள் புறம் எனப்பட்டன.

அகவாழ்வு வீட்டு இன்பத்திற்கும், புறவாழ்வு நாட்டுச் சிறப்பிற்கும் உரமூட்டின. பண்டைத் தமிழ் மக்களின் உயர்ந்த பண்பாடுகள், அகப்பொருட் செய்யுட்களில் அன்பின் அடிப்படையிலும், புறப்பொருட் செய்யுட்களில் வீரம், வண்மை, அறிவுரை

முதலியவற்றின் அடிப்படையிலும் ஒளிவிடுகின்றன. இப்பண்பாடுகளே செய்யுட்களை இயற்றுதற்குப் புலவர் பெருமக்களைத் தூண்டின என்று கூறலாம்.

தமிழர் தம் அக வாழ்க்கைக்கு - பண்பாட்டு வாழ்க்கைக்கு - பண்பட்ட வாழ்க்கைக்கு - அடித்தளமாகத் திகழ்வது அகவாழ்க்கை என்பதைச் சங்கப் பாக்கள் புலப்படுத்தி நிற்கின்றன. சங்க இலக்கியங்களில் பத்துப் பாட்டில் முல்லைப்பாட்டு, குறிஞ்சிப் பாட்டு, பட்டினப்பாலை ஆகிய மூன்றும், எட்டுத் தொகையில் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு ஆகிய ஐந்தும் அக வாழ்க்கையைப் பற்றிக் கூறும் இலக்கியங்களாகும். வாழ்க்கையில் இடம் பெற்றுள்ள மனித நேயக் கூறுகளை இவ்விலக்கியங்களின் வாயிலாக இவ்வியலில் காண்போம்.

### அகப்பொருள் மரபு

அக இலக்கியம் வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டது ஆதலின், அவ்விலக்கியங்களின் பொருட் செறிவு எல்லாம் வாழ்க்கையைப் பற்றிக் கூறுவதாகக் கருதுகின்றனர். தலைவன், தலைவி, தோழி, செவிலி, நற்றாய், பாங்கன் முதலானோர் அக இலக்கிய மாந்தர்களாவர். அகத்திணைக் கண் தலைமகனாகப் புலனெறி வழக்கம் செய்ய வேண்டின் நாடன், ஊரன், சேர்ப்பன் எனப் பொதுப் பெயரால் சுட்ட வேண்டும். ஒருவர்க்கே உரித்தாக வரும் இயற்பெயர் சுட்டிக் கூறும் மரபு இல்லை. தொல்காப்பியரின் அகப்பொருள் பற்றிய இவ்விலக்கணக் கோட்பாட்டை,

*''மக்கள் நுதலிய அகன் ஐந்திணையும்*
*சுட்டி ஒருவர்ப் பெயர்கொளப் பெறாஅர்''*[1]

என்ற நூற்பா விளக்கும். கலத்திற் பிரிவின்போது தலைவன், தலைவியை அழைத்துச் செல்வதாக அக இலக்கியம் இயற்றும் மரபில்லை. இதனை,

*''முந்நீர் வழக்கம் மகடூஉ வோ டில்லை''*[2]

என்ற நூற்பாவால் அறியலாம். சங்க அகப் பாடல்கள் முதல், கரு ஆகிய இரண்டையும் உரிப்பொருளை விளக்கும் பின்னணியாக அமைத்துக் கொண்டுள்ளன.

### சங்க அக இலக்கியங்கள்

'பத்துப்பாட்டுள் இடம் பெற்றுள்ள அக இலக்கியங்கள் மூன்றும் திணைப் பெயர்களை நூற்பெயரில் கொண்டிருக்கின்றன. எட்டுத் தொகையில் உள்ள

அகப்பாடல்கள் 1849. அவற்றை எண்ணிக்கை அடிப்படையில் நோக்கும்போது பாலை 530, குறிஞ்சி 487, நெய்தல் 345, மருதம் 255, முல்லை 232 என்னும் முறையில் இடம் பெற்றுள்ளன. எட்டுத் தொகையில், ஐங்குறுநூறு, கலித்தொகை ஒவ்வொரு திணைக்கும், ஒவ்வொரு புலவர் என்ற முறையில் ஐந்திணைகளுக்கும் ஐந்து புலவர்களைப் பெற்றுள்ளன. எனினும், அவை தனித்தனிப் பாடல்களாக அமைந்தவை. பொருட் தொடர்ச்சி உடையன அல்ல. ஏனைய நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு ஆகிய மூன்றும் பல புலவர்களால் பாடப்பெற்ற பாடல்களைக் கொண்டுள்ளன.

இவற்றுள் அகநானூறு களிற்றுயானை நிரை (1-120) மணிமிடைப் பவளம் (121-300) நித்திலக்கோவை (301-400) என்னும் மூன்று பகுதிகளை உடையது. எண் அடிப்படையில் திணை உணரும் வண்ணம் இதன்கண் உள்ள பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளன. கலித்தொகை, பரிபாடல் தவிர ஏனைய நூல்கள் ஆசிரியப்பாவால் இயன்றவை.

### கலித்தொகையின் தனித்தன்மை

ஏனைய அகப்பொருள் நூல்கள் போல் அல்லாமல், கலித்தொகை மட்டும் தொல்காப்பியர் காட்டிய அகப்பாவான கலிப்பாவில் பாடப்பட்டுள்ளது. கூற்றுக்குரியர், கேட்போர் இருவரும் மாறி, மாறி உரையாடும் பான்மையில் பாடல்கள் உள்ளன. அக இலக்கியங்கள் அனைத்தும் அன்பின் ஐந்திணையாகிய குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலைக்குரிய பாடல்களாக அமைந்திருக்க, அன்பின் ஐந்திணையல்லாத கைக்கிளை, பெருந்திணைக்குரிய பாடல்கள் கலித்தொகையில் மட்டும் காணப்படுகிறது. மடலேறுதல், ஏறு தழுவுதல், கூன்குறள் காதல் என்பன போன்ற செய்திகள் கலித்தொகையில் மட்டுமே உள்ளன. மடலேறுதல் பற்றி நெய்தற்கலியும், ஏறு தழுவுதல் பற்றி முல்லைக் கலியும் விரிவாக விளக்குகின்றன. திணைப் பொருண்மையை நோக்கும்போது கலித்தொகையின் முல்லைப் பாடல்கள் காதலர்கள் களித்திருக்கும் காட்சியைக் காட்டுகின்றன. பிறமுல்லைப் பாடல்கள் காதலர் தனித்திருக்கும் துயரை வடிக்கின்றன.

### பரிபாடலில் அகப்பொருள்

பரிபாடல்கள் எட்டுப் பாடல்கள் அகத்துறைக் குறிப்பைக் கொண்டுள்ளன. அவற்றுள் வையை பற்றியன ஏழு, செவ்வேள் பற்றியது ஒன்று. அவற்றின்

உட்பொருளை நோக்கும்போது அவை அகப்பாடல்கள் தாமா என்ற ஐயம் எழுகின்றது. இவ்வையத்திற்கான காரணத்தை வையைப் பாடல்கள் வாயிலாகவும், செவ்வேள் பற்றிய பாடல் மூலமாகவும், பாகுபடுத்திக் காணலாம்.

1. வையை நீர் விழவணி பற்றியவை (பரிபாடல்: 6,10,11, 12,20)
2. புனலாடல் / புனலணி இன்பம் பற்றியவை (பரிபாடல்: 7,16)

இவை இரண்டுக்கும் பின்புலமாக அவற்றைச் சுற்றிக் குழுமியுள்ள மக்களின் வாழ்வு வர்ணிக்கப்பட்டுள்ளது. பழைய மரபிலிருந்து விடுபட முடியாமல் அவற்றிற்கும் அகத்துறைக் குறிப்புகள் எழுதி வைத்துவிட்டனர் முன்னோர் எனத் தெளியலாம். அகமும், புறமும் சார்ந்த நூலாகும்.

**பத்துப்பாட்டில் அகப்பாடல்கள்**

பத்துப்பாட்டுள் பெரும்பாலான நூல்கள் ஆசிரியப்பாவில் பாடப்பட்டுள்ளது. முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை இவை மூன்றும் அகம் பற்றியன. நெடுநல் வாடை அகமும், புறமும் சார்ந்த நூலாகும். ஒவ்வொரு பாடலும் வெவ்வேறு ஆசிரியரால் இயற்றப்பட்டுள்ளது.

**முல்லைப்பாட்டு:**

பத்துப்பாட்டுள் ஐந்தாவதாக இடம் பெறும் நூல். அடியளவால் சிறியது. 103 அடிகளையுடையது. இந்நூலின் ஆசிரியர் நப்பூதனார். முல்லைப் பாட்டில் காணும் காட்சிகளை இருபெரும் பிரிவுகளாகவும், ஏழு உட்பிரிவுகளாகவும் பிரிக்கலாம் என்பர்.

தலைவியின் பிரிவுத் துன்பம், பகைவர் மேற்சென்ற மன்னனின் பாசறை அமைப்பு இவை இரண்டும் பெரும் பிரிவுகளாகும். கார்காலத்தின் மாலைப்போது, தலைவனைக் காணாது கடுந்துயருழந்து நிற்கும் தலைவியின் பிரிவாற்றாமை, மாற்றாரை மடக்கச் சென்ற மன்னனின் பாசறை அமைப்பு, தலைவனுடைய அகநிலை, வெற்றி கண்ட வேந்தன் துயில் கொள்ளுதல், தலைவியின் துயரம், தலைவன் மீண்டு வருதல் இவை ஏழும் உட்பிரிவுகளாகும்.

**பணிப்பெண்கள்**

கணிகையர், பரத்தையர் என்ற கூட்டத்தைச் சேர்ந்த பெண்களும் அடிமை வாழ்வு நடத்தவில்லை. சுதந்திர வாழ்வுதான், நடத்தி வந்தனர் என்பதைப் பத்துப்பாட்டுள்

ஒன்றாகிய முல்லைப்பாட்டின் மூலம் அறியலாம். பெண்கள் பாசறைக்குச் செல்லும் வழக்கம் பண்டைக் காலத்தில் இருந்தது. அரசன் போருக்குப் போகும்போது பெண்களையும் அழைத்துச் செல்வான்.

*"குறுந்தொடி முன்கைக் கூந்தலஞ் சிறுபுறத்து*
*இரவுபகற் செய்யுந் திண்பிடி யொள்வாள்*
*விரவுவரிக் கச்சிற் பூண்ட மங்கையர்*
*நெய்யுமிழ் சுரையர் நெடுந்திரிக் கொளீஇக்*
*கையமை விளக்க நந்துதொறு மாட்ட"*[3]

சிறிய வளையல்களை முன்கையிலே அணிந்திருக்கின்றனர். அவர்கள் தலைமயிர் அவிழ்ந்து பிடரியிலே தொங்குகின்றது. இரவைப் பகலாக்கக் கூடிய அவ்வளவு ஒளி பொருந்திய வாட்படையை இடுப்பிலே கட்டித் தொங்கவிட்டிருக்கின்றனர். இப்பெண்கள் எண்ணெய் சிந்தும் குழாய் வடிவமான நீண்ட பந்தத்தைக் கொளுத்தி ஏத்தித் திரிகின்றனர். இவர்கள் பாவை விளக்கு அணையும் போதெல்லாம் மீண்டும் கொளுத்துகின்றனர். இந்த முல்லைப் பாட்டின் மூலம் பெண்கள் போர்க்களம் புகுந்து சுதந்திர வாழ்வு நடத்திய பான்மையினை நம்மால் அறிந்து கொள்ள முடிகிறது.

**நெடுநல்வாடை**

நெடுநல்வாடை என்னும் பெயர் நெடியதாகிய நல்வாடை என விரிக்கப்படும். பத்துப்பாட்டுள் ஏழாவதாக இடம்பெறும் நூலாகும். இந்நூலின் ஆசிரியர் நக்கீரர் ஆவார். தலைவனைப் பிரிந்து வருந்தும் தலைவிக்கு ஒரு பொழுது ஒரூழிபோல நெடிதாகிய வாடையாய் (அரசன்) தலைவன் போகத்தில் மனமற்று வேற்றுப்புலத்துப் போந்திருக்கின்ற இருப்பாகலின் அவனுக்கு நல்லதாகிய வாடையாயினமையின் நெடுநல் வாடை எனப்பட்டது.

**அகனைந்திணை சமுதாயத்தின் பொது இலக்கியம்**

*"மக்கள் நுதலிய அகன் ஐந்திணையும்*
*சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெறாஅர்"*[4]

எனவரும் நூற்பா ஐந்திணையின் மாண்பு கூறும் நூற்பாவாகும். ஐந்திணையில் காதற்பான்மைகள் தனி ஒருவர் வாழ்க்கையில் அப்படியே நிகழாதவை. சமுதாய முழுமை நோக்கின் எல்லாம் நிகழ்பவை. எல்லாக் காதல் துறையும் ஒரு தனியார்பால்

காணப்படாவிட்டாலும், ஒவ்வொரு காதல் துறையும் ஒவ்வொருவர் பால் ஆங்காங்கு காணப்படுதலின் ஐந்திணை முழுவதும் சமுதாய மக்களிடத்துப் பரந்து கிடக்கும் காதலாகவே கொள்ள வேண்டும்.

மக்களைப் பொதுவாகக் கருதிப் பாடப்பெறும் அகப்பாடல்களில் ஒருவரது இயற்பெயர் மட்டுமின்றி குடிப்பெயரும், ஊரும், அடையாள மாலையும் பிறவும் கூடச் சொல்லப் பெறுவதில்லை. நக்கீரர் நெடுநல்வாடையை அகப்பாடலாகவே எழுதி இருப்பர் எனலாம். எனினும் அவர்தம் பாடலில்,

*''வேம்புதலை யாத்த நோன்காழ் எஃகம்''*[5]

என்ற வரியினை எடுத்துக்காட்டி, இது பாண்டிய மன்னனுக்கு முன்னே சென்று கொண்டிருந்த வீரன் கையிலிருந்து வேலில் வேப்ப இலை செருகப்பட்டிருப்பதைக் குறிக்கின்றது. பாண்டியன் மாலை வேப்பமாலையாதலால் நெடுநல்வாடையை அறிஞர் பலரும் புறப்பாடலாகவே கருதியுள்ளனர்.

இதிலிருந்து தமிழர் அன்பின் ஐந்திணையின் தூய்மை, பொதுமை இவைகளின்மீது கொண்டிருந்த கட்டுப்பாடு நன்கு விளங்கும். இவ்வாறு கட்டுப்பாட்டினை விதித்து அக இலக்கியத்தைத் தனிப்பட்ட ஒருவருக்கு உரிமையாக்காமல் எல்லோரும் எனது, எனது என்று சொல்லிக் கொள்ளும் பொதுநிலையில் அக இலக்கியங்களைப் படைத்திருக்கும் தமிழர்தம் எல்லார்க்கும் எல்லாம் என்னும் பொதுவுடைமைப் பண்பு போற்றத்தகும்.

## குறிஞ்சிப்பாட்டு

பத்துப்பாட்டுள் எட்டாவதாக இடம்பெறும் இந்நூல் 261 அடிகளை உடையது. ஆரிய அரசன் பிரகத்தனுக்குத் தமிழ்ச் சுவையை அறிவுறுத்துவதற்காக கபிலர் பாடியது. தலைவன் ஒருவனும், தலைவி ஒருத்தியும் தம்முள் எதிர்ப்பட்டுக் களவு வாழ்க்கைக்கு உட்படுதல் குறிஞ்சி ஒழுக்கமாகும். இப்பாட்டு அறத்தொடு நிற்றல் என்னும் துறையைச் சார்ந்ததாகும். மாலைப் பொழுதின் வர்ணனையும் 96 வகை மலர்களை அடுக்கிச் செல்லும் முறையும் இந்நூலின் தனிச்சிறப்பாக அமைகின்றன.

## அறத்தொடு நிற்றல் துறை

அடக்கம், அமைதி, நேர்மை, உண்மையினை வற்புறுத்தியும், சொல்வன்மை தீதொரீஇ நன்றின்பால் உய்க்கும் நல்லறிவு, பிறர்பால் காணப்படாத அருமை என்பன

பெண்டிர்க்குரிய சிறப்பியல்புகளாகும். இத்தகைய பெறற்கரும் சிறப்புகளைப் பெற்றவளே தோழி. ஆதலின் அவள் கூற்றாக அமைந்த பத்துப் பாட்டுள் ஒன்றாகிய குறிஞ்சிப்பாட்டில் அப்பண்புகள் பலவும் ஆங்காங்கு விளங்குதல் காணலாம்.

இவ்வாறு தோழி அறத்தொடு நின்று தலைவியின் நல்வாழ்க்கைக்கு அடிகோலுகின்றாள். தோழியின் அறிவின் ஆற்றலும், உரையாடலின் நயமும் பாட்டில் புலனாகின்றன. களவொழுக்கமாகிய அகப்பொருட் பகுதியில் தோழி இல்லையானால் ஒன்றுமேயில்லை எனலாம். தோழியின் திறனே குறிஞ்சிப் பாட்டின் உயிர் எனலாம். இக்குறிஞ்சிப் பாட்டில் தலைவியின் நெஞ்சத்து உயர்வினை மதித்து ஒழுகவல்ல தலைவன் அவள் உள்ளத்தில் கவலை நீங்க, சொல்லிய உறுதி உரையினைத் தோழி செவிலிக்கு விளக்கியுரைக்கும் பகுதி மிகவும் நயமுடையதாகும்.

> *"வசையில் வான்றிணைப் புரையோர் கடும்பொடு*
> *விருந்துண் டெஞ்சிய மிச்சில் பெருந்தகை*
> *நின்னோ டுண்டலும் புரைவ தென்றாங்கு*
> *அறம்புணை யாகத் தேற்றிப் பிறங்குமலை*
> *மீமிசைக் கடவுள் வாழ்த்திக் கைதொழுது*
> *ஏமுறு வஞ்சினம் வாய்மையிற் றேற்றி*
> *அந்தீந் தெண்ணீர் குடித்தலின்"*[6]

இவ்வாறு அறத்தொடு நிற்குங்கால் தலைவியின் குடிப்பிறப்பிற்கும், செவிலியின் அறிவிற்கும், தலைவியின் நாணம், கற்பு முதலிய பெருமைக்கும், தலைவனுக்குரிய அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி என்னும் பெருந்தன்மைகளும், தவறு நேராதபடி இக்களவு ஒழுக்கம் நிகழ்ந்த முறையினை முரண்பாடில்லா வகையில் தோழி செவிலிக்குச் சொல்ல வேண்டும். இவ்வாறு முரண்பாடில்லா வகையில் தோழி அறத்தொடு நிற்கிறாள்.

'அறத்தொடு நிற்றல்' என்னும் அறத்துறைக்கு இக்குறிஞ்சிப் பாட்டு சிறந்ததோர் எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றது. இத்துறையின் உயர்ந்த தன்மையினையும், தோழியே அகப்பொருள் மாந்தர்களில் சிறந்தோங்கி நிற்கின்றாள் என்பதையும் குறிஞ்சிப்பாட்டின் துணை கொண்டு நம்மால் அறிந்து கொள்ள முடிகிறது.

## பட்டினப்பாலை

பத்துப்பாட்டுள் ஒன்பதாவதாக இடம்பெறும் இந்நூல் 301 அடிகளை உடையது. இயற்றியவர் கடியலூர் உருத்திரங் கண்ணனார். வஞ்சி அடிகளால் அமைந்து ஆசிரிய அடிகளால் இறுவது. வேற்று நாட்டிற்குச் செல்லத் தொடங்கிய தலைவன் தனது நெஞ்சை நோக்கித் தலைவியைப் பிரிந்து வாரேன் என்று செலவழுங்கிக் கூறும் கூற்றாக உருத்திரங் கண்ணனார் பாடியது. இப்பாடல் பாராட்டப்பெறும் வேந்தனது சிறப்புகள் விரிவான அளவில் கூறப்பட்டிருப்பது தனி அமைப்பாகிறது.

## அறமும் காதலும்

காதல் என்பது இல்லற வாழ்க்கைக்கு முன் இளைஞரிடையே உண்டாகும் குறிப்பிட்ட கால மனநிலை அன்று. அது வாழ்வு முழுவதும் பரவி இருக்கக்கூடிய, இருக்க வேண்டிய மனநிலை என்பது சங்கச் சான்றோர் கண்ட உண்மையாகும். இல்லறம் தொடங்கும்போது காதலை உணர்ச்சி நிலையில் மட்டும் உணராமல் அறிவு நிலையிலும் சங்கப் புலவர் கண்டனர் என்பது குறிப்பிடத்தக்கது. காதல், அறம், என்னும் சொற்கள் ஈண்டு ஒரு பொருட் பன்மொழியாக நிற்றலை அறிதல் வேண்டும். காதலையும், அறத்தையும் ஒன்றாகக் கருதிய நோக்கம் அகப்பாடல்களின் இணையில்லாச் சிறப்பாகும்.

புறப்பாடல்களில் அறம் என்னும் சொல் பல பொருள்களில் கையாளப்பட்டுள்ளது. அகப்பாடல்களில் ‘அறம்’ என்னும் சொல் காதல் என்னும் பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளதை நோக்கலாம். அகப்பாடல்களாக இருந்தாலும், அரச வாழ்வினையும், தமிழரின் வாழ்க்கை முறைகளையும், வாழ்க்கைக்குத் தேவையான அரிய பல கருத்துகளையும் எழுதிச் சென்ற புலவர்களின் புலமைத்திறம் போற்றற்குரியது. நாட்டில் அரச வாழ்க்கை சிறப்புற்று இருந்தால்தான் அந்நாட்டு மக்கள் அமைதியான வாழ்க்கை வாழ முடியும். பட்டினப்பாலையில் இந்நிகழ்ச்சி நன்கு காட்டப்பட்டுள்ளது.

## அருளும் பொருளும்

சங்க காலத்தில் பொருள், வாழ்விற்குத் தேவை என்றாலும் கூடப் பொருளினும் அருளே போற்றப்பட்டது. தலைவன் ஈட்டிவரும் பொருளைவிட அவன் நெஞ்சில் சுரக்கும் அருளையே தலைவி பெரிதும் விரும்பினாள் என்பதை,

*"பொருளே காதலர் காதல்*
*அருளே காதலர் என்றி, நீயே"*[7]

அகநானூறு கொண்டு அறியலாம். அருளை அகத்திலிருந்து அகற்றிய நிலையில் தலைவியைத் தான் தனித்து விடுத்து நீங்கினால் தணியாத துயர் உறுவாளே என்று கருதித் தலைவன் பல்வகைப் பொருள் நலமும் பொருந்திய காவிரிப் பூம்பட்டினமே கிடைப்பதாக இருந்தாலும் அது வேண்டுவதன்று என்று கூறிச் செலவழுங்கினதாகப் பட்டினப்பாலை கூறுகின்றது.

*"முட்டாச் சிறப்பின் பட்டினம் பெறினும்*
*வாரிருங் கூந்தல் வயங்கிழை யொழிய*
*வாரேன் வாழிய நெஞ்சே"*[8]

தலைவன் தலைவியின்பாற் கொண்ட தணியாத காதலும், தலைவி தன் பிரிவால் துயருறுவாளே என்னும் அருள் உணர்வும் இவ்வரிகளில் விளங்கக் காணலாம்.

இதுகாறும் கூறியவற்றால் அன்பே உயிர் வாழ்க்கைக்கு அடிப்படையானது என்பதும், அவ்வன்பின் முதிர்ந்த நிலையே அருள் என்பதும், பொருள் இல்லார்க்கு இவ்வுலகில் வாழ்வு இல்லை என்பதும், அதுபோன்றே அருள் இல்லார்க்கு வாழ்வு இல்லை என்பதும் பொருளற்றவரைப் பொருளாகச் செய்வது பொருள் என்பதும், ஆயினும் பொருள் நம் வாழ்விற்கு உதவும் கருவியாக அமைய வேண்டுமே தவிர, நாம் பொருளிற்குக் கருவியாகிவிடக் கூடாது என்பதும், பொருளினும் அருளே பல்லாற்றானும் மேம்பாடு உடையது என்பதும், அறச்சான்றோர்கள் வாழ்ந்து வழிகாட்டி விட்டுச் சென்ற நெறி அருள்நெறி என்பதும், அவ்வருட் பண்பினை அடைய முயல வேண்டும் என்பதும் நன்கு தெளிவாதல் காணலாம்.

## அகப்பொருள் உணர்வுகள்

### அகவாழ்வு

சங்க காலத்தில் களவு, கற்பு என இரு பிரிவுகளாக அகவாழ்வு வகுத்துரைக்கப்படும். திருமணத்திற்கு முன்னர் நடைபெறும் வாழ்வு 'களவு' என்றும், திருமணத்திற்குப் பின்னர் நடைபெறும் வாழ்வு 'கற்பு' என்றும் கூறப்படும். குறிஞ்சிப்பாட்டு திருமணத்திற்கு முன்னர் நடைபெறும் களவு ஒழுக்கத்தை 'அறத்தொடு நிற்றல்' என்னும் துறையின் மூலமாக எடுத்துரைக்கிறது. பின்னர்

நடைபெறும் கற்பு மணமே களவின் வெற்றியாகக் கருதப்பட்டது.

**இயற்கையும் மனித உணர்வும்**

இயற்கையைக் கண்டு காட்சி இன்பத்தில் தோய்ந்து அதில் வாழ்க்கையைக் கண்ட புலவர்கள் மேற்கண்ட நிலைகளில் மனிதரின் இன்ப துன்பங்களை நோக்கியுள்ளனர். மாந்தர்களின் உள்ள நெகிழ்ச்சிகளை வெளிப்படையாகவும், குறிப்பாகவும், உவமை வழியேயும் புலவர்கள் பாடியுள்ளதைச் சங்க இலக்கியத்தில் விரிவாகக் காணலாம்.

இவ்வாறு மனித உணர்வைக் காட்டும்போது இயற்கையை அதிகமாகப் பயன்படுத்தலுமுண்டு. அளவாகப் பயன்படுத்தலுமுண்டு. இயற்கைக் காட்சி இல்லாமல் மனித உணர்ச்சி மட்டுமே காட்டப் பெறுதலுமுண்டு. எனவே, காதல் பாடல்களில் முதலும், கருவும் இடம்பெறுதல் அதிகமாயினும் அவற்றில் மன உணர்ச்சியைப் புலவர்கள் என்றும் மறந்ததில்லை.

உணர்ச்சி வாழ்வின் இயக்கியாகவும், இலக்கியத்தின் உயிர் நாடியாகவும் விளங்குகின்றது. உணர்ச்சிகளும், உள்ளக் கிளர்ச்சிகளும் மனித வாழ்க்கையில் பெரும் பங்கு கொள்கின்றன. வாழ்க்கையை ஒழுங்குபடுத்துவதும், குறிக்கோளுடன் செயலபடுத்துவதும் உணர்ச்சிவழிச் செயல்களாகும். மனித வாழ்வின் ஒழுகலாற்றை முறைப்படுத்துகின்றன.

மகிழ்ச்சி, அன்பு, இரக்கம் போன்றவை மிகச் சிறந்த நடத்தையைத் தோற்றுவிக்கின்றன. சினம், பொறாமை, வெறுப்பு போன்றவை இழிவான நடத்தையை உருவாக்குகின்றன. உணர்வு பெறுதல், உள்ளக் கிளர்ச்சி, மெய்ப்பாடு என்னும் இவற்றைப் பொறுத்து மனித சிந்தனையும் அமைகின்றது. உணர்ச்சிகளும், உள்ளக் கிளர்ச்சிகளும் வெளித்தோன்றும் மெய்ப்பாடுகளோடும், அவற்றால் உருவாகும் நடத்தைப் பண்புகளோடும் இயைபு பெற்றிருக்கும். அன்றாட மனித வாழ்வில் இத்தகைய உன்னதமான இயைபினைக் காணலாம்.

**காதல் பாடல்கள்**

காதல் மலரினும் மெல்லிய உணர்ச்சி உடையது என்பதை,

> *"மலரினும் மெல்லிது காமம் சிலரதன்*
> *செல்வி தலைப்படு வார்"*[9]

இக்குறட்பா விளக்குகின்றது. உலக இலக்கியங்கள் பலவற்றில் காதல் உணர்ச்சி பெரிதும் எதிரொலிப்பதைக் கேட்டு மனிதமனம் இன்பம் பெறுதல் இயற்கை. சங்ககாலச் செய்யுட்களில் காதல் பற்றிய செய்திகள் மிகுதியாக இடம் பெற்றுள்ளதைக் காணலாம். உள்ளத்தில் எழும் அன்பின் நெகிழ்ச்சியைக் காதலாக்கி அகப்பாடலில் குழைத்துத் தந்தது சங்க காலம். சங்க அகப்பாடல்கள் விரிந்த பார்வையுடையது. காதல் ஒழுக்கத்தை உலகப் பொதுமையாகக் கருதிப் பாடிய சூழ்நிலை ஒன்றே இதற்குச் சான்று. சங்கப் புலவர்கள் தலைவன், தலைவி, தோழி, என்ற நிலையில் அகப்பாடலை நோக்கியுள்ளனர்.

### காதல் - காமம் இயல்பு

காதல் இயல்பைச் சங்கப் புலவர்கள் பல நிலைகளில் வெளிப்படுத்தியுள்ளனர். காதல் இயல்பைத் தலைவனைக் காட்டிலும், தலைவி அல்லது தோழி எடுத்துரைப்பதைச் சங்கப் பாடல்கள் காட்டும். காதல் நுகர்ச்சியை நுணுகி அறிந்த புலவர்கள் காமத்தை ஆற்றுவது அரிது என்ற கருத்துப்படப் பாடியுள்ளனர். காமம் பெரிது எனவும், காதல் பிரிதற்கு அரிது எனவும் குறிப்பிடும் சூழ்நிலைகள் பல. காமத்தை,

*''பொறை நில்லா நோய்''*[10]

*''காமம் நெரிதரக் கைந்நில் லாதே''*[11]

*''கழி பெருங் காமம்''*[12]

*''காதல் தானும் கடலினும் பெரிதே''*[13]

*''பிரிவரிதாகிய தண்டாக் காமம்''*[14]

*''காமம் பெரிதே களைஞரோ விலரே''*[15]

*''உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே''*[16]

எனவரும் தொடர்கள் சங்கப் பாடல்கள் உணர்த்தும் காமத்தின் இயல்புகளாகும். தலைவியின் காதல் நெஞ்சைக் கீழ்க்கண்டவாறு ஔவையார் குறிப்பிடுகிறார்.

*''முட்டு வேன்கொல்? தாக்கு வேன்கொல்?*
*ஓரேன், யானும் ஓர் பெற்றி மேலிட்டு*

*ஆஅ! ஒல்லெனக் கூவு வேன்கொல்?*

*அலமரல் அசைவளி அலைப்ப - என்*

*உயவுநோய் அறியாது துஞ்சும் ஊர்க்கே''*[17]

இப்பாடலில் தன் நோயை அறியாத இந்த ஊர் உறங்கிக் கிடக்கிறதே! ஊராரை எண்ணி முட்டிக் கொள்வதா? அல்லது மோதிக் கொள்வதா? என்று குறிப்பிடுவர்.

மற்றொரு பாடலில், உள்ளம் காதலை நினைக்கப் பெற்றால் வேகின்றது. நினையாதிருப்பின் அது அளவு கடந்து விடுகிறது. காமமோ வருத்தம் தந்து வானத்தைத் தோய்வது போன்று பெருகிவிட்டதே எனப் பாடுவார். அப்பாடல்,

*''உள்ளின், உள்ளம் வேமே; உள்ளாது*

*இருப்பின் எம் அளவைத்து அன்றே; வருத்தி*

*வான்தோய் வற்றே, காமம்;*

*சான்றோர் அல்லர், யாம்மரீஇ யோரே''*[18]

இவ்விரு பாடல்களும் தலைவி, தலைவன்மீது கொண்டுள்ள மிகுதியான அன்பினால் தோழிக்குத் தலைவி தன்னுடைய காதலாகிய துன்பத்தை இவ்வாறு கூறுகின்றாள்.

## அன்பின் ஆழம்

### அன்பின் பண்பு

அன்பு என்பது உள்ளத்தின் நெகிழ்ச்சியாகும். இவ்வன்பு உலக உயிர்கள் அனைத்தின் மாட்டும் அமைந்துள்ளது. அன்பில்லா உயிரே உலகில் இல்லை எனலாம். எனவே, அன்பு என்பது உலக உயிர்கள் அனைத்திற்கும் பொதுவானதாகும். ஓரறிவு உயிர் முதல் ஆறறிவு உயிர் வரை அமைந்த அனைத்துயிர்களுக்கும் இவ்வன்பு வாழ்க்கையிலேயே விளங்குகின்றது. இவ்வன்பு தோன்றக்கூடிய இடம் மனம் என்று உறுதியாக உரைக்கலாம்.

ஒவ்வொரு உயிருக்கும் உள்ளமுண்டு. அன்பை யாரும் எப்பொழுதும் அழிக்க இயலாது. தடை செய்யும் அடைகல்லும் இல்லை. அடைத்து வைக்கும் தாழ்ப்பாலும் இல்லை. ஒருவனுடைய எழுத்தைத் தடுக்கலாம். பேச்சைத் தடுக்கலாம். செயலைத் தடுக்கலாம். வாழ்வைத் தடுக்கலாம். வளமான செல்வத்தைத் தடுக்கலாம். ஆனால், அன்பையும், எண்ணத்தையும் யாரும் எப்பொழுதும், எவ்விடத்தும், எக்காரணம் கொண்டும் அழிக்கவோ, அடைத்துத் தடை செய்யவோ இயலாது.

ஒரு ஆடவன் தன் மகனிடத்தில் செலுத்தும் அன்பு ஒருவகை. தன் தாயிடத்தில் காட்டும் அன்பு ஒருவகை; தன் மனைவியிடம் கொண்ட அன்பு ஒருவகை. தன் தந்தையிடத்தில் உணர்த்தும் அன்பு ஒருவகை. தன் சுற்றத்தாரிடம் செலுத்தும் அன்பு ஒருவகை. தன் சமுதாயத்தில் செலுத்தும் அன்பு ஒரு வகை. உலக உயிர்களிடத்துக் காட்டும் அன்பு ஒருவகை. இவை போன்று மற்றும் பலவகை அன்பு உலகத்தில் உள்ளன. ஆண், பெண், இருவரும் அன்பு கொள்ளாத உயிரோ, பொருளோ உலகில் இல்லை எனலாம். ஆனால், ஒருவர் மேல் ஒருவர் கொண்ட அன்பே அவையனைத்தையும் காட்டிலும் உன்னத அன்பாகும் என்பது தெளிவு.

இவர்களுடைய அன்பு நிலையை வகுத்துரைத்தால் முதலில் தம் வாழ்க்கைத் துணை மீதுள்ள அன்பு, பின்னர் தாய், தந்தை மீதுள்ள அன்பு, பின் தன் மகவு மீதுள்ள அன்பு, தன் உறவு மீதுள்ள அன்பு, தன் இனத்தின் மீதுள்ள அன்பு, உலகப் பொருள் மீதுள்ள அன்பு என்றுதான் வகுத்துரைக்க வேண்டும். இவர்கள் இருவரையும் உலகில் இங்ஙனம் ஒழுகும்படிச் செய்தது அன்பு எனும் பண்பேயாகும். அன்பினாலேயே அவ்வாறு வேறுபட்டுக் காணப்படுகின்றனர். அன்பின் பண்பே சமுதாயத்திலும், உலகிலும், ஆண், பெண் ஆகிய இருபாலாரையும் இணைத்துக் காட்டி, ஏனையவற்றில் ஏற்றத்தாழ்வுடன் வாழச் செய்கின்றது.

### அன்பும் அறமும்

இரண்டு உள்ளங்கள் ஒருமைப்படுவதற்குக் கருவியாய் விளங்குவது அன்பேயாகும். அன்பு தான் செல்லும் இடம் நோக்கி வெவ்வேறு சிறப்புப் பெயர்களைப் பெற்றுத் திகழும். ஒருவன் ஒருத்தியால் அவர்களை ஒருமையுறப் பிணிப்பதற்குத் தோன்றும் காதல் அன்பு எனப் பெயர் பெறும். காதலால் ஒன்றுபட்ட ஈருயிர்களும் ஒருயிர்போல் அறநெறியில் தம் வாழ்வை நடத்துவதே இல்வாழ்க்கை எனப்படும். எனவே, இல்வாழ்க்கையின் அடிப்படை அன்பாகும். முடிவு அறமாகும். அன்பே இல்வாழ்க்கையின் தனிப்பயன்.

> *''அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை*
> *பண்பும் பயனும் அது''*[19]

என்பது வள்ளுவர் வாய்மொழியாகும்.

## தலைவியின் அன்பின் ஆழம்

### தலைவன்மீது கொண்ட அன்பு

பண்டைக் காலத்துத் தமிழக மக்களின் இல்வாழ்வும், உயர்ந்த இலட்சியங்களும் நன்கு புலனாகும். காதலுக்குக் கரையில்லை. ஒரு நெறியில் நிற்பினும் எல்லையற்றுப் பரந்து பெருகித் தோன்றுவது.

*"நிலத்தினும் பெரிதே! வானினும் உயர்ந்தன்று*
*நீரினும் ஆரள வின்றே - சாரல்*
*கருங்கோற் குறிஞ்சிப்பூக் கொண்டு*
*பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே"*[20]

இதனால் தலைவன் தலைவியின் பெருங்காதலை உணர்ந்து அவளை விரைந்து வந்து மணந்து வாழும் வாழ்விலே மனத்தைச் செலுத்துபவன் ஆனான். இப்பாடல் மூலம் தலைவி தலைவனோடு கொண்டுள்ள காதலின் ஆழம் புலனாகும்.

இக்காதல் நிகழ்வதற்கு ஏதாவது குடும்பத் தொடர்பு அல்லது உறவுமுறை இருத்தல் வேண்டும் என்ற நியதியே இல்லை. நமது அன்புடை நெஞ்சங்கள் பயிரிடுவதற்குப் பக்குவமான செம்புலத்தில் பெய்த நீர்போலக் கலந்துவிட்டன என்பதை,

*"செம்புலப் பெயல்நீர் போல*
*அன்புடை நெஞ்சம் தாம்கலந் தனவே"*[21]

இப்பாடல் தலைவன், தலைவிக்கும் இடையே உள்ள மிகுதியான அன்பின் ஆழத்தைப் புலப்படுத்துகிறது.

காதலின் இறுக்கமான நட்பினையும், உறுதியையும் புலவர்கள் கூறியுள்ளனர். தலைவனின் அன்பினை நினைத்து வாழும் தலைவி காதலனிடம் நீங்காத அன்புடையவள். தன்னைத் தலைவன் பிரிந்து சென்று மறந்துவிட்டாலும் அவனிடத்து அழியா நட்புக்கொண்டு விளங்குவதைச் சில பாடல்களில் காணலாம். காமம் நீங்குவதாயினும், தான் கொண்ட நட்பு என்றும் அழியாது என்ற தலைவியின் நீர்மையைக் கபிலர்,

*''தொடர்பும் தேயுமோ நின்வயி னானே?''*[22]

என்ற தொடரால் சுட்டிக்காட்டுவர்.

பிரிந்து செல்ல எண்ணும் தலைவனிடம், தன்னையும் அவன் செல்லும் இடத்திற்கு அழைத்துச் செல்ல வேண்டுகிறாள் மற்றொரு தலைவி. நான் தங்களுடன் வருவது எனக்குத் துன்பத்தைத் தரும் என்று எண்ணாதீர்கள். அதுவே எனக்கு இன்பத்தைத் தருவதாகும் என்கிறாள்.

*''துன்பம் துணையாக நாடின் அதுவல்லது*
*இன்பமும் உண்டோ எமக்கு''*[23]

என்ற பாடல் தலைவி, தலைவன்மீது கொண்டுள்ள அன்பின் ஆழத்தைப் புலப்படுத்துகிறது. பெண்டிர் நிலைகுறித்துக் கூறுகையில் மனைவிளக்காகக் கருதப்பெற்ற போதிலும் மகளிர் இல்லறப் பணிகளில் சமமான பங்கு வகித்திடவில்லை என்பதை மறுப்பதற்கில்லை.

மற்றொரு பாடலில் தலைவி ஒருத்தி தன் தலைவன் கார்காலம் தொடங்குமுன்னர் வருவேன் என்று கூறி வாராது பொய்த்தான். தம்மைத் தலைவன் மறந்ததை எண்ணி வருந்தினாள். தன்னை அவன் மறந்துவிட்டதாக,

*''.... ..... வாரார் - தோழி!*
*மறந்தோர் மன்ற; மறவாம் நாமே''*[24]

என்று நம்மை மறந்தாரை நாம் மறக்க மாட்டாத பண்பு அவனிடம் உள்ளது என்பதிலிருந்து தலைவியின் காதல் ஆழத்தை அறிய முடிகிறது. உலகு தலைகீழாகப் பிறழ்ந்தாலும், நீரும், தீயும் தம்முள் மாறுபட்டுத் திரிந்தாலும், கடலுக்குக் கரை தோன்றினாலும் தலைவனொடு கொண்ட அன்பு கேடுற்று அழியாத நட்பு என்பதை,

*''நிலம்புடை பெயரினும் நீர்திரிந்து பிறழினும்*
*இலங்குதிரைப் பெருங்கடற்கு எல்லை தோன்றினும்*
*.... .... .... ....*
*ஓங்குமலை நாடனொடு அமைந்தநம் தொடர்பே''*[25]

இப்பாடலில் மதுரைக் கொல்லம் புல்லனார் எடுத்துரைப்பார். 'மற்றொரு தலைவி தன் காதலனோடு கொண்ட நட்பு அழியாத நட்பு என்றும், நன்றாகப் பொருந்திய

தகைமையையுடைய அந்நட்டைப் பிறர் பிரித்தற்கு இயலாது''[26] என்பதை மற்றொரு குறுந்தொகைப் பாடல் மூலம் தலைவி, தலைவன்மீது கொண்ட அன்பின் அழியாத் தகைமையை இவ்வாறு தோழிக்குக் கூறுகின்றாள்.

*''இம்மை மாறி மறுமை யாயினும்*
*நீயாகி யர்என் கணவனை*
*யான்ஆ கியர்நின் நெஞ்சுநேர் பவளே''*[27]

என்ற இப்பாடல் வரிகள், சிலர் அடுத்த பிறவியிலும் அன்புக் கணவன் இவனோடு வாழவேண்டும் என்று விரும்பியதையும், பிறவிதோறும் நாமே கணவனும், மனைவியுமாக வாழ்வோம் என்ற உயரிய கருத்தையும் உணர்த்துகிறது.

**கணவனைப் போற்றும் பண்பு**

கணவன், மனைவி என்ற இருவரின் தொடர்பைப் பலவகை உவமைகளால் கூறுவர் சங்கப்புலவர்.

*''உடம்பொடு உயிரிடை யன்ன மற்றன்ன*
*மடந்தையொடு எம்மிடை நட்பு''*[28]

என்றுரைப்பர் வள்ளுவர். இதையே கணவனின் இன்றியமையாமையை மற்றோர் உவமையால் நற்றிணை குறிக்கும்.

*''நீரின் றமையா வுலகம் போலத்*
*தம்மின் றமையா நந்நயந் தருளி''*[29]

என்று தலைவியின் கூற்றில் திகழும் கருத்து, கணவனை இழந்த மனைவியின் வாழ்க்கை வறண்டு விடுவதையும் விளக்குகிறது.

அலுத்து வந்த ஆருயிர்த் தலைவனுக்கு, அறுசுவை உணவு அளித்து மகிழ்வது தலைவியின் முதற் கடமையாகும். தாம் சமைத்ததை இனிது, இனிது எனத் தலைவன் சுவைத்து உண்பதைக் கண்டு அம்மகளிர் மட்டிலா மகிழ்ச்சி அடைவர்.

*''தான்துழந்து அட்ட தீம்புளிப் பாகர்*
*இனிதெனக் கணவன் உண்டலின்*
*நுண்ணிதின் மகிழ்ந்தன்று ஒண்ணுதல் முகனே''*[30]

இத்தகைய உண்மை அன்பினாலே, வன்மைமிக்க ஆடவரையும் மென்மைமிக்க மகளிர் பிணித்து விட்டனர். இக்கருத்தை குறுந்தொகையில் மனைவியின் மாற்றாளான பரத்தையின் கூற்றில் வைத்துக் கூறி மகிழ்வர்.

*“கையும் காலும் தூக்கத் தூக்கும்*
*ஆடிப் பாவை போல*
*மேவன செய்யும்”*[31]

என்பதை இவ்வரிகள் புலப்படுத்துகின்றன. ‘குறிப்பாக வீட்டு வாழ்க்கையில் எவ்வாறாயினும், சிறப்பாக நாட்டு வாழ்க்கையாம் வெளி வாழ்வில் மனையுறை மகளிரது ஏவலுக்குட்பட்டு வினையாண்மையை ஆடவர் இழத்தல் கூடாது என்று எச்சரிக்கை விடுப்பர். இவ்வுறவுரையை ஆடவரேயன்றி மகளிரும் நன்கு உணர்ந்திருந்தனர்’[32] என்பதிலிருந்து சங்ககாலப் பெண்கள், ஆடவரைப் போற்றும் பண்பினை அறிய முடிகின்றது.

## பிரிவால் ஆற்றியிருக்கும் பண்பு

கார்காலத்தின் பல அறிகுறிகளைக் கண் எதிரே காண்கிறாள் தலைவி. கார்காலமன்று எனத் தோழி பலமுறை எடுத்துச் சொல்லி வற்புறுத்துவது கேட்டுச் சலிப்பு அடைகிறாள். பொற்காசுகளைப் போன்ற பூக்களை ஈன்ற கொன்றையைக் காண்கிறேன். குருந்த மலர்கள் மலர்ந்து அசைவதையும் காண்கிறேன். மிக்க குளிர்ச்சி பெற்ற இந்தக் காலம் கார்காலமன்று என நீ சொல்வாயானால், நான் காண்பதெல்லாம் கனவுதானா என்று பேசுகிறேன் என்கிறாள்.

*“காசின் அன்னபோது ஈன் கொன்றை*
*குருந்தொடு அலம்வரும் பெருந்தண் காலையும்*
*கார் அன்று என்றி ஆயின்*
*கனவோ மற்றிது? வினவுவல் யானே”*[33]

தலைவர் சொன்ன சொல் பிறழாமல் மீண்டும் வருவார் என்பதில் தலைவியின் நம்பிக்கை சிறிதும் தளரவில்லை.

*“நிலம்புடை பெயர்வ தாயினும் கூறிய*
*சொற்புடை பெயர்தலோ இலரே”*[34]

பிறகு தன் துயரத்தைப் பற்றிக் கவலை இல்லை என்றும், தன்னைப்போல் கணவரைப்

பிரிந்து தனித்திருக்கும் மற்ற மகளிர்க்கு வழி என்ன என்றும், பிறரைப் பற்றி கவலையுறுபவள்போல் தோழியை நோக்கிச் சொல்கிறாள். 'கார்காலம் என்பதற்கு அறிகுறியாக, மிகக் குளிர்ந்த மழைக்காலத்திற்குரிய பித்திகத்தின் அரும்பு முன்பே மிகச் சிவந்து தோன்றுவதைப் பார்த்து யான் மருளவில்லை. என்னைவிட மற்ற பெண்களின் நிலைமையைப் பற்றி எண்ணிப் பார்க்கிறேன். மலையிலே அருவி துள்ளும்படி பெய்வதற்காக மழை இடித்து முழங்கும் குரலை நள்ளிரவில் கேட்பார்களானால் தலைவரைப் பிரிந்து தனித்து வருந்தும் மகளிர் மேலும் துயருறுவார்களே என்று எண்ணி வருந்துகிறேன்'[35] என்று குறுந்தொகைத் தலைவி கூறுகின்றாள்.

'மேலும் மேலும் கார்காலத்து நினைவை வளர்க்கக்கூடிய பொருட்களைக் கண்டு தலைவியின் நெஞ்சம் கலங்குகின்றது. காட்டில் ஆட்டு மந்தையில் பறியோலையைக் கையில் கொண்ட ஆயர் காத்து நிற்க, அங்கிருந்து பால் கொண்டு வந்து வீட்டில் சேர்ப்பித்து, வீட்டிலிருந்து கூழ்கொண்டு திரும்பும் ஆடு மேய்க்கும் இடை மகனுடைய தலையில் சூடிய அரும்புகளைக் காண்கிறாள். அவை எல்லாம் சிறுசிறு முல்லை முகைகளே என்பதைக் காண்கிறாள். முல்லையும் மலரத் தொடங்கிவிட்டன. அவர் இன்னும் வரவில்லையே'[36] என்று கலங்குகிறாள். தலைவன் வருவதாகக் கூறிய பருவம் வரும் வரைக்கும் தன் பிரிவுத் துயரைப் பொறுத்திருந்த தலைவியின் கற்பின் பெருமையும் இதனால் உணரப்படும்.

காதலர் திரும்பிவரும் காட்சியைக் காணப்பெற்ற பெண்களே நற்பேறு பெற்றவர்கள். அவர்களே நோற்றவர்கள் என்று தன் துயரம் தோன்றக் கூறுகிறாள் மற்றொரு தலைவி.

> *"அரும்பெறல் பொருட்பிணி போகிப்*
> *பிரிந்துறை காதலர் வரக்காண் போரே"*[37]

தலைவன் வரக் காலம் தாழ்த்தது அவன் குறை என்று கூறிப் பழிக்காமல், அது தன் தவக்குறை என நினைந்து வருந்தும் தலைவியின் கற்புடைமையும், ஆற்றியிருக்கும் தன்மையும் இதனால் அறியப்படும்.

முல்லைத்திணைப் பாடல்கள் தலைவி, தலைவன் வரவை எதிர்நோக்கி நம்பிக்கையுடன் ஆற்றியிருக்கும் ஒழுக்கம் பற்றி எழுந்தனவே என்பதை,

*"செறியிலைக் காயா அஞ்சன மலர*
*முறியிணர்க் கொன்றை நன்பொன் காலக்*
*கோடற் குவிமுகை யங்கை யவிழத்*
*தோடார் தோன்றி குருதி பூப்பக்*
*கான நந்திய செந்நிலப் பெருவழி"*[38]

இப்பாடல் வரிகள் நமக்கு உணர்த்துகின்றன.

கார்காலத்தின் தொடக்கத்தில் திரும்பி வருவேன் என்று கூறிச் சென்ற தலைவன் இன்னும் வரவில்லை. கார்கால முதல் மழையால் முல்லைக் கொடி பூத்துக் குலுங்குகின்றது. அவ்வரும்புகள் கார்காலத்தின் வெண்ணிறப் பற்கள் போலவும், கார்காலம் அப்பற்களைக் காட்டி தலைவியைப் பார்த்து நகைப்பது போலவும் தோற்றுவதாக ஒக்கூர் மாசாத்தியார் ஒரு பெண்ணின் ஆழ்ந்த மனத்துயரத்தைப் புலப்படுத்தியுள்ளார்.

*"பெயல்புறந் தந்த பூங்கொடி முல்லைத்*
*தொகுமுகை இலங்குஎயிறு ஆக*
*நகுமே - தோழி - நறுந்தண் காரே"*[39]

பிறிதொரு தலைவி அம்முல்லைக் கொடியினை வாழ்த்தி, அதனை நோக்கி இரக்கத்துடன் பின்வருமாறு வினவுகின்றாள். "உன் சிறு சிறு வெண்ணிற அரும்புகளால் என்னைப் பார்த்து எள்ளி நகையாடுவது போல் புன்முறுவல் காட்டுகின்றாள். கணவனைப் பிரிந்து தனித்துறையும் மகளிரிடம் நீ இவ்வாறு செய்வது தகாது"[40] என்று கழிவிரக்கத்தோடு வினவுகின்றாள்.

இவ்வாறு சங்ககாலப் புலவர்கள் முல்லை நிலத்தினையும், தலைவியின் அன்பு நெஞ்சத்தினையும், தலைவனின் செய்வினை முடித்த செம்மல் உள்ளத்தினையும், காதல் நெஞ்சங்களின் தவிப்பினையும், மனமாசற்ற உயரிய நிலையினையும், ஒருவர்க்காக ஒருவர் இரங்கும் பேரன்பினையும் தம் அழியாத பாடல்களில் நயம்படப் புலப்படுத்தியுள்ளனர்.

### ஒன்றுபட்ட அன்பு

தலைவன், தலைவி பிரிந்திருக்கும்பொழுது ஒழுகும் ஒழுகலாறே ஒத்த அன்பினை விளக்குகின்றது. பிரிவு இல்லாமல் வாழ்க்கை இல்லை. வாழ்க்கையில்

பிரிவு நேரும்போதும் மீண்டும் அந்த ஒத்த அன்பே எதிர்பார்க்கப் பெறுகின்றது. இதைப் பிரிவாற்றாமல் வருந்தும் தலைவியின் சொற்களால் அறியலாம். தலைவன் பிரிந்தாலும் பிரியலாம். பிரிவால் வருந்துவதாயினும் வருந்தலாம். ஆனால், தாம் தலைவனை விரும்புவது போலவே, தலைவனும் தம்மை விரும்ப வேண்டும். அத்தகைய ஒத்த அன்பு வாய்க்கப் பெற்றவர்கள், காதலர் பிரிந்தாலும் மீண்டும் வருவர் என்று செருக்கோடு வாழும் பேறுடையவர்கள். இதற்குச் சான்றாக,

> *"கானம் கார்எனக் கூறினும்*
> *யானோ தேறேன்; அவர் பொய்வழங் கலரே"*[41]

என்ற பாடலைக் கூறலாம். இப்பாடலில் கார்காலத்தில் திரும்பி வந்துவிடுவதாகச் சொல்லிச் சென்ற உன் கணவன் இன்னும் வரவில்லையே என்று மற்றவர்கள் தலைவிக்கு எடுத்துச் சொன்னாலும், தலைவி அதை ஏற்றுக் கொள்ளாமல் உறுதியுடன் இருக்கின்றாள். தலைவன் சொல்லிச் சென்ற உறுதியினின்றும் அவள் சிறிதும் தளராமல் இருப்பது குறிப்பிடத்தக்கது.

காதல் என்பது காவடி தாங்கும் இருபுறம்போல, இருவர் சார்பிலும் ஒத்த வேட்கை இருந்தால்தான் சிறப்புறும். தாம் விரும்பும் காதலரிடமிருந்து ஓர் இன்சொல்லாவது பெற்றால்தான், பிரிவாற்றாமல் வருந்தினாலும் உயிர்வாழ முடியும். ஓர் இன்சொல்லும் பெறாமல் உயிர் வாழ்கின்றவர்களைப்போல் கல்நெஞ்சம் உடையவர்கள் உலகத்தில் இல்லை.

பிரிவால் வருந்தும் மனைவியரை நினைந்து உணர்ந்து காதலர் மீண்டும் வந்து அன்பு செய்வாரானால் அவருடைய அன்புக்கு ஈடு இணை கிடையாது. மழையை எதிர்பார்த்து வாழ்கின்றவர்களுக்கு மழை பெய்து காக்கும் அருளைத்தான், அதற்கு ஒப்பாகக் கூறவேண்டும் என்று தலைவி கூறும் சொற்களில் காதல் வாழ்க்கையில் பிரிவின்போது ஒன்றுபட்ட அன்பே வேண்டும் என்று ஏங்கும் ஏக்கத்தைக் காணலாம்.

காதலன் பொருள் ஈட்டுவதற்கோ, வேறு அலுவல் காரணமாகவோ காதலியை விட்டுப் பிரிந்து செல்வான். அவன் பிரிவால் வருந்தியிருக்கும் பெண்களின் நிலையை அகப்பொருள் இலக்கியங்களில் காண்கிறோம். பிரிந்த தலைவன் திரும்பும் வரையிலும் அவர்கள் உண்பதில்லை, உறங்குவதில்லை. நீராடுவதில்லை. உடுத்தியும், பூண்டும் தங்களை அலங்கரித்துக் கொள்வதில்லை என்று

கூறப்படுகின்றது. இவை பழந்தமிழ்ப் பெண்களின் உயரிய பண்பை எடுத்துக் காட்டுகின்றது.

**தலைவியின் அருள் உள்ளம்**

இன்பத்திற்கு இடையூறு நேரா வண்ணம் பிற உயிர்களின் துன்பம் நீக்கி அருள் செய்து இரக்கம் காட்டும் மனித நேயப் பண்பினை வாழ்வியல் நெறியாக பண்டைத் தமிழர் மேற்கொண்டனர். காட்சி இன்பமாகுதல் கருதித்தான் மனிதன் பிற உயிர்களுக்கு அருளறமின்றித் துன்பம் செய்ய முனைகிறான்.

நண்டுகள் மேல் தேராழியை ஏற்றாதவாறு நிலவு ஒளியில் நண்டுகளைப் பார்த்துப் பாகன் கவனமாகத் தேரைக் கடற்கரையில் செலுத்தத் தலைவன் வந்து தலைவியைச் சந்தித்தான் என்று நற்றிணைப் பாடல் கூறுகின்றது.

*"புணரி பொருத பூமணல் அடைகரை*
*யாழி மருங்கின் அலவன் ஓம்பி*
*வலவன் வள்பாய்ந் தூர*
*நிலவு விரிந் தன்றாற் கானலானே"*[42]

இவ்வாறு அகத்திலும் புறத்திலும் சிற்றுயிர்களுக்கு இரங்கும் தலைவன், தலைவியரைக் காண்கிறோம். உயிர்களின் இன்ப நுகர்ச்சிக்கு துன்பம் ஏற்பட்டுவிடக் கூடாது என்பதன் அடிப்படையிலேயே பெரும்பாலும் அருள் செய்தல் நிகழக் காண்கிறோம்.

தினைப்புனத்தில் கிளி கடிந்த அவர்களே மனையகத்தில் கிளி வளர்த்தார்கள். அழகுணர்ச்சியின் பொருட்டு செல்லப் பறவைகளாக மைனா, கிளி ஆகியவற்றை தலைவி வளர்த்தாலும், அவற்றைப் பேணும் முறையில் உயிர் இரக்கம் காணப்பட்டது. வள்ளத்தில் பாலூட்டி செந்தார்ப் பைங்கிளியை முன்கை ஏந்தி மழலை இன்பம் பயிற்றினர். உடன்போக்காகச் சென்ற தலைவிக்காக அன்னையரும் கிள்ளை அலறுவது கொண்டு அவர்கள் காட்டிய உயிர்ப் பரிவினை உணரலாம்.

*"நீர்வார் கண்ணேன் கலுழும் என்னினும்*
*கிள்ளையும் கிள்ளையெனக் கூஉம் இளையோள்"*[43]

என்ற வரிகள் இதனை உணர்த்துகின்றன. 'நெடுந்தொலைவில் வயலில் விளைந்த நெற்கதிர்களைப் பல கிளிகள் மூலம் கொணர்வித்து முற்றுகையிடப்பட்டுப் பாரியின்

பறம்பரனுள் வாழ்ந்தவர்களைப் பல்லாண்டு உண்பித்துப் போராடச் செய்து பகை வேந்தரைத் தோல்வி காணச் செய்தார்'.[44] இதனால் பரிவு காட்டி கிளிகளைப் பழக்கி வளர்த்துப் பயன்படுத்திய நிலையும், அக்கால மகளிர் பிற உயிர்களிடத்துக் காட்டிய நேயமும் தெரிய வருகின்றன.

## தலைவனின் அன்பின் ஆழம்

### தலைவிமீது கொண்ட அன்பு

தலைவன் தலைவிமீது கொண்ட அன்பின் ஆழத்தைப் பல பாடல்கள் உணர்த்துகின்றன. தலைவியோடு உறங்கும் நாட்களே பயனுடைய நாட்கள் என்றும் குறிப்பிடுகிறான் ஒரு தலைவன். தலைவியோடு ஒருநாள் சேர்ந்து மகிழ்ந்தால் போதும். அதன் பின்னர் அரைநாள் வாழ்க்கைகூட, தான் வாழத் தேவையில்லை என்கிறான்.

*''பெருந்தோட் குறுமகள் சிறுமெல் ஆகம்*
*ஒருநாள் புணரப் புணரின்*
*அரைநாள் வாழ்க்கையும் வேண்டலன் யானே''*[45]

இப்பாடல் தலைவன் தலைவி மீது கொண்ட விருப்பத்தின் ஆழத்தையும், அழுத்தத்தையும், தலைவியை அடையாமல் உயிர் வாழேன் என்ற கருத்தையும் புலப்படுத்துகிறது.

### தலைவியைச் சிறப்பித்தல்

மனையுறை மகளிர் உயிரென விளங்கிய தம் கணவரைப் பேணியும், பெண்ணின் பெருமையாய தம் திண்ணிய கற்பினைக் காத்தும், மயக்குறு மக்களை மாண்புற வளர்த்தும், வருந்திவரும் விருந்தினரை ஓம்பியும், இடும்பை எனக் கருதாது, குடும்பச் சுற்றத்தாரைத் தழுவியும், கடவுளை வணங்கியும், கவின்கலை வளர்த்தும் துன்பம் துடைத்து இன்பம் பெருக்கினர்.

இவ்வாறு நாட்டிலும், வீட்டிலும் புகழுடன் பொலியும் மகளிர் தமக்கு மனைவியராய் வாய்ப்பதையே பெரும்பேறாகக் கருதினர். ஆடவர் என்னும் கருத்து குறுந்தொகையில் சிறந்து விளங்கும். ஒரு தலைவன் தன்னூர்ப் பெருந்தெருவில் செல்லும் போதெல்லாம் பலரும் அவனைச் சுட்டிக்காட்டி நம்மூர் நல்லாள் இன்னாளின் கணவன் இதோ செல்கின்றான் எனக் கூறுவது சற்று நாணத்தைத்

தருவதென்றாலும் அதனைப் பெரும் பேறாகக் கருதினான்.

*"…. …. அரிவையைப்*
*பெறுகதில் அம்ம, யானே! பெற்றாங்கு*
*அறிகதில் அம்மஇவ் ஊரே! மறுகில்*
*நல்லோள் கணவன் இவன்எனப்*
*பல்லோர் கூற யாஅம் நாணுகம் சிறிதே"*[46]

என்ற அளவுக்குத் தமிழக மகளிர் தம் கணவன்மாருக்குப் பெருமை தேடித் தந்தனர் என்பதிலிருந்து தமிழக மக்களின் தனிப்பெரும் பண்பாடு தெரிய வருகிறது.

மற்றொரு பாடலில் தலைவியைப் பற்றித் தலைவன் கூறும் போது கருதிய செயலை முடித்தற் போன்ற இனிமை உடையவள் என்று கூறினான் எனவும்,

*"உள்ளிய வினைமுடித் தன்ன இனியோள்"*[47]

கருதிய செயலை முடித்தோமாயின் அன்றே விடுவேம் எனத் தலைவன் கூறினான் எனவும் உள்ளன.

*"முன்னியது முடித்தனம் ஆயின் நன்னுதல்*
*வருவம்"*[48]

இவற்றிலிருந்து கடமையை நிறைவேற்றுதலில் முன்னையோர் மேற்கொண்டிருந்த முதன்மை விளங்கும்.

**தலைவனின் அருள் உள்ளம்**

தொடர்புடையாரிடத்து மட்டுமின்றி தொடர்பில்லாதாரிடத்தும் இயல்பாகத் தோன்றும் கருணை உள்ளம். ஏதேனும் ஒருயிர் இடர்ப்படின் அதற்குத், தன்னுயிர்க்கு உற்ற துன்பத்தினால் வருந்துவதுபோல வருந்தும் ஈரமுடைமை. இது அன்பின் முதிர்ச்சியால் தோன்றுவதாகும் என்பதை,

*"பிறர்க்கென முயலும் பேரருள் நெஞ்சமொடு*
*காமர் பொருட்பிணி போகிய*
*நாமவெம் காதலர் சென்ற வாறே"*[49]

இப்பாடல் விளக்குகிறது. இதிலிருந்து தலைவன் பிறர்க்கென முயலும் பேரருள் படைத்தவன் என்பது தெரிகிறது.

## பிற உயிர்கள் மீது கொண்ட நேயம்

தூய காதல் வாழ்வால் நெஞ்சம் பண்பட்டவர்கள் மற்ற உயிர்களிடத்து இரக்கம் உடையவர்களாக வாழ்வார்கள் என்பதையும் சங்கப் புலவர்கள் முல்லைத் திணைப் பாடல்களில் எடுத்துரைக்கிறார்கள். தலைவன் தன் ஊருக்குச் செல்லும்போது, வழியில் காணும் காட்சிகளால் அவன் நெஞ்சம் குழைவதாகவும், இன்பமாய் வாழும் உயிரினங்களுக்கு இடையூறு செய்யாமல் தேரைச் செலுத்துவதாகவும் விளக்குகின்றன.

"செல்லும் வழியில் ஆண்மான் ஒன்று தன் துணையோடு கூடி அமைதியாய்க் கிடக்கிறது. பாகன் தேரை விரைந்து செலுத்துகிறான். இவ்வளவு விரைவாகத் தேர் சென்றால் அதன் ஒலியால் மான்களின் அமைதியான இன்ப வாழ்வு கெடுமே என்று தலைவனின் உள்ளம் இரக்கத்தோடு எண்ணுகிறது. வாவிச் செல்லுதலில் வல்ல குதிரைகள் இப்போது மெல்ல ஒதுங்கிச் செல்ல வேண்டும் என்று விரும்புகிறான். ஆகையால் அவற்றைத் தாற்றுக்கோலால் குத்தித் தூண்டாமல் மெல்லச் செலுத்துமாறு பாகனுக்குக் கூறுகிறான்."[50]

மற்றோரிடத்தில் வழியில் மலர்மிகுந்த ஒரு சோலை காணப்படுகிறது. அதில் துணையோடு வாழும் வண்டினங்கள் கூட்டமாக இருத்தலைத் தலைவன் தொலைவிலிருந்தே காண்கிறான். கடிவாளம் நெகிழ, குதிரைகள் ஓடுவதால் தேர் விரைந்து செல்லும்போது மணிகளின் ஓசையால் அந்த வண்டுகளின் இனிய அமைதி கெட்டு அவை சிதறுண்டு மயங்கி வருந்துமே என்று தலைவன் அஞ்சுகிறான். உடனே அவன் தேரில் ஒலிக்கும் மணிகளின் நாக்குகளை அசைந்து ஒலிக்காதபடிக் கட்டி விடுகிறான். தேரை மெல்லச் செலுத்துகிறான்.

> *"குரங்குளைப் பொலிந்த கொய்சுவற் புரவி*
> *நரம்பு ஆர்த்தன்ன வாங்கு வள்பரிய*
> *பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த*
> *தாதுண் பறவை பேதுறல் அஞ்சி*
> *மணிநா ஆர்த்த மாண்வினைத் தேரன்"*[51]

இப்பாடல்களிலிருந்து தலைவன் பிற உயிர்களின்மீது கொண்ட அருள் உள்ளம் புலப்படுகிறது.

தலைவன் தேர் ஏறிச் செல்லும் வழியில் ஆணும், பெண்ணுமாய் விலங்குகளும், பறவைகளும் அன்பாக வாழும் காட்சிகளைக் காண்கிறான். அவற்றைக் காணும்போதெல்லாம் அவன் நெஞ்சம் குழைகிறது. நாம் நம் அன்பு வாழ்க்கையை மறந்து தலைவி வருந்துமாறு பிரிந்திருந்தோமே என்று உருகுகிறான். இரலை ஆண்மான் ஒன்று தன் துணையையும், குட்டியையும் அன்புடன் கூவி அழைத்துத் தேடுகிறது. அவைகள் எதையோ கண்டு மருண்டு எங்கோ ஓடிவிட்டன. அவற்றை அன்பு நெஞ்சத்தோடு அகவத் தேடுகின்ற ஆண்மானைப் பாகனுக்குக் காட்டி 'உன் தேர் விரைந்து செல்வதாக' என்கிறான்.

*''.... .... வல்விரைந்து*
*செல்க பாக நின் தேரே உவக்காண்*
*கழிப்பெயர் களரில் போகிய மடமான்*
*விழிக்கண் போதையொடு இனனிரிந் தோடக்*
*காமர் நெஞ்சமொடு அகலாத்*
*தேடூஉ நின்ற இரலை ஏறே''*[52]

மற்றோரிடத்தில் காட்டுக் கோழி தன் பெடையோடு திரிவதைக் காண்கிறான். மழைநீர் ஓடிய அகன்ற காட்டு வழியில் உலராத ஈரமணலைக் கிளறுகிறது அந்தச் சேவல். அதில் இரை கிடைக்க, அதைப் பற்றிக் கொண்டு பெருமிதத்தோடு தன் பெடையை நோக்குகிறது. பெடைக்கு நல்ல உணவு தேடிக் கொடுத்து மகிழும் மகிழ்ச்சி, அது பெடையைப் பார்க்கும் பார்வையில் விளங்குவதைக் கண்டான் தலைவன். அதைப் பாகனுக்குக் காட்டுகிறான்.

''பாக! அதோ! அந்தச் சேவலின் பெருந்தன்மையான நிலையைப் பார்த்தால் அதுதான் வாழ்க்கை என்று தோன்றுகிறது. அதனால் நாம் விரைந்து செல்ல வேண்டும். இளையர் விருப்பம்போல் நடந்து மெல்ல வரட்டும். நாம் முன்னே விரைந்து செல்வோம். இதுவரையில் தீண்டாத தாற்றுக்கோலால் இனித் தீண்டித் தேரை விரைந்து செலுத்துக''[53] என்கிறான்.

மற்றொரு தலைவன் வரும் வழியில் இரலை ஆண்மான் ஒன்று தன் துணையோடும், குட்டியோடும் இருத்தலைக் காண்கிறான். அது தன் பெண் மான்

அருகம்புல்லைத் தின்னுமாறு செய்த பிறகு, தெளிந்த நீரோடும் கானாற்றின் மணல் பரந்த கரையில் தூங்குமாறு செய்கிறது. அதன் பக்கத்தில் மறியும் தூங்குகிறது. ஆண்மான் அவற்றிற்குத் துன்பம் நேராதபடி காவல் புரிகிறது. குடும்பத்தின் தலைமை இப்படிப்பட்டதாக இருக்க வேண்டும் என்று தலைவன் வியந்து எண்ணுகிறான். மானின் பெருந்தகைமையையும், தான் கடமையிலிருந்து தவறியதையும் நினைந்து அவனுடைய நெஞ்சம் உடைகிறது.

தலைவன், தேர்ப்பாகனை நோக்கித் தேர் விரைந்து செல்லட்டும் என்கிறான். தலைவி வாழும் வீட்டில், அன்னம் தன் துணையோடு மகிழ்கின்ற காட்சியை அவள் காண்பாள். தான் வளர்த்த கிளியிடம் சென்று என்னை விட்டுப் பிரிந்து சென்றவரைப் பற்றி, இன்று வருவார் என்று என்னிடம் சொல் என்று வீட்டிலுள்ள மற்றவர்கள் அறியாதபடி மெல்லப் பேசுவாள். அத்தகைய தலைவி இழந்த அழகைத் திரும்பப் பெறுமாறு விரைந்து செல்ல வேண்டும். இந்த மான் குடும்பத்தின் வாழ்வைக் கண்டு, என் நெஞ்சம் உடைந்து விட்டது. உடைந்த நெஞ்சம் திருந்தி இன்புறுமாறு, தேர்மிக விரைந்து செல்லட்டும் என்கிறான்.

*''இருதிரி மருப்பின் .... மாண்நலம் பெறவே''*[54]

தலைவன் இவ்வாறு தலைவியின் நிலையைக் கற்பனை செய்து காணும் போதும், அவளுடைய பண்பாட்டையும், நாட்டுப்பற்றையும் விடாமல் நினைக்கிறான். அவள் கிளியோடு பேசித் தலைவனைப் பற்றித் தனக்குச் சொல்லுமாறு கேட்கும்போது அவனுடைய வருகையைப் பற்றித், தான் கலங்குவதைப் பிறர் அறியாதபடி மெல்லப் பேசுகிறாள். தலைவன் பிரிந்தது நாட்டுக் கடமை பற்றியே ஆதலால், தான் கலங்குவது அறமாகாது என்றும், ஆற்றியிருப்பதே கடமை என்றும், தன் நாட்டுப் பற்றுக்குக் குறை நேரலாகாது என்று எண்ணும் உயர்ந்த எண்ணமே அதற்குக் காரணமாகும்.

## தோழியின் அன்பின் ஆழம்

### தோழியின் அறிவாற்றல்

உடல் இன்பம் பற்றிய நிலையில்லாத உறவினும், உயிரின் இயல்பாகிய இன்ப அன்பினைப் பற்றி நிற்கும் நிலையான உள்ளத்து உறவு சிறந்தது என்ற கருத்து ஒரு பாடலில் கூறப்பட்டுள்ளது.

*“பொன்னேர் மேனி மணியிற் றாழ்ந்த*
*நன்னெடுங் கூந்தல் நரையொடு முடிப்பினும்*
*நீத்தல் ஓம்புமதி”*[55]

இவ்வாறு தோழி, பிறர் அறியாமல் தலைவனுடன் தலைவியை ஒன்று சேர்த்து வெளியூருக்கு அனுப்பும்போது தலைவனை நோக்கி, உன் பிழை படாத உறுதி மொழியைக் கேட்டுத் தெளிந்த இவள், உடல் தளர்ந்து முதுமை அடைந்தாலும் இவளைக் கைவிடாமல் பாதுகாப்பாயாக என்பது இப்பாடலின் பொருளாகும்.

ஆண்டு முதிர்ந்து உடல் தளரும்போது உடலின் இளமைத் தோற்றப் பொலிவையும், இன்பப் பேற்றையும் அடிப்படையாகக் கொண்டு தோற்றும் காதல் உறவும் தளர்தல் மக்கள் இயல்பில் காணப்படுகிறது. அதனைத் தலைவனுக்குத் தோழி சுட்டிக்காட்டும் வாயிலாக மக்களின் நல்வாழ்விற்கு இன்றியமையாத உயிர்நிலைக் கருத்தினைப் புலவர் அமைத்துள்ளார். இது எல்லோரும் உணர்ந்து மேற்கொள்வதற்குரிய மிகச்சிறந்த அறிவுரையாகும். இப்பாடலின் மூலம் தோழியின் அறிவாற்றலும், தோழி தலைவி மீது கொண்ட நேயமும் அறிந்து கொள்ள முடிகிறது.

கலித்தொகையில் மக்கள் நல்வாழ்விற்கான நெறிமுறைகள் மிகுதியும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. ஒரு தலைவனும், தலைவியும் நீண்ட நாட்களாகக் களவு ஒழுக்கத்தில் ஈடுபட்டிருந்தனர். அதன் காரணமாகத் தலைவியிடம் சில வேறுபாடுகள் காணப்பட்டன. அவளது களவு ஒழுக்கத்தைத் தோழி, நாற்றம், தோற்றம், ஒழுக்கம், உண்டி, செய்வினை மறைத்தல், செலவு, பயில்வு முதலியவற்றால் அறிந்து கொள்கிறாள். இது தலைவிக்குத் தெரிந்தவுடன் தோழியிடம், தலைவனுக்கும், தனக்கும் உண்டான நட்பின் இயல்பினைக் கூறினாள்.

‘கயமலர் உண்கண்ணாய்!’’[56] என்ற பாடல் தோழியின் அறிவாற்றலை விளக்குகிறது. இப்பாடலில் அருமையான வாழ்வியல் தத்துவத்தை உணர்த்துவதாகக் கபிலர் கூறுகிறார். வாயால் சொல்வது பெண்மையின் இயல்பன்று என்று சொல்லி பொய்மையால் மார்பில் வீழ்ந்தாள் எனக் காட்டும் நயம் இன்புறத்தக்கது. இவ்வாறு, தோழி, தன்னுடைய அறிவாற்றல், சொல்லாற்றல் மூலம் பல மனித நேயக் கருத்துகளை உலகியலுக்கு உணர்த்தியுள்ளதைக் காணலாம்.

### தோழியின் சொல்வன்மை

பழந்தமிழ் மக்கள் காதலினும் கடமைக்கு முதலிடம் அளித்தனர். தலைவன் வினை செய்தற் பொருட்டுத் தலைவியைப் பிரிந்து செல்லத் தான் நினைப்பதைத் தோழியிடம் கூறினான். இதைக் கேட்ட தோழி, தலைவனை நோக்கித் தலைவி உம்மைவிட்டுப் பிரிதலைச் சிறிதும் தாங்கமாட்டாள். ஆதலால் நீர் செல்வீராக என்று சொல்வதற்கு அஞ்சுகின்றேன். செல்லாது இங்கே இருமின் என்று சொன்னால், பொருளீட்டும் நற்செயலைத் தடுத்தலால் பலரும் கூறும் பழிமொழி வருமோ என அஞ்சுகிறேன். எனவே, நீர் செல்வீராக. சென்று வினை முடிப்பீராக. சென்ற இடத்தில் நெடுங்காலம் தங்காமல் விரைவில் வருவீராக என்று கூறினாள்.

*''சேறும் சேறும் என்றலின் பலபுலந்து*
*செல்மின் என்றல் யானஞ் சுவலே*
*செல்லா தீமெனச் செப்பிற் பல்லோர்*
*நிறத்தெறி புன்சொலின் திறத்தஞ் சுவலே*
*அதனால் -*
*செல்மின் சென்றுவினை முடிமின்''*[57]

இதன் வாயிலாகத் தலைவியின் காதல் நிறைவு, அதனையும் கடந்து தலைவன் கடமையை நிறைவேற்றுதலின் இன்றியமையாமை, கடமை செய்தவரைப் பிறர் இகழ்ந்துரைத்தல், தோழியின் பேச்சுவன்மை ஆகியவற்றைப் புலவர் புலப்படுத்தியிருப்பது நல்ல பயன் தருவதாகும். இப்பாடல் தலைவி, தலைவன் இருவர் மீது தோழி கொண்ட நேயத்தையும், அவள் சொல்லாற்றலையும் விளக்குகின்றன.

### இடித்துரைக்கும் பண்பு

தலைவனை இடித்துத் திருத்த முயலும் தோழியின் கூற்றில் ஓர் அரிய வாழ்வியல் உண்மை புலப்படுகின்றது. திருமணம் முடிந்த இல்லறத்தின் தலைவாயிலில் இருவரும் நுழைந்து மணவாழ்க்கை மேற்கொண்டு ஒழுகியபோது ஒருநாள் மனைவி வேப்பங்காயினை முன்பு தந்தால் இனிய வெல்லக்கட்டி என்று அதனை அவன் பாராட்டிக் கூறியதாக தோழி பின்னாளில் கூறினாள்.

*"வேம்பின் பைங்காய் என்தோழி தரினே*
*தேம்பூங் கட்டி என்றனிர் இனிய*
*பாரி பறம்பில் பனிச்சுனைத் தெண்ணீர்*
*தைஇத் திங்கள் தண்ணிய தரினும்*
*வெய்ய உவர்க்கும் என்றனிர்*
*ஐய அற்றால் அன்பின் பாலே"*[58]

என்று வாயில் வேண்டிப் புக்க, தலைவனின் அன்பு மாறுபாட்டைத் தோழி நயம்படக் கூறுகிறாள். உமது அன்பின் பகுதி அத்தன்மையதாகும் என்று எடுத்துரைக்கும் பாங்கு இனிமை பயக்கத்தக்கது. தலைவனின் அன்பு மாறிய வகைகாட்டி அவனை இடித்துரைத்தாள் தோழி. இதைக் கேட்ட தலைவன் தன் சீர்கெட்ட வாழ்க்கையைத் திருத்திக் கொண்டிருப்பான் என்பதனைச் சொல்லவும் வேண்டுமோ! இவ்வாறு தோழி தலைவனை இடித்துரைப்பதிலிருந்து அக்காலத்தில் தோழிக்கு இருந்த உரிமைப் பாங்கு, தலைவன் மீது கொண்ட அளவற்ற மனிதநேயத்தை உணர்த்துகிறது.

**தலைவனின் உளப்பாங்கை அறிதல்**

நல்ல பயனைத் தரும் மலைநாட்டுத் தலைவன் நம்மைப் பிரிந்து போனதால் அவனுக்கு எவ்வித இன்பமும் இல்லை. அவன் சென்ற இடத்திலே தனிமையால் நம்மைப் போலவே வருந்துவான். அவன் சிறந்த பண்பு உள்ளவன். பழிக்கு அஞ்சும் இயல்புள்ளவன். பிறர் தன்னைப் பழித்துப் பேசும்படி ஒருபொழுதும் நடந்து கொள்ளவே மாட்டான். அவன் இந்த உலக இயல்பையும், போக்கையும் நன்றாக அறிந்தவன். நமது இளமையும், யாக்கையும் நிலைத்தவை அல்ல. நம்முடைய செல்வமும், வாழ்வும் சிதையாமல் இருப்பதல்ல. இவை எல்லாம் அழிந்து போகக் கூடியவை. இவ்வுலகில் என்றும் அழியாமல் நிலைத்திருப்பது புகழ் ஒன்றுதான் என்ற உண்மையை உணர்ந்தவன். நீதி நெறி தவறாமல் நேர்மையாக நடந்து கொள்ளும் உத்தம குணமுள்ளவன் அவன்.

இத்தகைய உண்மை அறிவும், உத்தம குணமும் உள்ளவர்கள் தம் பொருளை நல்வழியிலேயே தான் செலவழிப்பார்கள். வறுமையில் வருந்தும் ஏழைகளுக்கு இரங்காமல், உதவி செய்யாமல் இருக்க மாட்டார்கள். இவ்வாறு உதவி செய்யும் குணமுள்ளவர்களின் செல்வம் அவர்களிடம் தங்கியிராது. அவர்களை விட்டுப் பிரிந்து தான் போகும். இதைப் போலவே உன் உடம்பிலே தோன்றி விளங்கும் பசலை

நிறமும் நீங்கிப் போய்விடும். ஆதலால் நீ வருந்தாதே''.

*''அழியல் - ஆயிழை!.... பாஅய பசப்பே''*[59]

அகப்பொருள் துறையில் புறப்பொருள் அறத்தை அமைத்துப் பாடிய பாடலிது.

இதிலிருந்து, தோழி தலைவனின் மனப்பாங்கை நன்கு அறிந்து கொண்டவள் என்பதை அறிய முடிகிறது. பண்டைத் தமிழரின் அறிவையும், அருளையும் விளக்கும் அருமையான பாடலிது. இப்பாடல் தமிழர்களின் சிறந்த பண்பாட்டை உணர்த்துவதோடு, மனிதர்கள் எப்படி வாழ வேண்டும் என்று அறிவுரை கூறுவதாகவும் அமைந்துள்ளது. இப்படி வாழ்வதுதான் மனிதப் பண்பாகும் என்ற உண்மையையும் உணர்த்துகிறது.

**செவிலியின் அன்பின் ஆழம்**

சங்க காலத்தில் செவிலித்தாய் தலைவியை சிறு வயது முதற்கொண்டே ஊட்டி வளர்ப்பவள். நற்றாயைக் காட்டிலும் தலைவியின் முன்னேற்றத்தில் அதிக அக்கறையும், அன்பும், பாசமும் காட்டிவரும் பண்புடையவள். தலைவியின் பிரிவைத் தாங்க இயலாத இளகிய மனம் படைத்தவள். தலைவியின் இல்லறச் சிறப்பினையும், இதர பண்புகளையும் நற்றாய்க்கு எடுத்துரைப்பவள்.

**தலைவிக்கு உணவூட்டும் தாய்மை**

தலைவி, அவள் தோழியருடன் சிறிது நேரம் பந்து விளையாடினாலும்கூட, அவள் உடல் சோர்ந்து விட்டது என்று கருதிய தாய், பாலினைக் கிண்ணத்தில் கொண்டு சென்று, சோர்வு தீர அதனை உண்ணுமாறு வற்புறுத்துவாள். அந்நிலையில் ஒருமுறை அப்பாலினை உண்டு, மேலும் உண்ண அவள் மறுக்கும்போது என் பங்கிற்காக ஒருமுறை உண்டாயின், இனி உன் தந்தையின் பங்கிற்காக மற்றொரு முறை உண்பாயாக எனத் தாய் கூறுவாள் எனும் கருத்தமைந்த,

*''பால்பெய் வள்ளம் சால்கை பற்றி*
*என்பாடு உண்டனை ஆயின், ஒருகால்*
*நுந்தை பாடும் உண் என்று ஊட்டி*
*பிறந்ததற் கொண்டும் சிறந்தவை செய்து''*[60]

இப்பாடல் சுவை தருவதாகும். இதுபோன்று செவிலித்தாய் அக்காலத்தில்

தலைவியைத் தன் மகள்போல் பாவித்த தன்மையும், ஊட்டி வளர்த்த நேசமும், அன்பும் கொண்டவளாகத் திகழ்ந்தாள். இவ்வாறு இனிய முறையில் குழந்தைகளின் மனநிலைக்கு ஏற்பத் தாய்மார்கள் பேசி உண்ணச் செய்வதை இன்றும் காணலாம்.

**தலைவியின் பிரிவிற்கு ஆற்றாமை**

செவிலி, தலைவியைத் தன் மகள் என்று குறிப்பிடவில்லை. தான் கண்ட அன்புக் காட்சியில் ஈடுபட்ட உள்ளத்தால் தலைவனுடைய மகனுக்குத் தாய் என்கிறாள். அவள் ஒளிமிக்க குத்துவிளக்கின் செந்நிறச் சுடர்போல் குடும்பத்திற்கு விளக்கு ஆயினாள் என்று கூறுவதிலிருந்து செவிலிக்குத் தலைவியின் மீது கொண்ட அன்பின் ஆழம் புலப்படுகிறது.

> *''ஒண்சுடர்ப் பாண்டிற் செஞ்சுடர் போல*
> *மனைக்குவிளக் காயினண் மன்ற கனனப்பெயற்*
> *பூப்பல வணிந்த வைப்பின்*
> *புறவணி நாடன் புதல்வன் றாயே''*[61]

தமிழ் இலக்கியங்களில் உள்ள முல்லைத்திணைப் பாடல்கள் இவ்வாறு காதலர் இருவர் நடத்தும் இனிய இல்வாழ்க்கையின் சிறப்பினை எடுத்துரைக்கின்றன. பாட்டின் உயிர்ப் பொருளாக - உரிப்பொருளாக - காதலர் இருவரின் நெஞ்ச நிலையே விளக்கப்படுதல் இப்பாடல்களின் சிறப்பியல்பாகும்.

ஆறுதல் கூறும் முறையில் அமைகின்ற இப்பாடலில், தலைவி, தலைவனுடன் உடன்போக்கு சென்றதை அறிந்த செவிலித்தாய், தலைவியைத் தேடிக் காட்டு வழியில் சென்றாள். அப்போது எதிரில் வந்த துறவிகளை நோக்கித் தலைவனுடன் சென்ற தன் மகளைக் கண்டீரோ என வினவினாள்.

''சந்தனம் மலையிலே பிறந்தாலும் அது மலைக்குப் பயன்படாது. அதனை அரைத்துப் பூசுவோர்க்கே பயன்படும். முத்து கடல் நீரில் பிறந்தாலும் அது கடலிற்குப் பயன்படாது. அதனைக் கோத்து அணிவோர்க்கே பயன்படும். இசை யாழில் பிறந்தாலும் அது யாழிற்குப் பயன்படாது. அதனைக் கேட்பவர்க்கே பயன்படும். அதுபோல, நும் மகளும் பருவம் வந்தபின் நுமக்குப் பயன்படமாட்டாள். அவளைக் கொண்ட கணவனுக்கே பயன்படுவாள். அவள் சிறந்த கணவனை வழிபட்டு

அவனுடன் சென்றாள். கற்பரசியாகிய அவளை நினைத்து வருந்தாதீர்''[62] எனக் கூறப்பட்டுள்ளது.

இவ்வாறு மகளைப் பிரிந்து பெருந்துன்பம் அடைந்த தாய் ஒருத்தியின் உள்ளத்திற்கு இதனைக் காட்டிலும் சிறந்த முறையில் ஆறுதல் கூற இயலாது. உலகியலை நாம் அறிந்து நடந்து கொள்வதற்கு உறுதுணையாக அமைகிறது என்றும், செவிலிக்கு ஆறுதல் கூறும் அழகிலிருந்து, துறவிகளின் மனப்பாங்கும், செவிலி மகள்மீது கொண்ட நேயமும் இப்பாடல் நமக்கு அறிவுறுத்துவதைக் காணலாம்.

**பரத்தையின் வாழ்வியற் கூறுகள்**

சங்க காலத்தில் பரத்தையோடு கூடிவாழும் தீய ஒழுக்கம் மலிந்திருந்தது. இற்பரத்தை, சேரிப்பரத்தை, காதல் பரத்தை, காமக்கிழத்தி, பொருட் பெண்டிர் என்றெல்லாம் இவர்கள் வழங்கப்பட்டனர். இவர்களின் வளமார்ந்த வாழ்க்கையினை மதுரைக் காஞ்சி குறிப்பிடுகின்றது. பரத்தையர்க்கு அகப்பொருளில் மிகுந்த இடமுண்டு. மருதத்திணை பற்றிய பாடல்கள் இவர்களைப் பற்றிய கூற்றாகவும், இவர்கள் கூற்றாகவும் அமைந்துள்ளன. பரத்தையர் சேரிக்குத் தலைவன் இரவில் கூடி மகிழ்வான். காலையில் தன் இல்லம் சென்றதும் தலைவி ஊடுவாள். அவ்வூடலைத் தணிக்கப் பாணன் வருவான். அவனைத் தலைவி எள்ளனம் செய்வாள். பிறகு ஊடல் தணியும்.

**சங்க காலத்தில் பரத்தமை ஒழுக்கம்**

பண்டைத் தமிழ்ச் சமுதாயத்தில் பரத்தை ஒழுக்கம் ஒருவகைக் குடும்ப ஒழுக்கம் போலப் பரவிக் கிடந்தது. வரைவின் மகளிர் தம் வாழ்வுக்கும் வளர்ச்சிக்கும் உகந்த சூழ்நிலை சமுதாயத்தில் நிலவியிருந்தது. இடையறா இன்பப் புணர்வுக்கென்று கணவன்மார்கள் வைப்பு எடுத்துக் கொள்ளும் பழக்கம் சமுதாய மரபு போல் ஊன்றி நின்றது என்ற வாழ்வியல் கருத்துகளை நாம் தயக்கமின்றி ஒத்துக் கொள்ள வேண்டும். மனைவி பரத்தமையை வெறுத்தாலும், பரத்தையிடம் சென்று வந்த தலைவனை வெறுத்து ஒதுக்கவில்லை. முடிவில் அவனோடு உடன் உறைதலையே விரும்பினாள் என்பதை,

> *''அணிற்பல் அன்ன கொங்குமுதிர் முண்டகத்து*
> *மணிக்கேழ் அன்னம் மாணீர்ச் சேர்ப்ப*

Phd. 1860






*இம்மை மாறி மறுமை யாயினும்*

*நீயா கியர் என் கணவனை*

*யான்ஆ கியர்நின் நெஞ்சுநேர் பவளே''*[63]

இப்பாடல் கொண்டு அறியலாம். பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனுக்குத் தலைவி கூறுவதாக அமைந்துள்ளது. இப்பிறப்பில் மட்டுமல்லாமல், மறுமையிலும், இனிமேல் நாம் பிரிதல் கூடாது என்று தம் அன்பை நிலைநிறுத்திக் கொள்கின்ற ஒப்பற்ற உறுதி மொழியை இங்குக் காணலாம்.

**பெண்ணுக்குப் பெண்ணின்மேல் பரிவு**

கரும்பு தின்று துறக்கும் கரும்புச் சக்கையைப் போலப் பொருளை உறிஞ்சி ஆலைத் தோலாக விடும் பரத்தையர்களை ஐந்திணை காட்டவில்லை.

*''விழுமிதிற் கொண்ட கேண்மை நொவ்விதில்*

*தவறுநன்கு அறியா யாயின் எம்போல்*

*நெகிழ்கோட் கலுழ்ந்த கண்ணர்*

*மலர்தீய்ந்து அனையர் நின்நயந் தோரே''*[64]

எனவரும் இப்பாடல் வரிகள் மனைவியை நினையாத தலைவனைப் பரத்தை இடித்துரைக்கும் செய்தியைத் தருகின்றன. ஊரறிய மணந்த நல்லாளைக் கைவிடும் நீ எம்போல்வாரையும் கைவிட்டு விடுவாய். நீ உன்னுடைய தவறுணர்ந்து வாழ்வாயாக. மலரைக் கருக விடாதே என்று தலைவனை ஒரு பரத்தை இல்லற நெறிப்படுத்தும் உயர்ந்த பண்பு போற்றத்தக்கது.

பரத்தை மகளிர் தலைவனது சிறுவர்களைத் தெருவில் கண்டபோது மகிழ்ந்து அவர்களுக்குக் கொடியும், மோதிரமும் அணிவித்து விடுத்தார்கள் எனக் கலிப்பாடல் குறிப்பிடுகின்றன.[65] இதனால் இப்பரத்தையர் உயர்ந்த பண்புகள் பலவற்றைப் பெற்றிருந்தனர் என்றும் உணரலாம்.

பிறன்மனை நயந்தானைப்போல பரத்தை நாடியைக் கண்டு, சமுதாயம் வெருவியிருப்பின், வாயில் மறுத்தல், வாயில் நேர்தல் என்ற துறைகளுக்கு இடமில்லை. தலைவனின் பரத்தமை தவறு என்பது முதற்கருத்து. இதனை வாயில் மறுத்தலால் அறியலாம். தவற்றைச் சுட்டித் தழுவிக் கொள்ள வேண்டும் என்பது இரண்டாவது கருத்து. இதனை வாயில் நேர்தல் என்ற துறையில் காணலாம்.[66]



இவ்வாறு பரத்தையரோடு தலைவன் உறவு கொள்வதை மிகுதியாக இலக்கியங்கள் காட்டுகின்றன. தமிழ் இலக்கியம் அவர்களுடைய உறவை வெறுத்துக் கூறுகிறது. தூய வாழ்வை ஆதரித்து அதற்கான வழிமுறைகளையே வகுத்துக் காட்டுகிறது. அக்காலத் தமிழர் எல்லா வாழ்க்கைத் துறையிலும் குருதியோட்டம் போலும் ஒழுக்கத்தையே வற்புறுத்தியிருப்பதைக் காண்கிறோம்.

சங்கப் பாடல்களில் மிகுதியும் தூய்மையான வாழ்வுக் காட்சிகளே இடம் பெற்றுள்ளன. ஒரு பெண் கொண்டவனை அன்றிப் பிறனொருவனை மனத்தாலும் எண்ணிய ஒரு காட்சியை நம்மால் காண முடியாது. ஆனால், வேற்று இலக்கியங்கள் சிலவற்றில் இத்தகைய போக்கு மிகுதியாக இடம் பெற்றுள்ளது. ஒருவனுடைய வாழ்க்கைத் துணையை வேறொருவன் விரும்புவதை மேனாட்டு இலக்கியங்களில் காண்பது போன்று சங்கப் பாடலில் காண முடியாது. சங்கச் சான்றோர் குறிக்கோள் இலக்கியமாக தங்கள் கருத்துக்களை வடித்துத் தந்திருக்கலாம். தீயதைக் காட்டவே அவர்கள் கூச்சப்பட்டு ஒதுங்கியிருக்கலாம் என்று நாம் எண்ண இடமிருக்கிறது.

### பாணன் பெறும் இடம்

இசைக் கலைஞனாகிய பாணனுக்கும் முல்லைத் திணையில் இடமுண்டு. அவன் குடும்பத் தலைவனுக்கும், தலைவிக்கும் தன் இசைத் திறனால் மகிழ்ச்சி அளிப்பதோடு அவர்களுக்கு உற்றுழி எல்லாம் உதவுபவனாகக் காணப்படுகிறான். ஐங்குறுநூற்றில் பேயனார் பாடிய முல்லைப் பாடல்களில் ‘பாணன் பத்து’ என்னும் பத்துப் பாடல்களும் இங்குக் குறிப்பிடத்தக்கவை. (ஐங்: 471, 473, 474, 475, 476, அகம்: 14)

### இருவரையும் சந்து செய்வித்தல்:

பாணர்களில் சிலர் செல்வக் குடும்பத்து இளைஞர்களுடன் நட்புக் கொண்டு அன்னார், புறத்து ஒழுக்கத்திற்குத் துணை புரிந்து வந்தனர். தூதனால் தலைவனின் பரத்தமை கண்டு தலைவி ஊடியபோது பாணர்கள் வாயிலாகச் சென்று அத்தலைவியின் சினத்தைத் தணித்தனர் என்பதை,

*“அன்னாய்! இவனோர் இளமா ணாக்கன்*
*தன்ஊர் மன்றத்து என்னன் கொல்லோ?*
*இரந்தூண் நிரம்பா மேனியொடு*
*விருந்தின் ஊரும் பெருஞ்செம் மலனே”*[67]

இப்பாடலில், வாயிலாக வந்த பாணனின் சொல்லாற்றலால் தலைவி, தான் தலைவன் மீது கொண்டுள்ள சினத்தையும் மறந்து தூதாக வந்த பாணன் சிறந்து வாழ்வானாக என்று கூறி, தலைவனை ஏற்றுக் கொள்ளத் துணிந்தாள் என்பது விளங்குகிறது.

மற்றொரு பாடல் குடும்பப் பாசத்தின் அழகிய காட்சியை அருமையாகச் சித்தரித்துள்ளது.

*''கண்டிசின் - பாண! .... புறம்கவைஇ யினளே''*[68]

என்ற இப்பாடலில் பாணன் வாயிலாகச் சென்றபோது மறுத்த தலைவி, தலைவனே வந்து பாயலில் படுத்துப் புதல்வனைத் தழுவிய காலத்தில், தான் புலவி தீர்ந்து சென்று அவனைத் தழுவினாள் என்பதிலிருந்து பெறற்கரிய கணவனைத் தெய்வமாகப் பேணும் பண்பு அக்காலத் தலைவியிடம் இருந்தது என்பதும், பாணன் என்பவன் இருவரையும் சந்து செய்விக்கும் உயர்ந்த மனிதநேயப் பண்புடையவன் என்பதும் தெரிய வருகின்றன.

## இல்லறச் சிறப்பு

வாழ்க்கைத் துணைவர்களாகிய ஆண், பெண் இருவரும் கடன்புரிந்து ஒழுகுவதில் மூவகைத் திறனுண்டு. அவை வீட்டுக்கடன், நாட்டுக்கடன், பொதுக் கடன் என்பவை. வீட்டுக் கடன் பெண்ணுக்கும், நாட்டுக் கடன் ஆணுக்கும், பொதுக் கடன் இருவர்க்கும் உரிமை உடையனவாகும். வீட்டுக் கடனுக்கு உரிமையும், தலைமையும் பூண்டவள் பெண். அவளுக்கு அக்கடனில் துணைபுரிய வேண்டியவன் ஆண். நாட்டுக் கடனுக்கு உரிமையும், தலைமையும் பூண்டவன் ஆண். பொதுக் கடன் இருபாலார்க்கும் உரிமையும், தலைமையும் உடையது.

இக்கடன் புரியுங்கால், ஆணுக்குப் பெண்ணோ, பெண்ணுக்கு ஆணோ துணை வேண்டுவதின்று. இருபாலாரும் தனித்து நின்று பொதுக்கடனியற்றலே முறையும் மரபுமாம். பொதுக்கடன் என்பது நாட்டுத் தொண்டு, மொழித் தொண்டு என இரு கூறுபடும். பொதுக் கடன்களை ஆண், பெண் இருபாலாரும் இனிது முறை தெரிந்தியற்றிப் பெருமை பூண்டனர். பொற்காலத் தமிழர் வாழ்வில் இம்மூவகைக் கடன்களும் சிறந்து விளங்கிய திறத்தினைச் சங்க நூல்கள் இனிது உணர்த்துகின்றன.

## விருந்தோம்பல் பண்பு

இல்லறத்தில் பெண்ணின் பொறுப்பே முதன்மையானதாகும். வீட்டிற்கு

வு படைத்து இன்சொல் கூறி மகிழ்விக்கும் பொறுப்புப் ந்தினர் இன்ன நேரத்தில் தான் வருவர் என்ற நீதியில்லை. விருந்தினர் வரலாம். சிலர் இதனை வெறுக்கலாம். எனவே, ல் விருந்தினர் வந்தாலும், இன்முகத்தோடு வரவேற்பது ரபென வலியுறுத்தியுள்ளனர். வினைமுற்றி மீண்டு வரும் மனைவியின் இனிய பண்புகளை நினைத்துப் பார்க்கிறான். ம் கவர்ந்த பண்பு அவளது விருந்தோம்பற் பண்பாகும்.

*பினும் விருந்துவரின் உவக்கும்*
*ன்ற கற்பின்*
*மெல்லியல் குறுமகள்''*[69]

என்பது அவன் தரும் பாராட்டுரையாகும். தலைவி தன் தலைவன்மீது கொண்ட அடங்காத சினத்தினால், ஊடல் கொள்ள அவள் உள்ளம் விழைய, அதற்கு நேரம் வாய்க்கவில்லை. காரணம் ஓயாது ஒருவர்பின் ஒருவராக விருந்தினர் வந்த வண்ணம் உள்ளனர்.

*''நன்மனை நனிவிருந்து அயரும்*
*கைதூவு இன்மையின் எய்தா மாறே''*[70]

என்று மேற்கூறிய கருத்தினை இப்பாடல் விளக்குகிறது.

கணவன், மனைவியரிடையே ஊடல் தோன்றுதல் இயல்பு. சில நாட்கள் அவர்கள் ஒருவருடன் ஒருவர் பேசாதிருத்தலுமுண்டு. அப்பொழுது விருந்தினர் வருவாராயின் தம் ஊடல் மறந்து அவர்களைப் பேணுவர். ஊடல் கொண்ட மனைவியின் உள்ளத்தை மாற்றிடக் கணவன்மார் யாரேனும் நண்பரை உடன் அழைத்துச் செல்வதுண்டு. ஒருதலைவன் தன் மனைவியின் ஊடல் தீர்க்க வழியறியாது விருந்தினர் வரல் வேண்டுமென விரும்புவதாக, நற்றிணைப் பாடலொன்று கூறுகிறது.

*''எமக்கே வருகதில் விருந்தே சிவப்பாளன்று*
*சிறிய முள்ளெயிறு தோன்ற*
*முறுவல் கொண்ட முகம்காண் கம்மே''*[71]

இவ்வாறு விருந்து புரத்தல் என்பது தமிழர்தம் வாழ்வியல் அறங்களுள்

இன்றியமையாத ஒன்றாகக் கருதப்பட்டது. இந்திரர் அமிழ்தம் இயைவதாயினும் தமியராய் உண்ணும் தகைமையாளர் அல்லர் என்றும், அவர்கள் பகுத்துண்டு பல்லுயிர் ஓம்பும் பண்பும், மருந்தேயாயினும் விருந்தோடு உண்கின்ற பண்பும், சங்கத் தமிழர் வாழ்வியலில் விருந்து ஊடல் தீர்க்கும் வாயிலாக செயல்பட்ட தன்மையினையும் நம்மால் அறிய முடிகிறது.

குறிஞ்சிப்பாட்டில் தலைவன் ஒருவன் தான் விரும்பிய தலைவியைத் தவறாது மணப்பதாக உறுதிமொழி கூறுங்கால் 'வருவோர்க்கெல்லாம் வரையாது வழங்கி விருந்து போற்றி நிற்பேன்' என உரைக்கும் திறன், பண்டைத் தமிழர் இல்லறக் கடமைகளுள் இன்றியமையாத ஒன்றென, வருந்தி வந்தவர்களுக்கு விருந்து போற்றி நின்ற திறத்தினை எடுத்து மொழிகின்றது.

*''மலரத் திறந்த வாயில் பலருணப்*
*பைந்நிணம் ஒழுகிய நெய்ம்மலி அடிசில்*
*வசையில் வான்றிணைப் புரையோர் கடும்பொடு*
*விருந்துண்டு எஞ்சிய மிச்சில் பெருந்தகை*
*நின்னோடு உண்டலும் புரைவது''*[72]

எனவே, மனைக்கு விளக்காய் அமைந்த மடவாள், தான் பிறந்த குடியின் பண்பாட்டைப் பற்றி நின்று, புகுந்த குடிக்கேற்ப தன்னைச் சீர்ப்படுத்திக் கொண்டு, கணவனைத் தன் இனிய அறுசுவை உணவால் மகிழ்வித்து, வைகலும் வந்த சுற்றத்தினரையும், விருந்தினரையும் அகமும், முகமும் மலர விருந்தோம்பி வாழும் நிலையே மங்காத மனையற மாண்பு என்பது சங்க இலக்கியங்கள் கொண்டு தெளியப்பட்டது.

இருவரின் கடமை

இல்லறத்தில் பொருள் ஈட்டுவது ஆண்களின் உயிராகும். இல்லறப் பெண்களுக்கு அப்பொருளீட்டும் ஆடவர்களே உயிராகும் என்ற உயர்ந்த இல்லற மாண்பு அக்காலத்தில் இருந்துள்ளதை,

*''வினையே ஆடவர்க்கு உயிரே; வாள்நுதல்*
*மனை உறை மகளிர்க்கு ஆடவர் உயிரென*
*நமக்குஉரைத் தோரும் தாமே''*[73]

என்ற பாடல் தெரிவிக்கிறது.

**கருத்தொருமித்தல்**

பழந்தமிழர் வாழ்க்கைக் கலையில் வல்லவர்கள். நல்ல வாழ்க்கைக்கு அடிப்படைத் தேவைகள் அன்பும், பண்பும், அறவுணர்வும், பொருள் முயற்சியும் எனக் கண்டனர். அன்பே இல்வாழ்க்கையின் அடிப்படையாக அமைகின்றது. தலைவனும், தலைவியும் இல்லறவாழ்வில் ஈடுபட்டபோது ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டு வாழ்வது இல்லற வாழ்க்கையின் இனிமைக்கும், சிறப்பிற்கும் அடிப்படையாகின்றது.

தலைவர் மாறாத சொல்லையுடையவர். நீண்ட காலம் நினைக்கத்தக்க இனிய பண்புகள் வாய்ந்தவர். எக்காலத்திலும் என் தோள்களைப் பிரிய மாட்டார் என்று தலைவி ஒருத்தி, தலைவன் ஒருவன் தன்மாட்டுக் கொண்ட காதல் சிறப்பினைக் கூறுகின்றாள்.

*''நின்ற சொல்லர் நீடுதோன் றினியர்*
*என்றும் என்றோள் பிரிபறி யலரே''*[74]

தலைவனும், தலைவி மாட்டு நிறைந்த காதல் நெஞ்சம் வாய்ந்தவனே. கடலால் சூழப்பட்ட நிலவுலகத்தையே பரிசாகப் பெறுவதாக இருந்தாலும் தலைவியின் காதலைவிட ஆற்றாத உள்ளம் கொண்டவன்.

*''கடல்சூழ் மண்டிலம் பெறினும்*
*விடல்சூ ழலன்யான் நின்னுடை நட்பே''*[75]

மேலும் தலைவன் வேந்தனால் ஏவப்பட்ட வெளியூருக்கு வினையாற்றச் சென்றாலும், தலைவியை விட்டுப் பிரிந்திருக்க ஆற்றாமல், சென்ற ஊரிலே தங்கிப் பின்வருதலை அறியாது உடனே தன் தேரில் வந்து விடுகின்றான்.

*''.... .... வேறு ஊர்*
*வேந்துவிடு தொழிலொடு செலினும்*
*சேந்துவரல் அறியாது செம்மல் தேரே''*[76]

இவ்வாறு அன்பால் இணைந்து காதல் வாழ்வு வாழும் கணவன் மனைவியரின் வாழ்க்கை பல்லாற்றானும் நனி சிறந்ததாகும்.

*"அன்பெனப் படுவது தன்கிளை செறாஅமை"*[77]

கலித்தொகை குறிப்பிடுகிறது.

சங்ககால மகளிர் பண்பாடு போற்றத்தக்கதாயிருந்தது. அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்னும் நாற்குணங்களும் நிறைந்தவர்களாக அவர்கள் துலங்கினர். பெற்றோர் ஆதரவில் வளர்ந்தபோதும், பின்னர் புகுந்த வீட்டில் மனை வாழ்வு அமைத்துக் கொண்டபோதும் அவர்கள் வாழ்வு போற்றத்தக்கதாயிருந்தது. திருணத்திற்குப் பின் கணவனும், மனைவியும் காதல் நிறைந்து கருத்தொருமித்து இல்லறம் நடத்தினர்.

பண்டைத் தமிழ் இலக்கியங்களில் பெண்டிர் 'மனைக்கு விளக்கு' என்று குறிப்பிடப் பெற்றனர். மணவாழ்க்கையின் மாண்பினைப் பாலைக் கலிப்பாடல் கூறுகின்றது.

*"ஒன்றன் கூறாடை உடுப்பவரே ஆயினும்*
*ஒன்றினார் வாழ்க்கையே வாழ்க்கை"*[78]

என மனம் ஒன்றுபட்டுக் கலந்து வாழ்பவரின் வாழ்க்கையே சிறந்த இன்ப வாழ்க்கை என்று கூறுகிறது. இணைந்து வாழ்வதே இல்லறத்தின் தனிச்சிறப்பாகும் என்று தோழி தலைவனுக்கு அறிவுறுத்துவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

தன் கணவன் வறுமையுற்ற போதும் தன் பிறந்த வீட்டுச் செல்வத்தை நாடும் இழிமனம் கொண்டவளாக அமையாது அவன் துன்பத்திலும் துணை நின்றமையை,

*"கொண்ட கொழுநன் குடிவறன் உற்றெனக்*
*கொடுத்த தந்தை கொழுஞ்சோறு உள்ளாள்"*[79]

என்று நற்றிணை கூறுகிறது. இதேபோன்று பெண்ணின் உயர்ந்த பண்பினை ஐங்குறுநூறு காட்டுகிறது. 'கணவன் வாழும் ஊரில் நல்ல குடிநீர் குடிக்கப் பெறாத நிலையில் தன் பெற்றோர் இல்லத்தில் கிடைக்கும் தேனையும், பாலையும்விட உயர்ந்தது எனக் கருதும் இயல்புடையவராய் பெண்டிர் விளங்கினர்'.[80]

**இல்லிற்குப் பெருமை சேர்த்தல்**

தமிழ்ச் சமூகத்தின் தொடக்க நிலையிலும், வளர்ச்சி நிலையிலும் சாதி இடம் பெறவில்லை. அன்பின் ஐந்திணையைப் போற்றி 'நெஞ்சுதளை அவிழ்ந்த மெய்யுறு

புணர்ச்சியின் மேன்மையைப் பாராட்டும் தமிழ் அகத்திணை மரபில் சாதிக்கு இடமில்லை. செல்வக் குடும்பத்தில் பிறந்து வளர்ந்த ஒருத்தி, தன் கணவனுடன் வறுமையில் துன்புறும் நிலையிலும், தன் தந்தை கொடுத்தனுப்பிய செல்வத்தைப் புறக்கணித்த செய்தியை,

*''ஏவல் மறுக்கும் சிறுவிளை யாட்டி*
*அறிவும் ஒழுக்கமும் யாண்டுஉணர்ந் தனள்கொல்*
*கொண்ட கொழுநன் குடிவறன் உற்றெனக்*
*கொடுத்த தந்தை கொழுஞ்சோறு உள்ளாள்*
*ஒழுகுநீர் நுணங்கறல் போலப்*
*பொழுதுமறுத் துண்ணும் சிறுமது கையளே''*[81]

என்று நற்றிணை போற்றுகிறது. சங்க காலத்தில் தலைவியின் காதல் வெளிப்பட்ட நிலையில், பெற்றோர்கள் இல்லிற்குப் பெருமை குன்றிவிடுமோ என்று எண்ணி தலைவியை இற்செறித்தனர். இவ்விடத்தே காவல் மிகுதியாகிவிட, அதனால் தலைவனைப் பிரிந்திருக்க நேர்ந்த தலைவி, தன் ஆற்றாமை மிகுதியினால் தோழியிடத்தே இப்படிக் கூறுகிறாள். அதாவது 'தலைவனைப் பிரிந்து இக்காவலிடத்தே உயிரோடு வாழ்ந்து துயரப்படுதலினும், அவரைப் பிரிந்தபோதே உயிரை விட்டுவிட்டிருத்தல் நன்றாயிருக்கும் என்பதும், களவுநெறி பேணும் குலமகளிரது ஒழுக்கத்தையும்' [82] இப்பாடல் உணர்த்துகின்றது.

**துயரை மறைக்கும் மாண்பு**

குடும்பத்ினரும் தன் கவலையினை அறிதல் வேண்டா எனக் குடும்பப் பண்பாட்டினைக் காக்கும் தலைவியின் அரிய மனநிலை இப்பாட்டால் நன்கு புலனாகின்றது. இத்தகைய கற்பின் திண்மைதான் மனைவாழ்வின் மகிழ்ச்சிக்கு அடிப்படையாகும். பரத்தையர் மாட்டுப் பிரிந்து மீண்டும் வந்த தலைவன்பால் ஊடாமல் நாம் நம் குடும்பப் பொறுப்புணர்ந்து கடமைகளை ஆற்றுவோம் என்று கூறுவதோடு, 'நம்பால் அன்பு அடியோடு அற்று அவர் நம் நலத்தினை மிகவும் அழித்திருந்தாலும் உயிரே போகும்படி நமக்கு உறுகண் விளைத்திருப்பினும் அவர் நமக்கு அன்னையும் அத்தனுமாவார். எனவே, அவர்பால் வெறுப்புக் கொள்வதற்கு ஏது ஒன்றுமில்லை' என்று தன் தோழியினை வற்புறுத்தும் தலைவியின் அரிய மனநிலையும், குடும்பப் பண்பாட்டினைக் காக்க வேண்டும் என்ற

பொறுப்புணர்ச்சியும் எஞ்ஞான்றும் மறக்கத்தக்கன அல்ல.

*"நல்லனம் தொலை, நலம்மிகச் சாஅய்*
*இன்னுயிர் கழியினும் உரையல்; அவர் நமக்கு*
*அன்னையும் அத்தனும் அல்லரோ?*
*புலவி அஃது எவனோ, அன்பிலங்கடையே?"*[83]

பண்பாட்டின் பயனாகத் துலங்கும் இந்த மனவளர்ச்சிதான், தன் கணவன் செய்யும் கொடுமைகளைப் பிறர் அறியா வண்ணம் மறைத்து வைக்கச் செய்கிறது.

*"காஞ்சி ஊரன் கொடுமை*
*கரந்தனள் ஆகலின் நாணிய வருமே"*[84]

என்ற பாடல் மனப்பண்பாட்டினையும், தலைவி தன்னுடைய துயரை மறைக்கும் மாண்பினையும் நமக்கு எடுத்துரைக்கின்றன.

**தன்னலமற்ற பண்பு**

'விளைக வயலே! வருக இரவலர்'[85] என்ற அடிதான் தமிழர் அருள் நெறியை விளக்குவதாகும். வயலில் தானியங்கள் விளைவது தமக்கு மட்டுமன்று. இல்லாதவர்களுக்கு உதவுவதற்காகவே என்ற கருத்தைக் கொண்டதே இவ்வடி. இல்லறத்தில் உள்ள ஒரு பெண்ணின் மனத்தைப் படம்பிடித்துக் காட்டுகின்றது.

*"வாழி ஆதன் வாழி அவினி*
*பால்பல ஊறுக' பகடுபல சிறக்க"*[86]

நமது வீட்டில் உள்ள கறவைகள் மிகுந்த பாலைச் சொரியட்டும். உழவுத் தொழில் மிகவும் வளருட்டும் என்று விரும்பினாள் தலைவி. விதைத்த உழவர்கள் வயலில் விளைந்தபின் அறுத்துத் திரட்டிய நெல்லுடன் வீட்டுக்கு வருகின்ற இவ்வூரின் தலைவன் சிறந்து வாழ்க! அவனுடைய இல்லற வாழ்வு இனிது சிறப்பதாக என்று நாங்கள் விரும்பினோம்.

இல்லறமே நல்லறம் என்ற கொள்கை தமிழரின் உயர்ந்த அருள் நெறியை உணர்த்தும். இல்லறத்தில் வாழ்கின்றவர்களே உழைத்து, உற்பத்தி செய்து பிறர்க்கு உதவுகின்றனர். குடும்பப் பொறுப்பற்றவர்கள் எதுவும் செய்ய வேண்டும் என்ற கவலையற்றவர்கள். இது நாம் கண்கூடாகக் காணும் உண்மையாகும். தமிழர்களின் பலகாலப் பண்பையும், தன்னலமற்ற தன்மையினையும் இப்பாடல் நமக்கு உணர்த்துவதைக் காணலாம்.

## நட்பின் பெருமையை உணர்த்தல்

சங்கத் தமிழர் பிறர்மனம் புண்படாது நடந்து கொள்ள வேண்டும் என்ற உயர்ந்த பண்பு கொண்ட மக்களையே நாகரிகம் உடையவர்களாகக் கருதினர். தனக்குக் கொடிய நஞ்சினைத் தருகின்ற செயலைக் கண்டும் அதனை மறுப்பின் கொடுக்கின்ற நண்பனின் உள்ளம் வருந்துமே என்று எண்ணி அந்நஞ்சினையும் மனமகிழ்வோடு ஏற்றுப் பருகுவதே அச்சிறப்பு என்பதனை,

*"முந்தை யிருந்து நட்டோர் கொடுப்பின்*
*நஞ்சும் உண்பர் நனிநா கரிகர்"*[87]

என நற்றிணை நவில்கின்றது. திருவள்ளுவரும்,

*"பெயக்கண்டு நஞ்சுண்டு அமைவர் நயத்தக்க*
*நாகரிகம் வேண்டு பவர்"*[88]

மேற்கூறிய அதே கருத்தை உணர்த்துவதைக் காணலாம். இதனால் பண்டைத் தமிழரின் நட்பு தோய்ந்த உள்ளத்தின் மாண்பை நாம் உணர முடிகின்றது.

கலந்து பழகிக் களித்து உறவாடியதன் பின்னர் பிரிவதென்பது முடியாத ஒன்றாகும். நட்பிற்காக எதனையும் செய்வர். பிரிதலைக் காட்டிலும் உயிர் விடுதலே நலம் என்னும் கொள்கையில் திளைத்தனர் என்பதை,

*"சினைக்கையன் மாய்க்குந் துறைவன் கேண்மை*
*பிரிந்தும் வாழ்த்துமோ நலமே"*[89]

என அம்மூவனார் எடுத்துக்காட்டுவதன் வாயிலாய் நட்பின் பெருமையை உணரலாம்.

## இல்லற அறம்

சங்க காலத்தில் ஆற்றுதல், போற்றுதல், பண்பு, அன்பு, அறிவு, செறிவு, நிறை, முறை, பொறை முதலான இல்லற அறப்பண்புகள் வாழ்வியலில் மேற்கொள்ளப்பட்டன. தலைவன் குடும்பத்தில் பொருள் குறைந்து வறுமை தோன்றிடவே, அவனுடைய இல்லத்திற்கு, இரந்து வருவோர்க்குப் பொருள் கொடுப்பது குறையத் தொடங்கியது. இதனையறிந்த அக்குடும்பத் தலைவன் தன்மான உணர்ச்சியினை எண்ணினான். முன்னோர் தேடித்தந்த பொருள்களைச் செலவு செய்பவர்கள் பொருள் உடையவர்களைக் காட்டிலும் இழிந்த நிலையினராவர். தனக்கு ஏற்பட்ட இழிவினைப் போக்கிட வேண்டும் என்றெல்லாம் எண்ணினான்.

தனக்கு நேர்ந்த இழிவினைப் போக்கத் தலைவியைப் பிரிந்து சென்று பொருள் தேடப் புறப்பட்டான். இதனால் தலைவி அளவற்ற துயர் கொண்டாள். அவள் ஏக்கத்தைக் கண்ட தலைவன் 'உன்னைப் பிரியமாட்டேன் அங்ஙனம் பிரிந்து வாழ்வேனானால் யான் மேற்கொள்ளும் கடமையுடன், வாழ்கின்ற வாழ்வில் இரவலர் என்னைவிட்டு நீங்கி வராமல் இருக்கும் நாட்கள் பல ஆகுக'' [90] என்று உனக்கு முன்னர் கூறியுள்ளேன்.

ஆனால், பொருளின்றி வாழ்தல் இரத்தலினும் இழிவானது. ஆகையால் சென்று பொருள்தேடி விரைவில் வருகின்றேன். அன்புடன் கூடிய இல்வாழ்க்கைக்குப் பொருள் இன்றியமையாதது என்ற கருத்தும் அப்பொருளை அறத்தின் வழியே ஈட்டுதல் வேண்டும் என்ற கருத்தும் பல இடங்களில் காணப்படுகின்றன. முன்னோர் ஈட்டிய செல்வத்தில் வசதியாக வாழ்ந்தாலும் முயற்சியின்றி சோம்பியிருந்தாலும் அறமன்று என்பதனை,

> *''உள்ளது சிதைப்போர் உளரெனப் படாஅர்*
> *இல்லோர் வாழ்க்கை இரவினும் இளிவு''* [91]

இப்பாடலில் அவர்களுடைய இல்லறத்தின் நற்கொள்கை இன்பத்தினைக் காண்கிறோம். அவன் கூறும் வஞ்சினமும், ஆறுதலும் அவர்களுடைய சிறந்த கொள்கைகளாகவே மிளிர்கின்றன. தீய வழியில் வரும் செல்வம் ஒவ்வாது அழியும் என்பதனை,

> *''அறனும் அன்றே ஆக்கமும் தேய்ம்''* [92]

இவ்வடி உணர்த்துகிறது. வாழ்க்கையில் அறம்பல புரிவதற்கும், பிறர்கடைவாயில் சென்று நிற்காத நிலைமைக்கும் பொருள் இன்றியமையாதது.

*"அறங்கடைப் படாஅ வாழ்க்கையும் என்றும்*
*பிறன்கடைச் செலாஅச் செல்வமும் இரண்டும்*
*பொருளின் ஆகும்"*[93]

நாம் துன்பத்தால் வாடி வருந்தினாலும் கவலையில்லை என்று சொல்லிய மனத்தின் தன்னலமற்ற தூய்மை உணர்ந்து போற்றத்தக்கது. நாளும் வருந்திப் பொருள் தேடாதிருப்பின்,

*"அறந்தலைப் பிரியாது ஒழுகலும் சிறந்த*
*கேளிர் கேடுபல ஊன்றலும் நாளும்*
*வருந்தா உள்ளமொடு இருந்தோர்க்கு இல்"*[94]

என எச்சரிக்கை விடுத்தும் கூறப்படுதலைக் காணலாம். இவ்வாறு பொருள் தேடிப் புகழ் குவித்து வாழ்ந்தாலும் இவ்வாழ்வு உண்மையான அன்பினை அடிப்படையாகக் கொண்டே இயங்குகின்றது என்ற உண்மையும் சுட்டப்படுகின்றது.

மற்றவர்களின் நல்வாழ்விற்காக என்று பொருள் தேடக் கொடிய பாலை வழியில் போகத் துணியும் நெஞ்சத்தினைப் பிறர்க்கென முயலும் பேரருள் உள்ளம் என்று போற்றுகின்றாள் தலைவி. பொருளால் ஈதலும், இன்பமும், புகழும் கிடைக்கின்றன. சோம்பலோடு வீட்டில் அடைந்து கிடப்பவர்க்கு இம்மூன்றும் வந்து சேராது.

*"இசையும் இன்பமும் ஈதலும் மூன்றும்*
*அசையுடன் இருந்தோர்க்கு அரும்புணர்வு இன்மென*
*வினைவயிற் பிரிந்த வேறுபடு கொள்கை"*[95]

என்று நற்றிணை கூறும். இதுவே மக்கள் இல்லறக் கடமையை உணர்த்தும் பாடலாகும். தலைவன் பிரிவை எண்ணி வருந்தும் தலைவியின் கூற்றான இப்பாட்டில் உயர்ந்த சன்மார்க்க போதம் அமைந்திருப்பதைக் காண்கிறோம்.

விருந்தோம்பும் பெருவாழ்க்கையினை மகளிர் விரும்பினர். போக்குவரத்து வசதிகளும், காசு கொடுத்து அறுசுவை உணவு கொள்ளும் உணவுச் சாலைகளும் நன்கமையாத அக்காலத்தில், விருந்தோம்பற் பண்பு சிறந்த இல்லற அறமாக மேற்கொள்ளப்பட்டது. இரவிலே தெருக்கதவைத் தாளிட முற்படுமுன் யாரேனும்

விருந்தினர் வந்துள்ளனரா என்று பார்த்து கதவடைக்கும் பழக்கம் பண்டை நாளில் இருந்தது என்பதை,

*''பலர்புகு வாயில் அடைப்பக் கடவுநர்*
*வருவீர் உளீரோ? எனவும்*
*வாரார் தோழி - நம் காத லோரே''*[96]

இக்குறுந்தொகைப் பாடல் உணர்த்துவதைக் காணலாம்.

*''நெடிய மொழிதலும் கடிய ஊர்தலும்*
*செல்வம் அன்றுதம் செய்வினைப் பயனே*
*சான்றோர் செல்வம் என்பது சேர்ந்தோர்*
*புன்கண் அஞ்சும் பண்பின்*
*மென்கண் செல்வம் செல்வமென் பதுவே''*[97]

நாம் இவ்வுலகில் படைத்த செல்வம் அறனும், பொருளும், இன்பமும் எனப்பட்ட இம்மூன்றும் செய்வதற்கு உதவ வேண்டும். அவ்விதம் நமது செல்வம் உதவாதொழிந்தால் நாம் நம்மையே பாதுகாத்தவர்களாவோம் என்பதை உணர்ந்து கூறினான் தமிழன்.)பழந்தமிழ்ப் புலவர்கள் காதல் பாடல்களிலும் இல்லற அறத்தில் மேற்கொள்ள வேண்டிய நீதியை எடுத்துக்காட்ட மறந்து விடுவதில்லை என்பதற்கு இப்பாடல் ஓர் எடுத்துக்காட்டாகும்.

இவ்வாறு பொருள் ஈட்டுவதும், ஈட்டிய பொருளால் இல்லாதவர்களுக்கு உதவி செய்வதுமே இல்லற அறத்தில் ஆண் மக்கள் கடமையாகும். ஆண்கள் இக்கடமையைச் செய்வார்களானால் மனித வாழ்வியலும், சமுதாயமும் உயர்ந்து வாழும். எல்லா நன்மைகளையும் பெற்று இன்பத்துடன் வாழும் என்பதில் ஐயமில்லை.

**மங்கல மனையறம்**

தலைவன் வருவாயறிந்து அதற்கேற்ப குடும்பச் செலவினைச் செய்து, செம்மையாக இல்லறம் ஓம்பும் இனிய மகளிரை 'விழவு முதலாட்டி' என்று போற்றினர்.

*''யாய் ஆகியளே விழவு முதலாட்டி''*[98]

தலைவி முதன் முதலில் திருமணம் செய்து கொண்டு கணவன் வீட்டிற்கு வந்தபோது, அவ்வீட்டில் ஒரே ஒரு பசுதான் கட்டப் பெற்றிருந்தது. அப்பசு ஒன்றால் கிடைக்கும் எளிய வருவாயைக் கொண்டே குடும்பம் நடந்தது. ஆனால், நற்பேறும், திருமகளன்ன பொற்புறு செவ்வியும் வாய்த்த இப்பெண் இவ்வீட்டில் அடியெடுத்து வைத்தபின் விழாக்கள் ஓயாது நடக்கும் இல்லமாகப் பொலிந்தது என்று சங்கப்புலவர் ஒருவர் பெண்ணால் வந்த பேற்றினை மங்கல மனன மாண்பினை மனமாரப் போற்றிப் புகழ்கிறார்.

*''ஓரான் வல்சிச் சீரில் வாழ்க்கைப்*
*பெருநலக் குறுமகள் வந்தென*
*இனிவிழவு ஆயிற்று என்னும் இவ்வூரே''*[99]

'மகராசி வந்தாள் செல்வம் பெருகிற்று' என்று இந்நாளிலும் கூறுவர். இந்தக் கூற்று அக்காலத்தும் இருந்திருக்கிறது என்பதும், தலைவியை மணக்கும் முன்பாக வறுமையாளனாக இருந்த தலைவன், அவளை மணந்தபின் வளமிக்க வாழ்க்கை உடையவன் ஆனான் என்பதும் இப்பாடல் மூலம் புலப்படுகிறது.

**இல்லற இன்பம்**

தமிழர்களின் இல்லற வாழ்வு அகப்பாடல்களில் அழகுறச் சித்தரிக்கப்பட்டுள்ளது. மனைவி சமூகத்தின் அச்சாணியாக,'மனைக்கு விளக்காகிய வாணுதல்' என்று குறிப்பிடத்தக்கவளாக விளங்கினாள். அன்பு இல்லற இன்பத்திற்கும், அக வாழ்விற்கும் அடிப்படைப் பண்பாகத் திகழ்வதைக் காணலாம். தலைவனும், தலைவியும் இல்வாழ்க்கையில் மட்டிலா இன்பம் புரிந்து வாழ்ந்து வந்தனர். தமிழகப் பெண்கள் துன்பம் மிகும் காலத்தும் இன்பம் காணும் இயல்பினராவர். தம் பெற்றோரைப் போன்றே பல்வகைப் பண்புகளையும் பெற்று வாழ்பவராவர். பெரும்பாலான ஆண்களும், பெண்களும், பெற்றோர் மரபிலேயே வாழ்வர். இரண்டொருவர் மாறுபடுதலுக்கு வேறு காரணம் இருத்தல் கூடும்.

தலைவனும், தலைவியும் கவின்மிக்க நிலையில் இன்பத்துடன் இணைந்து வாழ்ந்து வந்தனர். சில நாட்கள் கழித்துத் தலைவன் பரத்தையிடம் செல்லத் தொடங்கினான். இதனை மனையாள் அறிந்து வருந்தினாள். சங்ககாலப் பெண்கள் உடனே தலைவனிடம் கூறித் தடுத்தலோ, கண்டித்தலோ செய்ய மாட்டார்கள். இச்செய்தியைத் தோழி குறிப்பாக உணர்த்துவாள். சிறிது சிறிதாகவே அதனைத்

தம் அன்பு நெறியினாலேயே வெளிப்படுத்தித் தம் வழிப்படுத்துவர். அதே முறையில் இம்மனையாளும் அமைந்துள்ளாள். ஒருநாள் பரத்தையிடம் சென்று தலைவன் மீண்டு வந்தான். அவள் சென்று இன்முகத்துடன் வரவேற்றாள். அவன் மீண்டு வருங்கால் தலைவி என்ன செய்வாளோ என்று அஞ்சி வந்தான். அவள் தலைவன் சென்றதிலிருந்து வருந்திய வண்ணமிருந்தாள். வந்தவுடன் மகிழ்ச்சியுடன் வரவேற்றாள். இதனைத் தோழிமார்களும் மறைவில் நின்று கண்டு போற்றினார்கள்.

*''யாய் ஆகியளே... கரப்பா டும்மே''*[100]

என்ற இப்பாடல் பரத்தையிடம் சென்று வந்த தலைவனை மகிழ்ச்சியுடன் தலைவி வரவேற்றது, தமிழ்ப் பெண்ணின் பண்பாட்டையும், பொறுமைக் குணத்தையும், துன்பத்தில் இன்பம் கொண்டதையும் காட்டுகின்றது. அவள் அங்ஙனம் வரவேற்றதை மறைவில் நின்று கண்ட தோழிமார்கள், 'இந்த இளம் பெண் நம் தாயின் அரிய பண்புகளை எளிதில் பெற்று உயர்ந்து விட்டாளே' என்று போற்றியது. புதிதாக இல்லறம் புகுந்த இப்பெண், தாய்மைப் பண்பினைக் கொண்டதையும், தோழிமார் அறியும்படித் தலைவன் கொடுமையினைக் கூறாத செம்மையினையும் காட்டுகின்றது. இதிலிருந்து இல்லற இன்பத்திலும் சங்ககால மக்கள் சிறந்த மனித நேயத்தைப் பின்பற்றி வாழ்வியலை நடத்திச் சென்றனர் என்பது தெரிகிறது.

## சங்ககாலத் திருமணம்

சங்ககாலத்தில் மூன்று வகைப்பட்ட திருமண முறைகளைக் காண்கிறோம். அவை: உடன்போக்குச் சென்று மணவாழ்வு மேற்கொள்வது, ஏறு தழுவித் திருமணம் செய்து கொள்ளுதல், பெற்றோர் முடித்து வைக்கும் திருமணம் என்பனவாகும். அவற்றுள் ஒவ்வொன்றாகக் காண்போம்.

## உடன்போக்கு

சங்க அக இலக்கியம் உடன்போக்கில் பல பாடல்களைக் கொண்டுள்ளது. உடன்போக்கில் செல்லும் தலைவி சிலம்பு கழித்தும், சிலம்பு கழிக்காமலும் செல்வதுண்டு.

*''அச்சிலம்பு ஒடுக்கி அஞ்சினள் வந்து*
*துஞ்சு ஊர் யாமத்து முயங்கினள்''*[101]

*"வைகுபுலர் விடியல் மெய்கரந்து தன்கால்*
*அரியமை சிலம்பு கழீஇப் பன்மாண்*
*வரிபுனை பந்தொடு வைஇய செல்வோள்"*[102]

*"பெய்சிலம்பு ஒலிப்பப் பெயர்வனள்"*[103]

மகளைப் பிரிந்த தாய் தான் உறும் துயரைத், தலைவனின் தாய் பெற வேண்டும் என்பதை,

*"..... .... எம்போல்*
*பெறுவிதுப் புறுக மாதோ எம்மில்*
*பொம்மல் ஓதியைத் தன்மொழிக் கொளீஇக்*
*கொண்டுடன் போக வலித்த*
*வன்கண் காளையை ஈன்ற தாயே"*[104]

இப்பாடல் விளக்குகிறது.

*"பைங்காய் நெல்லி பலவுடன் மிசைந்து*
*செங்கான் மராஅத்த வரிநிழல் இருந்தோர்*
*யார்கொ லளியர் தாமே வார்சிறைக்*
*குறுங்கான் மகன்றி லன்ன*
*உடன்புணர் கொள்கைக் காத லோரே"*[105]

எனக் கண்டோர் கூற்றில் உடன்போக்கு உரைக்கப்படுகின்றது.

*"கடுங்கட் காளையொடு .... அறனில் யாய்க்கே"*[106]

எனத் தலைவன் இடைச்சுரத்துக் கண்டோரிடம் ஆய்க்குச் சொல்லி விட்டதாகப் பாடல் உள்ளது. மேலும் இப்பாடல் மகட்கொடை மறுக்கப்பட்டபோது உடன் போக்கு நிகழும் என்பதைக் குறிப்பால் புலப்படுத்துகிறது.

*"அறநெறி இதுஎனத் தெளிந்தவென்*
*பிறைநுதற் குறுமகள்"*[107]

என்ற தொடர் உடன்போக்கை அறத்தின்பாற்படுத்தும். இதுபோன்ற உடன்போக்குத் திருமணத்தினால் அக்காலத்தில் தலைவன், தலைவியர்க்கிடையிலான காதலின் பெருமையும், நட்பின் திறமும் புலப்படுகிறது.

## ஏறு தழுவுதல்

சங்க அக இலக்கியத்தைப் பொறுத்தவரை கலித்தொகையில் ஆறு பாடல்கள் (101-106) மட்டும் இதுபற்றிய விரிவான செய்திகளை அளிக்கின்றன. மற்ற சங்க நூல்களில் இப்பாடல்கள் இடம்பெறவில்லை. இவ்வழக்கம் முல்லை நிலத்துக்குரியது. ஏறு தழுவுதல் பகுதியில் ஆயர்களின் வீரமும், அஞ்சாமையும் எடுத்துரைக்கப்படுகின்றன. இன்ன ஏற்றை அடக்கித் தழுவும் வீரனுக்கே உரியவள் இப்பெண் என்று பலமுறை சொல்லிப் பலர் அறியச் செய்யும் வழக்கம் இருந்திருக்கிறது.

> *''ஓஒ! இவள், பொருபுகல் நல்ஏறு கொள்பவர் அல்லால்*
> *திருமா மெய் தீண்டலர் என்று கருமமா*
> *எல்லாரும் கேட்ப, அறைந்து அறைந்து, எப்பொழுதும்*
> *சொல்லால் தரப்பட்டவள்''*[108]

இறுதியில் வெற்றி பெற்ற வீரர்களை ஆயர்கள் எல்லோரும் கூடி வாழ்த்திப் போற்றுவர். அவர்களை மணப்பதற்குரிய காதலியர் மகிழ்வர். இவ்வாறு ஏறுகளை எதிர்த்துப் பொருது அடக்குவதற்கு அஞ்சும் ஆயனை, எந்த ஆய்ச்சியும் விரும்ப மாட்டாள். மறுபிறவியிலும் விரும்ப மாட்டாள். ஏற்றைக் கண்டு அஞ்சுவதும், ஆய்ச்சியரின் தோளை விரும்புவதும் ஆகிய இவை இரண்டும் ஒருங்கே நிகழ முடியாதவை.

> *''கொல்லேற்று கோடு அஞ்சுவானை மறுமையும்*
> *புல்லாளே ஆயமகள்''*[109]

> *''ஆங்கு போர் ஏற்று அருந்தலை ... எம்கேளே''*[110]

வீரர்களின் வெற்றியை விரும்பும் வீரமகளிராகவே ஆய்ச்சியர் இருந்தனர். ஆதலின் ஏறுகுத்திப் புண்பட்ட வீரருடைய குருதி தம் தோளில் படவேண்டும் என்று அவர்கள் விரும்பினர். தாம் தயிர் கடையும் போது அதிலிருந்து துளித்துத் தோளில்பட்ட வெண் புள்ளிகளோடு அந்தச் செந்நிற இரத்தத் துளிகள் படுதல் தோளுக்கு அழகு செய்வதாகும் என்று எண்ணியது அவர்களின் வீரநெஞ்சம்.

> *''பல்லூழ் தயிர்கடையத் தாஅய புள்ளிமேல்*
> *கொல்லேறு கொண்டான் குருதி மயக்குறப்*
> *புல்லல் எம் தோளிற்கு அணியோ? - எம் கேளே''*[111]

ஏறு தழுவிய வீரனை மணக்க வேண்டும் என்றும், அவ்வாறு மறைந்தபின் ஊரார் தன் கணவனின் வீரத்தைப் புகழ வேண்டும் என்றும், தான் மோர் விற்கச் செல்லும்போது, ''இவள் கணவன் அந்த ஏற்றை அடக்கி வென்றவன்'' என்று ஊரார் சொல்லும் சொல்லைத் தன் செவி கேட்க வேண்டும் என்றும், அத்தகைய வீரச் செல்வனோ, தான் விரும்புவது''[112] என்றும் ஆய்ச்சி கூறுகிறாள்.

இவ்வாறு வீரத்தை எடுத்துக் கூறிப் புகழும் புலவர், ஆயரிடையே காதலும், வீரத்துடன் கலந்து வாழ்கிறது. வீரன் ஏறுதழுவி வெற்றி பெறுவதற்கு முன்னமே ஆய்ச்சியின் நெஞ்சம் அவனைப் பற்றுக் கோடாகக் கொண்டு காதல் கொண்டது என்பதைத் தெரிவிக்கின்றனர்.

*''இன்றெவன், என்னை எமர்கொடுப்பது - அன்று அவன்*
*மிக்குத் தன்மேல் சென்ற செங்காரிக் கோட்டிடைப்*
*புக்கக்கால் புக்கது என் நெஞ்சு?''*[113]

இப்பாடல்கள் மூலம் தலைவனின் வீரமும், அஞ்சாமையும், தலைவியின் காதல் திண்மையும் உணர்த்தப்படுகிறது.

**பெற்றோர் முடிக்கும் திருமணம்**

கொடைமணம் என்பது மணமகனோ அல்லது அவனுடைய பெற்றோரோ திருமணத்தின் பொருட்டுப் பெண்ணின் வீட்டிற்குச் சென்று மணம் பேசிப் பெண்ணை அவர்கள் கொடுக்கப் பெற்று வருவதாகும்.

*''முறம் செவி மறைபாய்பு... காண்குவல் யானே''*[114]

மறைந்து, மறைந்து வந்துபோகும் தலைவனிடம் தோழி, மணம் குறித்து உரையாடுகின்றாள். அன்பனே! இவ்வாறு இனி மறைந்து வாழ்தல் இயலாது. என்றாகிலும் ஒருநாள் உண்மை வெளியாகிவிடும். இக்களவு ஒழுக்கத்தைக் காரணமாகக் கொண்டு ஊரவர் எங்கள் முன் நிற்கவும் நாணுவர். அலர் கூறி எங்களை துயருறச் செய்வர். ஊரில் அலர் தோன்றினால் தலைவி உயிர் வாழாள். அவள் நலமே என் நலம். அவள் வாழ்வே என் வாழ்வு. ஆகையால் அவளை இழந்த பின்னர் யானும் உயிர் வாழேன். ஆகவே அவளை நீ பலரும் அறியும் வண்ணம் மணந்து கொண்டு அலர் உரைக்கும் ஊராரின் வாயை அடக்கி, உன் மனை புகுந்து உன் உறவினருடன் பெருமித வாழ்வு வாழ வகை செய்யுமாறு, நீ இன்று மணமுயற்சி

கொள்ளுதல் வேண்டும். விரைந்து வரைந்து கொள்ளுதல் வேண்டும். இதற்கு ஊராரின் அலர் மட்டும் காரணமன்று. நீ மணநாளன்று புதியவன் போல் நடப்பதையும், திருமண நிகழ்ச்சியால் தோன்றிய நாண் தலைதூக்க தன் இரு கைகளாலும் தன் முகத்தை மூடிக் கொள்ளும் அவளுடைய அடங்கிய நிலையையும் நான் கண்டு மகிழ்தல் வேண்டும். ஆகையால் அன்பனே! இக்களவு ஒழுக்கத்தை இன்றுடன் விட்டு மணந்து மனையறம் மேற்கொள்வதற்குரிய முயற்சியினை மகிழ்வுடன் மேற்கொண்டு எம்பெற்றோர்பால் வந்து மணம்பேசி அவர் மகளைப் பெறுவாயாக என்று கூறி அனுப்புகின்றாள். இக்கூற்றினைப் பொருளாக வைத்துப் பாடப்பெற்ற பாடலே மேற்கூறிய குறிஞ்சிக் கலிப்பாடல்.

தோழியின் கூற்றினின்று தலைவன் நேரில் சென்று மணம் பேசி மணந்து கொள்ளும் வழக்குண்மையினை உணர்கின்றோம். இதைப்போன்று தலைவனின் பெற்றோர் சென்று மணம் பேசி மணம் முடிக்கும் வழக்கமுண்டு என்று தெரிகிறது. இங்ஙனம் தலைவனோ, அல்லது தலைவனின் பெறோரோ வந்து தம் பெண்ணைக் கேட்க அவளுடைய பெற்றோர் மகிழ்வுடன் நல்குவது 'கொடை மணம்' எனப்படும். இருமனமும் இணைந்து சென்ற எழிற்காட்சியினை,

*"அழிவில முயலும்... செல்லும் ஆறே"*[115]

என்ற நற்றிணைப் பாடல் தலைவனுடன் செல்லும் தலைவியிடம் அவன் அன்புடன் பேசி அழைத்துச் செல்லுதலைக் காட்டுகின்றது.

**காதல் மணம்**

காதல் மணம் என்பது ஓர் ஆடவனும், பெண்ணும் தம் பெற்றோர்க்கும், மற்றோர்க்கும் அறிவியாமல் காதல் கொண்டொழுகித் தாமே கணவனும், மனைவியுமாக அமைந்து விடுவதாகும். பெரும்பான்மையும் களவில் தொடங்கிப் பின்னர் கற்பில் விளக்கமுறும் இம்மணம் நிகழும் முறையாவது.

ஓர் ஆணும், பெண்ணும் களவில் எவரும் அறியாவண்ணம் எதிர்ப்பட்டுக் காதல் கொண்டு உறைவர். சில நாட்கள் சென்றவுடன் அவர்களின் களவு ஒழுக்கம் வெளிப்பட்டு அலர் எழும். உடனே அவர்கள் இருவரும் இணைந்து ஒரு நாள் இரவு புறப்பட்டு தலைமகன் ஊர்க்குச் சென்று விடுவர். அவன் தன் மனையில் பல சான்றோர்கள் முன்னிலையில் முறைப்படி அவளை மணம் புரிந்து கொள்ளுவான்.

காதலில் தொடங்கி கற்பில் முடிவுபெறும் மணம் ஆகையால், இதனைக் காதல் மணம் என்றனர்.

களவு ஒழுக்கத்தில் ஒழுகி வந்த தலைவன், தலைவியைத் தோழியின் உதவியால் அயலவர் அறியாமல், ஒருநாள் இரவு அழைத்துக் கொண்டு தன்னூர் சென்று விட்டான். சென்றவுடன் அவன் மனையில் திருமணத்திற்கான ஏற்பாடுகள் அனைத்தும் நடந்தன. தமிழ்ச் சான்றோரால் இக்கற்பு நெறி கற்பிக்கப் பெற்றது. அக்காதலர்களுக்கு அவர்களிருவரும் கைபிணைத்து கற்பு நெறியினராயினர். கணவனும், மனைவியுமாக மணப்பந்தலில் மிளிர்ந்தனர். இத்திருமணக் காட்சியைக் கண்டு களித்த சிலர், தூதுவராக வந்து தலைவியினுடைய தோழிக்கு, நிகழ்ந்த செய்தியினை விரிவாக உணர்த்தினார்கள். அத்தோழி அளவிலா மகிழ்வு கொண்டு விரைந்து செவிலியிடம் சென்று, ''முத்தாரத்தை முலைக்கண் நம் பெண்ணை நல்ல நாளிலே தலைமகன் தன்மனையில் வைத்து வரைந்து கொண்டான் என்ற செய்தியை ஈண்டு வந்த தூதுவர் வாயிலாக அறிந்தேன்'' எனக் கூறினாள்.

இச்செய்தியினை அறிந்த செவிலி சிந்தை குளிர விரைந்து சென்று நற்றாயிடம், ''அன்னையே! நம் ஆரணங்கை எல்லாக் கேளிரும் வந்து மணப்பந்தலில் நின்று மணச்சடங்கு செய்ய தலைமகன் ஊரில் மணவின்பத்தை எய்தி நட்புப் பொருந்திய தலைவன் பின்னால் நம் அன்னை போல்வாள், இன்று இம்மனையிடத்து இப்போது வருவர் எனச் சில தூதுவர் செப்பினராம்'' எனக் கூறினாள். அன்னையிடம் சொல்லி மகிழும் இக்காட்சியை,

*''மள்ளர் அன்ன மரவந்தழீஇ... வந்தன்று தூதே''*[116]

என்று இப்பாடலில் அழகுறத் தீட்டப்பெற்றுள்ளது.

### இழிந்தோர் காதல்

முல்லை நில மக்களின் தூய்மையும், எளிமையும் ஒரு புறமும், அஞ்சாமையும், வீரமும் மற்றொரு புறமும் காட்டும் பாடல்கள் அவர்களை ஒழுக்கத்தில் எளியராக்கி உயர்வல்லாத வகையில் காட்டும் பகுதியில் கலித்தொகையில் சில உள்ளன. அவை அந்நிலத்துத் தலைமக்களைப் பற்றியவையல்ல. ஏவலாளரையும், அடிமைகளையும் பற்றியவை என்று அமைதி கூறுவதும் உண்டு. எனினும் அப்பாடல்கள் மேற்கண்டவை போல் சிறப்புடையவை அல்ல என்பது தெளிவு.

முல்லை நிலத்து வாழ்வான் ஒருவன், ஒருத்தியை அணுகித் தன் காதலைத் தெரிவிக்கின்றான். என் நெஞ்சம் உனக்கே உரியதாகி விட்டது என்கிறான். அதைக்கேட்ட அவள் உன் நெஞ்சத்தை உரிமையாக்கிக் கொண்டு யான் எப்படி ஆளமுடியும்? அது எனக்காக என்ன செய்ய முடியும். புனத்தில் உள்ள என் தமையனுக்கு நான் உணவு கொண்டுபோய்க் கொடுக்க வேண்டும். ஆனிரையோடு இருக்கும் என் தந்தைக்குப் பால்கலம் கொண்டு போய்க் கொடுக்க வேண்டும். தினைக்காலுள் என் தாய்விட்ட கன்றை யான் சென்று மேய்க்க வேண்டும். இச்செயல்களை எல்லாம் உன் நெஞ்சம் செய்யுமோ! என்பதனை,

> *''நின்நெஞ்சம் களமாக் கொண்டு யாம் ஆள, எமக்கு எவன் எளிதாகும்?*
> *புனத்துளான் என்னைக்குப் புகா உய்த்துக் கொடுப்பதோ?*
> *இனத்துளான் எந்தைக்குக் கலத்தொடு செல்வதோ?*
> *தினைக்காலுள் யாய்விட்ட கன்று மேய்க்கிற்பதோ?''*[117]

இவ்வாறு கேட்கின்றாள் அம்முல்லை நிலத் தலைவி.

மோர் விற்று வரச் செல்கிறாள் ஒருத்தி. அவள் தெருவழியே வருவதைக் கண்ட அந்தத் தெருப் பெண்கள் தத்தம் கணவன்மாரை முழுநாளும் வெளியே செல்ல விடாமல் தடுத்துக் கதவு அடைக்கிறார்கள். மோர் வாங்காமலே மாங்காய் ஊறுகாய் செய்து கொண்டு அதுவே போதும் என்று இருக்கத் துணிகிறார்கள். மோர் வாங்கத் தொடங்கினால் அந்தப் பெண் தம் கணவன்மாரை மயக்கித் தன்வயப்படுத்திக் கொள்வாள் என்று அஞ்சுகிறார்கள். இந்த அச்சத்தால் இவ்வாறு செய்யத் துணிகிறார்கள்.

> *''மாங்காய் நறுங்காடி கூட்டுவேம்; யாங்கும்*
> *எழுநின் கிளையொடு போக என்று தத்தம்*
> *கொழுநரைப் போகாமல் காத்து முழுநாளும்*
> *வாயில் அடைப்ப வரும்''*[118]

காதலனை எதிர்ப்படுகிறாள் ஒருத்தி. அவன் நெருங்குவதைத் தடுக்கிறாள். ''என் தாய் பொல்லாதவள். என்னைத் தேடிக் கொண்டு வந்து விடுவாள். கன்று போனவிடத்தில் கதம் கொண்ட தாய்ப்பசு தொடர்ந்து செல்வதுபோல் வருவாள். ஆகையால் நீங்கிச் செல் என்கிறாள். அதற்கு அவன் உன்தாய் வந்தாலும் வருக. மற்றவர் வந்தாலும் வருக. நான் அதற்கெல்லாம் சோர்வுற மாட்டேன். நீ மட்டும்

என்னிடம் அன்பு கொண்டு உதவினால் போதும்'' [119] என்கிறான்.

இவை கலித்தொகையில் இழிந்தோர் வாழ்க்கை பற்றிக் கூறும் பகுதிகளில் சில. இப்பாடல்கள் மூலம் காதலாகிய அன்பு என்பது, உயர்ந்தோரிடம் மட்டுமல்லாமல் இழிகுலத்தினரிடமும் அன்பான காதல் வாழ்க்கையினை நம்மால் அறிந்து கொள்ள முடிகிறது.

### மணமுறையும் ஆரியரும்

அக்காலத்தில் பெண்ணிற்கும் பிள்ளைக்கும் பொருந்த வேண்டிய பத்துப் பொருத்தங்களும் பொருந்தினால் தான் திருமணத்தை முடிப்பர். இக்காலத்தைப் போல செல்வ வளத்தைக் கண்டோ, புகழைக் கண்டோ பொருந்தா நிலையினருக்குக் கொடுப்பதில்லை. முறையறிந்து ஒழுகுவோராக இருப்பின், மகன் வீட்டார் பொருத்தங்கள் பொருந்தவில்லை எனில் வேறு பெண்ணை நாடிச் செல்வர். முறை வழுவிய கொடியவராக இருப்பின், பொருத்தமில்லையெனவே பெண் வீட்டார் இசையாததனைக் கண்டு சினமுற்று அவர் பெண்ணைக் கொடிய முறையில் கவர்ந்து சென்று மணம் புரிந்து கொள்ளுதலும் உண்டு. இங்ஙனம் புரிந்து கொள்வோரை அக்காலத்தில் வறிதே விட்டுவிடவில்லை. அவர்களை வெறுப்பதற்கென்று 'அவைகள்' இருந்தன. அங்ஙனம் செய்தோர் ஒதுக்கப்பட்டனர்.

*''கரும்பு அமல் படப்பை, பெரும் பெயர்க் கள்ளூர்*
*திருநுதற் குறுமகள் அணிநலம் வவ்விய*
*அறனிலாளன், 'அறியேன்' என்ற*
*திறனில் வெஞ்சூள் அறிகரி கடாஅய்*
*முறியார் பெருங்கிளை செறியப் பற்றி*
*நீறு தலைப்பெய்த ஞான்றை*
*வீறுசால் அவையத்து ஆர்ப்பினும் பெரிதே''* [120]

ஊர்தோறும் தீயோரைத் தண்டிக்கும் அவையம் இருந்தமையை இப்பாடல் மூலம் இனிது உணர்கின்றோம். இதைத் தவிர, தமிழகத்தில் திருமணங்கள் பொருத்தம் கண்டு பொலிவு பெற்றுள்ளது என்பதும் புலனாகின்றது.

### திருமணத்தில் வாழ்த்தும் முறை

தமிழர் உள்ளத்தின் மேன்மையை வெளிப்படுத்தும் கொள்கைகளும்,

செயல்களும் பலவாகும். தரணியிலேயே தமிழரின் உள்ளம் போன்ற நல்லுள்ளம் வாய்ந்த இனமில்லை என்றும் சொல்லலாம். ஈண்டு தமிழர் என்பது பண்டைத் தமிழரையேயன்றி அக்காலத்தவரையன்று என்பதையும் நம் எண்ணத்தில் இருத்தல் வேண்டும். பண்டைத் தமிழரின் நல்லுள்ளத்தை வெளிப்படுத்துவதில் ஒன்று வாழ்த்தும் வழக்கு.

இவ்வழக்கு பண்டைக் காலத்தில் யாண்டும் எப்பொழுதும் நிலவி வந்துள்ளது. ஆனால், இக்காலத்தில் மிகவும் அருகித் திருமணக் காலத்திலும், பண்டிகை நாட்களிலும் மட்டும் நிலவிடக் காண்கிறோம். பண்டைக் காலத்தில் ஒருவரை ஒருவர் எதிர்ப்படும் போதெல்லாம் 'வாழி! வாழி!' என்று அன்புடன் வாழ்த்தி வந்துள்ளனர். பிறர் நலமுடன் வாழ்ந்தால் தான், தாம் நலமுடன் வாழ இயலும் என்ற உண்மையினை உணர்ந்து பிறரையும் நலமுடன் வாழ வேண்டும் என்று விழைந்து, வாழ்த்தி வந்துள்ளனர்.

நம் பழந்தமிழ் இலக்கியங்களை முறையே நோக்கும்போது அகப்பாடல்களில் தோழி தலைவியையும், தலைவி தோழியையும், தாய்மார்கள் புதல்விகளையும், புதல்விகள் தாய்மார்களையும் முறையே வாழி! வாழி! என வாழ்த்தியிருக்கக் காண்கிறோம். இதைப்போன்று தலைவன் பாங்கனையும், பாங்கன் தலைவனையும் வாழ்த்தியிருக்கக் காண்கிறோம். இக்காலத்தைப் போன்று இன்றி, வேறுபாடு கருதாமல் எல்லோரும் ஒன்றுபட்டு உறைந்து ஒருவரையொருவர் வாழ்த்தி நனிசிறந்த வாழ்க்கையாக வாழ்ந்துள்ளனர். பண்டைக் காலத்தின் சமநிலை வாழ்க்கை பெருமையுடையதாகும். அக்காலத்தில் அனைவரும் எஞ்ஞான்றும் ஒருவரை ஒருவர் வாழ்த்தி வழங்கியதைப் போன்று இக்காலத்தில் கிடையாது.

திருமணக் காலத்தில் மணமக்களை வாழி! வாழி! என்று வாழ்த்துகின்றனர். தமிழர் திருநாளாகிய தைத் திருநாளன்று வாழ்த்துகின்றனர். புத்தாண்டின்போது வாழ்த்துகின்றனர். எஞ்ஞான்றும் ஒருவரை ஒருவர் காணும் போதெல்லாம் வாழ்த்தி வாழும் வாழ்க்கை அறவே இல்லை எனலாம். ஆனால், வாழ்த்தலுக்கு மாறாக மற்றொன்று உள்ளது. அதாவது ஒருவரை ஒருவர் காணும்போது வணக்கம் என்று கூறி வாழ்த்தலைக் காண்கிறோம். சிலர் பண்டைக் காலத்தில் வழங்கிய வாழ்த்தலே இக்காலத்தில் வணக்கமாக வந்துள்ளது என்பர். இது பொருந்துவதன்று. இரண்டிற்கும் நிறைந்த வேறுபாடு உள்ளது. வாழ்க என்பதில் பணிவுப் பண்பினுக்கு இடமேயில்லை.

வணக்கம் என்பதில் பணிவுப் பண்பே முதன்மையானது. எனவே, இரண்டும் வேறுபட்டவை என்பது தெளிவு.

வாழ்த்துதல் என்ற பண்டைக்கால வழக்கு இக்காலத்துக் குறைந்து விட்டதேயன்றி மறைந்துவிட்டதன்று. பண்டு திருமணத்தில் வாழ்த்தப்பெற்றது. அங்ஙனமே இக்காலத்தும் திருமணக் காலத்தில் மணமக்கள் வாழ்த்தப்படுகின்றார்கள். பண்டு பெருவிழா நாளன்று வாழ்த்தப் பெற்றது. அங்ஙனமே இன்றும் விழா நாளன்று வாழ்த்தப் பெறுகின்றனர். ஈண்டு திருமணத்தன்று வாழ்த்தும் முறையினை மட்டும் காண்போம்.

அன்றும், இன்றும் திருமணத்தன்று மணமக்களை அவர்களுடைய தாய், தந்தையர் அளவற்ற மகிழ்ச்சியுடன் 'நலமுடன் வாழுங்கள்' என்று வாழ்த்துகின்றனர். உற்றார், உறவினர் உள மகிழ்வுடன் 'எண்ணம்போல் வாழ்வீர்களாக' என்று வாழ்த்துகின்றனர். இங்ஙனம் சொல்லால் வாழ்த்துரைப்போர் சிலர். இவ்வாழ்த்துரைகளைச் சொல்லால் சொல்லி வாழ்த்தும் வாய்ப்பினைப் பெறாதவர் சிலர் தம் மனத்தளவில் வாழ்த்துவர். அதற்கு அறிகுறியாகவே நெல்லையும், மலர்களையும் மணமக்கள்மேல் தூவுகின்றார்கள். சிலர் தம் பரிசில் பொருள்களை மணமக்களிடம் நல்கி, அவற்றையே தம் வாழ்த்தாக்கி விடுவர். சிலர் இசைப்பாடல் வடிவில் இனிதுபாட, அதனையே தம் வாழ்த்து மொழியாக்குவர். இவை போன்று மற்றும் பல வாழ்த்துக்கள் விளங்கக் காண்கிறோம்.

### இல்வாழ்வில் மழலை இன்பம்

ஆண், பெண் இருபாலரிடையேயும் திருமணம் பெறுகின்ற வரையிலும் எல்லாம் தனக்கு வேண்டும் என்ற தன்னல முனைப்பே தலைதூக்கி நிற்கின்றது. ஒருவர் இருவராகும்போது 'யான்' என்ற புறப்பற்றைப் போக்கி 'எனது' என்ற அகப்பற்றை நீக்கி 'யாம்' என்ற நினைப்பையும், 'எம்முடையன' என்ற இணைப்பையும் ஏற்படுத்துகின்றது. அப்போது தன்னலம் சற்றுத் தளர்வு எய்துகின்றது. ஒருவர் என்ற நிலைமாறி இருவருக்காக என்னும் நினைப்பு இதயத்தில் இடம் பெறுகின்றது என்ற போதும் இருவர் என்ற நிலையிலே தன்னலம் இருந்த இடம் தெரியாமல் அற்றுப் போகாவிட்டாலும் சற்றுத் தணிந்து காணப்படுகின்றது.

அக்காலத்தில் மக்கட்பேற்றைப் பெறும் போதுதான் உண்மையான உயர்ந்த நிறைவு பெற்ற மனித நிலையை ஒவ்வொருவரும் எய்தினர் என்ற கருத்தை

உணர்த்துகின்ற பாடல்கள் இடம் பெற்றுள்ளன. அத்தகு மாண்புடை மகப்பேற்றை அடைந்தவரின் விழு நிலையையும், அடையாதவரின் இழிநிலையையும் பற்றியும் எடுத்தியம்புகின்றன.

இல்வாழ்க்கையின் பயனாக மக்களைப் பெற்றவரையே மாண்புடையவராகத் தலைமைப் பேறு உடையவராகப் பண்டையோர் கருதினர். குழந்தைப் பேற்றின் காரணமாக இவ்வுலகத்திலும் புகழொடு விளங்குவார்கள். மறுமை உலக வாழ்வினையும் குற்றமின்றி எய்துவர் எனப் பலரும் கூறிய பழைய மொழிகள் எல்லாம் உண்மையாதலைக் கண்கூடாகக் காணலாம். இதனை,

*''இம்மை உலகத்து இசையொடும் விளங்கி*
*மறுமை உலகமும் மறுவின்று எய்துப*
*செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச்*
*சிறுவர்ப் பயந்த செம்மலோர் எனப்*
*பல்லோர் கூறிய பழமொழி எல்லாம்*
*வாயே ஆகுதல் வாய்த்தனம் - தோழி!''*[121]

எனச் செல்லூர்க் கோசிகன் கண்ணனார் அழகுற எடுத்துக் காட்டுகின்றார்.

மழலைகள் அன்னைக்கும், தந்தைக்கும் இணைப்புப் பாலமாக விளங்குகின்றனர். மழலை மொழிகள் கேட்டலிலே மட்டிலா இன்பம் செவிக்கு என்பதனை,

*''அத்தத்தா' என்னும் நின்*
*தேமொழி கேட்டலினிது''*[122]

என மருதனிள நாகனாரும் கூறியுள்ளார். ஊடல், பிணக்குகள் ஏற்படுகின்ற நிலையில் அவர்களை இணைத்து வைக்கும் பாலமாகவும் செயற்பட்டுக் குடும்பத்தின் மகிழ்ச்சிக்கு வழி செய்பவர்களும் குழந்தைகளே. தந்தையைக் காணும் தணியா விருப்புடன் தளர்ந்து, தளர்ந்து ஓடிவந்த பூப்போலும் கண்களையுடைய தன் புதல்வனைக் கண்டு வலவனே! நீண்ட தேரினை நிறுத்துவாயாக என்று கூறித் தேரினின்றும் இறங்கி சிறிதுகூடக் காலம் தாழ்த்தாது புதல்வனுடைய பவளமணியினை ஒத்த சிவந்த வாய் தனது மார்பகத்தே பொருந்த எடுத்துத் தழுவி, பெரும! இனி அகத்திற்குச் செல்வாயாக என விடுப்போனுக்கு இசையானாகி அழுதலின் அங்ஙனம் தடுத்த மகனோடு இல்லில் புகுந்தனன் என்பதை,

*"மாண்டொழின்.... புகுதந்தோனே"*[123]

என்று அகநானூற்றுப் பாடல் அழகுற எடுத்துக் காட்டுவதினின்றும் உணரலாம்.

சங்க காலத்தில் இல்வாழ்க்கை மேற்கொண்ட சில நாட்களில், அவர்களுடைய பெற்றோர்கள் சென்று, அவர்களின் இல்வாழ்க்கை முறையினைக் கண்டு வந்து மகிழ்ந்துள்ளனர். அப்பெற்றோர்களின் மகிழ்வுக் காட்சிகளில் இரண்டொன்றைக் காண்போம். அவர்களுடைய பெற்றோர்கள் காண வருங்கால், அவர்களின் இல்லற வாழ்க்கை, பாணரின் யாழிசையை ஒத்த இன்பத்தில் திகழ்ந்தது.

*"…. …. பாணர்*
*நரம்புளர் முரற்கை போல*
*இனிதா லம்ம பண்புமா ருடைத்தே"*[124]

இன்பநிலை யாங்ஙனம் விளங்கியதெனில் மக்கட்பேற்றினால் விளங்கியது. தலைவன், தலைவி யாழ்மேல் கொண்ட அன்புபோல், தன் புதல்வனிடத்திலும் பேரன்பு கொண்டு விளங்கினான். பெருஞ்சிறப்புடைய தன் தந்தையின் பேரன் சிறுநகை செய்து சித்திரச் சிறுதேர் உருட்டும்போது, அவனுடைய தளர் நடையினைக் கண்டு பெருமகிழ்வு கொள்கின்றான்.

*"புணர்ந்த காதலியின்.... தளர்நடை கண்டே"*[125]

யாழிசையை ஒத்த மழலை மொழி மகன்தானே அவன். எனவே, அவர்களுடைய இல்லற வாழ்க்கை மிகவும் இன்பமுடையது என்பதை எடுத்துரைக்கிறது. இவ்வாறு தலைவனும், தலைவியும் தம் புதல்வனுடன் பொருந்தி இன்பமாக வாழும் காலத்து பெற்றோரோ, உற்றாரோ வந்து காண்பது மரபு. அதன்படி செவிலி சென்று அவர்களின் இல்வாழ்க்கை முறையினைக் கண்டு மகிழ்ந்து மீண்டாள். தன் இல்லத்திற்கு செவிலியின் மீளுதலைக் கண்ட நற்றாய் முதலியோர் மிகவும் ஆவலுடன் அவர்கள் வாழ்க்கை முறையினை அறிய நின்றனர். செவிலியும் விரைந்து வந்து தாம் கண்ட இன்பக் காட்சிகளை இனிது எடுத்துக் கூறுகின்றாள்.

*"மறியிடைப் படுத்த மான்பிணை போலப்*
*புதல்வ னடுவண னாக நன்றும்*
*இனிது மன்றவவர் கிடக்கை முனிவின்று*
*நீனிற வியலகங் கவைஇய*
*ஈனு மும்பரும் பெறலருங் குரைத்தே"*[126]

செவிலி தம் மகளின் இல்வாழ்க்கையினைப் பற்றிக் கூறும் பாடல்கள் ஐங்குறுநூற்றில் இடம் பெற்றுள்ளன. தான் கண்டவற்றை, தலைவியை ஈன்ற தாயினிடம், குட்டி இடையில் இருக்கப் பெற்ற ஆண்மானும், பெண் மானும் போன்று மகனைத் தம் இடையில் வைத்துக் கொண்டுள்ள அவர்கள் தோன்றும் காட்சி மிகவும் இன்பமுடையதாக உள்ளது. அத்தகைய வாழ்க்கையினைக் கடல் சூழ்ந்த இவ்வுலகத்திலும், மேல் உலகத்திலும் பெறுவதற்கரியதாகும். அவருக்கு மனைவியாக மிளிரும் அவள், குத்து விளக்கின் செந்நிறச் சுடர்போல் அக்குடும்பத்தினுக்கு விளக்காக அமைந்துள்ளாள்.

'ஆண்டுள்ள பாணர்கள் முல்லைப் பண்ணைப் பாடுகிறார்கள். ஒளி வீசுகின்ற அணிகலன்களையும், ஒளி பொருந்திய நெற்றியினையும் உடைய நம் மகள் முல்லை மலர்களைச் சூடியுள்ளாள். தலைவன் தன் புதல்வனோடு பொருந்தி விளங்கிப் பாணர் பாடும் முல்லைப் பண்ணைக் கேட்கும் தலைவி சூடிக் கொள்ளும் முல்லை மலரின் எழிலைக் கண்டும் இன்பமாக விளங்குகின்றான்'.[127] 'மாலைப் போதில் முன்றிலில் குறுகிய கால்களையுடைய கட்டிலில் அவன் தன் தலைவி பக்கத்தில் இருக்க, குழந்தையாகிய தன்மகன் தன் மார்பின்மேல் ஏறி ஊர்ந்து செல்ல, இனிமைமிக அமர்ந்துள்ளான். அந்த இனிய மாலைப்போதில் பாணனுடைய யாழின் மெல்லிய நரம்புகளின் இன்னிசை மிகவும் பொருத்தமுடையதாக அமைந்து விளங்குகின்றது'[128] என்று பல்வகை இன்பக் காட்சிகளையும் மாறுபாடின்றி மொழிந்து மகிழ்வுற்றாள்.

செவிலி கூறிய இன்பக் காட்சிகள் அனைத்தும் நற்றாய் முதலிய பெற்றோர்களுக்கு நேரில் காண்பது போன்று அமைந்தன. சொன்னவளும், கேட்டவர்களும் அளவற்ற மகிழ்ச்சி கொண்டனர். தம் மக்களின் இன்பம் மிக்க இல்லற வாழ்க்கையின் மேன்மையினை அறியுங்கால் தோன்றும் இன்பத்திற்கு ஓர் எல்லையில்லை. அத்தலைவனும், தலைவியும், பெற்றோரும், உற்றோரும் பெருமகிழ்ச்சி கொள்ளும் வகையில் இனிது வாழ்ந்தனர் என உணர்கின்றோம். இப்பாடல்கள் குடும்பப் பாசப் பிணைப்பினை நமக்கு உணர்த்துகின்றன.

**வாழ்வியல் கூறுகளில் நம்பிக்கைகள்**

சங்ககால மக்கள் தங்கள் வாழ்க்கையில் சில நம்பிக்கைகளைப் பின்பற்றி வாழ்வியலை நடத்தினர் என்பதற்குச் சங்க அக இலக்கியங்களில் பல பாடல்கள் சான்று பகர்கின்றன. குடிமக்கள் காக்கைக்குக் குருதி கலந்து சிவந்த சோற்றை

பலியுணவாகக் கொடுத்தனர்.

*"மாசில் மரத்த பலியுண் காக்கை"*[129]

என்பதை இப்பாடல் மூலம் அறிய முடிகிறது. உடன் போக்காகப் போன தன் மகளை மருகனோடு வரக் கரைந்தால் ஊன் கலந்து ஆக்கிய பலியுணவை சுற்றத்துடன் சேர்ந்துண்ண பொற்கலத்தில் தருவதாக நற்றாய் காக்கையிடம் கூறுகிறாள்.

*"மறுவி றூவிச் சிறுகருங் காக்கை*

.... .... .... ....

*அஞ்சி லோதியை வரக்கரைந் தீமே"*[130]

தலைவன் பிரிந்த நிலையில் வருந்தியிருந்த தலைவி பொருட்டு கரைந்து அவன் வரவுணர்த்தி ஆற்றுவித்த காக்கைக்கு உணவாக ஊர் முழுவதும் விளைந்த வெண்ணெல் வெண்சோற்றை, பல பசுவின் நெய்யோடு ஒருசேரக் கலந்து நாள்தோறும் ஏழுகலத்தில் கொடுத்தாலும், அது காலத்தால் செய்த உதவிக்குத் தகுந்த கைமாறு ஆகாது. சிறிய அளவாய்ப் போய்விடும் என்று தோழி கூறுகிறாள் என்பதை,

*"முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெஞ்சோறு*
*ஏழுகலத்து ஏந்தினும் சிறிது - என் தோழி*
*பெருந்தோள் நெகிழ்த்த செல்லற்கு*
*விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே"*[131]

இக்குறுந்தொகைப் பாடல்வழி அறியலாம். "விருந்தினரை உணவூட்டும் பொருட்டு முதற்கண் மகளிர் தாம் சமைத்த சோற்றைக் காக்கைக்கு வைத்தனர்" [132] பெற்ற உணவை மறைத்து வைத்துத்தானே உண்ணாமல் பிற காக்கைகளையும் கரைந்து வரைவழைத்து சேர்ந்துண்பது காக்கையின் இயல்பு. அத்தகைய காக்கை தம் வீட்டிலும் கரைந்தால் தம்மிடமும் விருந்தினர் வருவர் எனச் சங்ககால மக்கள் எண்ணியிருந்தனர்.

இந்த நம்பிக்கையின் அடிப்படையில் வந்த விருந்தினர்க்கு உணவளிக்குமுன், வரக் கரைந்த காக்கைக்கு உணவூட்டி அன்பு செய்தனர். இவ்வாறு பறவைகளுக்கு உணவு தந்து பரிவு காட்டினர். 'பிள்ளை, குழவி, மகவு ஆகிய சொல்லாட்சிகளை' [133] மனிதருக்கும், விலங்குகளுக்கும் ஒப்பப் பயன்படுத்துவதை நோக்கப் பிற உயிர்களிடம் பரிவு காட்டிய அவர்கள் மனநிலை அஃறிணை உயிர்களிடத்தும் நேயம்

கொண்டு வாழ்ந்தனர் பண்டைத் தமிழர்.

இரு மன்னரின் பகை காரணமாகப் புன்னை துன்பப்பட்டு ஒழிந்தாற்போலத் தான் ஒருத்தி வருந்திச் செத்தால்தான், தலைவன் தலைவி இருவரின் இகலும் இல்லாமற் போய்விடும் என்று தோழி தன்னை நோகின்றாள்.

*"இருபெரு வேந்தர் பொருகளத் தொழித்த*
*புன்னை விழுமம் போல*
*என்னொடு கழியும்இவ் இருவரது இகலே"*[134]

பிறிதின் நோய் தன்னோய் போல் போற்றும் நெஞ்சங்களில் ஒரு புன்னையின் துன்பம் இத்தனை எண்ணங்களை எழுப்பியிருக்கிறது.

தலைவன் ஒருவன் பொருள் தேடும் நோக்கத்துடன் பிரிந்து சென்ற பின்னர் இருவருடைய நிலையும் துன்பமயமாக இருந்தது. அவன் அவளை நினைத்துக் கலங்கினான். தலைவி எவ்வளவு துன்பத்தில் இருக்கிறாளோ என்று எண்ணி, நாம் பிரிந்து வந்த நாளிலிருந்து நாட்களை சுவரில் குறித்து அதனை நோக்கிக் கலங்குவாள் என்றும், படுக்கையில் கிடந்து உறக்கமின்றி உழல்வாள் என்றும் வீட்டில் பல்லி சொல்லுங்கால் அதனைக் கேட்டுத் தீமை கூறாமல் நன்மையே கூறவேண்டும் என்று ஏங்கி நடுங்குவாள். பொலிவற்ற மாலைக் காலத்தைக் காணும்போதெல்லாம் கண்டு கலங்குவாளோ என்றெல்லாம் பலவாறாக எண்ணி அவன் ஏங்கினான்.

வீட்டில் பிரிந்துறையும் தலைவியின் நிலையும் அதே நிலைதான். கணவன் பிரிந்து சென்றானே என்ற ஏக்கம் ஒரு பக்கமும், மாலைப்பொழுதைக் காணும்போது எழும் துயரம் ஒரு பக்கமும், பல்லியின் சொல் முதலிய பலவும் சேர்ந்து அவளுடைய பிரிவுத் துயரத்தினை மிகுதிப்படுத்தி வந்தது. இத்துயர நிலை சில நாட்கள் கழிந்தது.

தலைவன் பொருளை ஈட்டி முடித்துத் தன்னூர்க்கு மீண்டு விட்டான். அப்பொழுது அவன், 'தான் பொருளீட்டி முடிந்ததையும், இனிய முறையில் மீண்டுவரும் இன்பப் பயணத்தையும் அவளுக்குப் பல்லி அறிவிக்குமோ என்றும், அவளுடைய பிரிவுத் துன்பத்தைப் போக்கும் மருந்தாக அப்பல்லி அறிவிக்குமோ என்றெல்லாம் கூறிய வண்ணம் வந்தான்.

*"வேற்று நாட்டு உறையுள்... செவி முதலானே"*[135]

இவ்வாறாகப் பொருள் தேடிப் பெரும் இன்பத்துடன் வீட்டையடைந்தான்.

தலைவியும் பெருமகிழ்ச்சியும், இன்பமும் பொங்கி வழியும் வகையில் வரவேற்றுப் பொலிந்தாள். இருவரும் இணைந்த இன்பத்தில் திளைத்தனர். இல்லற வாழ்க்கையில் பல ஆண்டுகளைக் கழித்துவிட்டனர். அத்தலைவனும், தலைவியும் இல்வாழ்க்கையில் ஈடுபட்டுப் பல ஆண்டுகள் கழித்து அவையகத்தில் முன்னிற்கும் அறிவு, ஆண்மைமிக்க சான்றோனாகத் திகழும் மக்கட் செல்வத்தை ஈன்றெடுத்தலே அவர்களுடைய கடமையாகும். அறிய வேண்டியவற்றை அறிந்து ஒழுகும் மக்களை ஈன்றெடுத்துத் தம் கடமையை முடிப்பார்களேயானால் அவர்களுடைய இல்வாழ்க்கை முற்றுப் பெற்றதாகிவிடும்.

சங்க காலத்தில் உயிர் இரக்கத்தின் அடிப்படையில் பிற உயிரினங்களின் அன்புப் பிணைப்பைக் காட்டித், தம் காதல் வாழ்விற்கு உறுதியூட்டினர் பழந்தமிழர். தாங்கள் பெரிதாக மதித்த காதலின்பத்தைப் பிற உயிர்களிடம் கண்டு வியந்து அவற்றின் இன்பத்திற்கு இடையூறு வராத நிலையில் மட்டுமே பிற உயிர்களுக்குத் தீங்கு செய்யாப் பண்பினை அனைவரும் பரவலாகப் பின்பற்றினர் என்பதை அறியலாம்.

## வாழ்வியலில் கயமைப் பண்புடையவர்கள்

“மனிதன் இயல்பாக - இயற்கையில் நல்லவனாகத்தான் பிறக்கிறான். நல்லவனாகவே வளரும் மனிதன் வாழ்க்கையின் நிலைகளில் வஞ்சனைகளையும் வழித்தொல்லைகளையும் கண்டு தானும் மாறிவிடுகிறான். சிலர், பொல்லாத்தனங்களால் புகட்டி வளர்க்கப்பட்டு வளர்ந்து - பின்னர் வருந்தித் திருந்துகின்றனர். பிறந்த நிலைக்குப் பெரும்பாலான மனிதர்கள் பெரும்பாலான வகைகளில் தங்கள் இறுதிக்காலங்களில் திரும்புகிறார்கள்.

இவற்றுக்கிடையே தனிவாழ்வில், தன் வாழ்வில், பொது வாழ்வில், பொறுப்பற்றவர்களின் கரங்களிலும் பொல்லாதவர்களின் கரங்களிலும் பொது நலம் சிக்குண்டு சிதறுண்டு பொலிவிழப்பதைக் காண்கிறான். தன்னலமின்றித் தன்னாலான - தக்கதைச் செய்தலே மனிதப் பண்பாக மதிக்கப்படுகிறது. அது மறக்கப்படுகிறபோது மனித உலகம் மயக்கமடைகிறது; மனித நேயம் மாசுபடுகிறது’.[136]

பாலைக் கலிப் பாடல்களிலே பல சிறந்த நீதிகளைக் காணலாம். அரசியல் தர்மம், சமூக தர்மம், மக்கட் பண்பு இவைகளை விளக்கும் பல உண்மைகளைக் காணலாம். வெறுக்கத்தக்க குணம் படைத்த மக்களில் பல வகையினர் உண்டு.

வெறுக்கத்தக்க குணம் படைத்தவர்கள் நட்புக்குத் தகுதியற்றவர்கள். சில மனிதர்கள் செய்கை மிகவும் வெறுக்கத்தக்கது. அவர்களில் ஒருவர் தம் பக்கத்தில் இருக்கும்போது அவருடைய குறைகளை எடுத்துச் சொல்ல மாட்டார்கள். அவர்களைப் போற்றி உபசரித்துப் புகழ்ந்து கொண்டாடுவார்கள். உங்களைப்போல உத்தமர்கள் உலகில் ஒருவருமே இல்லை என்று எதிரிலேயே புகழ்வார்கள். அவர்கள் அவ்விடத்தை விட்டுப் போனவுடன் அவர்களைப் பற்றிப் பிறரிடம் குறை கூறுவார்கள். அவர்களிடம் இல்லாத குற்றங்களைக்கூட இருப்பதாகச் சொல்லி வசைபாடுவார்கள்.) இது சிலருடைய இயற்கை குணமாக இருக்கும். இத்தகைய பண்புடையவர்கள் மிகவும் அற்பமானவர்கள். விரும்பத்தகாதவர்கள். நட்புக்குத் தகுதியற்றவர்கள். இவ்வாறு அற்பர்களின் இயல்பை விளக்கமாகக் கூறியுள்ளார்.

*''சிறப்புச் செய்து உழையராப் புகழ்பு ஏத்தி மற்றவர்*
*புறக்கொடையே பழிதூற்றும் புல்லியார்''*[137]

இவ்வரிகள் அற்பர்கள் யார் என்பதை விளக்கின. ஒருவரை எதிரில் புகழ்ந்துவிட்டு அவர் இல்லாதபோது இகழ்வோரே அற்பர் என்று இவ்வரிகளால் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம்.

*''செல்வத்துள் சேர்ந்து அவர்வளன் உண்டு மற்றவர்*
*ஒல்கத்து நல்கிலா உணர்விலார்''*[138]

தனக்கு உதவி செய்தவர் வறுமையால் வாடும்போது அவர்க்கு உதவி செய்யாதவர் அறிவற்றவர் என்று இவ்வாறு தெளிவாக எடுத்துக் கூறினார் பாலை பாடிய பெருங்கடுங்கோ.

*''பொருந்திய கேண்மையின் மறைஉணர்ந்து அம்மறை*
*பிரிந்தக்கால் பிறர்க்கு உரைக்கும் பீடிலார்''*[139]

என்ற அடிகளால் நண்பர்களின் இரகசியத்தைப் பிறரிடம் வெளியிடுவோர் பெருமையற்றவர்கள். மனிதத்தன்மை இல்லாதவர்கள் என்பதை இவ்வாறு தெளிவாகக் கூறினார்.

புறம்பேசுவோர் அற்பர்கள். ஒருவரிடம் செல்வம் உள்ளபோது அவரைச் சுரண்டி சாப்பிட்டுவிட்டு அவர் செல்வமற்று வருந்தும் போது உதவாதவர்கள் அறிவற்றவர்கள். நண்பர்களின் ரகசியங்கைளப் பிறரிடம் சொல்லத் தூற்றுவோர் பெருமையற்றவர்கள்

என்று இம்மூவரைப் பற்றி பெருங்கடுங்கோ விளக்கியுரைத்தார். மனிதர்கள் அற்பத்தன்மை இல்லாமல், அறிவற்ற தன்மையில்லாமல் பெருந்தன்மையுடன் வாழவேண்டும் என்பதற்காகவே அகத்திணைப் பாடலில் இப்புறத்திணையாகிய அறக் கருத்துகளை வாழ்வியலில் பின்பற்றுமாறு கூறப்பட்டது. இவ்வாறு கூறுவதே தமிழர்களின் அருளாகிய மனிதநேயப் பண்பாகும்.

இதுகாறும் கூறியவற்றால் சங்க கால மக்களின் வாழ்வியல் கூறுகளில் பின்பற்றிய மனிதநேயக் கருத்துக்களை அறியமுடிகிறது. இதனால் மனிதர்கள் மனிதர்க்குக் காட்டும் நேயம் புலனாகின்றது.

**விலங்குகளின் அன்பு வாழ்க்கை**

விலங்குகள் முதல் மனிதர்கள் வரை காதல், வீரம், தியாகம் போன்ற மரபுகள் மாறுவதில்லை. சங்க காலத்தில் புலவர், பாணர், கூத்தர் ஆகிய பரிசில் மக்களுக்கு யானையைப் பரிசிலாக அளித்தனர். போருக்கு யானையைப் பயன்படுத்தினர். காடுகள் மிகுதியாக இருந்தமையின் யானைக் கூட்டமும் பல்கியிருந்தது. யானையின் குடும்ப அன்பை எடுத்துக் காட்டி மக்கள் குடும்பத்திற்கு அன்பாகிய மனித நேயத்தை உணர்ந்துள்ளனர் பண்டைத் தமிழர்.

களிறு வன்மைமிக்க புலியை அதன் குகையிலே சென்று தாக்கிற்று. பின் தன் குருதி தோய்ந்த செந்நிறக் கோட்டினை மலையினின்று ஒழுகும் அருவியில் கழுவி வெளியதாக்கிற்று. ஆண் யானை தன் மடப்பிடியின் தண்ணீர் பெறாப் பெருந்துயரைத் தாங்க இயலவில்லை. அத்துயரைத் தணிக்க யாமரத்தைக் கோட்டாற் குத்தி, வெண்பட்டையைக் கொண்டு வந்தது. பின் அது தன் வறுங்கையைச் சுவைத்து அண்ணாந்து நோக்கிக் கவன்ற நெஞ்சமொடு பிளிறியது.

தன் பிடியொடு மட்டுமின்றி கன்றுடனும் வாழ்ந்த ஒரு களிறு, நீரற்ற பாலைப் பகுதியில் நீர் நாடி அலைந்தது. இறுதியில் ஓரிடத்தே கலங்கற் சின்னீர் இருந்த கயத்தைக் கண்டது. உடன் சென்ற யானைக் கன்று அதனைக் கண்டதும், வேட்கை மிகுதியால் விரைந்து சென்று நீரின் அருமையறியாது, பெற்றோர்க்கு வேண்டும் என்றும் எண்ணாது, அக்கலங்கல் சின்னீரைக் குடித்து உழக்கி மேலும் கலக்கி விட்டது. அதனையும் தன்முன் பருக நினையாமல் தன் காதற் பிடியினைப் பருக வைத்துப் பின்னரே களிறு பருகிற்று என்று ஒரு யானைக் குடும்பத்தின் அன்பினைக் கலித்தொகை சித்தரித்துக் காட்டுகிறது.

*"அடிதாங்கும் அளவு இன்றி அழல்அன்ன வெம்மையால்*
*கடியவே - கனங்குழாஅய் - காடு என்றார்; அக்காட்டுள்*
*துடியடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்*
*பிடிஊட்டி, பின்உண்ணும்ம், களிறு எனவும் உரைத்தனரே"*[140]

இதேபாடலில் புறவு ஒன்று தன் மடப்பெடையின் வருத்தத்தை மென்சிறகால் ஆற்றியது என்றும், நிழல் இல்லாமல் வருந்திய மடப்பிணைக்குக் கலைமான் தன் நிழலைக் கொடுத்து உதவியது என்றும் கூறுவதிலிருந்து பறவைகள், விலங்குகளின் அன்பாகிய நேயத்தை உணர முடிகிறது.

மக்கள் செயலைக் குரங்கின் மீதேற்றி அது செய்ததாகப் புனைந்துரைத்தலையும் சில பாடல்களில் காணலாம். கோளரி முதலிய கொடிய விலங்குகள் திரியும் வெற்பில் வேங்கை மரத்தின்கீழ் ஓர் ஆமா தன் கன்றோடு தங்கியிருந்தது. அது துஞ்சும் சமயம் பார்த்து ஒரு மந்தி தன் சுற்றத்தை ஆரவாரம் செய்யாமல் இருக்குமாறு கையமர்த்தியது. பின்னர் அதனை நெருங்கி, பால்சுரந்த மடியை பற்றியீர்த்துத் தீம்பால் கறந்து தன் குட்டியின் கையை நிறைத்தது. இதனை,

*"தடங்கோட்டு ஆமான் ... கைந்நிறை பிழியும்"*[141]

என்ற நற்றிணைப் பாடல் விளக்குகிறது. ஒரு கடுவன் மரம்விட்டு மரம் பாயும்போது தவறி வீழ்ந்து மாய்ந்தது. அதன் துணையாய மந்திக்கு, கைம்மைத் துன்பத்தைத் தாங்க இயலவில்லை. தன் சிறு குட்டிகளைப் புரக்கவேண்டும் என்றுகூட உயிர் வாழ எண்ணவில்லை. அவற்றைத் தன் சுற்றத்துடன் ஒப்படைத்துவிட்டு நெடுங்குன்றின் மேலேறிக் கீழே குதித்து தன் உயிரை மாய்த்துக் கொண்டது என்பதை,

*"கருங்கண் தாக்கலை பெரும்பிறிது உற்றென*
*கைம்மை உய்யாக் காமர் மந்தி*
*கல்லா வன்பறழ் கிளைமுதல் சேர்த்தி*
*ஓங்குவரை அடுக்கத்துப் பாய்ந்து உயிர் செகுக்கும்"*[142]

இவ்வாறு தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன் திரும்பி வருகின்றபோது வரும் வழியில், இத்தகைய விலங்குகள், பறவைகள் முதலான அஃறிணை உயிர்களின் அன்பான காட்சிகளைக் கண்டு விரைவில் தலைவியைக் காணவேண்டும் என்ற

பெருவேட்கையும், தலைவியைப் பிரிந்து சென்ற வருத்தத்தை உணர்ந்து, நேயத்தோடு தலைவியிடம் வந்து சேர்ந்து இன்ப வாழ்க்கையை நுகர்ந்தனர். இதிலிருந்து சங்ககால மக்கள் விலங்கினங்கள் மூலம் மனித நேயத்தை உணர்ந்தனர் என்பது தெரிகிறது.

**உவமைகள் மூலம் அறங்கூறுகளை உணர்த்துதல்**

சங்க அகப் பாடல்களில் எட்டுத் தொகை நூல்களோடு ஒப்பிட பத்துப்பாட்டில் வரும் அறவுவமைகள் அருகியே உள்ளன. பத்துப்பாட்டில் குறிஞ்சிப் பாட்டு, பட்டினப்பாலை, பெரும்பாணாற்றுப் படை, பொருநராற்றுப் படை ஆகிய நான்கு நூல்களில் மட்டுமே அறவுவமைகள் இடம் பெற்றுள்ளன. கலித்தொகையில் அறவுவமைகள் மிகுதியாக இடம் பெற்றுள்ளன. பயின்று பழகித் தேர்ந்த தெளிந்து அறிந்த உண்மைகளே சங்கப் பாடல்களில் உவமையாகக் கையாளப்பட்டுள்ளன.

தோழி தலைவனை நோக்கி, களவுக் காலத்து இன்பம் நல்கிய தலைவியைக் கற்புக் காலத்தும் மறவாது வாழ்க என்று வாழ்த்துக் கூறுமிடத்து, தாழ்வுற்றபோது தனக்கு ஒருவர் செய்த உதவியினை அரசு கட்டில் ஏறிய பின்னர் மறந்துவிடும் மன்னனைப்போல் மறக்காதே எனக் கூறுகின்றாள்.

> *"கெட்ட இடத்து உவந்த உதவி கட்டில்*
> *வீறுபெற்று மறந்த மன்னன்போல*
> *நன்றிமறந்து அமையாய் ஆயின்"*[143]

என்ற இவ்வரிகளின் மூலம், செய்ந்நன்றி மறவாமை என்னும் பண்பு இவ்வுவமைமூலம் விளக்கப்படுகின்றது. மற்றொரு பாடலில் மாலை மயக்கத்தை வர்ணிக்கும்போது கூறப்படும் உவமை அறவாழ்வின் இன்றியமையாமையை எடுத்தியம்புவதாய் உள்ளது. கல்லாதும், அறநெறியைப் பின்பற்றாதும், பெற்ற வாழ்வின் முதிர்ச்சி இருளும், பயனின்மையும் கொண்டதுபோல, தனிமையும், மயக்கமும் தருகின்ற மாலைப்போது என்பதனை,

> *"கல்லாது முதிர்ந்தவன்கண் இல்லா நெஞ்சம்போல்*
> *புல்இருள் பரத்தரூஉம் - புலம்புகொள் மருள்மாலை"*[144]

என அழகுபட உவமிக்கப்பட்டுள்ளது. வேனில் வெப்பத்தால் மரங்கள் தீப்பற்றி எரிந்தன என்ற செய்தியைக் கூறுமிடத்து பொய்சாட்சி சொன்னவன் தீண்டிய பச்சை

மரமும் கருகி விடுவதுபோல என்ற உவமை,

*''கரிபொய்த்தான் கீழிருந்த மரம்போலக் கவின்வாடி*
*எரிபொத்தி''*[145]

அறநெஞ்சத்தின் அழகை வெளிப்படுத்துகின்றது. பாலைநிலக் காட்சியைக் கண்டதும், பெருங்கடுங்கோவுக்கு மனத்தில் உருவாகிய எண்ணங்களை உவமைகளாக்கிப் பாலைத்திணைப் பாடல்களைப் புலவர் வளப்படுத்துகிறார்.

''கனல் கனன்றெழுந்து தன் வெம்மைக் கதிர்களை வீசிப் பாலை நிலத்தைக் கொடுமைப்படுத்துகிறது. இதற்கு நடுநிலைமை மாறி அருளில்லா அமைச்சன் சொற்கேட்டு, கொடுஞ்செயல் புரியும் மன்னனின் கொடுங்கோலாட்சியை உவமை கூறுவர். ஆற்றங்கரை மரம் செழித்து வளர்தற்குக் கொடை செய்வதில் குறை காட்டாமல் அறவழி ஒழுகும் பண்புடையான் செல்வம் பெருகுதலையும், கிளைதொறும் பூத்த மலர்களில் வண்டுகள் ஆர்ப்பரித்துத் தாதுண்பதற்கும், அருந்தவம் செய்து முடித்தோர் குறைவற இன்பம் துய்ப்பதையும், மரங்களில் மலர்கள் நிறைந்து காண்பதற்கு மடியில்லானுக்கு செல்வம் பெருகுதலையும், நெய்தற்கழியில் மலர்கள் குவிந்திருப்பதற்குப் பொருள் இல்லாதவன் நடத்தும் இல்லறத்தையும் உவமைகள் கூறியிருப்பது''[146] நாம் கண்டு சுவைத்தற்குரியதாகும்.

இவ்வாறு உவமைகள் மூலம் அறக்கருத்துகளை உணர்த்துவதன் வழி, சங்க கால மக்கள் பின்பற்றி வந்த மனிதநேயத்தைத் தெரிவிக்கின்றன. சங்கப் புலவர்கள் இயற்கையின் மூலம் அறத்தை உணர்த்தி சங்க கால மக்களின் மனிதநேயப் பண்பாட்டை உணர்த்தியுள்ளனர்.

### உள்ளுறைமூலம் அறக்கூறுகளை உணர்த்துதல்

காதல் பற்றிப் பேசும் அகப்பாடல்களில் ஆங்காங்கே உள்ளுறைப் பொருள் பொதிந்த கருத்துகள் ஒளிறும் மணிகளாகக் காணப்படுகின்றன. தவறு செய்கின்றவர்களைப் பண்பாக எடுத்துச் சொல்லித் திருத்தும் அறவுணர்வு இவ்வுள்ளுறையில் அமைந்திருத்தலைக் காணலாம். பரத்தையிற் பிரிந்த தலைவனை நோக்கித் தலைவி கூறுவதாக அகநானூற்றில்,

*''சுடர்ப்பூந் தாமரை நீர்முதிர் பழனத்து*
*அம்தூம்பு வள்ளை ஆய்கொடி மயக்கி*

*வாளை மேய்ந்த வள்எயிற்று நீர்நாய்*
*முள்ளரைப் பிரம்பின் மூதரிற் செறியும்''*[147]

என்ற பகுதி வருகின்றது. சுடர்போல் விளங்கும் தாமரைகள் மலர்ந்துள்ள நீர்செறிந்த வயற்புறத்தில் புகுகின்றது ஒரு நீர்நாய். அது தன் போக்கில் போவதோடு அமையாது வள்ளைக் கொடிகளை உழக்கி மயக்குகிறது. அந்தக் கலக்கமும், மயக்கமும் தெளியுமுன்னர் வள்ளைக் கொடியிலே உள்ள வாளை மீன்களை மேய்கிறது. பின்னர் ஒன்றும் அறியாததுபோல தனக்குரிய பிரப்பம் புதரிலே தங்கிவிடுகிறது. அத்தகைய வளமான நாட்டுக்குத் தலைவனே என்பது இப்பாடலின் கருத்தாகும். இந்த இயற்கை ஓவியத்தினூடே, தலைவியின் இதயத்தில் குமுறி எழும் குற்றச்சாட்டும் அவனைத் திருத்த எண்ணும் அறவுணர்வும் உள்ளுறைந்து கிடக்கின்றன.

பரத்தையின் உறவினரை மயக்கி அவரிடை வாழும் பரத்தையின் நலம் கவர்ந்தான். ஒன்றும் அறியாதவன்போல் தன் பழைய இல்லம் நாடி ஒப்புக்குத் தங்குகின்ற தலைவனே என்பது உள்ளுறைந்து கிடக்கும் பொருளாகும். இவ்வாறு தலைவனின் புறத்து ஒழுக்க இயல்பினைச் சொல்லாமல் சொல்லித் தலைவனின் குற்றத்தை அவன் உள்ளம் உணரச் செய்கின்றாள் தலைவி. இப்பண்பட்ட தலைவியின் மறைபடு உவமையால் தலைமகன் தன் தவறு உணர்ந்து அறவுணர்வைப் பெறுவான். காதலர்களின் இடையே உள்ள ஆழ்ந்த உணர்ச்சிகளையும், எண்ணங்களையும் குறிப்பால் புலப்படுத்த பெரும்பாலும் வண்டும், எருமையும், மீனும் பயன்படுத்தப்பட்டுள்ளன. இவ்வுள்ளுறை உவமம் அமைந்த பகுதிகளிலும் அறக்கூறுகள் வெளிப்படுகின்றன.

## இறைச்சிமூலம் அறக்கூறுகளை வெளிப்படுத்துதல்

உள்ளுறை உவமத்தைவிட நுட்பமாகக் கூறப்படுவது இறைச்சிப்பொருள். தலைவன் ஒருவன் நீண்ட நாட்களாகக் களவு ஒழுக்கத்தில் ஒழுகி வருகின்றான். தலைவியின் வாழ்வு செப்பமுற அமையவேண்டும் என்ற அறநெஞ்சுடைய தோழி இதனைக் காண்கின்றாள். தான் அடிக்கடி குறியிடம் அமைத்துக் கொடுத்தால் தலைவன் தலைவியை மணம்புரிந்து கற்புநெறியில் ஒழுக விரும்ப மாட்டான் என்று தோழி எண்ணுகின்றாள். எனவே, தலைவனை வழியருமை கூறி இனி இரவுக்குறிக்கு வராதே எனக் கூறுகின்றாள்.

தலைவன் வரும் வழியில் காட்டாற்றின் வெள்ளத்தைக் கடந்து இரவில் வருவது

தீது என்றும், அவனுக்குத் தீங்கு நேரின் தலைவி உயிர் வாழ மாட்டாள் என்றும் கூறுகின்றாள். இரவில் வராதே எனக்கூறும் தோழி, பகலில் நீ வரினும் புணர்குவை எனக் கூறுகின்றாள்.

*"..... .... ... எம்படப்பைக்*
*கொடுந்தேன் இழைத்த கோடுயர் நெடுவரை*
*பழம்தூங்கு நளிப்பின் காந்தளம் பொதும்பில்*
*பகல்நீ வரினும் புணர்குவை - அகல்மலை*
*வாங்கமைக் கண்இடை கடுப்ப, யாய்*
*ஓம்பினள் எடுத்த தடமென் தோளே"*[148]

சிலர் இதனை மேற்போக்காகப் பார்த்தால் இரவில் வராதே, பகலில் வந்தால் தலைவியுடன் இணையலாம் என்று பொருள்படும். தோழி கூறிய சொற்களை ஆழ்ந்து சிந்திக்க வேண்டும். மலைப்பகுதியில் கொடுந்தேன் இழைத்த கோடுயர் நெடுவரை, பழந்தூங்கு நளிப்பு, காந்தளம் பொதும்பு முதலியவை உள்ளன. தலைவியோடு தலைவன் தணித்து இன்பம் அனுபவிக்க ஏற்ற இடம் என்றும் கூறலாம். ஆனால், கூறிய பொருளுக்குப் புறம்பாக ஒன்று இதில் இருக்கின்றது.

அதாவது மலையில் தேன் மிகுந்துள்ள காரணத்தால் அத்தேனை எடுக்கப் பலர் அங்கு வருவர். மரச் செறிவில் உள்ள கனிகளைப் பறிக்கவும் வருவர். புதரில் உள்ள காந்தள் மலர் கொய்வதற்கும் பலர் வருவர். எனவே, பகற்குறியும் உனக்குக் கிட்டாது. தலைவியுடன் தனித்து ஆரா இன்பம் நீ அனுபவிக்க வேண்டுமானால், மணம் புரிந்து இல்லறத்தில் இன்பம் பெறுக, எனத் தோழி தலைவனை முறையான வாழ்வுக்கு ஆற்றுப்படுத்துகின்றாள். இவ்வாறு கற்பு நெறிப்படுத்தும் தோழியின் அற உணர்வை இறைச்சிப் பொருளில் நாம் காண்கின்றோம்.

## அறவுரைகளும் அறிவுரைகளும்

சங்க கால இலக்கியங்களில் அறவுரைகளும், அறிவுரைகளும் அமைந்துள்ள பாடல்களைக் காணலாம். பெரியோர்கள் பிறர் தீமை செய்வதை நேரில் கண்டபோதும் அவர்கள்மீது சினம் கொள்ளாமல் தீமை செய்தவர்களே அக்குற்றத்தினை உணர்ந்து திருந்துவாராக என்று கூறிப் பொறுத்திருப்பர் என்பதை,

*"தீமை கண்டோர் திறத்தும் பெரியோர்*
*தாம் அறிந்து உணர்க என்ப மாதோ"*[149]

இப்பாடல் மூலம் அறியமுடிகிறது. வாழ்க்கைக்கு இன்றியமையாத அறிவுரைகள் பல

ஆங்காங்கே உவமைகளாகவும், பிறவாறும் கூறப்பட்டுள்ளன. மரங்கள் தலை சாய்ந்திருப்பதற்குச் சான்றோர்கள், தமது புகழைத் தம் முன்பு பிறர் கூறக்கேட்டபோது தலைகுனிதல் உவமையாக உள்ளது.

*''தம்புகழ் கேட்பார் போல் தலை சாய்த்து மரம்துஞ்ச''*[150]

இவ்வடியிலிருந்து பண்டைத் தமிழ் மக்கள் புகழையும் விரும்பாத உயர்ந்த பண்பினர் என்பது தெரிகிறது. ஒருவன் மற்றொருவனிடம் கடனாகப் பொருள் பெற்றுக் கொள்ளும்போது, அவனுடைய முகம் மலர்ச்சி அடைந்தும், அவ்வாறு கடனாகப் பெற்ற பொருளைத் திரும்பக் கொடுக்கும்போது, அவனுடைய முகம் மலர்ச்சியின்றி வேறுபட்டிருத்தல் முற்காலத்தும், இக்காலத்தும் இவ்வுலகத்தார் இயல்பு என்ற அரிய மனிதநேயப் பண்பினை அறிந்து கொள்ள முடிகின்றது.

*''உண்கடன் வழிமொழிந்து இரக்குங்கால் முகனும், தாம்*
*கொண்டது கொடுக்குங்கால் முகனும், வேறாகுதல்*
*பண்டும் இவ் உலகத்து இயற்கை''*[151]

என்ற இப்பாடல் வரிகள் கடன் கொடுத்தலிலும், கொள்ளுதலிலும் உள்ள இன்ப துன்பங்களை, வாழ்வில் கண்டு உணர்ந்து கூறும் ஓர் அறிய அறிவுரையாகும். இதிலிருந்து அக்காலத்தில் சிறந்த அறவுரை, அறிவுரை மூலம் உலகியலுக்குச் சிறந்த பல மனிதநேயப் பண்புகளை உணர்த்தினர் என்பது தெரிகிறது.

## அன்றும் இன்றும்

சங்க அக இலக்கியங்களின் வாயிலாக பெண்களின் பண்பாட்டை ஓரளவு உணர்ந்து கொள்ளலாம். ஒரு குடும்பம் வாழ்வதும், தாழ்வதும் பெண்ணால் தான் என்று அக்கால மக்கள் நம்பி வந்தனர். அந்த நம்பிக்கை இன்றும் உண்டு. பெண்கள், தாங்கள் புகுந்த வீட்டின் இயல்புக்கேற்ப நடந்து கொள்வார்கள். பிறந்த வீட்டைப் பற்றி எண்ண மாட்டார்கள். பிறந்த வீட்டின் உதவியை எதிர்பார்க்க மாட்டார்கள். உதவி கிடைத்தாலும் பெரும்பாலும் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். வறுமையால் எவ்வளவு வாடினாலும் அதை வெளியிலே காட்டிக் கொள்ள மாட்டார்கள். உள்ளதைக் கொண்டு மகிழ்ந்து வாழ்வார்கள்.

பழங்காலத்துப் பெண்கள் தங்கள் குலப்பெருமையைக் காப்பாற்றுவதிலே தலை சிறந்தவர்கள். வீரர்குடி - மறக்குடிப் பெண்களின் தன்மையைக் கூறும் பாடல்கள்

இவ்வுண்மையை எடுத்துக் காட்டுகின்றன. இதுவே பழந்தமிழ்ப் பெண்களின் சிறந்த மனிதநேயப் பண்பாகும்.

இதுகாறும் பண்டைக் காலத்தில் வாழ்ந்த முறையினையும் வாழ்வியலில் மேற்கொண்ட மனிதநேயத்தையும் விளங்கக் கண்டோம். அப்பெரு மக்களின் வாழ்வியல் முறைகள் நமக்கு இலக்கணமாகவும், முன் எடுத்துக் காட்டாகவும் அமைந்து விளங்குகின்றன. அவர்கள் வாழ்வில் அன்பும், அறிவும், அறமும் பின்னியதாகவே அமைந்துள்ளது. எனவேதான் அவர்கள் வாழ்க்கை முறையினை அவனி போற்றி மகிழ்கின்றது. அவ்வாழ்வியல் நெறியினை நாம் எல்லையாகக் கொண்டு, அவர்கள் வாழ்வினைத் தக்க எடுத்துக்காட்டாகக் கண்டு நாமும் வாழ்ந்து இன்பம் காணுதல் அனைவருடைய கடமையாகும். பெற்றோரும், உற்றோரும், அவனியோரும் அகமகிழ்ந்து போற்றும்படிப் பொலிவுடன் வாழ்ந்து அதனைக் கண்டு இன்புறுதல் அழகுடையதாகும்.

# குறிப்புகள்

## இயல் - இரண்டு

1. தொல். பொருள். அகத். நூ:54.
2. தொல். பொருள். அகத். நூ:34.
3. முல்லை. 45-49.
4. தொல். பொருள். அகத். நூ:54.
5. நெடுநல். 176.
6. குறிஞ்சி. 205-211.
7. அகம். 53:15-16.
8. பட்டின. 218-220.
9. குறள்: 1289.
10. கலி. 3:4.
11. குறு. 149:6.
12. அகம். 361:6.
13. நற். 166:10.
14. குறு. 57:3.
15. நற். 335:11.
16. குறு. 18:5.
17. குறு. 28.
18. குறு. 102.
19. குறள்: 45.
20. குறு. 3.
21. குறு. 40:4-5.
22. குறு. 42:4.
23. கலி. 6:10-11.
24. குறு. 200:3-4.
25. குறு. 373:1-2, 8.
26. குறு. 313.
27. குறு. 49:3-5.
28. குறள்: 1122.

29. நற். 1:6-7.
30. குறு. 167:4-6.
31. குறு. 8:4-6.
32. குறு. 135.
33. குறு. 148:3-6.
34. நற். 289:2-3.
35. குறு. 94.
36. குறு. 221.
37. குறு. 334:7-8.
38. முல்லை. 93-97.
39. குறு. 126:3-5.
40. குறு. 162:3-6.
41. குறு. 21:4-5.
42. நற். 11:6-9.
43. நற். 143:4-5.
44. அகம். 303.
45. குறு. 280:3-5.
46. குறு. 14:2-6.
47. நற். 3:8.
48. நற். 169:1-2.
49. நற். 186:8-10.
50. அகம். 134:7-14.
51. அகம். 4:8-12.
52. நற். 242:5-10.
53. நற். 21.
54. அகம். 34:4-18.
55. நற். 10:2-4.
56. கலி. 37.
57. நற். 229:1-6.
58. குறு. 196.
59. குறு. 143.

60. அகம். 219:5-8.

61. ஐங். 405, 408, 410.

63. குறு. 49.

64. நற். 315:9-12.

65. கலி. 84:10-17.

66. ஐங். 98.

67. குறு. 33.

68. குறு. 359.

69. நற். 142:9-11.

70. நற். 280:9-10.

71. நற். 120:10-12.

72. குறிஞ்சி 203-207.

73. குறு. 135:1-3.

74. நற். 1:1-2.

75. குறு. 300:7-8.

76. குறு. 242:4-6.

77. கலி. 133:9.

78. கலி. 18:10-11.

79. நற். 110:10-11.

80. ஐங். 203.

81. நற். 110:8-13.

82. குறு. 57.

83. குறு. 93.

84. குறு. 10:4-5.

85. ஐங். 2:2.

86. ஐங். 3:1-2.

87. நற். 355:6-7.

88. குறள்: 580.

89. ஐங். 111:3-5.

90. குறு. 137.

91. குறு. 283:1-2.

92. நற். 68:3.
93. அகம். 155:1-3.
94. அகம். 173:1-3.
95. நற். 214:1-3.
96. குறு. 118:3-5.
97. நற். 210:5-9.
98. குறு. 10:1.
99. குறு. 295:4-6.
100. குறு. 9.
101. அகம். 198:10-11.
102. நற். 12:4-6.
103. அகம். 383:12.
104. நற். 293:6-10.
105. ஐங். 381.
106. ஐங். 385.
107. ஐங். 371:4-5.
108. கலி. 102:9-12.
109. கலி. 103:63-64.
110. கலி. 106:40-42.
111. கலி. 106:37-39.
112. கலி. 106:43-45.
113. கலி. 105:67-69.
114. கலி. 52.
115. நற். 9.
116. ஐங். 400.
117. கலி. 108:30-33.
118. கலி. 109:23-26.
119. கலி. 116:8-12.
120. அகம். 256:15-21.
121. அகம். 66:1-6.
122. கலி. 80:14-15.

123. அகம். 66:10-18.

124. ஐங். 402:2-4.

125. ஐங். 403.

126. ஐங். 401.

127. ஐங். 408.

128. ஐங். 410.

129. நற். 281:1.

130. ஐங். 391.

131. குறு. 210:3-6.

132. நற். 258:4-11.

133. குறு. 46:5, 64:3, 29:6.

134. நற். 180:7-9.

135. அகம். 351.

136. மணற்கேணி - டாக்டர் நா. செயப்பிரகாசு, பக்.6.

137. கலி. 24:15-16.

138. கலி. 24:19-20.

139. கலி. 24:23-24.

140. கலி. 11:6-9.

141. நற். 57:1-7.

142. குறு. 69:1-4.

143. குறு. 225:3-5.

144. கலி. 130:6-7.

145. கலி. 34:10-11.

146. கலி. 10:1-7.

147. அகம். 6:16-19.

148. அகம். 18:13-18.

149. நற். 116:1-2.

150. கலி. 119:6.

151. கலி. 22:1-3.

# அரசியல் கூறுகளில் மனிதநேயம்

அரசியல் என்பது ஒரு தனி மனிதனால் மட்டும் நடத்தப்படுவதன்று. ஒருவனுக்காக நடத்தப்படுவதன்று. அரசியல் சிறப்பாக மனித இனத்திற்காகவும், பொதுவாக உலக உயிரினத்திற்காகவும் நடத்தப்படுவதாகும். அரசனும், அவன் கீழ் அமைந்துள்ள அமைச்சர், புரோகிதர், படைத்தலைவர், தூதுவர், சாரணர், கரணத்தியலவர், கரும விதிகள், கனகச் சுற்றம், கடைக்காப்பாளர், நகரமாந்தர், யானை வீரர், குதிரை வீரர் ஆகியோர் அரசியலை நடத்தும் சிறப்புடைய சிலராவர். இவர்கள் அனைவரும் எஞ்ஞான்றும் அரசியல் பணிகளையே இடையறாது செய்து நாட்டுக்கும், மக்கட்கும், மற்ற உயிர்கட்கும் நலம் பயப்போராவர். அரசியலை நடாத்தும் பலர் யாரெனில், அச்சிலர் உள்ளிட்ட நகரப் பெருமக்களும், சான்றோர்களும் ஆவர். பெருங்குடி மக்களும், ஆன்றோர்களும் அவ்வப்போது அரசனுக்குத் தக்க நெறிகளைக் காட்டி, அரசியல் அறம் வளரும் நன்னெறியில் நடைபெறச் செய்வர்.

அரசு

பல வளங்களும் நிறைந்த ஒரு நாட்டினை மாற்றார் கவராதபடி காப்பதற்கும், அந்நாட்டில் நீதி நிலவுவதற்கும், தேவைக்கு மேற்பட்ட உணவுப் பொருள்களையும், கைத்தொழில் பொருட்களையும் பிற நாடுகளுக்கு அனுப்புவதற்கும், பிற நாட்டுப் பொருட்களை தம் நாட்டிற்கு வருவித்தற்கும் பொறுப்புள்ள அமைப்பு ஒன்று வேண்டும். அந்த அமைப்பே அரசு என்பது. அந்த அமைப்பை இயக்குபவனே அரசன். அவனுக்கு உதவியாக இருந்து வேண்டும்போது தக்க அறிவுரைகளைக் கூறுபவரே அமைச்சர்.

நாட்டில் அரசன் தன் பணிகளை நிறைவேற்ற உதவியாக இருப்பவரே அரசாங்க அலுவலர். அரசர், அமைச்சர், அரசாங்க அலுவலர் ஆகிய முத்திறத்தவரும், நாட்டையும், குடி மக்களின் நலன்களையும் பாதுகாப்பதில் கண்ணும், கருத்துமாய் இருப்பாராயின், அவர்களால் இயக்கப்படும் அரசு செங்கோல் அரசு எனப்படும். இத்துறையிலிருந்து வழுவினால் அவ்வரசு கொடுங்கோல் அரசு என்று குடிமக்களால் வெறுக்கப்படும்.

அரசன் இல்லாத நாடு பயனில்லாத நாடாகும். உயிரை இழந்த உடம்பு

போலாகும். அரசன் அமைந்துவிட்டால் மட்டும் போதாது. அவ்வரசனுக்குப் பெருந்துணையாக இருந்து வெற்றியினையும், நன்மைகளையும் நல்கும் பிற அரசியல் வினைஞர்களும் இன்றியமையாது இருத்தல் வேண்டும். பண்டைத் தமிழ் மன்னர்கள் தம் அரசியல் பணிகள் சிறப்பாக நிகழ வேண்டி ஐம்பெருங்குழு, எண்பேராயம் என்ற இரண்டு ஆட்சிக் குழுவினரை அமைத்து அவர்களின் துணை கொண்டு அரசியலை மிகவும் சிறப்பாக நடத்திச் சென்றுள்ளனர்.

**சங்ககால அரசியல் பின்னணி**

தொல்காப்பியரால் 'வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு' என்றும், 'மூவேந்தர் நாடு' என்றும் அழைக்கப்பெற்ற தமிழகத்தை ஆட்சி செய்த முடியுடை வேந்தர் குடபுலம், குணபுலம், தென்புலம் பகுதிகளை ஆண்டு முறையே சேர, சோழ, பாண்டியர் எனப் பெயர் பெற்றனர். சேர நாட்டை ஆண்ட சேரவேந்தர் இரு கிளையினராகக் காணப்படுகின்றனர். ஒருவர் உதியன் சேரலாதன் வழி வந்தவர். மற்றொருவர் இரும்பொறை என்ற பெயரால் அழைக்கப்படுவோர். இவருள் முன்னவர் வஞ்சியைத் தலைநகராகக் கொண்ட உள்நாட்டுப் பகுதியினையும், பின்னவர் தொண்டியைத் தலைநகராகக் கொண்ட கடற்கரைப் பகுதியினையும் ஆண்டவராவர். சேரன் செங்குட்டுவன், சேரமான் கணைக்கால் இரும்பொறை, யானைக்கட்சேய் பெருஞ்சேரல் இரும்பொறை ஆகியோர் சேர அரசர்களில் குறிப்பிடத்தக்கவர்கள். கோதை, கோக்கோதை, வானவன் என்ற பெயர்களால் சேரர்கள் அழைக்கப்பெற்றனர்.

கிள்ளி, வளவன், சென்னி, செம்பியன் என்ற பெயர்களால் சோழர்கள் அழைக்கப்பெற்றனர். சோழ நாடு, காவிரிநாடு, காவிரி புரக்கும் நாடு, என்றெல்லாம் புகழப் பெற்றது. சோணாட்டு நகரங்களில் புகார், உறையூர், ஆவூர், குடந்தை முதலியன குறிப்பிடத்தக்கவை. சங்க நூல்களால் அறியப்பெற்ற சோழ அரசர்களுள் முதலில் வைத்துச் சிறப்பிக்கப் பெற்றவர்கள் இளஞ்சேட் சென்னி, கரிகால் பெருவளத்தான், நலங்கிள்ளி, நெடுங்கிள்ளி, குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன், கோப்பெருஞ் சோழன், குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமா வளவன் முதலானோர் சங்க காலத்தில் ஆட்சி செலுத்திய பிற சோழ வேந்தர்களாவர்.

செழியன், கூடற்கோமான், தென்னவன், மீனவன், வழுதி, மாறன் என்ற பெயர்களால் பாண்டிய மன்னர்கள் அழைக்கப் பெற்றனர். பாண்டி நாடு முத்துடைத்து என்று புகழப் பெற்றது. பாண்டியர்கள் தென்மதுரை,கபாடபுரம், இன்றைய மதுரை

ஆகியவற்றைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செலுத்தினர். நிலந்தரு திருவின் நெடியோன், அறிவுடை நம்பி, ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியன், ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள் ஆவர்.

## குறுநில மன்னர்கள்

முடியுடை மூவேந்தருக்கு உறுதுணையாக விளங்கியவர்கள் 'வேளிர்' என அழைக்கப்பெற்ற குறுநில மன்னர்களாவர். ஏழு குறுநில மன்னர்களான கடையெழு வள்ளல்களைத் தவிர, வடமேற்கு எல்லைப்புறத்தில் கோசர்கள் ஆட்சி செலுத்தினர். மொழி, கலை, பண்பாடு இவற்றால் ஒன்றுபட்டு வந்த தமிழகம் ஆட்சி முறையால் பிரிவுபட்டுப் போர்களை நிகழ்த்தியது.

## சங்ககால ஆட்சி முறை

சங்ககால முடியாட்சி ஒருமுகப்படுத்தப்பட்டதோ அல்லது பன்முகப்படுத்தப்பட்டதோ அன்று. பெரும் ஆட்சிப் பரப்பு, இளமை, தொடர்புச் சாதனங்கள் அரசனின் வல்லாட்சிக்கான தடைகளாகும். அரசன் சங்ககாலச் சமுதாயத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்ட தலைவன். கற்றவர்களால் போற்றப்பட்டவன். தானும் கற்றவன். புலவர்களை ஆதரித்தவன். தானும் புலமை பெற்று விளங்கியவன்.

*"மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்"*[1]

என்று சங்க காலத்தில் நம்பப்பட்டது. ஒருசில விரல்விட்டு எண்ணத்தக்க அரசர்கள் தவிரப் பெரும்பாலான அரசர்கள் மனிதாபிமான உணர்வுடன் குடிமக்கள் நலன் ஒன்று கருதியே செயல்பட்டனர். பார்ப்பனர்களுக்கும், பாணர்களுக்கும் கொடை வழங்கினர். அரசன் இல்லம் கோயில் எனப்பட்டது.

அக்காலத்தில் மக்களைக் காத்து முறையாக நீதி வழங்குகின்ற அரசன் இறைவனுக்குச் சமமாகக் கருதப்பட்டான். பொருள் வேண்டுவோர்க்கு அளித்தலும், பாதுகாப்பு அளித்தலும், பாகுபாடின்றி நீதி வழங்குதலும், நாட்டின் வழக்காறுகளை நிலை நிறுத்தும் அரசர்கள் கடமையாயிற்று. சங்ககால மன்னர்கள் கலைகளையும், கலைஞர்களையும் தம் கைவண்மையால் நன்கு புரந்தனர். வறியார்க்கும் பெரும்பொருள் நல்கி அவர்தம் துன்பம் துடைத்தனர். அரசனே அரசின் மையமாக விளங்கினான். சங்க காலத்தில் மூவேந்தர்களும் தங்கள் முத்திரையிடப்பெற்ற

பொன்னாலான காசுகளைப் பயன்படுத்தினர் என்றாலும் அக்காசுகள் இதுவரை ஏதும் கிடைக்கப்படவில்லை.

**நீதியும் அமைச்சும்**

பண்டைத் தமிழ் மன்னர்களின் பண்பு நலன்கள், அவர்களின் நீதிமுறை, போர்முறை, கலைப்பணிகள் ஆகியவற்றின் வாயிலாக வெளிப்பட்டன. ஆயினும் அவை எல்லாவற்றினும் மேலாகப் பிறரைப் பாராட்டுவதிலும், பட்டமளித்தலிலும் தங்கள் பண்பைச் சிறக்கச் செய்து பெருமை கொண்டார்கள். தங்களை நாடி வந்து பாடிய புலவர்கட்கும், கலைஞர்கட்கும் மன்னர்கள் பாராட்டிப் பரிசில் அளித்து மகிழ்ந்ததோடு நில்லாது அரசியலிலும், படையிலும் சேர்ந்து நாட்டின் நலனுக்காகச் சிறப்பாக உழைத்தவர்கட்கும் பாராட்டிப் பட்டங்களும், பரிசுகளும் அளித்து மகிழ்ந்தனர்.

அமைச்சர்கள் ஒழுங்கு தவறினால் நீதிபதிகளும் ஒழுங்கு தவறக்கூடும். நீதிபதிகள் நியாயமாக நடக்க நினைத்தாலும், அவர்கள் ஒழுங்கீனமாக நடக்கும்படி கட்டாயப்படுத்தப்படுவார்கள். ஆதலால் அமைச்சர்களின் உயர்வையும், ஒழுக்கத்தையும், மனிதத்தன்மையும் பொறுத்தே ஒரு நாட்டின் ஆட்சி அமைந்திருக்கும். அந்நாட்டின் நீதிமுறையும் நடைபெறும் என்ற உண்மையை,

> *"நன்றும் தீதுங் கண்டாய்ந் தடக்கி*
> *அன்பும் அறனும் ஒழியாது காத்துப்*
> *பழியொரீஇ யுயர்ந்து பாய்புகழ் நிறைந்த*
> *செம்மை சான்ற காவிதி மாக்களும்"*[2]

என்று மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது. இதிலிருந்து அமைச்சர்களின் ஒழுக்கத்தையும் திறமையையும், நேர்மையையும் பொறுத்தே ஒரு நாட்டின் நீதிமுறையும் அமைந்திருக்கும் என்ற செய்தியை நம்மால் அறிந்து கொள்ள முடிகிறது.

சங்க காலத்தில் மன்னர்கள் காவிதி, ஏனாதி என்னும் பட்டங்களை அளித்து சிறப்பித்திருக்க வேண்டும். அரசாங்கச் செயலாளருக்கு 'காவிதி' என்னும் பட்டத்தை அளித்துப் பாராட்டிய செய்தி மதுரைக் காஞ்சியில் குறிப்பிடப்பட்டுள்ளது. சங்க காலத்தில் அறங்கூறவையத்தில் காவிதி மாக்கள் நடுவராக இருந்த செய்தியையும் உரைக்கிறது. போரில் ஈடுபட்டுப் பெருமை கொண்ட மாவீரர்க்கு 'ஏனாதி' என்னும்

பட்டத்தை அளித்துப் பாராட்டிய செய்தி கலித்தொகையில் இடம் பெற்றுள்ளது. இப்பட்டம் போருக்குரிய பட்டமாகும். இவற்றினின்று அரசாங்கப் பணியாளர்க்கும், போர் வீரர்க்கும் கலைஞர், புலவர், பண்டைய மன்னர்கள் பட்டமும், பரிசிலும் அளித்துப் பாராட்டிப் போற்றும் மனிதநேயப் பண்புடையவர்களாக வாழ்ந்தார்கள் என்பதை,

> *''அச்சமும் அவலமும் ஆர்வமும் நீக்கிச்*
> *செற்றமும் உவகையும் செய்யாது காத்து*
> *ஞெமன்கோ லன்ன செம்மைத் தாகிச்*
> *சிறந்த கொள்கை அறங்கூ றவையமும்''*[3]

என்று மதுரைக்காஞ்சி பகர்கின்றது. இதிலிருந்து பிறரால் பாராட்ட வாழ்வதும், மற்றவர்களைப் பாராட்டி வாழ்வதும் பண்பு நலம் சான்ற சீரிய வாழ்க்கையாகும் என்பதை உணர்ந்திருந்தனர் என்ற உண்மையை அறிந்து கொள்கிறோம். இன்று நீதிமன்றங்கள் எனப்படுபவை பண்டு அறங்கூறவையம் எனப்பட்டன. நீதி வழங்குவதே இதன் தொழில் என்பதும் தெரிய வருகிறது.

## தமிழர் அரசியல்

''அரசன் அதிகமான பொருளை வரியாகக் குடிமக்களிடம் வாங்கலாகாது என்றும், அவ்விதம் வாங்கும் சிறுமையையுடைய அரசனுக்கு அரசபாரம் பளுவாகக் கனத்து அவனை நசித்துவிடும் என்றும், பகைவரை வென்று பொருளீட்டும் வன்மையுடைய அரசன் தன் குடிகளை வருத்தமாட்டான் என்றும், போர் வலிமை அரசர்க்கு மிகவும் இன்றியமையாதது என்றும், குடிகள் சிந்திய கண்ணீர் அரசனை அழிக்கும் படை என்றும், அறநெறிப்படி தன் பகுதிக்கேற்பட்ட இறைப்பொருளுக்கு அதிகமாக எப்பொருளையேனும் அரசன் இரந்து பெற்றாலும்கூட அதுவும் கொடுங்கோன்மையே''[4] என்றும் நம் முன்னோர்கள் கருதியிருந்தனர்.

''நிலம் பிறழினும் அரசனின் ஆணையாகிய சொல் பிறழலாகாது''[5] முறை செலுத்தும்போது பொருள்களை அளக்கும் துலாக்கோலின்கண் சமன்வாய் போல ஒரு பக்கம் கோடாது நடு நின்று செலுத்துதல் வேண்டும். அக்காலத்தில் குடிகள் நலத்தையே கருதும் முடியரசு நிலைபெற்று நாடெங்கும் நிலவி வந்தமையால் வேறுவிதமான குடியரசு, பொது உடைமை முதலிய அரசியல் வாழ்க்கையினை தமிழ் மக்கள் தெரிந்திருந்தார்கள். பொதுவுடைமை என்னும் அரசியல் இயக்கம்

தற்காலத்தில் தானே தலையெடுத்திருக்கிறது எனலாம். பொதுவுடைமைக் கொள்கைப்படி செல்வந்தர், ஏழை என்ற வேற்றுமையே நாட்டிலிருத்தல் கூடாது.

வறியவர்கள் தம் புத்தியின் கூர்மையை வெளிப்படுத்தி வீறுகொண்டு வேலை செய்வதில் ஈடுபடாமல் ஒத்துழைத்தல் இன்றிப் பொருளீட்டும் கோட்பாடற்று வீணே கழிவர். செல்வர்கள் ஈத்துவக்கும் இன்பம் எய்துதலின்றி அறம் வளர்த்தற்குரிய ஈகையைச் சிறப்பாக நடத்தாமல் உலக வாழ்க்கையே பயனின்றிக் கழியும் என்பதை,

*"பொலம்பூங் காவின் நன்னாட் டோரும்*
*செய்வினை மருங்கின் எய்தல் அல்லதை*
*உடையோர் ஈதலும் இல்லோர் இரத்தலும்*
*கடவ தன்மையிற் கையற வுடைத்தென*
*ஆண்டுச் செய் நுகர்ச்சி யீண்டுங் கூடலின்*
*நின்னாடு உள்ளுவர் பரிசிலர்*
*ஒன்னார் தேஎத்து நின்னுடைத் தெனவே"*[6]

இப்புறநானூற்றுப் பாடலில் ஆவூர் மூலங்கிழார், பொதுவுடைமைக்குப் பதில், துறக்க உலகத்தைக் குறித்துப் பேசுகிறார். இவ்வுலகில் ஒருவன் தான் செய்யும் புண்ணியத்தின் பயனாகத் துறக்கத்தை அடைந்து அங்கு இன்பம் துய்க்கிறான். ஆனால், அங்கு செல்வந்தர், ஏழை என்ற பாகுபாடு இல்லை. அதனால் அங்கு ஈகைக்கு வழியில்லை. மேல் உலகம் இல்லை எனினும் ஈதலே நன்று என்னும் கொள்கையுடைய தமிழ் மக்களுக்கு ஈகைக்கு இடமில்லாத அத்தேவலோகமும் சிறப்பாகத் தோன்றுவதில்லை.

ஒருவன் பாடுபட்டுப் பணத்தைத் தேடி மனையாளோடு இல்லறம் நடத்தி இவ்வுலகில் வாழ்வதெல்லாம் ஈதலின் பொருட்டேயாகும். அவ்வீகைக்கு எங்கு இடமில்லையோ, அவ்விடம் தமிழ் மக்களுக்கு விருப்பமில்லாத ஒன்று. ஆதலால் அவ்விதத் தேவலோக நுகர்ச்சியுடன் ஈகையும் சிறந்து விளங்கும் கிள்ளிவளவன் நாடே மிகச் சிறந்தது என்கிறார் புலவர்.

இதனால் பொதுவுடைமைக் கொள்கையை சங்ககால மக்கள் ஆராய்ந்து, அது பயனற்றது என்று கைவிடுத்தனர் என்பது ஒருவாறு தெரியவரும். இத்தகைய முடியரசைக் கொண்ட பண்டைத் தமிழ்நாடு செல்வமும், வளமும் படைத்து மிகவும் உன்னத நிலையை அடைந்திருந்தது. தமிழ் மக்களும் பலவித உரிமைகளையும்

பெற்று உவப்பெய்தி உள்ளம் குளிர்ந்தனர்.

இக்காலத்தில் மக்கள் நாடு செழிக்க மழை வேண்டி வானை நோக்கி வாடுகின்றனர். அக்காலத்தில் "மழைவளம் குன்றினும், வெள்ளிநிலை பிறழினும், அரசன் கோடாது செம்மையுற்று இருந்ததால் நாடு செழித்து இன்ப வாழ்க்கை எய்தினர். அதனால் குடிகள் அரசனது செங்கோலையே வாழ்த்திப் போற்றினர். விலங்குகள்கூட செங்கோலின் பயனைத் துய்த்து வாழ்ந்தன"[7] சான்றோர் நிறைந்து நாடு அமைதி பெற்றது. அதனால் தமிழ்நாடு இன்ப வாழ்வை அடைந்திருந்தது எனலாம்.

### அரசியல் கடமை

பசித்துன்பம் நாட்டில் தோன்றாதபடிக் காத்தல் அரசியலின் முதல் கடமையாகும். மிக்க பசியினால் உடலிற் பிணியும், உள்ளத்தில் பகைமை உணர்ச்சியும் தோன்றுதல் இயல்பு. பசியும், பிணியும், பகையும் நீங்கி, வசியும், வளனும் சுரக்க மக்கள் அனைவரும் ஒன்றுகூடி வாழ்வதற்கேற்ற வளமுடைமையே ஒரு நாட்டின் சிறப்பியல்பாகும். உலகிற்கு உணவினை வழங்கும் உழவர்கள், பொருட்களை உருவாக்கித் தரும் பலதரத் தொழிலாளர்கள், மக்கள் உதவியோடு உள்நாட்டிலும், வெளிநாட்டிலும் பொருட்களை விற்பனை செய்யும் வாணிகர்கள் ஆகியோர் இணைந்த வாழ்வு சங்ககாலத்தில் ஏற்றம் மிக்கதாக இருந்தது.

இத்தகைய மக்களையும், மன்னனையும் திருத்தமான வாழ்வினைப் பெற அறிவுறுத்தியவர்கள் சான்றோர்கள். இந்தக் கூட்டமைப்பு முறையினால் தமிழர் வாழ்வு நாகரிக முறையில் நலம் பெற்று வளர்வதாயிற்று. மக்கள் எல்லாரும் தங்களுடைய அறிவுக்கும், ஆற்றலுக்கும் ஏற்றவாறு தொழில் செய்து வாழ்வதற்குரிய முறையில் ஆட்சிமுறை நிகழ்தல் வேண்டும் என்பது தமிழரின் உட்கோளாகும்.

உலகினை ஆளும் வேந்தனுக்குத் தேவை இரண்டு. இதனை,

*"உண்பது நாழி உடுப்பவை இரண்டே*
*பிறவும் எல்லாம் ஓரொக் கும்மே*
*செல்வத்துப் பயனே ஈதல்*
*துய்ப்பேம் எனினே தப்புந பலவே'*[8]

என்ற இப்பாடல் மூலம் புலவர் அறிவுறுத்தியுள்ளார். அதனால் தமிழ் நாட்டில் வாழும்

வேந்தர் முதல், தொழிலாளர் ஈறாக எல்லாரும் தம் முயற்சியால் ஈட்டிய பொருளைக் கொண்டு கலை வளர்க்கும் பரிசிலர்க்கும், வறுமையால் வாடும் இரவலர்க்கும், இல்லை என்னாது ஈந்து மகிழ்தலையே வாழ்க்கையில் தாம் பெறும் பேரின்பமாகக் கருதினர்.

ஒரு தொழிலுமின்றிப் பிறரிடம் கையேந்தி பிச்சை ஏற்று உண்பதே ஒரு சிலருடைய தலை எழுத்தாகக் கருதும்படி நாட்டின் அரசு முறை அமையுமானால், அம்முறையற்ற செயலை வகுத்தவனாகிய அரசியல் தலைவன் அழிந்து ஒழிவானாக என்று பழித்துக் கூறுகின்ற அறிவாற்றல் அக்காலத் தமிழ்ப் புலவர்பால் நிலைபெற்றிருந்தது. தொழில் திறமே மக்களின் உயிர் ஆற்றலாகும். நாட்டிற்கு நலம் செய்துவரும் மக்களை அறிந்து பாராட்டுதல் அக்காலத்துத் தமிழ் மன்னர்களின் கடமையாய் அமைந்தது என்பதனைச் சங்கப் பாடல்கள் தெளிவுபடுத்தும்.

**அரசியல் பண்பாடு**

அரசர்க்கென்றே சில பண்பாட்டு உண்மைகள் புலவர்களால் அந்நாளில் வலியுறுத்திக் கூறப்பட்டுள்ளன. மக்கட்கு நெல்லும் உயிரன்று. நீரும் உயிரன்று. மன்னனே உயிர் என்பதும், அருளையும், அன்பையும் நீக்கி நீங்கா நரகம் செல்பவர்களைப் போல் இல்லாமல் சிறு குழந்தையைக் கவனமாக வளர்ப்பவர் போன்றும், இருத்தல் வேண்டும் என்பதும் புறம் கூறும் அரசியல் பண்பாடுகளாகும்.

*''நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே*
*மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்''*[9]

என்றும்,

*''அருளும் அன்பும் நீக்கி நீங்கா*
*நிரயம் கொள்பவரோ டொன்றாது காவல்*
*குழவி கொள்பவரின் ஓம்புமதி''*[10]

என்றும் புறநானூற்றுத் தொடர்கள் புலப்படுத்தும்.

## அரசர் மனிதநேயம்

**நடுநிலை பிறழா உள்ளம்**

மன்னவன் செங்கோலனாய் வாழ்வதுடன், நடுநிலை பிறழா உள்ளத்துடன் ஆட்சி

செலுத்துதல் வேண்டும். அறநெறியை முதலாகக் கொண்டு நடுநிலைமையினின்று தப்பாது ஆண்மை, அருள், வண்மையுடன் திகழ்தல் வேண்டும் என்னும் ஒப்புயர்வற்ற அறத்தினைப் புலவர், நன்மாறனைப் புகழுமுகத்தான்,

*''நான்குடன் மாண்ட தாயினும் மாண்ட*
*அறநெறி முதற்றே அரசின் கொற்றம்*
*அதனால் நமரெனக் கோல்கோ டாது*
*பிறர்எனக் குணங்கொல் லாது*
*ஞாயிற் றன்ன வெந்திற லாண்மையும்*
*திங்க ளன்ன தண்பெருஞ் சாயலும்*
*வானத் தன்ன வண்மையும் மூன்றும்*
*உடையயை யாகி யில்லோர் கையுற*
*நீநீடு வாழிய நெடுந்தகை''*[11]

என்று கூறியிருத்தலைக் காணலாம். இப்பாடல் தமிழரின் பண்பாட்டையும், தமிழ்ச் சான்றோர்களின் அறநெறிப் பண்பாட்டையும் தெளிவாக உணர்த்துகின்றது. கீழ்க்கடலாகிய எல்லையிடத்துக் கதிரவன் கதிர்களைச் சொரிவது போல, நீதி தவறாது அரசு செலுத்தினான் மன்னன் என்று,

*''குணகடல் வரைப்பின் முந்நீர் நாப்பண்*
*பகல்செய் மண்டிலம் பாரித் தாங்கு''*[12]

என்று பெரும்பாணாற்றுப் படை கூறும்.

இத்தகைய பண்பாடு நிறைந்த அரசர்கள் மாய்ந்து விட்டால் வல்லாங்கு வாழ்தும் என்னாது, வடியா நாவின் வல்லாங்கு பாடித் தீய செயலினைச் சிந்தையாலும் நினைக்காத புலவர் திருக்கூட்டம் கையற்றுக் கலங்கியது. மலரின்கண் மாறாத விருப்பம் உடைய இளையோரும், வளையோரும், பாணனும், பாடினியும் மற்றும் எவரும் ஆருயிரன்ன மன்னவன் மாய்ந்து போனால் பூத்த முல்லைப் பூவினையும் சூடாமல் வெறுத்து ஒதுக்குவர்.

*''இளையோர் சூடார் வளையோர் கொய்யார்*
*.... .... .... ....*
*பாணன் சூடான் பாடினி அணியாள்*

.... .... .... ....

*வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை*

*முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே'*[13]

இதுகாறும் புறவாழ்வில் பழந்தமிழகத்தின் அரசியல் பண்பாட்டின் மூலம் நீதிக்குத் தரப்பட்ட நிலையான இடமும், இல்லாரை இன்புறுத்தும் தன்மையும், நடுவுநிலை தவறாமையும், இன்பத்தை நாடும் மக்கள் மன்னனுக்குத் துன்பம் நேர்ந்தபோது, தாமும் அத்துன்பத்தையே சிறந்ததாகப் போற்றியமையும் நோக்கும்போது மனிதநேய உணர்வு பண்பாட்டு உயர்விற்கு அடித்தளமாக அமைந்திருப்பதைக் காண முடிகிறது.

### இறைமாட்சி

மழையை வேண்டி நிற்பார்க்குப் பெருமழையே பெய்தாற்போல, அறம் நிலவும் செங்கோல் ஆட்சியில் முறை வேண்டுநர்க்கு காட்சிக்கு எளியனாக்குதல் மகிழ்வினைத் தரும். உன்னுடைய வெண் கொற்றக் குடை ஞாயிற்றின் கொடுமை மறைத்துக் கொண்டதன்று. அது வருத்தமுற்ற குடிகளிடத்து அருள் செய்யும் அடையாளம் என்பதை,

*''கண்பொர விளங்குநின் விண்பொரு வியன்குடை*

*வெயின்மறைக் கொண்டன்றோ வன்றே வருந்திய*

*குடிமறைப் பதுவே கூர்வேல் வளவ'*[14]

என்னும் பாடலின் மூலம் அறியலாம். மேலும் இக்கருத்தை வலியுறுத்தும் வன்மையால், ''வயவேந்தே! உன்னைப் பழித்துரைப்பார் பணிந்து நடக்கவும், புகழ்ந்துரைப்பார் இன்பப் பொலிவு தோன்றவும் இன்று பார்த்தோம். இதைப் போல் நாளும் இன்மொழி பேசுவோனாகவும், காட்சிக்கு எளியனாகவும் விளங்குவாயாக''[15] என்று ஆவூர் மூலங்கிழார் கூறியதிலிருந்து, மன்னவன் காட்சிக்கு எளியவனாகவும், கடுஞ்சொல் கூறாதவனாகவும் விளங்குதல் வேண்டும் என்பதும், குடிமக்களை மன்னன் தனக்கு நிகராக மதித்த மனித நேய உணர்வும் புலப்படுகிறது.

### தமிழர் கண்ட அரசன்

சேரமான் பெருஞ்சோற்று உதியஞ் சேரலாதன், பூமியைப் போன்று ஆராய்ச்சி அறிவுடையவனாகவும், பரந்த ஆகாயத்தைப் போன்று ஆற்றல் உடையவனாகவும், காற்றினைப் போன்று ஆட்சித் திறமை உடையவனாகவும், தீயைப் போன்று

தன்னாட்டு மக்களுக்குத் துன்பமாகிய இருளைப் போக்கும் திருவிளக்காகவும், பகைவர்களின் பெருமையை அழிக்கும் அருமையுடையவனாகவும், நீரைப்போன்று அருள் உடையவனாகவும் இருந்தான் என்று புலவர் படம் பிடித்துக் காட்டுகிறார்.

*''மண்திணிந்த நிலனும்*
*நிலனேந்திய விசும்பும்*
*விசும்பு தைவரு வளியும்*
*வளித் தலைஇய தீயும்*
*தீமுரணிய நீரும் என்றாங்கு*
*ஐம்பெரும் பூதத்து இயற்கைபோலப்*
*போற்றார்ப் பொறுத்தலும் சூழ்ச்சியது அகலமும்*
*வலியும் தெறலும் அளியும் உடையோய்''*[16]

என்று அரசனுக்கு இருக்க வேண்டிய மனிதநேயப் பண்புகள் இவை என அடுக்கிக் கூறியுள்ளார். நரிவெரூஉத்தலையார், அரசன் எவ்வாறு நாட்டு மக்களைப் பேணிக் காக்க வேண்டும் எனச் சேரன் இரும்பொறைக்கு எடுத்தியம்பியுள்ளார்.

அக்கால அரசர் கல்வி அறிவு படைத்தவராக விளங்கினர். மூவேந்தரைப் பற்றிப் பலர் பாடிய பாடல்கள் சங்க இலக்கியங்களில் உள்ளன. பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் 'தன் ஆசிரியருக்கு ஓர் ஊறுபாடு உற்றவிடத்து அது தீர்த்தற்கு வந்து உதவியும், மிகுதியான பொருளையும், கொடுத்து வழிபட்டு நின்று குற்றமில்லாமல் கற்றல் அழகியது' என்று கல்வியின் மேம்பாட்டை விளக்குகின்றான்.

*''உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்*
*பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே''*[17]

பிறப்பினும் பார்க்க அறிவினால் வரும் பெருமையே சிறந்ததென்றும், அறிவுடையோர் கூற்றே அரசுமுறையை நெறிப்படுத்துவது என்றும் பின்வரும் புறப்பாடல் உணர்த்துகின்றது.

*''ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்*
*மூத்தோன் வருக என்னாது அவருள்*
*அறிவுடையோன் ஆறு அரசும் செல்லும்*[18]

## அருளே அரசியலுக்கு அடிப்படை

"அன்பையும் அருளையும் தாம் வாழ்விலிருந்து நீக்கியவருடன் சேராதிருப்பாயாக. பெற்ற தாய் குழந்தையைப் பாதுகாப்பது போல, நின்நாட்டை நீ காக்க வேண்டும்"[19] என்று அரசின் அருமையையும், அரசன் அருள் உடையவனாகவே விளங்க வேண்டும் என்றும் வலியுறுத்திக் கூறியுள்ளார். தமிழர் எவ்வளவு இரக்க சிந்தை படைத்தவர்களாய் இருந்தனர் என்பது தெரிகிறது.

வேந்தன் ஒன்றைச் செய்து பின் அதற்காக வருந்தாது முதலிலேயே செம்மையாக எதனையும் செய்பவன் இளஞ்சேட் சென்னி என்பதை,

*"செய்துஇரங் காவினைச் சேண்விளங் குபுகழ்"*[20]

ஊன்பொதி பசுங்குடையார் பாராட்டிக் கூறியுள்ளார். அக்கால மன்னன் தன்பால் மறந்தும், தவறு நேராதிருந்திடச் சான்றோர் துணை கொண்டு குறையில்லாத சீர்த்திக் கோலனாக விளங்கினான்.

*"மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்*
*இயற்கை அல்லன செயற்கையில் தோன்றினும்*
*காவலர்ப் பழிக்குமிக் கண்ணகன் ஞாலம்"*[21]

மழை இல்லையானாலும், அதனால் விளைச்சல் குறைந்தாலும் இவ்வாறு இயற்கை இல்லாத தீங்குகள் செயற்கையால் தோன்றினாலும், உலகம் அரசனையே பழிக்கும் என அரசர் குடிப்பிறத்தலின் அருந்துயரத்தையும், பெரும் பொறுப்பையும் வெள்ளைக் குடி நாகனார் என்னும் புலவர் அறிவுறுத்தியுள்ளார். மேற்கூறியவற்றால் தமிழர் போற்றிய அரசர் அருளையே அரசியலுக்கு அடிப்படையான மனித நேயப் பண்பாகப் போற்றியுள்ளமை விளங்குகிறது.

### அரசர் கடன்

மன்னனின் முறையான காவற் சிறப்பாலேயே முறையாக நிலைபெறுவதனால் அவனே உண்மையாக உலகுக்கு உயிராவான்.




*"அதனால், யானுயி ரென்ப தறிகை*
*வேன்மிகு தானை வேந்தற்குக் கடனே"*[22]

என்ற மோசிகீரனார் பாடிய பாடலில், வேலால் மிக்க படையுடைய வேந்தனுக்குத்

தானே, உலக நல்வாழ்வின் உயிர்ப்பாக விளங்க வேண்டுபவன் என உணர்ந்து அதற்கேற்ப மக்களைப் பேணி நடப்பதே கடமையாகும். பண்டைத் தமிழ் மக்கள் ஒவ்வொருவரும் அரசனைத் தத்தம் உயிரினும் மேலாகக் கருதினர் என்றும், ஏனையவற்றை அவனுக்கு அடுத்த நிலையிலேயே வைத்து மதித்தனர் என்றும், சிறந்த தன்மையைப் பெற்று உயர்ந்த நிலைமையில் ஒரு குறைவுமின்றி மகிழ்ச்சியுடன் வாழ்ந்து வந்தனர் என்றும் இப்பாடல் மூலம் அறிந்துகொள்ள முடிகிறது.

நாட்டின் அரசாட்சியை நடத்துபவன் அரசனாவான். அவனுடைய கடமைகளும், உரிமைகளும் பலதரப்பட்டவை. அவன் அறநெறி பிழையாது குடிமக்கள் நன்மை பேணி ஆட்சி செய்யக் கடமைப்பட்டவனாவான்.

*“கொடியோர்த் தெறுதலும் செவ்வியோர்க்கு அளித்தலும்*
*ஓடியா முறையின் மடிவிலை யாகி*
*நல்லதன் நலனும் தீயதன் தீமையும்*
*இல்லை என்போர்க்கு இன்னா கிலியர்’*[23]

தீயோரைத் தண்டித்தலும், நடுவுநிலைமையோர்க்கு அருள் புரிதலும், இடையறாத முறைமையினால், சோம்பல் இல்லாதவராகி, நல்வினையின் நன்மையும், தீவினையின் தீமையும் இல்லை என்று சொல்வோர்க்கு இனமாகாது ஒழிவாயாக என்று அரசனுடைய கடமைகளைக் கூறுவதாக அமைந்துள்ளது.

அரசன் தன் ஆதரவு தேடிவந்த புலவரைத் தன் அவைக்களத்து வரவேற்று, வேண்டிய சிறப்புகளை எல்லாம் செய்தான். தன்னுடன் இருக்கும்பொழுது அவர்களுக்கு எல்லா வசதிகளையும் அளித்தான். பிரியும் பொழுது அவர்களுக்குப் பல பரிசில்களை வழங்கினான். அரசன் அவையில் எந்நேரமும் புலவர்கள் புகுந்து, தங்களுக்குரிய இடம்போல செம்மாந்து நடப்பர்.

*“உடையோர் போல விடையின்று குறுகிச்*
*செம்மல் நாளவை அண்ணாந்து புகுதல்*
*எம்மன வாழ்க்கை இரவலர்க்கு எளிதே’*[24]

*“வீயாது சுரக்குமவ னாண்மகி ழிருக்கையும்*
*நல்லோர் குழீஇய நாநவில் அவையத்து*
*வல்லா ராயினும் புறமறைத்துச் சென்றோரைச்*

*சொல்லிக் காட்டிச் சோர்வின்றி விளக்கி*

*நல்லிதின் இயக்குமவன் சுற்றத் தொழுக்கமும்'*[25]

மேற்கூறிய பாடல்கள் சங்க காலத்தில் புலவர்கள்மீது அரசர்கள் கொண்ட அன்பாகிய மனிதநேயம் புலப்படுகிறது. அக்கால அரசர்களிடத்து நல்லார் இணக்கமும் இருந்தது என்பது தெரிகிறது.

மக்களை ஆளும் அரசரின் கடமைகள் அவனது தொழிலாகக் கருதப்படுவதுண்டு. இதிலிருந்து அரசர்களின் மேம்பட்ட பண்பு நலன் தெரிகிறது.

*''நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே'*[26]

சமுதாயத்தில் தனக்கு ஏற்ற ஒரு தொழிலை மேற்கொண்டு வாழ முற்படுகின்ற அச்சமில்லாதவனுக்கு, வசதிமிக்க நல்வாழ்வைக் கொடுக்க வேண்டியது மன்னனின் கடமையாகும். நாட்டில் தொழில் புரிந்து வாழும் மனிதர்களுக்குத் தேவையான வாழ்க்கை வசதிகளை வகுத்துக் கொடுத்தலும், பகை நாட்டவரால் கள்வர் முதலிய தீயோரால் உண்டாகும் அச்சத்தைப் போக்கி நல்வாழ்வு வாழச் செய்தலும் அரசாங்கத்தின் கடமையாகும். நன்னடை என்பது நல்ல நடைமுறை, நல்வாழ்க்கை எனப் பொருள்படும். ஆசிரியர் பொன்முடியார் இதனை இவ்வாறு கூறியுள்ளார். பதிற்றுப்பத்தில்,

*''மலையவும் கடலவும் பண்ணியம் பகுக்கும்*

*ஆறுமுட் டுறாஅது அறம்புரிந்து ஒழுகும்*

*நாடல் சான்ற துப்பிற் பணைத்தோட்*

*பாடுசால் நன்கலம் தரூஉம்*

*நாடுபுறந் தருதல் நினக்குமார் கடனே'*[27]

இவ்வாறு மலை, கடல் மூலம் கிடைத்த பொருட்களைப் பலர்க்கும் பகுத்துக் கொடுக்கும் பண்பும், தன் நாட்டைக் காத்தலாகிய அறத்தை விரும்பி ஒழுகுகின்ற பகைவர் ஆராய்தலமைந்த வலிமையுடைய உனக்குப் புகழ் மிகுந்த நல்ல ஆபரணங்களைத் தருகின்ற நாடுகளை உனது பெருத்த தோள்களில் வைத்துப் பாதுகாத்தல் உன் கடமையாகும் என்று ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் ஆற்றிய கடமையைக் காக்கை பாடினியார் நச்செள்ளையார் பாடியுள்ளார். பொருநராற்றுப் படையில்,

*"தொழுதுமுன் னிற்குவி ராயிற் பழுதின்*
*றீற்றா விருப்பிற் போற்றுபு நோக்கி'*[28]

இவ்வரிகளில் கன்றைப் பார்த்து இரங்கும் பசுபோல, அரசன் புலவரைப் பார்த்து இறங்கினான். அவன் கண்களில் அவர் துன்பங்களைப் போக்க வேண்டும் என்ற ஆர்வம் எழுந்தது என்பதிலிருந்து அரசனுக்குப் புலவர் மீது கொண்ட இரக்க உணர்வு தெரிகிறது.

மேலும் அரசன் தன் முன்னிலையில் புலவரை இருத்தி அவர்களை அன்போடு பார்ப்பான் என்றும், அவ்வாறு பார்க்கும்பொழுது புலவருடைய எலும்புகள் மெழுகென உருகும் என்பதை,

*"கண்ணிற் காண நண்ணுவழி இரீஇப்*
*பருகு வன்ன வருகா நோக்கமோடு*
*உருகு பவைபோ லென்பு குளிர்கொளீஇ'*[29]

இவ்வாறு அரசர்க்கும், புலவர்க்கும் இடையே இருந்த நெருங்கிய தொடர்பு தமிழ்நாட்டு அரசரின் சிறந்த பண்புகளில் ஒன்றாகும்.

*"பிறந்துதவழ் கற்றதற் றொட்டுச் சிறந்தநன்*
*னாடுசெகிற் கொண்டு நாடொறும் வளர்ப்ப'*[30]

என்று முடத்தாமக் கண்ணியார் சோழன் கரிகாலன் நாட்டை நல்ல முறையில் காக்கும் கடமையைக் கூறியுள்ளதிலிருந்து அரசனின் நாட்டுப்பற்று தெரிகிறது.

## அரச குணங்கள்

நாட்டையாளும் அரசனுக்கு அமைய வேண்டிய நல்லியல்புகள் அரசனுக்குரிய குணங்கள் எனப்படும். நாட்டு மக்களை உள்ளடக்கிய நாட்டை ஆளும் மன்னனின் ஆற்றல் பிறமாந்தரின் ஆற்றலைவிட உயர்ந்தது. அது விரும்பியதை விளைவிக்கும் தன்மை வாய்ந்தது.

*"செஞ்ஞாயிற்று நிலவு வேண்டினும்*
*வெண்டிங்களுள் வெயில் வேண்டினும்*
*வேண்டியது விளைக்கும் ஆற்றலை யாகலின்'*[31]

என்ற பாடல் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனின் அரசாற்றலின் வலிமையைக் கூறுகின்றது.

மன்னனின் மாண்பே போர் தொடுப்பதும், அதனால் பெற்ற பொருளைக் கொண்டு இரவலர்க்கு வாரி வழங்குவதும் போன்ற மேலோட்ட எண்ணத்தை நீக்கவே ஈங்கு மனித நேயத்தால், வழங்கப்பட்ட அரிய பல பரிசில் பொருட்களைக் காணலாம். பெருஞ்சோற்று உதியன் சேரலாதன் மனித நேயத்தால் பாரதப்போர் நிகழ்ந்த காலத்து, இருதரத்துப் படையினருக்கும் உணவு கொடுத்து இப்பெயர் பெற்றுள்ளான் என்பதை,

*''ஈரைம் பதின்மரும் பொருதுகளத்து ஒழியப்*
*பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்''*[32]

இவ்வாறு இம்மன்னன் பாகுபாடு கருதாமல் இருதரப்பினருக்கும் சமமாக உணவு வழங்கிய தன்மையே மனிதநேயமாகும். நல்லியக்கோடனின் அரச குணங்களைச் சிறுபாணாற்றுப் படை (207-220) எடுத்தியம்புகிறது.

ஆடவர்க்குத் தீநெறிக் கண் வேண்டப்படுவது மனிதநேயமே. இது மானத்தை அடிப்படையாகக் கொண்டது.

*''திறவாது அடைத்த திண்ணிலைக் கதவின்*
*நீண்மதில் ஒருசிறை ஒடுங்குதல்*
*நாணுத்தக வுடைத்திது காணுங் காலே''*[33]

என்று ஆவூர் முற்றியிருந்த காலத்து நெடுங்கிள்ளியை கோவூர்கிழார் பாடியுள்ளார். திறவாது அடைக்கப்பட்ட திண்ணிய கதவினை உடைய நீண்ட மதிலில் ஒரு பக்கத்தே ஒதுங்குதல் உனக்கு நாணத்தைத் தருவதாகும் என்கிறார். புலவர் உரிமையோடு அரசனை இடித்துரைத்தமை புலப்படுகிறது.

சங்க காலத்தில் அரசர்கள் உயிர்க்கு நன்மை பயக்கும் அறச் செயல்களை மேற்கொண்டு ஒழுகினர். நேர்மையான வழியில் ஆட்சி செலுத்தி, நீதியால் விளையும் அறப்பயனை அடைந்தனர். நேர்மையான நீதியை வழங்கக்கூடிய அறமனத்தினை உடையவராகவும், அறம் செய்தலையே தொழிலாகவும் மேற்கொண்டனர். அரசன் தன்னையும், தன் நாட்டையும் பேணுவதற்கு மக்களிடமும், பிற நாட்டினரிடமிருந்தும் நேர்மையான வழியில் இறைப்பொருளைப் பெற்றனர்.

இத்தகைய பண்புகள் படைத்தவனாய் அரசன் விளங்கியமையால் மக்கள் அரசனின் இன்றியமையாமையை உணர்ந்தனர். அரசர் 'யாம்' என்ற தலை வீக்கமும், குடிகள் 'பிறர்' என்ற இழிநோக்கமும் சங்க காலத்தில் தலைகாட்டவில்லை.

இதனாலேயே குறுங்கோழியூர் கிழார் இரும்பொறையை நோக்கிப் பாடும்போது,

*"மன்னுயிர் எல்லாம் நின்னஞ் சும்மே"*[34]

என்று உலகத்தின்கண் நிலைபெற்று வாழ்கின்ற உயிர்கள் எல்லாம் தாம் தாம் அரசனிடத்துக் கொண்ட காதலால் அவனுக்கு ஏதேனும் துன்பம் வருமோ என்று அஞ்சுவதிலிருந்து குடிகள் அரசரிடம் கொண்ட நேயம் தெரிகிறது.

### அரசனுக்குரிய தகுதிகள்

பண்டைத் தமிழர் ஆட்சியை நடத்திச் செல்வதற்குரிய ஆட்களைக் குடஓலைத் தேர்தல் மூலம் தேர்வு செய்தனர். பெயர்களை ஓலையில் எழுதிக் குடத்திலிட்டு அதனைச் சிறுவர்களைக் கொண்டு எடுத்துத் தேர்வு செய்வது குடவோலை முறையின் சிறப்பாகும். இதனை,

*"கயிறுபிணிக் குழிசி ஓலை கொண்மார்*
*பொறிகண் டழிக்கும் ஆவண மாக்களின்"*[35]

என்ற அகநானூற்றுப் பாடல் மூலம் அறியலாம்.

### வெண்கொற்றக் குடை

அரசனுடைய வெற்றியின் அறிகுறியாகப் பிடிக்கும் குடை வெண்கொற்றக் குடை எனப்படும். நாட்டின் வளத்தைப் பெருக்கவும், குடிமக்களின் நல்வாழ்விற்கு இன்றியமையாத கல்வி, கைத்தொழில், உணவு, வாணிகம், உடல்நலம் முதலியவற்றில் கருத்தூன்றவும், அரசன் இன்றியமையாதவன். இதனால்தான் சங்ககால மக்கள் அரசாட்சியைக் குடைநிழல் என்றும், நிழல் என்றும் கூறி வந்தனர். மன்னனுக்குரிய சின்னங்களுள் ஒன்றாக விளங்கும் வெண்கொற்றக் குடை அவனை வெயிலினின்று காப்பதற்கு விளங்குவதன்று. ஆனால், அது குடிகளுக்கு நிழல் செய்வதற்காகவே விளங்குகின்றது என்ற கருத்தினைப் பண்டைத் தமிழர் கொண்டிருந்தனர்.

### செங்கோன்மை

அரசன் தன் ஆளுகையினை அரசநீதிப்படி ஆளப்பட்டது என்பதைத் தெரிவிக்கத் தன் கைக்கொண்ட ஒரு கோணுதல் இல்லாத பொற்கோல் செங்கோல் எனப்படும். மன்னர்கள் தம்முயிரைப் போலவே மன்னுயிரைப் பேணி வந்தனர். மன்னன் அறம்

திரிந்து மறமேற்கொள்ளும் நிலை ஏற்படின் அருகிருக்கும் புலவர் செந்நெறி காட்டும் கடமையை மேற்கொண்டனர். அரசனும் புலவர் சொல்லை இகழாது ஏற்றுப் போற்றி அறம் காத்துப் புகழ் பெற்றனர்.

*"அம்புதுஞ்சுங் கடியரணால்*
*அறந்துஞ்சுஞ் செங்கோலையே"*[36]

என்ற பாடலில் சேரமான் யானைக்கட் சேய் மாந்தரஞ் சேரல் இரும்பொறையின் செங்கோல் புரிந்த தன்மையைப் புலவர் பாடியுள்ளார்.

மக்கள் வாழ்வு இன்பமாக அமைய வேண்டுமாயின் மன்னன் செங்கோலனாக இருத்தல் மிக இன்றியமையாதது. அச்செங்கோல் சிறப்பினை,

*"மால்வரைச் சிலம்பில் மகிழ் சிறந்தாலும்*
*பீலி மஞ்ஞையின் இயலிக் கால*
*தமனியப் பொற்சிலம்பு ஒலிப்ப"*[37]

என்ற உவமையில் வெளிப்படுதலைக் காணலாம். மக்களின் மகிழ்ச்சி மன்னனின் முறையான ஆட்சியில் அமைவது. மன்னன் கொடுங்கோலனாயின் மகளிர் வீட்டிலிருந்து வெளிவருதல் இயலாது. இங்கு மகளிர் இன்பமாக ஆரவாரத்துடன் தோகைமயில் போல் களித்து உதவுகின்றனர். எனவே, மகளிர் உரிமையும், மகிழ்வும் இணைந்த வாழ்க்கையர் என்பதும், அதற்குக் காரணமாய் அமைவது தொண்டைமான் இளந்திரையனின் செங்கோல் புரிந்த தன்மை என்பதும் மயிலால் புலப்படுகிறது.

*"அறனொடு புணர்ந்த திறனறி செங்கோல்*[38]

*"அல்லது கடிந்த அறம்புரி செங்கோல்*[39]

என்று அறத்தோடு பொருந்தி உலகத்தை ஆட்சி செய்யும் செங்கோல் அரசனாகிய கரிகாலனின் செங்கோன்மையும், மறம் போக்கி அறத்தை நிலைநிறுத்திய தொண்டைமான் இளந்திரையனின் செங்கோன்மையும் புலப்படுத்தப்பட்டுள்ளது.

கபிலரும் பாரியின் செங்கோன்மையை மயிலின் ஆடலுடன் கூடிய வர்ணனையால் புலப்படுத்துகின்றார்.

*"பயில்பூஞ் சோலை மயில்எழுந்து ஆலவும்*
*பயிலிருஞ் சிலம்பிற் கலைபாய்ந்து உகளவும்*

*கலையும் கொள்ளா வாகப் பலவும்*

*கால மன்றியும் மரம்பயம் பகரும்*

*யாணர் அறாஅ வியன்மலை''*[40]

இவ்வாறு மன்னவன் கோல்கோடின் கோள்நிலை திரியும். கோள்நிலை திரியின் மாரி வறங்கூறும் என மக்கள் திண்ணமாக நம்பியிருந்த காலமாகலின், செங்கோன்மையினை உணர்ந்த அதற்கு நேர்மாறான நிலையைப் பருவமின்றியும் வளம் பயக்கும் குன்றா வருவாயுடைய வியன்மலை எனப் பாடுகின்றார். எனவே, கார்காலத்து மேகம் கண்டு ஆடும் மயில் அக்காலமின்று எனிலும் பூஞ்சோலையில் ஆடிக்களிப்பது போன்று மக்கள் எக்காலத்தும் இடையறா இன்பம் துய்த்தனர் என்பது தெரிய வருகிறது.

அரச உரிமை

தாயம் என்பது உரிமை எனப் பொருள்படும். இங்கு அரச உரிமை தலைமுறை தலைமுறையாக வாரிசு உரிமைப்படி பயன்றுவரும் தன்மையைக் குறிப்பதாகும்.

*''மூத்தோர் மூத்தோர்க் கூற்றம் உய்த்தெனப்*

*பால்தர வந்த பழவிறல் தாயம்''*[41]

என்று தம் குடியில் முதியோரைக் கூற்றம் கொண்டு போக விதியால், தம்பால் வந்த பழைய வெற்றியால் உண்டாகிய அரசுரிமையை, சோழன் நலங்கிள்ளி மேற்கொண்டான்.

*''பரந்துபடு நல்லிசை எய்தி மற்றுநீ*

*உயர்ந்தோர் உலகம் எய்திப் பின்னும்*

*ஒழித்த தாயம் அவர்க்கு உரித்து''*[42]

என்று புலவர் அரசனை நோக்கி, நீ இந்த உலகத்தில் அழியாத பெரும்புகழை நிலைநிறுத்தி மறைந்தால் இந்த ஆட்சிப் பொறுப்பை ஏற்று நடத்துவது நின் புதல்வர்கள் தான் என்று கோப்பெருஞ்சோழனைக் கூறியுள்ளார். இதிலிருந்து பரம்பரை முறைப்படி அரசர்கள் ஆட்சி புரிந்தனர் என்பதும், நாட்டில் போராகிய வினை குறைந்து அமைதி நிலவும் சாந்தி நிலையமாகத் திகழ்ந்தது என்பதும் பெறப்படுகிறது.

மொழி, இனப் பாகுபாடு உடைய மக்கள் ஓர் அரசியல் அமைப்பின் கீழ் வாழ

முற்படும்பேது நாடு உருவாகின்றது. நாடு என்பது நிலப்பரப்பை அடிப்படையாகக் கொண்டு மக்களால் ஏற்படுத்தப்படும் வரன்முறைகளைக் கொண்டு இயங்கவல்லது. இவ்வாறு நாட்டையாளும் மன்னன் ஒருவன் அந்நாட்டைக் காக்க செயல்படும் நால்வகையான படைகளைப் பெற்றிருப்பவனாகத் திகழவேண்டும்.

*''நெடுநல் யானையும் தேரு மாவும்*
*படையமை மறவரும் உடையம் யாம்''*[43]

என்ற பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் நால்வகைப் படைப்பெருமை பேசப்பட்டுள்ளது. மேலும், மற்றொரு பாடலில் பாண்டியன் நன்மாறனின் நால்வகைப் படைப்பெருமையை,

*''கடுஞ்சினத்த கொல்களிறும் கதழ்பரிய கலிமாவும்*
*நெடுங்கொடிய நிமிர்தேரும் நெஞ்சுடைய புகன்மறவரும்*
*நான்குடன் மாண்ட தாயினும்''*[44]

என்று குறிப்பிடப்பட்டுள்ளது. நாற்படை பெற்றவனே சிறந்த அரசனுக்குரிய தகுதி படைத்தவனாவான் என்பது தெரிகிறது.

அரசனின் ஐம்பெருங்குழுவில் அங்கம் வகிக்கும் அமைச்சர் தவிர, ஏனைய புரோகிதர், சேனாபதியர், தூதர், ஒற்றர் என்ற நால்வகையினர் நாற்பெருங் குழுவினராகக் கருதப்படுவர். இவர்கள் உறுதிச் சுற்றம் எனவும் சிறப்பிக்கப் படுவதுண்டு. இதனை,

*''நான்மொழிக் கோசர் தோன்றி யன்ன*
*தாமேஎந் தோன்றிய நாற்பெரும் குழுவும்''*[45]

என்று கூறியதிலிருந்து அரசன் நாற்பெருங் குழுவினரை தன்னிடத்துக் கொண்ட தகுதி உடையவனாகத் திகழ்ந்தான் என்பது தெரிகிறது.

**சான்றாண்மை**

''தமிழ் மன்னனாகிய நெடுஞ்செழியன், தான் ஒரு பொய் சொல்வதால் தனக்கு உயர்ந்த தேவருலகத்து ஆட்சியும், சாவாமை தரும் மருந்தாகிய அமிர்தமும் கிடைப்பதாக இருந்தாலும், அப்பொய்யினைச் சொல்லமாட்டான். வாணன் என்னும் சூரன் வைத்த விழுநிதி பெறுவானாயினும், தனக்குப் பழியாகும் இழி செயல் எதுவும்

செய்ய மாட்டான். தன்னிடம் உள்ள பொருளை தனக்கென வைத்துக் கொள்ளாது பிறர்க்குக் கொடுத்து அக்கொடையால் வரும் புகழையே பெரிதும் விரும்புவான்''[46] என்று கூறுவதிலிருந்து பாண்டியன் நெடுஞ்செழியனின் பொய் சொல்லாமை, இழிசெயல் செய்யாமை, தன்னலம் கருதாமை போன்ற சான்றாண்மைப் பண்புகளை நம்மால் அறிய முடிகிறது.

பஞ்சமும் பறக்கும்

''நாட்டில் உள்ள மக்களுக்கு உணவு உயிராக விளங்குகின்றது. நீரைக் கொண்டுதான் உணவுப் பொருட்களை உண்டாக்க இயலும். எனவே, தன் குடிமக்களுக்கு மிகுதியான உணவுப் பொருட்களை அளிக்க விரும்பும் அரசன், நாட்டின் நீர் வளத்தைப் பெருகச் செய்தல் வேண்டும். ஆதலின் தடையற்று வீணாகப் பாய்ந்தோடும் நீரை ஏரிகளில் விழும்படித் தடுத்து நாட்டில் நீர்வளத்தை மேம்படுத்த வேண்டும்''[47] என்று புலவர் பெருமக்கள் அரசனுக்கு அறிவுறுத்தினர்.

நிலம் பள்ளமாய் இருக்குமிடங்களில் நீர் நிலைகள் அமையும்படிக் கரைகளை அமைத்து, நீரைத் தடுத்து நிறுத்தி வைத்த அரசரே இவ்வுலகில் தம் புகழை நிலை நிறுத்தியவராவர். இங்ஙனம் நீரைத் தடுத்து நிறுத்தாதவர் தம் புகழை நிலை நிறுத்தாதவரேயாவர் என்பதை,

*''நிலனெளி மருங்கின் நீர்நிலை பெருகத்*
*தட்டோர் அம்ம இவண் தட்டோரே*
*தள்ளா தோரிவட் தள்ளா தோரே''*[48]

என்று நெடுஞ்செழியனுக்கு அறிவுறுத்தியுள்ளார். நீர்வளம் பற்றிய கவலை அக்காலத்தில் எவ்வளவு இருந்தது என்பதனை நன்கு உணரலாம்.

பஞ்சம் வரும் என்பது வானநூல் வல்லாரின் கணிப்பாக இருப்பினும், அதையும் மீறி, கோள் நிலைகளையும் மீறி, கோன்நல்லவனாக இருப்பின், வான் பொய்ப்பினும் தான் பொய்யா வற்றாத ஆறுகளிருப்பின் பஞ்சத்தையும், பஞ்சாய்ப் பறக்கச் செய்யலாம் என்பதையும் புலவர்கள் தங்கள் பாடல்களில் காட்டத் தவறினாரில்லை என்பதை,

*''கல்காயுங் கடுவேனிலொடு*
*இருவானம் பெயலொளிப்பினும்*

*வரும்வைகல் மீன்பிறழினும்*

*வெள்ளமா றாது விளையுள் பெருக'*[49]

என்று மதுரைக் காஞ்சியும்,

*''வசையில்புகழ் வயங்குவெண்மீன்*

*திசைதிரிந்து தெற்கேகினும்*

*தற்பாடிய தளியுணவிற்*

*புட்டேம்பப் புயன்மாறி*

*வான்பொய்ப்பினும் தான்பொய்யா*

*மலைத்தலைய கடற்காவிரி'*[50]

எனப் பட்டினப்பாலையும்,

*''நிலம்பயம் பொழியச் சுடர்சினம் தணியப்*

*பயங்கெழு வெள்ளி யாநிய நிற்ப'*[51]

எனக் கபிலரும் குறிப்பிடுவதிலிருந்து கோள்நிலை மாறினும், வளம் கொழிக்கும் ஆறுகளை ஒரு நாடு பெற்றுத் திகழுமாயின் வளமுடன் வீரநடைபோடும் என்பதை அறிய முடிகிறது.

இவ்வாறு அரசர்கள் புலவர் சொற்படி கழனியாக்கத்திற்கு உதவும் நீர்நிலைகளைப் பயனுள்ள முறையில் பாதுகாத்துத் தம் குடிமக்களின் நலனைக் காக்கும் மனிதநேயமிகு உணர்வைக் கொண்டிருந்தனர். கோள்நிலை மாறிவிட்டது என்பதற்காக நாட்டில் நல்லாட்சி நீங்கி, மனம் கலங்கித், தமிழ் மன்னர்கள் மக்களுக்குத் துன்பம் இழைக்கவில்லை. மாறாகப் பஞ்சம் ஏற்படலாம் என வானநூலார் கூறினும், வளமுடைய ஆறுகள் வற்றாது செல்லும்போது பஞ்சத்தையும் பஞ்சாய்த் துரத்தலாம் என்று புலவர்களின் ஊக்க உரைகளை ஏற்று நடந்தனர் சங்ககால அரசர்கள் என்பதை நமக்கு உணர்த்துகின்றன.

**மன்னவன் நிழல்**

அரசன் மக்களுக்குத் தெய்வமாகவும், நிழலாகவும் நிற்கின்றபொழுது ஊழிக் காலமே வந்தாலும் கவலை கொள்ளாது மன்னவன் நிழலிலேயே தங்கியிருந்தனர். கோள்நிலை மாறி கொடுமைகள் வந்துற்றாலும் கவலையில்லை. நாங்கள் கிள்ளி வளவனின் நிழலில் உள்ளோம் என்கின்றார். இதனை,

*''எறிதிரைப் பெருங்கடல் இறுதிக்கண் செலினும்*

*தெறுகதிர்க் கனலி தென்திசைத் தோன்றினும்*

*என்னென்று அஞ்சலம் யாமே வென்வேல்*

*அருஞ்சமம் கடக்கும் ஆற்றலவன்*

*திருந்துகழல் நோன்தாள் தண்நிழ லேமே'*[52]

என்று எருக்காட்டூர் தாயங்கண்ணனார் எடுத்தியம்புவதினின்றும் நன்குணரலாம்.

இதுகாறும் கூறியவற்றால் பண்டைத் தமிழர்கள் நாள்கோள் பார்த்தல், சகுனம் பார்த்தல் முதலிய செயல்களில் நம்பிக்கை கொண்டுள்ளனர் என்பதையும், கோள்நிலை திரிந்தால் கொடிய பஞ்சம் வந்துவிடும் என்பதையும், பஞ்சம் வந்தாலும் பாராளும் மன்னன் செங்கோலனாய், செழுங்குடி ஓம்பும் சீரிய பண்பாளனாய் விளங்கினால் கோள்நிலையையும் தூள் செய்யலாம் என்பதையும் கற்கண்டின் சுவை போன்ற தமிழ்ப் புலவர்கள் வானநூல் அறிவில் ஈடு இணையற்று விளங்கினர் என்பதையும் அறிய முடிகின்றது.

**ஊர் மன்றங்கள்**

தமிழகச் சிற்றூர்களில் மன்றங்கள் இருந்தன. ஆட்சிமன்ற உறுப்பினர், ஊர் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஊரின் ஒவ்வொரு பகுதியினரும் தம் பகுதிக்குரிய ஒருவரை ஓலை மூலம் தேர்ந்தெடுத்தனர். ''வாக்காளரின் ஓலைகள் குடத்தினுள் இடப்பட்டு, அக்குடத்தின்மேல் அரசாங்க முத்திரை பதித்து, ஆவண மாக்கள் அம்முத்திரையை நீக்கி ஒவ்வோர் ஓலையாகப் படிப்பர்''[53] என்ற பகுதியினால் அறியலாம்.

இவ்வாறு தேந்தெடுக்கப்பட்டவர் ஊர் மன்றத்தின் உறுப்பினராவார். ஊர்களில் நிகழ்ந்த குற்றங்களை அறிந்த இம்மன்றத்தினர் குற்றம் செய்தவரைத் தண்டித்தனர். ''கள்ளூர் என்ற ஊரில் நெறி தவறிய ஒருவன் செய்த தவற்றினை அவ்வூர் மன்றத்தினர் கேட்டறிந்து, அக்கொடியவனை மரக்கிளையில் இறுகப் பிணித்தனர். அவன் தலையில் சுண்ணாம்பு நீற்றைப் பெய்து அவமானப்படுத்தித் தண்டித்தனர்''[54] என்று அகநானூறு கூறுகின்றது. இதிலிருந்து சிற்றூர்களில்கூட நல்லாட்சி நிலவிய தன்மையை நம்மால் அறிந்து கொள்ள முடிகிறது.

**நகர்க்காவலர்**

''நகரைக் காவல் செய்வதும், ஒற்று அறிதலுமே இவர்களுடைய முக்கியக் கடமைகளாகும். இரவுக் காலத்தில் கொள்ளைக்காரர் நகர் வீதிகளிலே திரிந்தார்கள். இக்கொள்ளைக்காரரை அடக்குவதற்கு அரசன் காவலரை நியமித்தான்''[55] என்பதை மதுரைக்காஞ்சி பகர்கின்றது.

**ஊர்க்காவலர்**

இவர்கள் இரவு நேரத்தில் ஊரைக் காவல் செய்பவர்கள். நள்ளிரவில் இவர்கள் சூலம் ஏந்திய கையுடன் திரிவார்கள். ''இக்காவலர் நெடிய நா அமைந்த மணிகளை ஒலிப்பதுண்டு. ஊரில் திரிகின்ற திருடர்களைப் பிடிப்பதற்கு அரசன் ஊர்க்காவலரை நியமித்தான்''[56] என்பதை முல்லைப்பாட்டு உரைக்கின்றது. மற்றோர் இடத்தில்,

*''இடங்கரும் குட்டத்து உடன்தொக்கு ஓடி*
*யாமம் கொள்பவர் சுடர்''*[57]

என்ற வரிகளால் அரசனது ஆணை பெற்றுச் சேவகர் கையில் விளக்கு ஏந்தி இரவில் ஊரினைக் காத்து வந்தனர் என்பதும் பெறப்படுகிறது.

**தெருக்காவலர்**

வழிப்போக்கரை வழியலைக்கும கள்ளரிடமிருந்து காப்பாற்றுவதே இவர்களுடைய முக்கியமான கடமையாகும். இளந்திரையன் நாட்டிலே வழியலைக்கும் கள்ளர் இல்லை என உருத்திரங் கண்ணனார் பாடியுள்ளார். அரசன் அமைத்த காவலர் படையின் சிறப்பே இதற்குக் காரணமாக இருந்திருத்தல் வேண்டும் என்பதை,

*''அத்தம் செல்வோர் அலறத் தாக்கிக்*
*கைப்பொருள் வௌவும் களவேர் வாழ்க்கைக்*
*கொடியோ ரின்றவன் கடியுடை வியன்புலம்''*[58]

என்று பெரும்பாணாற்றுப் படை கூறுகின்றது. ''சிறந்து விளங்கிய உள்நாட்டு வியாபாரத்தின் பாதுகாவலுக்காகச் சந்திகளில் வீரர்கள் நிறுத்தப்பட்டனர். கழுதையின் மீது மிளகு எடுத்துக் கொண்டு போவோருடன் வம்பலர் வழங்கும் பெரிய வழியில் உள்ள கவர்த்த வழிகளைக் காவல் செய்வோரைப் பற்றிப் பெரும்பாணாற்றுப் படை

பகர்வதைக் காணலாம்.''[59]

இவ்வாறு நகர், ஊர், தெரு முதலிய பகுதிகளுக்குப் பொறுப்பான காவலர்களை நியமித்ததின் மூலம் மக்களின் தனிப்பட்ட வாழ்வு நிலையிலும், குற்றங்களைக் கடிகின்ற நிலையிலும் மேன்மையான மனிதநேயப் பண்பினைப் போற்றியுள்ளமை உணர முடிகின்றது.

**மன்னவன் தன்மை**

அரசன் அதியமானுக்குக் கிடைத்த அரிய நெல்லிக் கனியினை, தன் அமைச்சராகிய ஔவையாரை நினைவிற் கொண்டு, இக்கனியினை அவ்வம்மையார் உண்டால், பாரினில் பல்லாண்டு வாழ்ந்து, எத்துணையோ உண்மைகளை உணர்த்தி உலகுய்யச் செய்வார். நாம் உண்போமானால் நீண்ட நாட்கள் வாழ்ந்து, அடுபடை கொண்டு, அளவில்லாத உயிர்களைக் கொன்று குவிப்போம். ஆகையால் இக்கனியை ஔவையே அருந்த வேண்டும் என்று மனத்துள் நினைத்து அன்புடன் உண்ணுமாறு வேண்டினான். பிறர் அன்புடன் கொடுக்கும் பொருள் எதுவாயினும், இன்புடன் வாங்கிக் கொள்ளும் இயல்பினை உடையவராகிய புலவர் அதனை இகழாது, மகிழ்வுடன் வாங்கி உண்டார். உண்டபின் அதன் சுவையினைக் கண்டு சிந்தை குளிர்ந்து, வியந்து அதியமானை வாழ்த்தினார்.

அதியமான் கடுஞ்சொல்லன் அல்லன் என்ற இலக்கணப் பாங்கிற்கு வடிவமைத்துக் கொடுக்கின்றார் ஔவையார். அதியமானை,

> *''நீலமணி மிடற்று ஒருவன் போல*
> *மன்னுக பெரும நீயே''*[60]

என்று வாயார, மனமாற வாழ்த்தினார். ஏனென்றால்,

> *''சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது*
> *ஆதல் நின்னகத்து அடக்கிச்*
> *சாதல் நீங்க எமக்கீத் தனையே''*[61]

ஔவை தனக்குக் கனி கொடுத்த தகைமையைப் புகழ்ந்து அதியமானைப் பாராட்டினார். இது சான்றோர்களுக்கு அக்கால அரசியலில் இருந்த உரிமையைச் சுட்டுகின்றது. அவரைப் போன்றே பல சான்றோர்களும் அதியமானின் நெல்லிக்கனியினைப் போற்றி உரைத்துச் சென்றுள்ளனர் என்பதை,

*"..... .... மால்வரைக்*
*கமழ்பூஞ் சாரல் கவினிய நெல்லி*
*அமிழ்துவிளை தீங்கனி ஔவைக் கீந்த*
*உரவுச்சினங் கனலும் ஒளிதிகழ் நெடுவேல்*
*அரவக்கடல் தானை அதிகனும்'*[62]

சிறுபாணாற்றுப் படை எடுத்துரைக்கின்றது. இத்தகைய அதியமான் ஔவையால் பெருமை பாராட்டுகின்றபோது,

*"இனியை பெரும எமக்கே மற்றதன்*
*துன்னரும் கடாஅம் போல*
*இன்னாய் பெரும நின்ஒன்னா தோர்க்கே'*[63]

என்கின்றார். அதாவது,

*"இனிய உளவாக இன்னாத கூறல்*
*கனியிருப்பக் காய்கவர்ந் தற்று'*[64]

என்ற வள்ளுவரின் வாய்மொழிக்கேற்ப கடுஞ்சொல் விலக்கி, இனியன கூறும் பண்பாளனாய் அதியமானின் தன்மையைக் காணலாம்.

*"காட்சிக்கு எளியன் கடுஞ்சொல்லன் அல்லனேல்*
*மீக்கூறும் மன்னன் நிலம்'*[65]

என்றவிடத்து ஒரு மன்னனானவன் காட்சிக்கு எளியவனாக இருக்க வேண்டும் என்ற வள்ளுவரின் இலக்கணப்படி அமைந்த புறப்பாடலில் வல்வில் ஓரியின் சிறப்புக் குறிக்கும் வன்பரணர் அரசனின் எளிய தன்மையைக்,

*"கோவெனப் பெயரிய காலை யாங்கது*
*தன்பெயர் ஆகலின் நாணி'*[66]

என்று வல்வில் ஓரியைப் புகழுமிடத்து, அவன் அரசனாக இருந்தபோதும், ஒரு வேடுவனாக காட்டிற்குள் வந்து, புலவர் பசியைப் போக்கிய தன்மையை வியந்து பாடுகின்றபோது, அரசன் என்று தன்னை அடையாளம் கண்டு கொண்டமைக்கு நாணுகின்றான் என்று புலவர் பாடுகின்றார். இதில் மன்னன் காட்சிக்கு எளியவனாய் இருக்க வேண்டும் என்னும் வள்ளுவரின் இலக்கணம் அமையக் காண்கிறோம்.

கண்டீரக் கோப்பெரு நள்ளியைப் புலவர் பாடுமிடத்து காட்டகத்து வந்து பொருள் வேண்டி நின்றவர்க்கு,

*''மார்பில் பூண்ட வயங்குகா ழாரம்*
*மடைசெறி முன்கைக் கடகமோடு ஈத்தனன்'*[67]

என்று அவன் பொருள் தந்த நிலையை வாயாரப் புகழ்ந்தவர், அவனுடைய வரலாற்றைக் காட்டுவதற்காக,

*''எந்நாடோ என நாடும் சொல்லான்*
*யாரீரோ எனப் பேரும் சொல்லான்'*[68]

எனக் குறிக்கின்றார். இவ்வாறு அரசனாக நாட்டிலே இருந்து உதவியதோடு நில்லாது, தம் ஊரையும், பெயரையும் மறைத்து, எளியவனாகக் காட்சியளித்துத் தம் மிகுதியான அன்பினை வெளிப்படுத்திய மனிதநேயம் எண்ணி வியக்கத்தக்கது.

**மன்னவரின் காலம் தாழ்த்தாமை**

*''தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும்*
*நீங்கா நிலனாள் பவற்கு'*[69]

என்ற வள்ளுவரின் இலக்கணத்திற்கு இலக்கியமாக அதியமானை ஔவையார் பாடி மகிழ்கின்றார். வரிசையறிந்து பரிசில் நல்கும் அவனுடைய வளப்பத்தைக் குறிக்கின்றபோது,

*''ஒருநாட் செல்லலம் இருநாட் செல்லலம்*
*பலநாள் பயின்று பலரொடு செல்லினும்*
*தலைநாட் போன்ற விருப்பினன்'*[70]

என்கிறார். இது பரிசில் நல்கும் தன்மையாயின், பரிசில் நல்கும் காலம் எத்தன்மைத்து என்று ஆராய்கின்ற போதுதான் வள்ளுவரின் தூங்காமை என்ற சொல்லுக்கு ஔவையார் வடிவமைத்துப் பாடுவதை அறிய முடிகிறது.

*''அதியமான் பரிசில் பெறூஉங் காலம்*
*நீட்டினும் நீட்டா தாயினும் யானைதன்*
*கோட்டிடை வைத்த கவளம் போலக்*
*கையகத் ததுவது பொய்யா காதே'*[71]

என்ற வரிகள் களிற்றின் கோட்டிடை வைத்த கவளம் போலக் காலம் தாழ்த்தாது அதியமான் பரிசில் நல்கும் காலத்தைப் படம் பிடித்துக் காட்டுகின்றார்.

பிட்டங் கொற்றனைக் காரிக்கண்ணனார் பாடுமிடத்துப் பரிசில் நல்கும் காலத்தை வெளிப்படுத்துகிறார்.

*''இன்று செலினும் தருமே சிறுவரை*
*நின்று செலினும் தருமே பின்னும்*
*முன்னே தந்தனன் என்னாது துன்னி*
*வைகலும் செலினும் பொய்யல னாகி'*[72]

என்பதில் பிட்டங் கொற்றனின் பரிசில் நல்கும் காலம் விரித்துக் கூறப்பட்டுள்ளது. மன்னனின் காலம் தாழ்த்தாத இப்பண்பினால் புலவர்மீது கொண்ட அன்பு புலப்படுகிறது.

**மாரியன்ன மன்னன் கொடை**

*''பாரி பாரி என்றுபல வேத்தி*
*ஒருவர் புகழ்வர் செந்நாப் புலவர்*
*பாரி ஒருவனும் அல்லன்*
*மாரியும் உண்டுஈண்டு உலகுபுரப் பதுவே'*[73]

என்ற பாடலில் பாரியின் பரிசில் நல்கும் பாங்கினைக் கூறுமிடத்து, மாரியும் உண்டே என்கின்றபோது, மாரியின் கைம்மாறு வேண்டா கட்டுப்பாடு பாரி மாட்டு உண்டு என்பதனை அறிகின்றோம். ஆயை முடமோசியார் பாடுகின்றபோது கூட ''மாரியன்ன வண்மை''[74] என்று வர்ணித்திருப்பதைக் காண்கின்றபோது,

*''கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு*
*என்னாற்றுங் கொல்லோ உலகு'*[75]

என்ற வள்ளுவரின் வாய்மொழியினைப் புறத்தில் காண்கிறோம்.

**மன்னவன் நல்கும் கொடை**

*''கொடையளி செங்கோல் குடியோம்பல் நான்கும்*
*உடையானாம் வேந்தர்க்கு ஒளி'*[76]

என்ற வள்ளுவரின் ஈகையும், கொடையும் புறநானூற்றில் புலவர்களால் எடுத்தாளப்படும் மன்னவனின் மாண்பாகும். நாடிழந்து காட்டிடை இருக்கின்ற போதும் தன்னை நாடிவந்த புலவன் பரிசில் பெறாது திரும்புவது இழிவு எனக் கருதி, தன் தலைக்கு விலை பகன்ற தமையனுக்கு அதைக் கொடுப்பதன் மூலம், புலவன் பரிசு பெறலாம் என உணர்ந்து, தன் தலை கொய்ய வாள் கொடுத்த வள்ளல் தான் குமணன். அவனைப் பற்றிப் பெருஞ்சித்திரனார் பாடுமிடத்து,

*''எழுவர் மாய்ந்த பின்றை அழிவரப்*
*பாடி வருநரும் பிறரும் கூடி*
*இரந்தோர் அற்றம் தீர்க்கென விரைந்திவண்*
*உள்ளி வந்தனென் யானே''*[77]

என்பதில் குமணனின் மேம்பட்ட தன்மை வெளிப்படுகிறது. இதே பாடலில் புலவர் கடையெழு வள்ளல்களின் கொடைச் சிறப்புக் கூறியுள்ளதும் போற்றத்தக்கது.

கொடையால் கிடைக்கும் பொருள் பற்றிக் கூறுமிடத்து முடமோசியார், ஆயின் அற்புதக் குணத்தை அழகாகக் கூறுகின்றார். தன்னை நாடி வருபவர் அனைவருக்கும், யானையைக் கொடுக்கும் அவனுடைய நாட்டு வளப்பத்தைக் குறிக்கும்போது,

*''விளங்குமணிக் கொடும்பூண் ஆஅய் நின்னாட்டு*
*இளம்பிடி ஒருசூல் பத்து ஈனுமோ''*[78]

என்று ஆயின் கொடைப் பண்பை விளக்குகிறது. இதே கொடையைப் பற்றிப் பாடுகின்ற ஔவையார் அரசனின் மனநிலையைக் காட்டுகின்றார். அதாவது தான் ஒன்று கேட்க அவன் ஒன்று நல்கும் தன்மையை,

*''அரிசி வேண்டினெம் ஆகத் தான்பிற*
*வரிசை அறிதலின் தன்னும் தூக்கி*
*இருங்கடறு வளைஇய குன்றத் தன்னதோர்*
*பெருங்களிறு நல்கி யோனே''*[79]

என்ற பாடல் அரிசி கேட்க யாவையும் நல்கும் நாஞ்சில் வள்ளுவனின் வளப்பத்தை நாமறிய முடிகிறது. இவ்வாறு இறைமாட்சி மன்னவர்தம் வாழ்க்கைக்கோர் சாட்சியாக நின்று என்றும் நிலவும் குன்றாப் புகழைத் தரும் என்பதில் வியப்பில்லை.

### அறம் தழுவிய மனித நேயம்

ஓர் அரசின் உறுப்புகளுள் ஒன்றாகிய படையைப் பெருக்குவதில் பண்டைக் காலம் முதல் இன்று வரை எல்லா ஆட்சியாளர்களும், பெருங்கவனமும், பெருஞ்செலவும் செய்து வருகின்றனர். படை வலிமையே அரசின் வலிமை, நாட்டின் வலிமை என்றெல்லாம் எண்ணி வருகின்றனர். அதனால் குடிகளின் நல்வாழ்விற்குப் பயன்படும் செல்வத்தை, படைகளைப் பெருக்குவதற்குச் செலவிட்டு வருகின்றனர். இன்று படை வலிமை பெருக்குவோர் சமாதானத்திற்காகவே தாம் படைகளைப் பெருக்குவதாகக் கூறுவதோடன்றி, பிறரைப் போர் வெறியர் என்று பேசியும் வருகின்றனர்.

படை வலிமையால் அரசு நிலைத்து நிற்கும். அரசுக்கு ஆக்கம் உண்டாகும் என்று எண்ணுவதெல்லாம் பொருந்தாக் கருத்து என்பதனையும், அறத்தின் வலிமையினாலேயே அரசு நிலை கொள்ளும் ஆக்கம் பெறும் என்ற உண்மையினையும், அறத்தின் திறமை அரசின் நிலைபேற்றிற்கு அடிப்படை என்னும் கொள்கையினையும், பண்டைத் தமிழர் தெளிவாக உணர்ந்திருந்தனர். அதனால் புலவர்கள் நாடாண்ட மன்னர்களிடம் அரசின் நிலைபேற்றிற்கான காரணத்தை எடுத்துக் கூறி அறிவுறுத்தினர் என்று அறிய முடிகிறது. செய்நன்றியறிதலாகிய பேரறத்தை,

> *''நிலம்புடை பெயர்வ தாயினும் ஒருவன்*
> *செய்தி கொன்றோர்க்கு உய்தி இல்லென*
> *அறம் பாடிற்றே ஆயிழை கணவ'*[80]

என்ற இடத்தில் வற்புறுத்துகிறது.

இவ்வாறு பண்பட்ட நிலையில் நின்று எல்லோருடைய இயல்புகளும் அறிந்து எண்ணம், சொல், செயலால் நன்னெறியில் ஒழுகும் சான்றோர் உண்மையாலேயே உலகம் நிலைத்திருக்கின்றது என்பது ஆன்றோர் கருத்து. அதனினும் மேலாக,

> *''தமக்கென முயலா நோன்றாள்*
> *பிறர்க்கென முயலுநர் உண்மை யானே'*[81]

இதனால் இவ்வுலகம் உண்டு என்று கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி என்னும் பண்புடை வேந்தன் கூறியிருப்பது போன்று வள்ளுவரும்,

*''பண்புடையார்ப் பட்டுண்டு உலகம்''*[82]

என மொழிந்தார். பண்புடைப் பெருமக்கள் பல்கியிருந்த பண்டைத் தமிழகத்தே அறம் தழுவிய கோட்பாடுகள் மிகுதியாக இருந்திருக்க வேண்டும் என்பது தெரிகிறது. நல்வினை புரிதல் வேண்டும். அவ்வாறு நல்வினை புரியவில்லை என்றால் தீவினைபுரியாதிருத்தல் வேண்டும். அதுவே நன்னெறிக்கண் செலுத்தும் அறக்கோட்பாடாகும்.

*''நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும்*
*அல்லது செய்தல் ஓம்புமின் அதுதான்*
*எல்லாரும் உவப்பது அன்றியும்*
*நல்லாற்றுப் படூஉ நெறியுமா ரதுவே''*[83]

என்ற பாடலில் பயன் கருதாது அறம் புரிதல் வேண்டும் என்னும் அறக்கொள்கை அக்காலத்தில் வற்புறுத்தப்பட்டது. மறுமையில் இன்ன பயன் கிட்டும் என்று கருதி அறம் புரிதல், பொருளை விலையாகக் கொடுத்து அதற்கு அறத்தைக் கொள்ளும் வாணிகமாகும் என்னும் கருத்தைக் கொண்டிருந்தனர் என்பதை,

*''இம்மை செய்தது மறுமைக் காமெனும்*
*அறவிலை வாணிகன் ஆயலன் பிறரும்*
*சான்றோர் சென்ற நெறியென*
*ஆங்குப் பட்டன்று அவன்கை வண்மையே''*[84]

இப்பாடல் எடுத்துரைக்கின்றது. ''யாதும் ஊரே யாவரும் கேளிர்''[85] என்று தொடங்கும் பாடலில் எத்துணை அறப்பண்பு செறிந்ததாகக் காணப்படுகின்றது. இக்கொள்கை பண்டைத் தமிழர்தம் சீரிய அறப்பண்பாட்டிற்குச் சிறந்த எடுத்துக்காட்டாகும். கைம்மை நோன்பின் வருத்தத்தினை பூதப்பாண்டியன் பெருந்தேவி,

*''வெள்என் சாந்தொரு புளிப்பெய்து அட்ட*
*வேளை வெந்தை வல்சி ஆகப்*
*பரற்பெய் பள்ளிப் பாயின்று வதியும்*
*உயவல் பெண்டிர்''*[86]

எள்ளுத் துவையலுடன், வெந்த வேளைக் கீரையை உண்டு பாயில்லாமல் தரையில் படுத்துறங்கி துன்புற்று வாழவேண்டும் என்று இப்பாடற்பகுதி கைம்மை நோன்பின்

துயரத்தினை உணர்த்துகின்றது. இவ்வாறு துன்பப்படாமல் தம் அரும்பெறல் கணவரை எரியூட்டிய நெருப்பிலேயே மனைவியர் விழுந்து தம் உயிரை மாய்த்துக் கொள்வார்களேயானால், அத்தகைய பத்தினிப் பெண்களுக்கு அந்த ஈமத்தீயும் குளிர் பொய்கையாகத் தோன்றும் என மேலும் கூறுவர் பூதப்பாண்டியன் தேவி.

*"பெருந்தோட் கணவன் மாய்ந்தென அரும்பற*
*வள்ளிதழ் அவிழ்ந்த தாமரை*
*நள்இரும் பொய்கையும் தீயும்ஓ ரற்றே'*[87]

என்ற இப்பாடல் பெருந்தேவியின் அறப்பண்பினை உணர்த்துகிறது.

மரம்படும் துன்பத்தைத் தம் மன உணர்வால் சங்க காலத்தார் நுண்ணிதின் உணர்ந்தனர். தமிழ் வேந்தர் கண்ணும் கருத்துமாக வளர்த்து வந்த பெருமை காவல் மரங்களுக்கு உண்டு. அம்மரம் வெட்டப்படும் நிலைவரின், தம் உயிரைக் கொடுத்தும் அதனைக் காக்க முனைவர் அக்கால அரசசர்கள். அம்மரத்தைப் பலர் சுற்றி நின்று காப்பது வழக்கம். குமணனிடம் பாடிப் பெற்று வந்த யானைப் பரிசைத் தன் வரிசையறியாது குறைபொருள் கொடுத்த இளவெளிமானின் காவல் மரத்தில் கட்டியபோது, யானை அசையவும், மோதவும் அம்மரம் படும் வருத்தத்தைப் பெருஞ்சித்திரனார் நெஞ்சம் நினைத்துப் பார்க்கிறது.

*".... .... நின்னூர்க்*
*கடிமரம் வருந்தத் தந்தியாம் பிணித்த*
*நெடுநல் யானையெம் பரிசில்*
*கடுமான் தோன்றல் செல்வல் யானே'*[88]

மற்றொரு பாடலில் அறிவுரை கூறித் தன்னைத் தடுத்த எவ்வியின் நன்மொழி மீறிச் சென்று திதியன் காக்கும் பழம்பெரும் புன்னை மரத்தை அடியோடு வெட்டி வீழ்த்தித், தானும் அப்போரில் மடிந்துபட்டான் அன்னி.[89] வெட்டப்படும்போது பூக்கள் நிறைந்த அப்புன்னைமரம் பட்டபாட்டைத் தாம்பட்ட துன்பமாக உணர்ந்து பாடுகின்றனர். இதிலிருந்து அஃறிணை உயிராகிய மரங்களிடம் பரிவு காட்டிய அவர்களின் மனநிலையும், நேயமும் புலனாகின்றது.

**வஞ்சினம் கூறல்**

தன்னலத்தால் சினம் எழுவதே பெரும்பான்மை. பொதுநலம் கருதியும்

சிறுபான்மை சினம் எழுதல் உண்டு. தமிழக வேந்தர்கள் பொது நல உணர்வுமிக்கவர்கள். நாடாளும் கடமையில் ஆர்வம் மிக்கவர். அவர்தம் ஆட்சிக்கு எவரேனும் இடையூறு செய்ய முயன்றாலும், அல்லது முயல்வதாகக் கேள்வியுற்றாலும் கொதித்தெழுந்து வஞ்சினம் மொழிந்துள்ளனர். ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன், பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், சோழன் நலங்கிள்ளி ஆகியோர் பாடிய வஞ்சினப் பாடல்கள் உள்ளத்து உணர்வு மிகுதியைப் புலப்படுத்தும் பாடல்களாக இருத்தலால் அக்கால அரசர்களுடைய உணர்வின் வெற்றியை அறிந்து அவர்தம் நாகரிகச் சிறப்பினைத் தெளிதற்கு மிக உதவுகின்றன.

வஞ்சினம் கூறிய வேந்தர்கள் பகைவரோடு பொருது அவரைப் புறம் கண்டு வெல்லுதல் சிறந்த கடமையாகக் கொண்டனர். அதனைக் கூறுமிடத்து அவர் உடன் மொழிந்த கடமைகள் அதனினும் உயர்ந்தவை. உள்ளத்தே நெடுங்காலம் உணர்வாய்க் கிடந்தவை என்று அறிதல் வேண்டும்.

*"சிறந்த பேரமர் உண்கண் இவளினும் பிரிக*
*அறநிலை திரியா அன்பின் அவையத்துத்*
*திறனில் ஒருவனை நாட்டி முறைதிரிந்து*
*மெலிகோல் செய்தேன் ஆகுக மலிபுகழ்*
*வையை சூழ்ந்த வளங்கெழு வைப்பிற்*
*பொய்யா யாணர் மையற் கோமான்*
*மாவனு மன்னெயில் ஆந்தையும் உரைசால்*
*அந்துவஞ் சாத்தனும் ஆதன் அழிசியும்*
*வெஞ்சின இயக்கனும் உளப்படப் பிறரும்*
*கண்போல் நண்பின் கேளிரொடு கலந்த*
*இன்களி மகிழ்நகை இழுக்கியான் ஒன்றோ*
*மன்பதை காக்கும் நீள்குடிச் சிறந்த*
*தென்புலம் காவலின் மாறியான் பிறக்கே'*[90]

இப்பாடல் பூதப்பாண்டியனின் உயர்ந்த மனிதநேயக் கோட்பாடுகளாக உணர்ந்து கூறியவற்றைத் தெரிவிக்கும் பகுதியாகும்.

*"..... ..... .... பொருந்திய*
*என்னிழல் வாழ்நர் சென்னிழற் காணாது*

*கொடியனெம் இறையெனக் கண்ணீர் பரப்பிக்*
*குடிபழி தூற்றும் கோலேன் ஆகுக*
*ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி*
*மாங்குடி மருதன் தலைவ னாக*
*உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பின்*
*புலவர் பாடாது வரைகவென் நிலவரை*
*புரப்போர் புன்கண் கூர*
*இரப்போர்க்கு ஈயா இன்மையான் உறவே'*[91]

பாண்டியன் நெடுஞ்செழியனது உள்ளத்தே மிக்கிருந்த மனிதநேய உணர்வுகள் இன்னின்ன எனக் காட்டும் பகுதியாகும்.

*''..... ..... பொருந்திய*
*தீதில் நெஞ்சத்துக் காதல் கொள்ளாப்*
*பல்லிருங் கூந்தல் மகளிர்*
*ஒல்லா முயக்கிடை என்தார் குழைக'*[92]

சோழன் நலங்கிள்ளி தன் உயிரினும் சிறந்ததாய் உள்ளத்தே வைத்துப் போற்றிய கொள்கையினை விளக்கும் பகுதியாகும்.

துணைவியோடு அன்பு கலந்து வாழும் கற்பு வாழ்க்கை, தக்கோரை நாட்டி அறம் காக்கும் அறிவுடைமை, நல்லோருடன் கூடி இனிது மகிழும் உறவு உடைமை, காக்கும் மாண்புடைமை இந்நான்கையும் பூதப்பாண்டியன் சிறந்தனவாக உணர்ந்து தன் வாழ்க்கையில் போற்றியது தெளிவாகின்றது. என்னை எள்ளிச் சிறுசொல் சொல்லிய வேந்தரைத் தாக்கி வெல்லேனாயின் என் குடிகள் கண்ணீர் பரப்பும் கொடுங்கோலன் ஆவேனாக என்னும் கருத்தில் அவன் ஆட்சி முறையைப் பற்றிக் கொண்டிருந்த உயர்ந்த கொள்கை தெளிவாகின்றது.

''புலவர் பாடல் நிரம்புமாறு அன்பும், அறமும் விளங்க வல்ல நாடாக இதனை நான் ஓம்பி அப்பெருமக்களை வரவேற்க வேண்டும்' என்பதே அரசன் உள்ளத்தே ததும்பிய மனிதநேய உணர்வு. ஓங்கிய சிறப்பு, உயர்ந்த கேள்வி, உலகமெடு நிலைஇய புகழ் இவற்றைப் புலவரிடம் காணும் பேறு பெற்றவன் பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன். 'பகைவரை வெல்லவில்லையானால் என்னால் புரக்கப்படுவோர் துன்பப்படுமாறும், இரப்போர்க்கு

இல்லை என்னுமாறும் என் கடமையினின்றும் தவறுவேனாக'' எனக் குறித்தான். இரப்பவர்க்கு ஈய ஒட்டாத நிலையினையே வறுமை என்றும் கருதியுரைத்தான். நெடுஞ்செழியன் நயனுடையான் என்ற பண்பு இதனால் தெளிவாகின்றது.

*''நயனுடையான் நல்கூர்ந்தான் ஆதல் செயும்நீர*
*செய்யாது அமைகலா வாறு''*[93]

குடிகள் கண்ணீர் விட்டு வருந்தாதவாறு இனிது காத்தல், புலவர் பாடுமாறு நாட்டைச் சிறப்புறச் செய்தல், தன்னைச் சார்ந்தவர் வறுமையைக் களைந்து வாழ்வித்தல் இம்மூன்றும் நெடுஞ்செழியன் நெஞ்சத்தே மிக்கிருந்த மனிதநேயக் கோட்பாடுகளாகும்.

சோழன் நலங்கிள்ளி தக்க தலைவனாய் விளங்கி உலகைக் காக்க விரும்பிய பேருணர்விற்கு அடிப்படையாய் விளங்கியது. அவன் ஒழுக்கத்தைப் போற்றிய விழுப்பமே. அதனாலேயே பண்பட்ட காதல் வாழ்வைப் போற்றுவானாகி 'யான் சோர்ந்து தோற்பேனாயின் ஒழுக்கம் கெட்டு பொதுப் பெண்டிர்பால் வாழ்ந்து இழிவு உறுவேனாக' என்று தன் உறுதியை விளக்கினான்.

தமிழ்நாட்டையாண்ட பெருவேந்தர் பாடிய பாடல்களுள் தம் உள்ளத்து உணர்வுக்கு, வஞ்சினம் கூறிய கூற்றுகளாகச் சிறந்துள்ளவை இம்மூன்றுமாம். அவை சினம் பொங்கக் கூறியவையாயினும், உண்மைக் கொள்கைகளை உணர்வு ததும்ப விளக்குவன. அவ்வாறு வஞ்சினம் கூறுவதாக அமைந்த பாடல்களில் நாகரிக நெஞ்சினராகிய அவ்வேந்தர் காதல்மிக்க கற்பு வாழ்வினையும், அறம் திறம்பாச் செங்கோல் முறையினையும், குடிகளின் கண்ணீர் காணாக் காவல் நெறியினையும், புலவர் விரும்ப வாழும் பெருநிலையினையும், வறுமையைத் துரத்தி வெல்லும் வண்மையினையும் உயர்ந்தனவாகக் கொண்டு போற்றிய சிறப்பெல்லாம் தெளிவாகின்றது. இப்படிப்பட்ட வேந்தர்களைக் கொண்டிருந்த தமிழகம், அதே சீரில் வளர்ந்து வராமல், ஏனோ தாழ்ந்தது என்று எண்ணும்போது, ஏக்கமும், துக்கமும் நெஞ்சைப் பற்றுகின்றன.

## குறுநில மன்னர்களின் அரசியல் நிலை

பிறநாட்டார் தமிழகத்தின் மேற்படைஎடுத்து நுழையாதபடி அவர்களைத் தடுத்து, பொருது அழித்தற்குரிய படைவீரர் இம்மலைப் பகுதிகளில் வேந்தர்களின்

ஆணையால் தங்கியிருந்தனர். பாரியின் முன்னோர் பறம்பு மலையையும், பேகனுடைய முன்னோர் பொதினி மலையையும், நள்ளியின் முன்னோர் தோட்டி மலையையும், ஆய் அண்டிரனின் முன்னோர் பொதிய மலையையும், காரியின் முன்னோர் முள்ளூர் மலையையும், ஓரியின் முன்னோர் கொல்லி மலையையும், அதியமான் குடியினர் குதிரை மலையையும், நன்னன் முன்னோர் நவிர மலையையும் தமக்குரிய தலைமை இடங்களாகக் கொண்டு ஆட்சி புரிந்து வந்தனர்.

வேந்தரால் நன்கு மதிக்கப்பெற்ற இப்படைத் தலைவர்கள், அரசனுடைய ஆணையால் தாங்கள் தங்கிய நிலப்பகுதிகளின் வருவாயைப் பெற்றுத் தங்களுக்குரிய சிறுநிலப் பகுதிகளை ஆளும் குறுநில மன்னர்களாய் அமைந்து மூவேந்தர் ஆணையின் கீழ் அடங்கி வாழ்ந்தார்கள். தமிழ் வேந்தர்க்குப் போர்க் காலங்களில் படைத்துணையாய் நின்று உற்றுழி உதவுவதே இக்குறுநில மன்னர்களின் கடமையாகும். பெருநில வேந்தராகிய சேர, சோழ, பாண்டியர்களும், அவர்க்கும் படைத்துணை செய்யும் கடமை மேற்கொண்ட இக்குறுநில மன்னர்களும் ஒற்றுமை உடையவர்களாய் நின்று தமிழகத்தைக் காவல் புரிந்து வந்தமையால், தமிழர் அரசியல் பிற நாட்டாரால் சிதைக்கப்படாது உரிமையோடு வளர்வதாயிற்று.

## அமைச்சர் மனித நேயம்

### மன்னுயிர் பேணும் அமைச்சன்

அறம் வளரும் அரசியல், அன்பு, அருள், அறிவு, இரக்கம் என்னும் நான்கினையும் மூலமாகக் கொண்டதாகும். அறநெறி கொண்டு அறம் வளரும் வண்ணம் அரசு புரியும் நாட்டிற்குரிய உடைமைகள், அணிகலன்கள், அன்புடைமை, அருள் உடைமை, அறிவுடைமை, இரக்கமுடைமை, இந்நான்கும் இல்லாத நாட்டின் அரசு அறம் வளரும் அரசாக அமைய இயலாது எனலாம்.

அரசியலின் அரசன், அவன் துணைவன் அமைச்சன் ஆகிய இருவருமே மேற்கூறிய அந்நான்கு பண்புகளையும் கொண்டிருத்தல் வேண்டும். இல்லையென்றால் அவர்கள் நெறிதவறிப் பிழை செய்துவிட நேரும். அன்பின் வழி நிகழும் அரசே அறநெறியில் நிகழும் அரசாகும். இன்பம் மிக வேண்டுமெனில் அன்பு நெறி வேண்டும். அன்பினைத் தவிர்த்து பிற எந்நெறியாலும் இன்பத்தை அடைய இயலாது. அரசு, அன்பு நெறியினையே ஆக்க நெறியாகக் கொண்டு நடைபெறுமானால் அறம் இயல்பாக வளரும்.

## அமைச்சரே தூதுவர்

அமைச்சர் ஔவையார் தூதுவராகச் சென்று தொண்டைமானிடம் சொன்ன செய்தி புறநானூற்றில் அமைந்து விளங்குகிறது. ''இவ்வே பீலியணிந்து''[94] என்று தொடங்கும் இப்பாடலில் ஔவையின் தூதுரையில் அமைந்த கருத்தும், உரைத்துள்ள முறைமையும் எண்ணுந்தோறும் இன்பம் பயப்பனவாகும். தொண்டைமானைப் புகழ்வது போன்று பழித்தும், அதியமானைப் பழிப்பது போன்று புகழ்ந்தும் தூது உரை புகன்றுள்ளார். இம்முறை தூதரிடத்து இருக்க வேண்டிய இன்றியமையாத பண்பாகும். இப்பாடலின் மூலம் அமைச்சருக்கு மன்னன் மீதுள்ள நேயம் புலப்படுகிறது.

அங்ஙனம் வரும் அமைச்சனே மதிநலம் உடைய அமைச்சனாவான். அம்மதிநலமுடைய அமைச்சனை அருகில் கொண்ட அரசன், அரசருலகில் ஒளிபெற்று, அல்லல் இன்றி, அறம் பெருக்கி, நாட்டு நலம் பேணி ஒழுகும் நல்லவனாவான். நல்ல அமைச்சன் உள்ள காரணத்தால் நாடு நலம் பெற்றுத் திகழ்கின்றது.

> *''எவ்வழி நல்லவர் ஆடவர்*
>
> *அவ்வழி நல்லை வாழிய நிலனே'*[95]

இவ்வாறு நாடு நலம் பெற நாட்டுத் தலைவன் புகழ்பெற மூலமாக அமைந்த அமைச்சனை அந்நாட்டுத் தலைவன் தக்க முறையில் பேணுதல் கடமையாகும். தன் அமைச்சனை அவ்வரசன் பேணுதலே பாராட்டுதலாகவும், போற்றுதலாகவும் அமைகின்றது.

## பாரியின் நல்லமைச்சர்

கபிலர் பாரியின் அருளையும், வள்ளன்மையையும், அறிவையும் பிறவற்றையும் கேட்டறிந்து இன்புற்றார். கபிலரின் பெருமையைப் பாரி மன்னன் முன்பே கேள்விப்பட்டிருந்தான். கபிலரின் பாடல்களைக் கேட்ட பாரி, அப்பாடல்களின் பொருட்சிறப்பை அறிந்து மிகவும் மகிழ்ந்தான். அவரைத் தன் அரண்மனையிலேயே தங்கி இருக்குமாறு வேண்டினான். அவரும் அவன் வேண்டுகோளுக்கு இணங்கி அங்கு தங்கினார். அன்பின் பிணைப்பால், நட்பின் வளர்ச்சியால் பாரி, கபிலரைத் தன் நல்லமைச்சராக அமைத்துக் கொண்டான். காவலராகிய பாரி, பாவலராகிய

கபிலரை அமைச்சராகக் கொண்டு கருணையாட்சி புரிந்தான் என்றால், அந்நாட்டு ஆட்சியின் சிறப்பை நம்மால் உணர்ந்து கொள்ள முடிகிறது.

நடுவுநிலைமையும், அருட்குணமும், வினை ஆண்மையும் உடையவர்களையே அரசர்கள் தங்களுக்கு அமைச்சர்களாகத் தேர்ந்து கொண்டார்கள். நடுவுநிலைமையைக் கைவிட்டு நீங்கி, அருள் இல்லாத அமைச்சன் தான் விரும்பியதைச் சொல்ல, அதுகேட்டு மன்னன் முறைபிறழ்ந்து நடப்பான் என்றால் அவன் செங்கோலாட்சியின் வெம்மையினால் குடிமக்கள் பெரிதும் வெதும்பித் துன்புறுவர் என்பதனைச் சங்கத்தமிழ் வேந்தர்கள் நன்றாக அறிந்திருந்தார்கள்.

### அமைச்சர் பெருமை

அரசியலாகிய வண்டியை ஓட்டிச் செல்பவன் அரசன் என்றும், அவ்வண்டியில் பூட்டப் பெற்றிருக்கும் காளைகள் அமைச்சர்கள் என்றும் கொள்ளலாம். வண்டியை ஓட்டுபவனாகிய அரசன் நல்ல நெறியில் மிகவும் கவனமாக ஓட்டிச் செல்ல வேண்டும். இல்லையென்றால் அமைச்சர்களாகிய காளைகள் தவறான வழியில் இழுத்துச் சென்று அரசியலை கவிழ்த்துவிடக் கூடும். எனவே, அரசன் அமைச்சர்களை மிகவும் கவனமாகக் கொண்டு, அரசியலாகிய வண்டியை அறநெறியினின்று சிறிதும் வழுவாமல் கொண்டு செல்ல வேண்டும் என்பதைத் தொண்டைமான் இளந்திரையனின்,

*''கால்பார் கோத்து ஞாலத் தியக்கும்*
*காவற் சாகாடு உகைப்போன் மாணின்*
*ஊறின் றாகி யாறினிது படுமே*
*உய்த்தல் தேற்றா னாயின் வைகலும்*
*பகைக்கூழ் அள்ளற் பட்டு*
*மிகப்பஃ றீநோய் தலைத்தலைத் தருமே'*[96]

பாடலால் அறியலாம். இப்பாட்டின் கருத்தைத் திருத்தக்க தேவர்,

*''ஆர்வலஞ் சூழ்ந்த ஆழி யலைமணித் தேரை வல்லான்*
*நேர்நிலத் தூரு மாயின் நீடுபல் காலஞ் செல்லும்*
*ஊர்நில மறிதல் தேற்றா தூருமேல் முறிந்து வீழும்*
*தார்நில மார்ப வேந்தர் தன்மையு மன்ன தாமே'*[97]

என்று கூறியுள்ளார். அமைச்சன் அரசியலுக்கு எத்துணையளவிற்கு இன்றியமையாதவன் என்பதை இப்பாடலின் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது.

அமைச்சன் இல்லாத அரசியல், காளைகள் பூட்டப்பெறாது வண்டி ஓட்டுவதைப் போன்றதாகும். அரசனும், அமைச்சனும் அரசியலின் இரு கண்களாவர். இருகண்களும் நலமாக இருந்தால்தான் எல்லாச் செயல்களையும் இனிதாக எடுத்தாற்ற இயலும். எனவே, அறிவும், ஆண்மையும், அனுபவமும் கொண்ட அரசனாய் இருந்தாலும், அவ்வரசன் தவறாது நல்லமைச்சர் துணை கொண்டு நடத்தும் அரசினையே நாடுகள் அனைத்தும் போற்றிப் புகழும். அரசியல் தடையின்றி வளர வேண்டுமானால், அவ்வாட்சிப் பேரவையில் அறிவின் உருவமாகவும், ஆண்மையின் சிகரமாகவும் அமைந்து, ஒளிபடைத்த பயன்மிகுந்த கண்ணாகவும் அமைச்சன் விளங்குதல் வேண்டும்.

சங்க காலத்தில் அரசர் பெருமக்களுள் சிலர்தான் அறிவினால், இயல்பினால் மேம்பட்டுச் சான்றோர் என்ற சிறந்த நிலையினை எய்தினர். ஆனால், அமைச்சர்கள் அனைவரும் சான்றோர் நிலையில் நின்று காணப்படுகின்றனர். எவ்வாறெனில் அமைச்சனுக்குரிய இலக்கணம் முழுவதும் சான்றோரிடத்திலும் பொருந்தி விளங்குகின்றன. இங்கு சங்கப் புரவலர்களிடத்து சான்றோர்களாகிய புலவர் பெருமக்கள் காட்டிய மனித நேயத்தினைக் காணலாம். அமைச்சரின் நிலையில் புலவர்களாகிய சான்றோர்கள் நின்று கடனாற்றியுள்ளனர்.

சங்க காலத்தில் குறுநில வேந்தருள் ஒருவரான அதியமான் நெடுமான் அஞ்சி ஈகையால் இணையற்று விளங்கினான். வீரத்தால் வெற்றி பல கொண்டான். அவனுடைய படைவளத்தையும், கொடை வளத்தையும் பலர் வாயிலாகக் கேட்டறிந்த ஔவையார் அவனைக் காண விரும்பி, அவன் ஊராகிய தகடூரை நோக்கிச் சென்றார். அதியமானின் படை, கொடை வளத்தைக் கண்டு மகிழ்ச்சி அடைந்தார். அம்மன்னவனும் ஔவையின் புலமை நலத்தையும், பாநலத்தையும் கண்டு களிகூர்ந்தான்.

ஔவையை தன்மதி அமைச்சராகவும், அவைப் புலவராகவும் அமைத்துக் கொண்டான். தன் படை வளத்தினால் பல நாட்டு மன்னரையும் வென்று, பகைவரைப் பெருக்கி வைத்திருந்த அதியமானுக்கு ஔவையின் அறவுரையும், அறிவுரையும் மிகவும் பயன் உள்ளதாக இருந்ததைக் காணலாம். இக்காரணம் கொண்டே

அதியமான் தன் அமைச்சரைவிட்டுப் பிரிய விரும்பவில்லை. எப்போதும் அமைச்சரின் அருகிலிருந்து அவருடைய அறிவுரையினையும், அறவுரையினையும், ஆறுதல் உரையினையும் கேட்டுக் களித்த வண்ணம் இருந்தான். தன்மதி அமைச்சரை மிகவும் கவனமாகப் பேணியும் ஒழுகினான். இது அமைச்சர்களுக்கு அக்கால அரசியலில் இருந்த உரிமையைச் சுட்டுகின்றது.

### அதியமானின் வீரத்தை ஔவை புகழ்தல்

அதியன் உடல் வலிமையும், படைவளமும் பெரிதும் கொண்டு பகைவர் பலரையும் கொண்டிருந்தான். அப்பகைவரால் அதியமானுக்கு ஊறு நேராதவாறு காத்தல் அமைச்சராகிய ஔவையார் தம் கடமை எனக் கருதி, தம்மைப் பேணும் அதியமானும், அவன் நாட்டு மக்களும் நலம் மிக வாழவேண்டும் என்பதில் பெரிதும் நாட்டம் கொண்டார். தகடூர் மீது படையெடுத்து வர முற்படும் பகையரசர்களிடம் எல்லாம் பரிசிலாளரைப்போல் சென்று அவர்கட்கு நல்ல அறிவுரைகளைச் சொல்லி வருவார். அவர்களிடமெல்லாம் அதியமானின் வலிமையையும், படை வளத்தையும் எடுத்துச் சொல்வார். அங்ஙனம் பகைவர்களிடம் சென்று சொல்லுங்கால், அதியமான் தன்னிடம் வரும் இரவலர்க்கு எண்ணற்ற தேர்களைப் பரிசிலாகக் கொடுப்பான். புலவர் அவன் தேர்ப்படைக்கு மழைத் துளிகளை உவமையாக மொழிவர்.

அவன் நாட்டுத் தச்சர் ஒவ்வொருவரும் ஒரு நாளைக்கு எட்டுத் தேர்களைச் செய்யும் தொழில்வன்மை உடையவர். பகைவர் கோட்டை வாயிற் கதவினைக் குத்திச் சிதைக்கும் குன்றனைய யானைப் படையையும், மிகுதியாகக் கொண்டிருக்கின்றான். பகை வீரர்கள் அடிக்கும் கோலுக்கு அஞ்சாது எதிர்க்கும் அரவினை ஒத்த ஆண்மை படைத்தவர்களாவர். இத்துணைப் பெரும் படைகளை மிகக் கொண்டவன் அதியமான். நான் சொல்லும் அறிவுரைகளைக் கேட்டு நீங்கள் நடக்கவில்லை என்றால், நீங்கள் உங்கள் உரிமை மகளிரைப் பிரிந்து உயர்ந்தோர் உலகம் புகுதல் உறுதி என்று அதியனின் படை வளங்களையும், விறல்கெழு வன்மையினையும் எடுத்துச் சொல்லி பகைவரின் போர் எழுச்சியை அடக்கி வருவதுண்டு. இதிலிருந்து நாட்டில் நடக்கவிருக்கும் போர்களைத் தடுத்து அமைதி நிலவ அமைச்சராகிய ஔவை துணை புரிந்த தன்மை புலப்படுகிறது.

மேலும் அதியமானின் பகைவர்களிடம் சென்று நல்லுரை புகன்றதுடன் நில்லாது, அதியமானுடைய போர் வேட்கையைக் குறைக்கவும் முயன்றுள்ளார்.

*"அச்சொடு தாக்கிப் பாருற்று இயங்கிய*
*பண்டச் சாகாட்டு சூழ்ச்சி சொலிய*
*அரிமணன் ஞெமரக் கற்பக நடக்கும்*
*பெருமிதப் பகட்டுக்குத் துறையு முண்டோ*
*எழுமரம் கடுக்கும் தாடோய் தடக்கை*
*வழுவில் வன்கை மழவர் பெரும*
*இருநில மண்கொண்டு சிலைக்கும்*
*பொருநரும் உளரோ நீகளம் புகினே'*[98]

அமைச்சர் ஔவை சொல்லும் அறிவுரையைக் கேட்டு சிலபோது அதியமான் அடங்காமல் சினந்து 'பகைவரை அச்சுறுத்தல், பணிய வைத்தல் இயலாது. ஆகையால் அப் பகைவரைப் பொருது வெல்லுவேன்' என்று எழுச்சி கொள்ளுவான். ஔவை சிறிதும் அச்சமின்றி மேலும் இடித்துரைத்து அறிவுரை புகட்டி நாட்டின் அமைதியையும், குடிகளின் வாழ்வினையும் காக்கப் பெரிதும் முயன்றுள்ளார்.

ஔவையார் வள்ளுவர் வகுத்துக் காட்டிய நெறியின்படி அமைச்சராக நின்று விளங்கியுள்ளமை இனிது புலனாகின்றது. சிறந்த கல்வி அறிவினையும், உலகியல் அறிவினையும், அரசியல் அறிவினையும் கொண்டுள்ளார். செய்யத் தகுந்ததை நன்கு சிந்தித்து நலம் மிகச் செய்யும் திறமை கொண்டுள்ளார். எனவே தான் பரிசிலராகச் சென்று பகைவரிடம் தக்க முறையில் அறிவுரை கூறியுள்ளார். ஔவை பலவிதத்திலும் வள்ளுவர் வகுத்த இலக்கணத்தில் பொருந்தி, அறநெறி வழுவாது, அமைச்சுத் தொழிலைப் புரிந்து சிறந்த சான்றோராக விளங்கியுள்ளார். அதியனும் அவரை அமைச்சர் என்று கொள்ளாது, சான்றோராகவே கொண்டு பெரும் மதிப்புடன் பேணி வந்துள்ளான் என்பதிலிருந்து ஔவையிடம் காட்டிய கருணை உள்ளம் புலப்படுகின்றது.

இதுகாறும் சங்க இலக்கியமாகிய புறநானூற்றின் மூலம் அமைச்சர்கள் நாட்டிற்குச் செய்து வந்த சேவை, அமைச்சர்களின் பெருமை, செய்ய வேண்டிய தொண்டு, அரசனிடத்தில் ஏற்பட்ட மதிப்பு, அரசருக்கும், அமைச்சருக்கும் ஏற்பட்டிருந்த உறவு, அரசர்களால் பாராட்டப்பெற்ற நிலைமை, அரசரும் அமைச்சரும் கடைப்பிடிக்க வேண்டிய முறைகள் முதலான மனிதநேயப் பண்புகளை நம்மால் அறிந்து கொள்ள முடிகிறது.

## அக்கால அரசியல் நிலை

சங்க காலம் தமிழகத்தின் பொற்காலம். மக்கள் நன்மை கருதி மன்னர்கள் ஆண்ட காலம். நீதியும், நேர்மையும் நிலைபெற்ற காலம். உயிருள்ளவை, உயிரில்லாதவை ஆகிய அனைத்திற்கும் அவ்வவற்றுக்கென ஓர் இயற்கையுண்டு. இயல்பு உண்டு. ஆயின் மனித மனம் ஒன்று மட்டும் அதன் இயல்பு இன்னது, இன்னின்ன சூழலில் இவ்விவ்வாறு செயலாற்றும் என்று அளவிட்டுக் கூறவியலாத தன்மை கொண்டதாகும். இயற்கையை ஆராய்ந்து, அதன் தன்மையை அறிந்து அதனைக் கட்டுப்படுத்தி விண்ணில் உலவக் கற்றுக் கொண்ட இன்றைய மனிதனாலும் மனத்தின் போக்குகளை உணர முடியவில்லை.

அறிவியல் கண்டுபிடிப்புகளால் உலகமே ஒன்றுபட்டு வரும் இந்நிலையிலும், மனித மனம் போட்டி, பொறாமை, ஆணவம், அதிகார மனப்பான்மை, தன்னலம் ஆகிய குணக்கேடுகளிலிருந்து தப்ப இயலாமல் பிரிந்து பிரிந்து நின்று பூசலிட்டு வருகின்றது. அடுதலும் தொலைதலும் புதுவ தன்று எனக் கூறியதுபோல் குணக்கேடுகளும் புதுமையானதன்று. ஆயின் சமுதாயக் கட்டுப்பாடும், நீதிநெறி முறைக்கோட்பாடுகளும், மனப்பயிற்சியும் ஓரளவுக்கு இக்குணக்கேடுகளைக் குறைக்கும். ‘அடிமேல் அடி வைத்தால் அம்மியும் நகரும்’ என்பதுபோல் அறவழிகளையே வற்புறுத்தி, அறவாழ்வு வாழும் முயற்சியையே அனைவரும் மேற்கொண்டால் குணக்கேடுகள் குறையும். இக்கட்டுப்பாடு வாழ்க்கை வேரிலிருந்து தொடங்குவதுபோல், தலைமை இடமாகிய மன்னரிலிருந்து தொடங்க வேண்டும். குணக்கேடுகள் எல்லோர்க்கும் பொதுவானதாயினும் செல்வம், அதிகாரம் என்ற துணைக்கரங்கள் கொண்டவரிடம் மிகுதியாகக் காணும் வாய்ப்பிருக்கிறது. இறைநிலைக்கு ஏற்றி வைத்துப் போற்றப்பட்ட அக்கால மன்னர் யாருக்கும் கட்டுப்பட்டு ஆட்சிபுரிய வேண்டிய தேவையில்லை.

இத்தனை இருந்தும் அக்காலத் தமிழ் மன்னர் தமிழ் மக்களின் நன்மை கருதி நேர்மைக்கும், நீதிக்கும் உட்பட்டு ஆட்சி புரிந்தனர். ஊருக்கொரு நீதி, தனக்கொரு நீதி என்றில்லாமல் தம்மையும் அந்நீதிக்கு உட்படுத்திக் கொண்டு ஆண்டனர். தவறு கண்டபொழுது தமக்கே தண்டனையும் அளித்துக் கொண்டனர். நல்ல மன்னருள்ளும் சில தவறுகள் நேரத்தான் செய்தன. அப்போது தமிழ்ச் சான்றோர்கள் பொங்கி எழுந்து மன்னனாயினும் அத்தவற்றைச் சுட்டிக்காட்டியுள்ளனர். தூற்றியுள்ளனர். வாய்ப்பு

கிடைத்த போதெல்லாம் திருத்தியும் உள்ளனர்.

'கள்வரைக் கோறல் கொடுங்கோல் அன்று' ஆயினும் நீரில் மிதந்து வந்த மாங்கனியைக் காவல் மரத்துக்கனி என்று அறியாது உண்ட பெண்ணுக்குக் கொலைத் தண்டனை விதித்தது கொடுங்கோலாகும். அத்தகைய செயல் செய்த மன்னனை 'பெண் கொலை புரிந்த நன்னன்' என்று புலவர் உலகம் தூற்றியது. இவ்வாறு செயல் நடந்த பிறகு தூற்றுவதன்றி, செயல் நடக்கும் முன்பே அக்கொடுஞ்செயல்கள் நடைபெறாது தடுத்தும் உள்ளனர் ஆன்றோர்கள்.

புகழ்வதுபோல் உண்மையை உளங்கொள்ளுமாறு எடுத்துக்காட்ட தொண்டைமானுக்கும், அதியமானுக்கும் இடையே போர்நிகழாமல் தடுத்தார் தூதாகச் சென்ற ஔவையார். இத்தகைய நிலைகள் சில இருந்ததால்தான் மன்னர்க்குப் பொதுவாக அறிவு சுட்டிய புலவர்கள் சில நேரத்தில் இடித்துக் கூறியும் அறிவுறுத்தியுள்ளனர். இடித்துரைக்க ஆள் இல்லாத மன்னன் கெடுப்பாரின்றியும் தானே கெடுவான் என உணர்ந்த அக்கால மன்னர்களும் செவி கைப்பக் கூறப்படும் இடிப்புரைகளுக்கும் செவி சாய்த்துத் தம்மையே திருத்திக் கொண்டுள்ளனர். அக்காலப் புலவர்களும் தம் நலனையோ, இன்பத்தையோ கருதி, புகழ்பாடியே காலம் கடத்தாது மன்னரின் குற்றத்தை அவர் முன்னிலையிலேயே எடுத்துக் கூறும் மனத்திண்மை பெற்றிருந்தனர்.

## புலவர் மனிதநேயம்

### புலவர் பண்பும் பெருமையும்

பலதிறப்பட்ட அறிவை ஒருங்கே கொண்ட பேரறிவுடைமை புலமை எனப்படும். அதனை உடையவர் புலவர் எனப்பட்டனர். இதனை, ''நுணங்குநுண், பனுவற் புலவன் பாடிய''[99] என்று இப்பாடல் மூலம் அறிந்து கொள்கிறோம். அகத்தே கல்லிக் கல்லி ஆழ்ந்து பயிலும் கல்வியறிவுடையோர் புலத்தே புலனறிவின் துணையுடன் அது செய்வதற்கு உரியவராகலின் புலவர் எனப்படுகின்றனர். அவரது சிறப்பைக் கூறுதல் புலவர் பெருமை எனப்படும். இதனை,

*''யாங்குஅறிந் தனனோ தாங்களும் காவலன்*
*காணாது ஈத்த இப்பொருட்டு யானோர்*
*வாணிகப் பரிசிலன் அல்லேன் பேணித்*
*தினையனைத்து ஆயினும் இனிதுஅவர்*
*துணையளவு அறிந்து நல்கினர் விடினே''*[100]

என்ற இப்பாடல் புலவர் பெருஞ்சித்திரனாரின் பெருமிதப் பண்பைப் புலப்படுத்துகிறது.

**புலவர்களின் பரிசில் வாழ்க்கை**

மன்னர்கள் புலவர் பெருமக்களிடத்துக் கொண்டிருந்த மனித நேயத்தையும் பெருமதிப்பையும் எடுத்துரைக்கிறது. புலவர்களும் அதே அருள் நெஞ்சம் உடையவர்களாகவே காணப்பட்ட நிலையினை சிலபாடல்கள் எடுத்துரைக்கின்றன. உலகத்தார்க்கு அறிவு புகட்டும் புலவர் வாழ்க்கை அறிவுச் செல்வம் நிறைந்ததாக இருப்பினும் பொருட் செல்வ நிலையில் வறுமை நிறைந்தே விளங்கும். அவர் வறுமைக்கு அஞ்சாத பரிசில் வாழ்க்கையினை மேற்கொள்ளும் பண்பினர். புலவரின் மன இயல்பை,

*''வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி*
*நெடிய என்னாது சுரம்பல கடந்து*
*வடியா நாவின் வல்லாங்குப் பாடிப்*
*பெற்றது மகிழ்ந்து சுற்றம் அருந்தி*
*ஓம்பாது உண்டு கூம்பாது வீசி*
*வரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழ்க்கை''*[101]

இப்பாடலில் பறவைகளைப்போல் காட்டுவழி கடந்து வந்த குற்றமற்ற நாவால் மன்னனைப் பாடிப் பெற்றுச் சென்ற பரிசிலைத் தான் மட்டும் வைத்துக் கொள்ளாது சுற்றத்தார் அனைவரையும் மகிழ்விக்கச் செய்யும் புலவர்களின் பரந்த உள்ளப்பண்பையும், புலவர்களின் வாழ்க்கை முறையினையும் அறிந்து கொள்ள முடிகிறது.

இதிலிருந்து தமிழர்களிடத்தில் மன்னர்களுக்கு எத்துணை மதிப்பும், பெருமையும் இருந்தனவோ, அத்துணை மதிப்பும், பெருமையும் கல்வி, வேள்வி, ஒழுக்கம் ஆகியவற்றில் சிறந்த புலவர்கட்கும் இருந்தன. புலவர்கள் மன்னர்களையும் தம் அறிவுரைகளால் நன்னெறி செலுத்தும் மாண்புடையவர்களாக விளங்கினார்கள். சங்ககால மன்னர்கள் புலவர் மொழி கேட்டு ஒழுகினார்கள் என்பதற்கான இலக்கியச் சான்றுகள் பல உள்ளன.

இத்தகைய மதிப்பும், சிறப்பும் கொண்ட புலவர்கள் தாம் வறுமையில்

வாடினாலும், தம் மதிப்பை இழக்கவில்லை. அவர்கள்,

*''முற்றிய திருவின் மூவர் ஆயினும்*
*பெட்பின்றி ஈதல் யாம்வேண் டலமே''*[102]

என்னும் சிறந்த கொள்கையுடையோராக இருந்தனர்.

அன்பின்றிக் கொடுப்பினும், காலம் தாழ்த்துக் கொடுப்பினும், நேரில் காணாது பிறர் வாயிலாகக் கொடுப்பினும், குறையக் கொடுப்பினும் அப்பரிசினை அப்புலவர் பெருமக்கள் பெறுவதில்லை என்பதனை,

*''இரவலர் புரவலை நீயு மல்லை*
*புரவலர் இரவலர்க் கில்லையு மல்லர்*
*இரவலர் உண்மையும் காண்இனி இரவலர்க்கு*
*ஈவோர் உண்மையும் காண்இனி நின்னூர்க்*
*கடிமரம் வருந்தத் தந்தியாம் பிணித்த*
*நெடுநல் யானையெம் பரிசில்*
*கடுமான் தோன்றல் செல்வல் யானே''*[103]

இப்பாடலில் வெளிமானின் தம்பியாகிய இளவெளிமான் கொடுத்த பரிசிலை பெருஞ்சித்திரனார் பெறாது சென்று, குமணனைக் கண்டு யானைப் பரிசில் பெற்று வந்து அதனை வெளிமானின் ஊர்க்காவல் மரத்தில் பிணித்துவிட்டுச் சென்று வெளிமானைக் கண்டு கூறிய அறிவுரை புலவர்களின் பெரும்பண்பை உணர்த்துவதாகும்.

மன்னர்கள் தவறு செய்யும் காலங்களில் அவர்கள் உள்ளம் திருந்துமாறு அறிவுரைகள், அறநெறிகள் கூறும் பண்புடையவர்களாக அக்காலப் புலவர்கள் விளங்கினார்கள். உறவுள்ள இடத்தில் பகையுமிருக்கும். ஆயின் இனத்துக்குள்ளே நடக்கும் போர் வெளியில் தெரிந்தால் வெட்கக்கேடு என்று உடன் பிறந்தார்க்கிடையே நடைபெற இருந்த போர் தடுக்கப்பட்டது. சோழன் நலங்கிள்ளியும், நெடுங்கிள்ளியும் போர் புரிய முற்பட்டபோது அப்போரை நிறுத்த வேண்டிக் கோவூர் கிழார் என்பார்,

*''ஒருவீர் தோற்பினும் தோற்பதும் குடியே*
*இருவீர் வேறல் இயற்கையு மன்றே, அதனால்*
*குடிப்பொருள் அன்றுநுஞ் செய்தி கொடித்தேர்*

*நும்மோ ரன்ன வேந்தர்க்கு*

*மெய்ம்மலி யுவகை செய்யுமிவ் இகலே''*[104]

என்று அறநெறி கூறியதாக புறநானூற்றில் காணப்படுகின்றது.

இப்புலவர் பெருமக்கள் கொடியது கண்டவிடத்து மன்னராயினும் கண்டிக்கத் தவறவில்லை. ஒருமுறை சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் பகை மன்னரது குழந்தைகளை சிறைப்படுத்தி அவர்களை யானைக் காலில் இட்டுக் கொல்லவும் துணிந்துள்ளான். இந்நிலையில் மனிதநேயம் கொண்ட புலவர் கோவூர் கிழார் தம்முடைய புலமைத் திறத்தால் மன்னர் மனதை மாற்றி அவனது பரம்பரையினரது அருட்குணத்தை எடுத்துரைத்து அவன் செய்ய இருந்த கொடிய செயலையும் சுட்டிக்காட்டி மன்னனைப் பழியிலிருந்தும், குழந்தைகளைத் துன்பத்திலிருந்தும் காத்தனர்.

மலையமான் திருமுடிக்காரியின் மக்களைச் சோழவேந்தன் கிள்ளிவளவன் யானைக்காலில் இட்டுக் கொல்ல முயன்றபோது,

*''கேட்டனை யாயின்நீ வேட்டது செய்ம்மே''*[105]

என்று உரிமையோடு மன்னனைக் கடிந்துரைத்தார். இளந்தத்தன் என்ற புலவனை ஒற்றன் என தவறாகக் கருதி, சோழ மன்னன் ஒருவன் கொல்லத் துணிந்த போதும் கோவூர் கிழார் கூறிய அறிவுரைகள் புலவர் மனிதநேயப் பண்பாட்டிற்குச் சிறந்த எடுத்துக் காட்டுகளாகும்.

சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனும், பாண்டியன் வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதியும் ஒருங்கிருந்த காட்சியைக் கண்ட புலவர் உள்ளம் உவந்து 'நீவீர் இருவரும் இன்று போலவே என்றும் உள்ளம்கலந்து வாழ்வீர்களாக' என்று வாழ்த்தினார். இதனை,

*''... நல்ல போலவும் நயவ போலவும்*

*தொல்லோர் சென்ற நெறிய போலவும்*

*காதல் நெஞ்சின்றும் இடைபுகற்கு அலமரும்*

*ஏதின் மாக்கள் பொதுமொழி கொள்ளாது*

*இன்றே போல்கநும் புணர்ச்சி''*[106]

இவரது வாழ்த்தினின்று தமிழ் மன்னர்கள் ஒருமை கொண்டு விளங்க வேண்டும்

என்று புலவர்கள் பேரார்வம் கொண்டிருந்தமையும், புலவர்களின் வாழ்த்தும் பண்பும் விளங்குகின்றன.

புலவர் பெருமக்களிடத்து மன்னர்கள் கொண்டிருந்த மனித நேயத்தையும் பெருமதிப்பையும் எடுத்துரைக்கிறது. மோசிகீரனார் என்னும் புலவர் காட்டுவழி நடந்து வந்த களைப்பால் முரசு கட்டிலின் மீது ஏறி அமர்ந்து அயர்ந்து தூங்கிக் கொண்டிருக்கிறார். இதனைக் கண்ட சேரமான் தகடூரெறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை, அரசு ஆணைப்படி அவரை இருகூறுபட வாளால் வெட்டி வீழ்த்தாது மன்னர் கொண்ட தமிழ்க்காதலால் புலவருக்குக் குளிர்ந்த காற்றுப் பட வீசினான். இந்நிகழ்ச்சியை,

> *"அறியாது ஏறிய என்னைத் தெறுவர*
> *இருபாற் படுக்குநின் வாள்வாய் ஒழித்ததை*
> *அதூஉம் சாலும்நற் றமிழ்முழுது அறிதல்*
> *அதனொடும் அமையாது அணுக வந்துநின்*
> *மதனுடை முழவுத்தோள் ஓச்சித் தண்ணென*
> *வீசி யோயே வியலிடம் கமழ"*[107]

என்ற இப்பாடலில் மன்னனின் மனிதநேயச் செயல் புலவரின் உள்ளத்தைத் தொட்டதை உணரமுடிகிறது.

இவ்வாறு சங்ககாலத்துப் புலவர்கள், மன்னர்கள் வியந்து போற்றும் மாண்புடையவர்களாகவும், நட்புத் திறத்திலே சிறந்தவர்களாகவும், நாடும், மன்னனும், மக்களும் நலமுற வாழ்வதில் நாட்டம் கொண்டவர்களாகவும் விளங்கினார்கள் என்று சங்க நூல்களால் அறிய முடிகின்றது. பிசிராந்தையார் போன்ற பெரும் பண்பாளர்கள் புலவர் இனத்திற்குத் தனிப்பெருமை சேர்த்த பெருந்தகையாளர்களாக காணப்படுகின்றனர்.

## திருத்தும் கடமை

சங்காலச் சான்றோர் கண்ட கனவுகள் பற்பல. அவற்றுள் நாட்டைப் பற்றியவை இன்றும் உலகில் நனவாகவில்லை. ஒரு நாட்டில் சோறு சமைக்கும் தீயும், செஞ்ஞாயிற்றின் வெப்பமும் தவிர, வேறு தீயும் வெப்பமும் புகுந்து மக்களை வருத்தலாகாது என குறுங்கோழியூர் கிழார் விரும்பினார். நாட்டு மக்கள் கண்ணில்

வானவில் காணப்பட வேண்டுமேயன்றிக் கொலைவில் தோன்றலாகாது எனவும் விழைந்தார். வில், வாள் முதலிய படைகள் அறவே ஒழிந்து கலப்பை ஒன்றே படை என்னும் பெயர் பெற்று நிலவும் நற்காலத்தைக் கனவில் கண்டார். கருக்கொண்டு வேட்கை நோயுற்ற மகளிரே மண் உண்ணும் வேட்கை கொள்ள, ஆளும் அரசர் என்போர் மண்ணாசை கொண்டு மக்களை அலைக்கும் போர்த்துன்பம் ஒழிந்த நல் உலகைக் கற்பனையில் கண்டார். இத்தனைக் கனவும் நனவாகாமை நாட்டிற்கு அடிப்படையான வீட்டு வாழ்வு திருந்தாமையால் ஆகும்.

*''சோறு படுக்கும் தீயொடு*
*செஞ்ஞாயிற்றுத் தெறல் அல்லது*
*பிறிதுதெறல் அறியார்நின் னிழல்வாழ் வோரே''*[108]

அருள்நெறிக்கு வழியாய், அன்பு வாழ்வுக்கு அடிப்படையாய் அமைந்த இல்வாழ்க்கை உண்மையாகவே சிறந்து விளங்க வேண்டுமாயின், நாட்டின் ஆட்சிமுறை நன்னெறிப்பட்டதாக விளங்க வேண்டும். புலவர் அரசர்மீது கொண்ட நேயத்தினால் உரிமையோடு உணர்த்தி திருத்த முனைந்ததை இப்பாடல் நமக்குத் தெரிவிக்கிறது.

**செல்வத்துப் பயன் ஈதல்**

பெருஞ்சித்திரனார் என்ற புலவர் செல்வத்துப் பயனே ஈதல் என்ற உண்மையை உணர்ந்தவர். ஆதலால் பகுத்தளிக்கும் நெஞ்சத்தை உடையவராய்த் திகழ்ந்தார். அப்புலவர் பெருமக்கள் வாழ்வில் வறுமை தலை காட்டா வண்ணம் செய்தல் சிறந்த அரசியல் அமைப்பால்தான் இயலும். அந்த அரசியல் அமைப்பு,

*''இன்னோர்க் கென்னா தென்னொடுஞ் சூழாது*
*வல்லாங்கு வாழ்து மென்னாது நீயும்*
*எல்லோர்க்கும் கொடுமதி''*[109]

என்று புலவர் தம் மனைவிக்கு எடுத்துக் கூறினார். எவர்க்கும் வேண்டும் பொருள் கிடைத்தலின் அந்நாடு பசியென அறியாப் பணைபயில் இருக்கை உடையதாய், வறுமை இல்லையாய், கொள்வார் ஒருவரும் இல்லாமையின் கொடுப்பாரும் இல்லையான நிலைமை உடையதாய் விளங்கல் வேண்டும். இதிலிருந்து பண்டை நாளில் பரிசில் பெற்ற புலவர்கள், தாம் பெற்ற பரிசிற் பொருளின்பால் கொண்டிருந்த மனப்பான்மையினை இப்பாடல் நமக்கு எடுத்துக் காட்டுகிறது.

அந்நாள் வரும் வரையில் புலவரை வறுமை விடாது. புலவர் உணர்வும், செயலும் அத்தகையவை. சுற்றிலும் உள்ளவர் வயிறு காய, தம் வயிறு மட்டும் குளிரும் நிலையைப் புலவர் விரும்புவதில்லை. ஊரெல்லாம் பற்றி எரியத் தனியே இனிது அமர்ந்து இன்னிசை பாடும் களியாட்டு, இப்புலவர் வாழ்வில் இல்லை. தம் இன்பம் உலக இன்பமாகுமாறு காமுறுதல் கல்விச் செல்வத்தளவில் மட்டுமின்றி பொருட் செல்வத்தளவிலும் கொண்டவரே உண்மைப் புலமை உடையவர். ஆதலின் பெருஞ்சித்திரனார் போன்ற புலவர் எவ்வளவு பெறினும் வல்லாங்கு வாழாது வறுமையை வரவேற்றதில் வியப்பில்லை.

அறிவு என்னும் ஒன்றே மக்கட் பிறப்பின் சிறப்பியல்பு. மக்களாய்ப் பிறந்தவர் அறிவைத் தேடி உழைத்தல் வேண்டும். அறிவைப் பிறர்க்கு அளித்தல் வேண்டும். அறிவின் பயனால் இன்புறல் வேண்டும். இதுவே சங்ககால மக்களின் வாழ்வு. இவ்வாழ்வில் சீர்பெற வாழ்பவரே புலவர் பெருமக்கள். உலகம், திருந்திய அரசியல் பெறுமாகில் மக்கள் அனைவரும் இத்தகைய அறிவு வாழ்க்கை வாழ வல்லவர் ஆவார்.

உழைப்பாளிகளின் வயிற்றுக் கவலையை அரசியல் அமைப்பு ஒன்றே மாற்றவல்லது. அதனால் உழைப்பாளிகளிடையே விழிப்பும், உரிமை உணர்வும் எழுதல் காணலாம். அவர் செல்வரை விடுத்துப் புலவரைப் போற்றுதலும் காணலாம். வயிற்றுக் கவலை அகன்ற பின்னர் அறிவு நாட்டம் தானே வந்தமையும். அதுவரையில் புலவர் வாழ்வில் வறுமை இடம் பெறுதல் இயல்பு.

எனவே, பொருள் தேடாது புலமை தேடி வாழ்ந்தமை, தமக்கு அளிக்கப்பட்ட பொருளையும் பிறர்க்கு ஈந்தமை, வரவு செலவு கருதி வாழும் பொது மக்கள், புலவரால் விளையும் நன்மையை உணராது புறக்கணித்தமை ஆகியன புலவர் வாழ்வின் வறுமை நிலைக்குக் காரணமாயிற்று. இவ்வாறு அறமும், அறிவும் ஓங்காதவாறு பெருந்தடை செய்யும் வயிற்றுக் கவலையைக் கொன்று ஒழிக்கப் பழந்தமிழகத்தில் உணர்வுமிக்க உரவோர் பலர் முயன்றுள்ளனர். அவர் அரசியல் அமைப்புகளை மாற்ற முயன்றாரல்லர். அக்காலத்தில் உலகம் அத்துணை அரசியல் முன்னேற்றம் பெறவில்லை என்றே கூறலாம்.

புலவர்பால் பேரன்பு கொண்டு கைவண்மை காட்ட முந்திய அரசர் மரபில் புலமையுணர்வு குன்றியிருந்தது எனக் கூறுவது தகுதியாகாது. பிற புலவர்கள் உணர்ந்தது போன்றே புலவரைப் போற்றி உண்மை கண்ட புரவலரும்

உணர்ந்திருந்தனர். சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் தன் காலத்தில் புகழ்பெற்று விளங்கிய பசிப்பிணி மருத்துவனாகிய பண்ணன் என்பவனைக் காணச் சென்றான்.

*"தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளன்"*[110]

என்று பாராட்டப்பட்ட இப்பண்ணனின் சிறுகுடிக்குச் சோழன் சென்றபோது அவன் கண்ட காட்சி, உள்ளத்தை உருக்கியது.[111]

சோழ வேந்தனான கிள்ளி வளவனை நோக்க சிறுகுடி கிழான் பண்ணன் எளியவனாயினும், அவ்வரசன் இப்பண்ணனிடம் கொண்டிருந்த அன்புறு நட்புப் பண்ணனை இப்பாட்டால் பெரிதும் பாடிப் பரவச் செய்துள்ளது. வயிற்றுக் கவலையால் வாடும் மக்களின் துன்பத்தைப் போக்க ஒருவன் உழைப்பானாயின் அவனை வாழ்த்தி தனக்குரிய வாழ்நாளை அவனுக்கு நல்கி அவன் நெடுங்காலம் வாழுமாறு விழையும் நெஞ்சம் நாடாளும் வேந்தனுக்கு இருந்தது. அஃது அக்காலத்து உணர்வின் விழுப்பத்தை விளக்குகின்றது.

நல்லுருத்திரன் என்னும் சோழனும் இத்தகைய விழுமிய நோக்கம் கொண்டு தன் வாழ்நாளைக் குறித்து வேண்டியுள்ள கருத்து பழந்தமிழ் இலக்கியத்தில் உள்ளது. அவ்வேந்தன் வள்ளல் ஒருவனைக் குறிக்காது, பொதுவாக உலக மக்களை நோக்கி அவர்களை இருவகைப் படுத்தியுள்ளனர். ஒரு வகையார் எலி போன்றவர். மற்றொரு வகையார் புலி போன்றவர். எலி போன்றவர் தாமாக உழைத்து உண்ணாமல், பிறர் உழைப்பால் கிடைக்கும் பொருளை சிறிது சிறிதாகச் சேர்த்துப் பிறர் கண்ணில் படாதவாறு காப்பர். அப்பொருள் பிறர்க்குப் பயன்படாத பொருளாகும். புலி போன்றவர் சிறிதும் சோர்வு கொள்ளாமல் ஊக்கமே வடிவாய் உழைத்து உண்பர். அவரால் பிறர்க்குப் பயன் உண்டாகுமாறு பெருவாழ்வு வாழ்வர்.

இவ்வாறு மக்களை இருகூறுபடுத்திய சோழன் நல்லுருத்திரன் தன் வாழ்நாளை எண்ணி எலி போன்றவரோடு பழகுதல் இழுக்கு என்றும், புலி போன்றவரோடு பழகுதல் விழுப்பம் என்றும் துணிந்தான் என்பதை,

*"எலிமுயன் றனைய ராகி யுள்ளதம்*
*வளன்வலி யுறுக்கு முளமி லாளரொடு*
*இயைந்த கேண்மை யில்லா கியரோ"*[112]

இப்புறப்பாடல் உணர்த்தும். எலி வாழ்வும், புலி வாழ்வும் நோக்கி சோழன் உணர்ந்த உண்மை எவரும் என்றும் உணரத்தக்க உண்மையாகும். வயிற்றுக் கவலைக்கும், அறிவு வளர்ச்சியின் தடைக்கும் காரணம் எலி போன்ற மக்களாவர். இதனை உணர்ந்த சோழ வேந்தன் தன் வாழ்நாளில், எலிபோன்ற ஊக்கமற்றவர்களோடு கொள்ளும் நட்பு இல்லாமல் அழியட்டும் என விழைந்தான். இப்பாடல் சோழன் நல்லுருத்திரன் நாட்டை நல் அரசாட்சி செய்த பண்பினைத் தெரிவிக்கிறது.

உலகம் இன்னாரால் கெடுகின்றது என உணர்ந்து அவர்தம் கேண்மையை வெறுத்த வேந்தன் போலவே, மற்றொரு வேந்தன் உலகம் இன்னாரால் வாழ்கின்றது என உணர்ந்து அவர்தம் வாழ்வை வாழ்த்திப் பாடியுள்ளான். அவன் கடலுள் மாய்ந்த இளம்பெரு வழுதி, அவனுடைய, 'உண்டாலம்ம இவ்வுலகம்'[113] எனத் தொடங்கும் பாடலில் உயர்த்திச் சொல்லப்படுவோர், தேவர் தம் அமுதமே கிடைத்திடினும் அதன் இனிமை கருதி தமியராய் உண்ணார். வாழ்வில் வெறுப்புக் கொள்ளாமல் பிறர்க்குற்ற துன்பம் கண்டு, அவர் அஞ்சுவதற்குத் தாமும் அஞ்சி துன்பம் களையும் வரையில் உறக்கமும் கொள்ளார். புகழ்தரும் நல்ல செயலாயின் உயிரையும் கொடுக்கத் துணிவர். பழிதீரும் தீச்செயலாயின் உலகம் முழுதும் பெரும்பேறு வாய்ப்பதாயினும் பொருட்படுத்தாது நீங்குவர். சோர்வு என்பதை அறியாத, தமக்கென முயலும் தன்னலமற்றவர். பெரும் முயற்சியும், உழைப்பும் கொண்டு பிறருக்காகவே உழைப்பர். இப்படிப்பட்ட பண்புடையார் ஒருசிலர் இருப்பதால்தான் உலகம் நிலைத்து நிற்கின்றது என்ற உண்மையை உணர்த்துகின்றார்.

> *''சான்றவர் சான்றாண்மை குன்றின் இருநிலந்தான்*
> *தாங்காது மன்னோ பொறை''*[114]

என்னும் வள்ளுவர் வாய்மொழியும் இக்கருத்தை உணர்த்துகிறது.

அத்தகைய மாண்புடைய அரசர்கள் செங்கோல் ஏந்தல் வேண்டும் என்பதே உலகம் அந்நாளில் வேண்டிய வேண்டுகோள். ஆயின் உலகப் போக்கு மாறி தனிமனிதரின் ஆற்றலைவிட அமைப்புக்களின் ஆற்றல் பெருகிவிட்டது. தனிமனிதர் நல்லவராயிருப்பினும் விளையும் பயன் சிறிதே. ஆதலின் பெரும் பயனை நிலைபெற நல்கவல்ல அமைப்புகள் நல்லன கண்டு அவற்றைக் காக்கும் கடமையே இன்று வேண்டுவதாகும். இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன் புலவரும், அரசரும் கண்ட கனவாய் முளைத்த முளை, இன்று அரசியல் அமைப்பு எனும் நல்ல மரமாய்

உலகமெல்லாம் நிழற்றும் நல்லுதவி ஆற்றத் தொடங்குகின்றது.

## புலவர் உணர்த்தலும் புரவலர் உணர்தலும்

இறை செலுத்த இயலாத குடிகளை வருத்தி அவருடைய வாழ்வைக் கெடுப்பதைவிட, குடிமக்களை வாழச் செய்து, துணையும் நல்கி அவர் சிறந்தோங்கிய பின் பன்மடங்கு பெற்றுக் கொள்ளல் அறிவுடைய நெறியாகும். பாண்டியன் அறிவுடை நம்பி என்னும் வேந்தனிடம் புலவர் பிசிராந்தையார் இவ்வுண்மையை அறிவுறுத்தியுள்ளார். அறிவுடைய வேந்தன் நெறியறிந்து வளம் பெற்ற குடிகளிடமிருந்து ஆறில் ஒன்று வரியாகப் பெறுவானாயின், அரசும் சிறக்கும். நாடும் நலமுற்றுத் திகழும்.

"காய்நெல் அறுத்து"[115] என்று தொடங்கும் இப்பாடல் மூலம், குடிகள் தாங்கும் அளவுக்கு வரி விதித்து வாங்கும் அரசு நிலைத்து வாழும். குடிகள் தாங்க முடியாத அளவுக்கு வரி விதிக்கும் அரசு வீழ்ந்துவிடும். இன்னும் இப்பாடல் உயிருடன் செழித்து நடமாடுகின்றது. இதில் அமைந்திருக்கும் அறவுரையை இன்றும் அறிஞர்கள் ஏற்றுக் கொள்கின்றனர். முடி அரசுக்கு உரைத்த இந்த நல்ல உரை இன்றைய குடியரசுக்கும் ஏற்றதாக இருக்கின்றது. இந்த அரசியல் பற்றிய தமிழர், அருள்நெறி என்றும் அழியாத செல்வம் என்பதையும், கொடுங்கோலாட்சி குலையும் என்பதையும் உணர்ந்தனர் என்பது தெரிகிறது. புலவர் ஒருவர் தன்னை அணுகி நீ அறிவுடையவனாக இரு. மெல்லியனாய் இராதே என்று யானையை எடுத்துக்காட்டாகக் கூறி அறிவுறுத்தியதைப் பொறுமையோடு கேட்டுப் பயன்பெறும் மாண்பு இப்பாண்டியனிடம் இருந்தது என்பதை உணர்ந்துகொள்ள முடிகிறது.

பாண்டியன் அறிவுடைநம்பி பெயரளவில் அறிவை அடையாகப் பெற்றிருத்தல் மட்டுமின்றி, அவனுடைய அறிவான வாழ்வையே விளக்கி நிற்கக் காண்கிறோம்.

*"படைப்புப் பல படைத்து... தாம் வாழும் நாளே"*[116]

என்ற இப்பாடல் அறிவுடை நம்பியின் பாடலாகும். ஆட்சி உரிமையை எய்தி, அரச செல்வத்தைக் கண்ட அறிவுடை நம்பி, பெருஞ்செல்வத்தைப் படைத்துப் பலரோடு உண்ணும் பெருவாழ்வு பயனற்றது எனக் கருதி குழந்தைகளையே பெரும் செல்வமாக மதித்தான்.

குழந்தைகளின் குறுகுறு நடையிலும், சிறுகை நீட்டலும், நெய்ச் சோற்றை

இட்டும், தொட்டும், கவ்வியும், விதிர்த்தலிலும் பேரின்பம் உள்ளதெனத் தெளிந்து மக்கட்பேறு இல்லாத வாழ்வு வாழ்ந்தும் பயனில்லை என்றான். பாண்டியனின் மனம் தன்னலமற்று விரிந்து குழந்தைகளின் மீது பேரன்பு கொண்டது. அவன் உள்ளம் மிக உயர்ந்த உள்ளம். ஏனைய அரசர்களும் இத்தகைய பண்பினைக் கொண்டு நாடாளும்போது அந்நாட்டுக் குழந்தைகளின் வருத்தம், வாட்டம், அலறல் முதலான கொடுமைகளுக்கு இடமிராது என்பது தெளிவு. குழந்தைகள் மீது சங்ககால மன்னர் கொண்ட மனித நேயத்தைப்போல, கவிஞர் பாரதியாரும் ‘பாப்பாப் பாட்டு’ என்ற தலைப்பில் பாடியிருப்பதை உணர முடிகிறது.

சோழன் நெடுங்கிள்ளியைக் கோவூர் கிழார் நெருங்கி இடித்துரைத்த போது ‘‘உன் நாட்டுக் குழந்தைகள் பாலின்றி வருந்துகின்றது’’[117] நீ இங்கிருப்பது நல்லதல்ல எனக் கடிந்துரைத்தார். குழந்தைகள் வாடாது, வருந்தாது, மெலியாது வளரும் நாடே நல்ல நாடு. அந்நாட்டை ஆட்சி செலுத்துபவனே சிறந்த அரசன் ஆவான். இத்தகைய அரசன் குழந்தைகளின் இன்ப வாழ்விற்கு ஆவன செய்தலே முதற் கடமையாகக் கொள்வான். பண்பாலும், அறிவாலும் அக்குழந்தைகளைப் பேணி வளர்க்கும் தாயரைப் போற்றும் அறமே தலை சிறந்ததாகக் கொண்டு அரசியல் சட்டம் அமைப்பான்.

அக்குழந்தைகள் வளரும் வீடுகளும், கல்வி கற்கும் பள்ளிகளும் பல நன்மையும் பெற்றுப் பெருகப் பெருந்துணை புரிவான். இவ்வாறு நாட்டின் செல்வம் குழந்தைகளே என்று உணர்ந்து போற்றும் சான்றோன், பிற நாட்டுக் குழந்தைகள், தன் நாட்டுக் குழந்தைகள் என்று வேற்றுமைப்படுத்தும் எல்லையைக் கடந்து நின்று உலகை நோக்குவான். அதனால் பாண்டியன் அறிவுடை நம்பி ஆட்சிக்கு இன்றியமையாத அரசியல் அறிவு பெற்று விளங்கிய சான்றோன் என்பது தெரிகிறது. குழந்தைகளைச் சிறந்த செல்வமாகப் போற்றிய முறையிலிருந்து அவன் உள்ளத்தின் மனித நேய மாண்பு புலப்படுகிறது.

தற்காலத்திலும் இதே மாதிரி குழந்தைகள் நலத்திற்காக அரசு அமைவதுதான் சிறந்த உலகாக இருக்கும் என்ற கருத்தை அடிப்படையாகக் கொண்ட மனிதநேய உணர்வுதான் உதவும் கரங்கள், சிவானந்த குருகுலம் போன்ற பல தன்னலமற்ற பொது நிறுவனங்கள் தோன்றுவதற்குக் காரணமாயிற்று.

## புலவரின் நடுவுநிலைமை தவறாமை

பாண்டியன் அறிவுடை நம்பி, அறநெறி தவறாது நாட்டை வாழ்வித்தல் ஒன்றே குறிக்கோளாகக் கொண்டு புலவர் கூறியது கேட்டுப் போற்றினான். பாண்டியனுக்கு அரசியல் அறிவுறுத்திய பிசிராந்தையார், கோப்பெருஞ்சோழனின் நண்பராதலால் சோழன் வடக்கிருந்த போது அவனோடு உடன் உயிர் நீத்த பெருமை உடையவர்.

*''தென்னம் பொருப்பன் நன்னாட்டு உள்ளும்*
*பிசிரோன் என்பஎன் உயிர்ஓம் புநனே*
*செல்வக் காலை நிற்பினும்*
*அல்லற் காலை நில்லலன் மன்னே''*[118]

*''இகழ்விலன் இனியன் யாத்த நண்பினன்*
*புகழ்கெட வரூஉம் பொய்வேண் டலனே*
*தன்பெயர் கிளக்கும் காலை என்பெயர்*
*பேதைச் சோழன் என்னும் சிறந்த*
*காதற் கிழமையும் உடையன் அதன்தலை*
*இன்னதோர் காலை நில்லலன்*
*இன்னே வருகுவன் ஒழிக்க அவற்கு இடமே''*[119]

என்று அக்கோப்பெருஞ்சோழனின் இறுதி நாளில் அவனால் புகழப்பெற்ற சீரிய நண்பர். சோழனுக்கு உயிரனைய நண்பராகிய புலவர் நமக்கு அறிவுறுத்துகிறானே என்று பாண்டியன் வெறுக்கவில்லை. நம் நண்பன் சோழனைப் புகழாது பாண்டியனைப் புகழ்கிறோமே எனப் புலவரும் நடுவுநிலைமை தவறில்லை என்ற நற்பண்பு தெரிகிறது.

கட்சியியல் கடந்து, குறுகிய நாட்டுப் பற்றும் கடந்து அன்பு விளங்கும் அரசியல் உலகம் அது. தாம் கவலையற்றுத் திகழ்வதால் நரை தோன்றவில்லை எனச் சோழனைச் சூழ்ந்து நின்ற சிலர்க்குப் பிசிராந்தையார் காரணத்தை விளக்கியபோது, என் நாட்டையாளும் பாண்டியன் துன்பம் தராது இனிதாக ஆட்சி செய்கிறான். அதுவும் ஒரு காரணம் என விளக்கினார். அவரவர் மனம் மகிழ, ஆங்காங்கு சென்று அவரவரைப் புகழ்ந்து, பெறுவன பெற்றுக் கொண்டு வாழ விழையும் தன்னலப் பண்பு சான்றோரிடம் எட்டுணையும் இல்லை.

பாண்டியனைப் புகழ்ந்து கூறாது, அவனுக்கு வேண்டிய உண்மையை மறைக்காது எடுத்தோதினார். சோழ நாட்டாரிடம் சென்றபோது அவர் வியக்குமாறு பாண்டியனின் ஆட்சித் திறனை எடுத்துக் கூறினார். அவர்தம் நடுவு நிலைமையை பொதுநலப் பண்பைப் பாண்டியனும் மதித்துப் போற்றினான். அவர்தம் உறவை உரிமையாகக் கோப்பெருஞ்சோழனும் போற்றினான். உயர்ந்த நோக்கம் கொண்டு விழுமிய வாழ்வு வாழ்ந்த சான்றோரை அரசியல் உலகம் மதித்தது என்பதொன்றே பழந்தமிழ் நாகரிகத்தை விளக்கும் சான்றாக அமைய வல்லது.

பிசிராந்தையார் நரையின்மைக்குக் காரணமாகப் பாடிய பாட்டில் அரசியல் நாகரிகமே அல்லாமல் குடும்பமும் ஊரும் நாகரிகமாய் விளங்கிய காட்சியும் காணப்படுகின்றது. இதனை,

*''யாண்டு பலவாக நரையில வாகுதல்*
*யாங்கா கியரென வினவுதி ராயின்''*[120]

என்ற இப்பாடலைப் படிக்குந்தோறும் புலவர் கவலையற்று வாழ்ந்த வாழ்வும், சான்றோர் பலர் விளங்க அவர் வாழ்ந்த ஊர் திகழ்ந்தது என்றும் கருதத் தோன்றுகிறது. இத்தகைய வீடும், ஊரும் அமையக் காரணமாக இருந்த நாகரிக அரசியல் என்று எண்ணத் தோன்றுகிறது. அவரை உண்மை அறிவுறுத்தும் ஆசிரியராகவும், உறவுக்குரிய சிறந்த நண்பராகவும் முறையே பெற்ற பாண்டியன் அறிவுடை நம்பியும், கோப்பெருஞ்சோழனும் நாகரிக அரசியல் தலைவர் என்று எண்ணுதற்குரிய இடத்தைப் பெற்றுள்ளது என்பதை அறியலாம்.

### செய்ந்நன்றி போற்றியமை

ஆலத்தூர் கிழார் எனும் புலவர் கிள்ளிவளவனிடத்தில்,

*''எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை*
*செய்ந்நன்றி கொன்ற மகற்கு''*[121]

என்னும் குறளின் நுண்பொருளை விளக்கி ''வேந்தே! அல்லும் பகலும் நீ அளிக்கும் விருந்தை உண்டு நின்னை வாழ்க என்று வாழ்த்தாது ஒழியின், உயிர்களுக்கு இன்றியமையாத கதிரவனும் தோன்றுதலைச் செய்யாது உலகம் இருளில் ஆழ்ந்து விடும்''[122] என்று பாடியதிலிருந்து இப்புலவர்கள் செய்ந்நன்றி அறியும் செம்மைக் குணம் படைத்த சீலர்கள் என்பதை நன்குணரலாம். அரசர்களுக்கு வேண்டிய

அரசியல் நீதிகளை வேண்டும்பொழுது விரித்துரைத்தலின்றி, அவ்வரசர்களின் குடும்ப வாழ்க்கையிலும் குறுக்கிட்டு, வேண்டும் உதவி புரிந்து வந்தனர் என்பது பேகனது வரலாற்றிலிருந்து நாம் அறியலாம்.

**புலவர்களின் பெருந்தன்மை**

அன்பு, அருள், அஞ்சாமை, தியாகம், நேர்மை போன்ற அடிப்படை உயர் பண்புகள் பெரியவர்களிடம் குறைந்துவிட்டதால், இளைய தலைமுறைக்கு இந்த எண்ணத்தை ஊட்டுவார் எண்ணிக்கை மிகமிக அருகிவிட்டது. சங்க இலக்கியங்களில் இப்பண்புகள் மிகுதியாகப் பேசப்பட்டுள்ளன.

*''மென்மையின் மகளிர்க்கு வணங்கி வன்மையின்*
*ஆடவர்ப் பிணிக்கும் பீடுகெழு நெடுந்தகை''*[123]

என்று சோழன் நலங்கிள்ளியைக் கோவூர்கிழார் பாராட்டிக் கூறியுள்ளார். அவனுடைய ஆட்சிச் சிறப்பும், நாட்டுப்பற்றும் பற்றி பலபடக் கூறிய புலவர், பெண்களிடத்து மென்மை உடையவனாய் இனிது இருப்பதாகவும், அவன் மெய்வன்மையால் வீரராகிய ஆடவர்கள் அவனைப் பணிந்து ஒழுகுவதாகவும் குறிப்பிடுகிறார்.

*''இல்லிறைச் செரீஇய ஞெலிகோல் போலத்*
*தோன்றாது இருக்கவும் வல்லன் மற்றதன்*
*கான்றுபடு கனைஎரி போலத்*
*தோன்றவும் வல்லன்தான் தோன்றும் காலே''*[124]

என்று அதியமானை ஔவையார் புகழ்கிறார். அதாவது உற்றார், உறவினருடன் அவனிருக்கும்போது அவனைப் பார்க்கின்றவர்கள் அவனை ஒரு சிறந்த வீரன் என்று நம்ப முடியாது. அவ்வளவு இனியவனாகவும், அமைதியே வடிவானவனாகவும் இருப்பான். தீக்கடைக்கோல் ஓலைக் கூரைக்குள் இருக்கிறது. ஆனால், அது கூரையை எரிக்கவில்லை. அதுபோல வீரத்தை மூடி வைத்துக் கொண்டு பழகுவான் அதிகமான். வெறும் குச்சிபோலத் தோன்றிய தீக்கடைக் கோலில் தீ உண்டானால் எப்படி இருக்குமோ அப்படிப் போர்க்களத்தில் கனன்று தோன்றுவான்.

இங்கே புலவர்கள் காண்பது அந்தந்த அரசர்களை மட்டுமல்ல. அவர்களிலே தாங்கள் கண்ட மனிதர்களையும், அவர்கள் மூலம் தாங்கள் காண விரும்பிய எல்லா மனிதர்களையும், எக்காலத்திற்கும் வேண்டிய மனித இயல்புகளையும் காண்கிறார்கள்.

தாங்கள் காண விரும்பிய இலட்சிய மனிதர்களுக்கு வேண்டிய மூல இயல்புகளை அவர்கள் கண்டதாலேயே இப்புலவர் பெருமக்கள் இவ்வரசர் இருவரையும் சிறந்தவர்களாக மதித்தார்கள். முழுமை பெற்ற ஒரு மனிதன் எப்படி இருக்க வேண்டுமோ அப்படியிருந்தார்கள் நலங்கிள்ளியும், அதியமானும். அவர்களைப் பாராட்டி அந்த நிலையை எடுத்துக்காட்டுவதன் மூலம் நாம் அப்படி வாழவேண்டும் என்று நமக்கு அறிவுறுத்துவதே புலவர்களின் நோக்கம் என்பது தெரிகிறது.

வீரம் சிறந்த பண்பு. ஆனால், வீரம் ஒன்றே முழு வாழ்வை ஆக்க முடியாது. அன்புமிகச் சிறந்த பண்பு. அன்பு ஒன்றினால் மட்டுமே ஒரு மனிதனின் வாழ்வு முழுமை அடைவதிலலை. வீட்டு அன்பில் திளைத்து மகிழும் பலர் வெளிப்புகழ் இல்லாமல் போகிறார்கள். வெளியே வீரமும், தீரமும் காட்டிப் பேரும், புகழும் பெறுகின்ற பலர், வீட்டு வாழ்வில் தோல்வியடைந்து விடுகின்றார்கள். அன்பின் முனைப்பு எங்கே வேண்டும், வீர முனைப்பு எங்கே வேண்டும் என்ற தெளிவு இருந்தால்தான் வீட்டு வாழ்வில் இன்பமும், நாட்டு வாழ்வில் புகழும் அடைய முடிகிறது. இதைத் தெரிந்து வாழ்வதே முழு வாழ்க்கை. இந்த வாழ்க்கைச் செய்தியை அரசர்களைப் புகழ்வதுபோல நமக்கு உணர்த்துகின்றனர் இப்புலவர் பெருமக்கள்.

### ஒற்றுமையின் உயர்வு

போர் வேட்கையால் மன்னர்கள் பகையை வளர்த்துக் கொண்டே வந்தாலும், சங்கப் புலவர்கள் மூவேந்தர்களும் ஒன்றுபட்டிருப்பதையே விரும்பினார்கள். தனித்தனியே மூன்று மன்னர்களிருந்தால் மூவரிடமும் சென்று பாடிப் பரிசில் பெற புலவர்களுக்கு வசதி உண்டு. ஆனால், அந்தச் சிறிய தன்னலத்தைக் கருதி, ஒற்றுமை என்னும் உயர் கருவூலத்தைப் புலவர்கள் புறக்கணிக்கத் தயாராக இல்லை. மூன்று மன்னர்களும் ஒன்றுபட்டிருக்கும் காட்சி மிக நன்றாக இருக்கும் என்றே புலவர்கள் கற்பனை செய்து மகிழ்ந்தார்கள். முக்குடி மன்னரும் ஒன்றாயிருப்பதைப் பார்த்து விட்டால் அவர்கள் அடைந்த மகிழ்ச்சிக்கு ஓர் அளவேயில்லை. சமயம் வாய்க்கும் போதெல்லாம் 'ஒற்றுமையாக இருங்கள்' என்று எடுத்துக் கூறவும் அவர்கள் தவறியதில்லை.

சோழன் பெருந்திருமா வளவனும், பாண்டியன் பெருவழுதியும் பகைமை மறந்து நகையாடி ஒன்றாக இருந்தார்கள். இப்புதுமையைக் கண்ட காரிக் கண்ணனார் மகிழ்ச்சி தாங்காமல் இருவரையும் வாயார வாழ்த்தினார். நீ பாண்டியன், நீ சோழன்,

நீங்கள் இருவரும் ஒன்றாக இருப்பதைப் பார்த்து கண்ணனும், பலராமனும் ஒன்றாக இருப்பதைப் போல இருக்கிறது. இப்படி உங்களை ஒற்றுமை உடையவர்களாகக் காண்பதை விட இனிய காட்சி வேறு இல்லை என்ற பொருளில்,

*"இமிழ்குரல் முரசம் மூன்றுடன் ஆளும்*
*தமிழ்கெழு கூடல் தண்கோல் வேந்தே*
*பால்நிற உருவின் பனைக்கொடி யோனும்*
*நீல்நிற உருவின் நேமியோனும் என்று*
*இருபெரும் தெய்வமும் உடனின் றாஅங்கு*
*உருகெழு தோற்றமொடு உட்குவர விளங்கி*
*இன்னி ராகலின் இனியவும் உளவோ"*[125]

இப்பாடலைப் பாடியுள்ளார். இருவேறு அரசர்கள் ஒன்றாக இருப்பதைப் பார்த்ததும், அவர்களை அண்ணன், தம்பிகளாகக் காண்கிறது புலவர் உள்ளம். அரசர்கள் அண்ணன், தம்பிகளாகிவிட்டால் மக்களிடையே வேற்றுமைக்கும், விரிசலுக்கும் இடமில்லை. இப்பெரு மன்னர்கள் ஒன்றுபடுவது அக்காலத்தில் அரிதாய் இருந்ததினால், அந்த நிகழ்ச்சியே ஓர் அற்புதமாகவும், கடவுள் மாமனிதர் இணைந்த காட்சி போலவும் புலவருக்குத் தோன்றுகிறது. அத்தனை ஆர்வப் பெருக்கோடு ஒற்றுமைப் பண்பை வரவேற்கிறது புலவர் நெஞ்சம் என்று சங்க காலம் முதல்,

*"ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு - நம்மில்*
*ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும் தாழ்வு"*[126]

என்று தற்கால பாரதியார் காலம் வரை புலவர்கள் ஒற்றுமையே சிறந்த மனிதநேயப் பண்பு என்று அறுதியிட்டுக் கூறுவதை உணர முடிகிறது.

ஒன்றுபட்டால் உண்டு உயர்வு என்பது உயர் நெஞ்சங்களின் துணிபு. புலவர் கோமான் அதையும் அவர்களுக்கு நினைவுபடுத்தினார்.

*"இன்னும் கேண்மின்நும் இசை வாழியவே*
*ஒருவீர் ஒருவீர்க் காற்றுதிர் இருவிரும்*
*உடனிலை திரியீர் ஆயின் இமிழ்திரைப்*
*பெளவம் உடுத்தஇப் பயங்கெழு மாநிலம்*
*கையப் படுவது பொய்யா காதே"*[127]

இவ்வாறு அக்கால அரசர்கள் ஆட்சிச் செல்வாக்கையும் புகழையும் விரும்பிப் போர் மேற்கொள்வது இயற்கையாக இருந்தது. அவ்வாறு தனித்து நின்று தமக்குள் போரிடுவதால் வரும் புகழைவிட ஒற்றுமையாக இருப்பதன் மூலம் பெரும்புகழ் அடையலாம் என்பதையும் அவர்களுக்குச் சுட்டிக்காட்டினார் புலவர்.

உலக இயல்பையும் புலவர் மறந்து விடவில்லை. அண்ணன் - தம்பியும், தந்தையும் - மகனும் ஒற்றுமையாக இருப்பதைக்கூட அற்பமனத்தர் பொறுப்பதில்லை. அவர்களைப் பிரித்துவிட்டு வேடிக்கை பார்ப்பதில் அவர்களுக்கு ஓர் ஆனந்தம். ஒற்றுமையாக வாழ விரும்புகின்றவர்கள் இந்தச் சிறு மனத்தினைக் குறித்து மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். இவ்வாறு முடிமன்னர் மூவரும் ஒன்றுபட்டிருக்கும் காட்சி அரிதினும் அரிது. அந்த அரிய காட்சியை ஔவை ஒருமுறை கண்டார். சேரமான் மாரிவெண்கோ, பாண்டியன் உக்கிரப் பெருவழுதி, சோழன் பெருநற்கிள்ளி ஆகிய மூவரும் ஒன்றாகயிருந்தார்கள். அதைக் கண்ட ஔவை பெருமகிழ்ச்சியடைந்து, அவர்களை விளித்துப் பேசத் தொடங்கும்போதே அந்தணர் வளர்க்கும் செந்தழலின் மூன்று சுடர்களின் நினைவு அவர் உள்ளத்தில் எழுந்தது.

> *''ஒன்றுபுரிந்து அடங்கிய இருபிறப் பாளர்*
> *முத்தீப் புரையக் காண்தக இருந்த*
> *கொற்ற வெண்குடைக் கொடித்தேர் வேந்தீர்''*[128]

என்றே அவர்களை விளித்தார். அவர்களை ஒன்றாகக் கண்டபோது அவர்களின் ஒற்றுமை இன்மையால் நாடு சீரழிவதும், இந்த நிலையே தொடர்ந்தால் தமிழகம் பிறர்க்கு அடிமைப்பட்டு விடும் என்ற மனிதாபிமான உணர்வும் ஔவையின் உள்ளத்தில் எழுந்தன.

> *''நாகத் தன்ன பாகார் மண்டிலம்*
> *தமவே யாயினும் தம்மொடு செல்லா*
> *வேற்றோர் ஆயினும் நோற்றோர்க்கு ஒழியும்''*[129]

நாகநாடு போன்ற இத்தமிழகம் பிறப்புரிமையால் உங்களுக்கு உரியதே ஆயினும், ஆட்சி உரிமை என்பது எப்போதும் பிறப்பால் மட்டும் கிடைத்து விடாது. நீங்கள் வலிமை குன்றிப் போனால், வலிமையுடைய மற்றவர்கள் உங்கள் நாட்டைக் கைப்பற்றிக் கொள்வார்கள். ஆகையால் உங்கள் நாடு உறுதி வாய்ந்ததாக விளங்கும்

பொருட்டு நீங்கள் மூவரும் ஒற்றுமையாக இருக்க வேண்டும். இதுவே ஔவை அவர்களுக்குக் குறிப்பாக உணர்த்திய செய்தி.

அரும்பெரும் பெருமிதக் காட்சிகளைக் காணும்போது முடிமன்னர் மூவரும் ஒருங்கிருந்தால் இப்படி இருக்கும் என்ற ஏக்கக் கனவே புலவர்களின் நெஞ்சில் இருந்தது. அப்பெருமிதத்திற்கு அதையே உவமையாகக் காட்டினார்கள். இதனை,

*''பீடுகெழு திருவிற் பெரும்பெயர் நோன்றாள்*
*முரசுமுழங்கு தானை மூவருங்கூடி*
*அரசவை யிருந்த தோற்றம் போல''*[130]

என்னும் உவமையாட்சி பொருநராற்றுப் படையில் வருகிறது. கலைவல்ல ஒருவன் தனது கலைக்கருவிகளோடு, கலைச்செருக்கோடு அமர்ந்திருப்பது புலவருக்கு இந்த ஒருமைக் காட்சியை நினைவூட்டுகிறது.

முடியாட்சிக் காலத்தில் தோற்றுப்போன ஒற்றுமை முயற்சி குடியாட்சி காலத்திலாயினும் வெற்றி பெறவேண்டும். தமிழர்கள் உலக ஒற்றுமையையும், அதன் பெருமையையும் உணர்ந்தவர்கள். தங்களுக்குள் தான், அவர்களால் ஒன்றுபட முடியாது என்றுள்ள பழிச்சொல் இனிமேலாகிலும் மாறவேண்டும். நிறைமனத்துப் புலவர் பெருமக்களின் நெடுங்கால மனக்குறை இனியாவது தீரவேண்டும். நம் முன்னோர் தவறிய அந்த வழியில் நாம் வெற்றிக்கால் வைத்து ஏறுவது நமக்கும் பெருமை. நம் வழிவழி மக்களுக்கும் பெருமை தரும்.

**மனித உள்ளம்**

சங்க காலத்தில் முடியாட்சியே நிலவியது. அதனுள்ளே சிறுசிறு மன்னர்களிருந்தார்கள். அவர்களின் விருப்பப்படியே நாட்டாட்சி நடந்தது. சிலபோது தன்னலம் கருதி ஒருவன் போர் தொடுத்தாலும் மக்கள் எல்லோரும் ஊமைகளாக அடங்கிக் கிடந்தார்கள் என்று சொல்ல முடியாது. ஒரு அரசன் தனக்காக ஒரு போருக்கு ஆயத்தம் செய்தால் அதில் நாட்டு நலன் எதுவுமில்லை என்று தெரிந்தால் அதற்கு எதிரான எண்ணத்தை மக்களிடம் எழுப்ப அக்காலப் புலவர்கள் தயங்கவில்லை. தங்களுக்கே உரிய வகையில் அந்த மனிதக் குரலை எழுப்பி வந்தார்கள்.

அநீதிக்கு எதிராக எழுந்த அந்தக் குரலைத், தம் குரலாக எழுப்புகிறார் பரணர்.

*"வேட்ட வேந்தனும்... பண்பில் தாயே"*[131]

ஒருவனின் ஆசை, அதற்கு எதிரான மற்றொருவனின் பிடிவாதம், இவை அவர்களின் சொந்த சச்சரவுகள். இவைகளுக்காக பொது நலன் பாதிக்கப்படுவதாக இப்பாடலில் புலவர் கூறியுள்ளார்.

மக்களின் மனக்கொதிப்பு ஒரு பாடலில் வெளிப்படுகின்றது. இதனை,

*"அறவை யாயின் நினதெனத் திறத்தல்*
*மறவை யாயிற் போரொடு திறத்தல்*
*அறவையு மறவையு மல்லை யாகத்*
*திறவா தடைத்த திண்ணிலைக் கதவின்*
*நீண்மதி லொருசிறை யொடுங்குதல்*
*நாணுத்தக வுடைத்திது காணுங் காலே"*[132]

என்ற இப்பாடலில் நீ அரசன். உனக்கு வீரம் வேண்டும். வீரமாக எதிரியோடு போர் புரிந்து வெற்றியடைய வேண்டும். அல்லது வீரமரணம் அடைய வேண்டும். வீரத்திற்கு இணையாக அரசனுக்கு வேண்டிய மற்றொரு குணம் நேர்மை. உன்னால் வெற்றி பெற முடியாது என்றிருந்தால், உன் உரிமையை அமைதியாக எதிரிக்கு விட்டுக் கொடுக்க வேண்டும். இரண்டும் இல்லாமல் மற்ற மக்களின் துன்பத்தில் உன் இன்பத்தைப் பேணிக் கொண்டிருப்பது கோழைத்தனம். மக்களின் நலனைக் காப்பவனே சிறந்த மன்னன். அவர்களைத் தனக்காகத் துன்புறுத்துகிறவன் மன்னன் ஆக மாட்டான் என்று சிறந்த மன்னருக்குரிய இலக்கணத்தையும், மக்களைக் காக்கும் மனிதநேயப் பண்பையும் எடுத்துரைக்கிறது.

அசைக்க முடியாத வலிமையால் நிலைபெற்றிருந்த முடியாட்சி தான் அது. ஆனால், அங்கேயும் மனிதாபிமானக் குரல் எழ முடிந்தது. சிலரின் இன்பத்திற்காகப் பலர் துன்பம் அனுபவிப்பது கொடுமை என்ற மனித உள்ளத்தின் துடிப்பு இப்பாடலில் அப்படியே ஒலிக்கிறது. நடுங்காது ஒலித்த அக்குரலின் திண்மை இன்றும் நமக்கு வியப்பூட்டுகிறது. பேச்சுரிமை, எழுத்துரிமை வந்துவிட்ட இக்காலத்தில் கூட, சில இடங்களில் இவ்வளவு தெளிவாக எதிர்க்குரல் ஒலிக்க முடியவில்லை.

சேர்ந்து வாழப் பிறந்தவர்கள் மனிதர்கள். ஒருவர் தேவைக்கு மற்றவர் உதவ வேண்டியது கடமை. பிறருடைய துணை இல்லாமல் உலகில் யாரும் வாழ முடியாது.

ஆனால், இந்த உரிமையை மக்கள் தவறாகப் பயன்படுத்திக் கொள்ளக் கூடாது. தங்களின் சொந்த நலனுக்காகப் பிறரை அழித்துவிடக் கூடாது. அது பொன்வாத்து அறுக்கும் கதையாகிவிடும். கூடி வாழ்ந்தால் கோடி நன்மை என்ற நற்பண்பை அறியலாம். இந்த சிந்தனைகளைத் தான் மனித உள்ளம் படைத்த புலவர்கள் எழுப்பிக் கொண்டே வந்துள்ளார்கள்.

ஆயினும், தனி நலனுக்குப் பொதுநலன் பலியிடப்படும் நிலை ஓயவில்லை. சமயம், சாதி, கட்சி என்பனவற்றில் ஏதாவது ஒன்றன் பெயரால், சிலர் இந்த நாடகத்தைத் தொடர்ந்து நடத்திக் கொண்டு தான் இருக்கிறார்கள். போரையும், வீரத்தையும், அவற்றால் வரும் புகழையும் சிறப்பித்துப் பாடிய புலவர்கள், அவை தன்னலத்திற்குப் பயன்படுத்தப்படும் போது இடித்துரைக்கத் தயங்கவில்லை. இந்தத் தெளிவுத் திண்மைதான் மனித உள்ளம். அது குற்றமில்லாத புகழுக்காகத் துன்பம் அனுபவிப்பதைப் போற்றுகிறது. தன்னலத்திற்காகத் துன்பம் இழைக்கப்படுவதைக் கண்டு பதைத்துச் சீறுகிறது. இந்த உள்ளம் இருப்பதனால் தான் உலகம் இன்னும் இயங்குகிறது. இவ்வுள்ளம் வளர்ந்து பெருகினால் தன்னலம் என்னும் குற்ற உணர்வு அடியோடு நீங்கிவிடும் என்று நம்ப இடமுண்டு என்று தெரிகிறது.

### பொது நலத்தை விரும்பியமை

ஆனால், உலகம் தோன்றிய நாள்முதல், தான் விளங்க வேண்டும் என்னும் தன்னலமே பெருகியிருந்து வந்துள்ளது. நாடுதொறும் போர்கள் பலவும் இத்தன்னலத்தால் எழுந்த போர்களே. உலகத்தைத் திருத்துவதற்கு என்று அமைந்த பெருநிலையங்களும், இந்த நச்சுமர நிழலால் அழிந்தன. தாம் விளங்க வேண்டும் என்னும் தன்னலம் கொண்டு நிலையத் தலைவர் நிலையங்களை அழித்தனர். சில சமய அமைப்புகளையும் அழித்தனர். சமய அமைப்பு பெரிது என்னும் பெருநோக்கம் இன்மையால் அழித்தனர். அத்தன்னலத்தால்தான் மொழியாக்கத்திற்கும் கேடு சூழ்ந்தனர். மொழியாக்கம், பொது நலம் பயப்பது எனக் கருதாது கெடுத்தனர். உலகம் முழுதும் உய்யும் பொதுநோக்கம் கொண்ட அரசியல் அமைப்பும், தன்னலம் கொண்ட தலைவர்களால் தகர்ந்து வீழ்கின்றது.

குடிநலம் கருதிக் கருதி, நாட்டு நலம் நாடி நாடி உலகப் பொது நலமாய் விரியும் நன்மர நிழலே நாகரிகம். அந்நாகரிகத்தின் கவடு எனத்தக்க குடிப்பொருளை வற்புறுத்தினார் கோவூர் கிழார். 'நும் செய்தி குடிப்பொருள் அன்று' என்று

கடிந்துரைத்துத் தன்னலப் போரைக் கொன்று வீழ்த்த முனைந்தார். புலவர் மனத்தில் இத்தகைய பொதுநலம் கனிந்திருக்கவில்லையேல் அவர் தன்னலம் கொண்ட உள்ளத்தினராய் இருந்திருப்பின், நலங்கிள்ளியிடம் சென்றபோது அவனுக்கு உவப்பாகப் புகழ்ந்து மாற்றானைப் பழித்து வந்திருத்தல் கூடும். நெடுங்கிள்ளியிடம் சென்றபோதும் அவ்வாறே 'நீயே வேந்தன். அவனுக்கு அரசும் தகாது. அவனை அழிக்கும் நின் முயற்சி வெல்வதாக. அவன் கயவன். நீயோ சோழர் குடித் தோன்றல். வாழ்க நின் கொற்றம்' என அவன் புகழால் உவப்பித்தும், மாற்றான் பழியால் மகிழ்வித்தும் வந்திருத்தல் கூடும்.

இருவரிடமும் எய்தற்கரிய பெரும் பரிசுகளைப் பெற்று இனிதாக வாழ்ந்து காலம் கழித்திருக்கலாம். போரின் விளைவுகளை நினைந்து உருகிப் பொதுநலம் போற்றி, தன்னலம் மறந்து உலகம் உய்யும் நெறியறிந்து உணர்த்திய அன்பு நெஞ்சம் இந்நிலைக்கு ஒருகாலும் இழிந்திருத்தல் இயலாது. நன்மர நிழலில் இன்புற்றோர் நச்சுமர நிழலை நாடக் கனவிலும் கருதார். நச்சு மரத்தை வெட்டி வீழ்த்தவும் அஞ்சுவர். இவ்வாறு அரசரின் மனநிலை உணர்ந்த புலவர் அவர் போற்றுவன கொண்டே அறிவுறுத்தத் தொடங்கினார். அவரது நோக்கம் போரை நிறுத்தி சமாதானத்தை ஏற்படுத்த வேண்டும் என்பதாகும். இதனால் புலவர்கள் நாட்டுப் பணியில் நாட்டம் கொண்டிருந்த நாட்டபிமானப் பண்பு விளங்கும்.

**போரில் மனித நேயம்**

பண்டைத் தமிழ் மன்னர்கள் அறம் திறம்பாதவர்களாகவே வாழ்ந்து காட்டியுள்ளனர். அறத்துறை அரசியலிலே மட்டும்தான் ஆட்சி செலுத்தி மாட்சி பெற்றது. மன்னுயிர் காக்கும் மறவேந்தர் மறத்துறையிலும் அறத்துறை வழுவாமல் ஒழுகினர் என்பதை நாம் நன்கறிய முடிகிறது. போரிடும் காலத்திலும் அவர்கள் தங்களுடைய அறநெறியினின்று தவறியதில்லை.

*''ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்*
*பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்*
*தென்புல வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்*
*பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்*
*எம்அம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மின்என*
*அறத்தாறு நுவலும் பூட்கை''*[133]

என்ற இப்பாடல் புலப்படுத்துகிறது. அதாவது, பார்ப்பனர்கள், பெண்கள், நோயாளிகள், தன் முன்னோர்க்குரிய அரிய கடன்களைச் செய்வதற்குரிய சிறந்த பிள்ளைகளைப் பெறாதவர்கள் ஆகிய இவர்களுக்குப் போரால் எவ்வித இன்னலும் நேரக்கூடாது என்பது தமிழர்களின் தலைசிறந்த அறமாகும். தமிழர் அருள்நெறியை இக்காலப் போர்வெறியர்கள் பின்பற்ற முடியாது.

இப்பாடலில் பாண்டியனை வாழ்த்தும்போது அவனிடம் உள்ள உயர்ந்த மனித நேயப் பண்பை எடுத்துக் காட்டினார் புலவர். தமிழர்கள் போர்க்காலத்திலும் அறத்தையும், அருள் நெறியையும் பாதுகாத்து வந்தார்கள். அறிவுத் துறையில் உலகம் இன்று எவ்வளவோ முன்னேறிவிட்டது உண்மைதான். ஆனால், அறிவும், மனிதத் தன்மையும், வீரமும், அருளும் இணைய வாழ்ந்த தமிழர், அருள் நெறியை இன்று உலகம் பின்பற்றினால் நன்றாக இருக்கும்.

**மறநெஞ்சம்**

உலோச்சனார் என்னும் புலவர் போர் மறவனைப்பற்றிக் கூறுகின்றபொழுது, வீரனின் மறநெஞ்சத்தினைப் புலப்படுத்துகின்றார். களிறு ஒன்று மறவன்மீது பாய வருகின்றது. அக்களிற்றின் நெற்றியின்மீது மறவன் வேலைப் பாய்ச்சுகின்றான். தன் உயிரையும் பொருட்படுத்தாது போர் செய்கிறான். பகைவர்கள் வலது கையிலே வேலினைத் தாங்கி யானைப் படையுடன் பொருது வருகின்றனர். பகைவர்கள் எறிந்த வேல் வீரனின் உடம்பிலே வந்து தைக்க அதனைப் பிடுங்கி அவர்களை முறியடிக்கின்றான். அதுமட்டுமல்லாமல் மறவரைத் தாக்கி அவர் உயிர் நீங்கிய உடலையும் பற்றிக் கொண்டு நிற்கின்றான். இதனை,

> *“..... ...... .... ஒன்னலர்*
> *எஃகுடை வலத்தர் மாவொடு பரத்தரக்*
> *கையின் வாங்கித் தழீஇ*
> *மொய்ம்பின் ஊக்கி மெய்க்கொண் டனனே’*[134]

என்ற இப்பாடல் நாட்டு மானமே தன் உயிரினும் பெரிது என்ற கொள்கையைத் தமிழர் பின்பற்றினர் என்ற உண்மையை உணர்த்துகிறது.

**போர் வீரர் பண்பு**

இளைய போர் வீரர்களின் வலிமையையும் ஒருமைப்பண்பாட்டையும் மூன்று

உவமை வாயிலாக ஔவையார் விளக்கியுள்ளார். அன்னார், அடிக்கும் கோலுக்கு அஞ்சாது எதிர் மண்டும் பாம்பு போன்றவர். வெள்ளாடுகள் ஒன்று சென்ற வழியே ஏனைய யாவும் செல்வதுபோல, வேந்தன் சென்றாங்கு செல்லும் சிறப்புடைய பண்பினர். பனை ஓலைக் குடையானது தன்னைப் பிடிப்பவனை மழையில் நனையாதவாறு இடை நின்று காப்பதுபோல, மன்னனுக்கும், அவனைத் தாக்கவரும் வேலுக்கும் இடையே நின்று அதனை ஏற்றுக் கொள்ளும் சால்பினர்.

*''எறிகோல் அஞ்சா அரவின் அன்ன*
*சிறுவன் மள்ளரு முளரே''*[135]

*''வெள்ளை வெள்யாட்டுச் செச்சைபோலத்*
*தன்னோர் அன்ன இளையர் இருப்ப''*[136]

*''மறப்புகழ் நிறைந்த மைந்தினோன் இவனும்*
*உறைப்புழி ஓலை போல*
*மறைக்குவன் பெருமநிற் குறித்துவரு வேலே''*[137]

இப்பாடல்கள் வழி அக்காலப் போர் வீரர்களின் பண்பு புலப்படுகிறது.

யானைகளைக் கொல்வதால் நுனிமுரிந்து விடுபட்ட வேலையுடைய வீரர், போர் செய்கின்ற போர்க்களத்தே பகைவர் எழுவரின் முடியின் பொன்னால் செய்த ஆரத்தை மார்பிலே அணிந்தவன் குட்டுவன்.

*''களிறெறிந்து முரிந்த கதுவாய் எஃகின்*
*விழுமியோர் துவன்றிய வன்க ணாட்பின்*
*எழுமுடி மார்பின் எய்திய சேரல்''*[138]

என வருவதாலும், ''இமயமலை வடக்கெல்லையாகவும், குமரி தெற்கெல்லையாகவும் கொண்டு இதற்கிடையேயுள்ள நிலத்தின்கண் வாழும் பகையரசர்களோடு பெரிய போர் உடற்றி வெற்றி பெற்று அவ்வரசர்களது புகழமைந்த நாட்டைத் தன்னுடையதாய்க் கொண்டு தன்னோடு போர்க்கு வருவோரைக் கொல்லுதலையே தொழிலாகக் கொண்ட சிறந்த படையினையும் உடைய குட்டுவன்''[139] என்று பாராட்டுகிறார் என்பதிலிருந்து குட்டுவன் மாபெரும் வீரனாய்த் திகழ்ந்தான் என்பதும், நாட்டுப்பற்று மிக்கவன் என்பதும் தெரிய வருகிறது.

## சிறுவனின் வீரச்செயல்

செம்முது பெண்டிர் காதலஞ்சிறுவனின் செயலை எண்ணினால் மிக வியப்பாக உள்ளது. ஆய்மகள் தன் நகத்தால் தெறிக்கும் துளி உறைமோர், நிறைகுடப் பாலாயினும் குடம் முழுமையும் கலக்கிக் கெடுக்குமாறு போல, பகைவர் தம் படைத்திரள் உடைந்து சிதறும் வண்ணம் அவன் ஒருவனே காரணமாய் விளங்குகின்றான். அவன் ஆண்மையினை,

> *''மடப்பால் ஆய்மகள் வள்ளுகிர்த் தெறித்த*
> *குடப்பால் சில்லுறை போலப்*
> *படைக்கு நோய்எல்லாம் தான்ஆ யினனே''*[140]

என்று சிறுவனின் வீரச் செயல் மூலம் அவன் மன்னன் மீது கொண்ட அன்பும், நாட்டுப் பற்றும் புலப்படுகிறது.

## உடல் ஆற்றலும் அறிவாற்றலும்

காட்டகத்துச் சென்று வேட்டையாடுவோர் வனவிலங்குகளை வேட்டையாடுதலையே வீரமாகக் கருதினர். வல்வில் ஓரியின் வில்லாற்றலைப் புகழவந்த வன்பரணர், அவன் அம்பு செய்த வியத்தக்க செயலை ஒரு பாடல் மூலம் புலப்படுத்துகின்றார். ''யானையைக் கொன்று, வீழ்த்திய அம்பு, புலியையும் கொன்று, புள்ளிமான் கலையையும் பொறி கலங்கச் செய்து, கேழல் பன்றியை மாய்த்துப் பின் புற்றின்கண் கிடந்த உடும்பிலே சென்று தைத்து நின்றது''[141] என்ற புறப்பாடல் வழி ஓரியின் வீரப்பெருமை பேசப்பட்டுள்ளது.

வேல் கொண்டு யானையை எறிவதில் வீரர்க்கு வேட்கை மிக்கதாக சில புலவர்கள் காட்டுகின்றனர்.

> *''வெள்வேல் ஆவம் ஆயின் ஒள்வாள்*
> *கறையடி யானைக்கு அல்லது*
> *உறைகழிப் பறியா வேலோன் ஊரே''*[142]

என்னும் பாடல் வரிகளிலும்,

> *''வேந்தார் யானைக்கு அல்லது*
> *ஏந்துவான் போலான்தன் இலங்கிலை வேலே''*[143]

என ஆவூர் மூலங்கிழாரும்,

*"வேலின் அட்ட களிறு பெயர்த்து எண்ணின்"*[144]

என வெறிபாடிய காமக் கண்ணியாரும் கூறுவதினின்று அறியலாம். இதிலிருந்து சங்ககாலப் போர் வீரர்களின் உடல் ஆற்றலும், வீரப்பெருமையும் போர்க் களத்தில் மன்னர்களுக்கு உதவிய பாங்கும் புலப்படுகிறது.

சங்கப் பாடல்களில் வீரம் பெரிதும் பாராட்டப் பெறுகிறது. 'ஏறு தழுவுதல்' என்ற விழாவை நோக்கினால் வீரத்தின் அடிப்படையிலேயே திருமணம் நிச்சயிக்கப்பட்டது என்னும் உண்மையினைப் பெறலாம். களிறு எறிந்து பெயர்தலே காளைக்குரிய கடனாக இருந்தது. போர் செய்பவனே சிறந்த வீரனாகக் கருதப்பட்டான். புறமுதுகு காட்டுபவன் மிகக் கீழ்மையாகக் கருதப்பட்டான். செறுமுகம் நோக்கி சிறுவனை விட்ட தாயின் வரலாற்று நிகழ்ச்சியையும், போர்க்களத்தின்கண் சென்று புறமுதுகில் அம்பிருப்பின் தன் தாய்மையை ஒறுப்பதாகக் கூறும் தாயின் வரலாற்று நிகழ்ச்சியும், வீரனுக்கு அக்காலமிருந்த சிறப்பை எடுத்துக் கூறுகிறது. வீரமே புறப்பாடல்களின் கருவாகத் திகழ்கின்றது.

உலகில் எப்பகுதியிலும் போரிட வாய்ப்புக் கிடைத்தாலும், சென்று போரிட்டனர். தொலைவு ஆனாலும் மலைவு எய்தார். இதனை,

*"போரெனில் புகலும் புனைகழன் மறவர்*
*காடிடைக் கிடந்த நாடு நனிதேய*
*செல்வேம் அல்லேம் என்னார்"*[145]

இப்பாடல் மூலம் நம் புலன் உறுப்புகளுள் மிகவும் நுண்ணியதாய் விளங்கும் கண்ணை நோக்கி ஒரு வேல் பாய்ந்து வந்தாலும் கண் தன் இமைகளைச் சற்றே அசைப்பதும் ஒரு வீரனுக்கு இழுக்கு என்று கருதினர் என்பதையும், அவர்கள் வீரத்தின் மீது கொண்ட நாட்டத்தையும் அறிய முடிகிறது.

**மறத்துறையிலும் பாணர்கள்**

பாணர்கள் மறத்துறையிலும் மாண்புற்று விளங்கினர். மற்போர் செய்வதில் வல்லமை பெற்ற பாணன் ஒருவன் பண்டைக் காலத்தில் இருந்தான் என்பது தெரிய வருகிறது. "பாணன் என்பானொடு கட்டி என்பான் போர் புரிய வந்தபோது அங்கு ஒலித்த தெளிவான கிணையினது இனிய ஓசையைக் கேட்டுப் பாணனின்

பெருமையை உணர்ந்து அஞ்சிப் போர் செய்யாது ஓடினான். இதைக்கண்ட மக்கள் பேராரவாரம் செய்தனர்''[146] பாணர்கள் போர்த் தொழிலிலும் வன்மை பெற்று வாழ்ந்தனர் என்பதைத் தோழி கூற்றாக அமைந்த அகநானூற்றுப் பாடல் மூலம் அறியலாம்.[147] மேலும் பாணர் வீரர்களோடு பாசறையிலும், பிற இடங்களிலும் இருந்து ஊக்கம் ஊட்டியும், வீரம் விளைவித்தும் உள்ளனர் என்பதையும் அறிகிறோம்.

முடித்தலை அடுப்பாகவும், குருதிப்புனல் உலையாகவும், தோள் துடுப்பாகவும் கொண்டு போர்க்களத்தில் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் களவேள்வி புரிந்தான் என்பதை,

*''முடித்தலை அடுப்பாகப்*
*புனற்குருதி யுலைக்கொளீஇத்*
*தொடித்தோட் துடுப்பிற் றுழந்த வல்சியின்*
*அடுகளம் வேட்ட அடுபோர்ச் செழிய''*[148]

என்ற வரிகளின் மூலம் நெடுஞ்செழியனின் போர்க்களச் சிறப்பு புலப்படுகிறது.

போர்க்களத்தில் புண்பட்டுத் துன்புறும் வீரர்களுக்கு இசைபாடி அத்துன்பத்தை மனித நேயத்துடன் மறக்கும்படிச் செய்தனர். போரில் உடலில் புண் ஏற்பட்டால் அதனை உண்ணப் பேய்கள் வரும் என்றும், அவற்றை விரட்டக் காஞ்சிப் பண்ணைப் பாடி யாழையும், குழலையும் இசைத்தார்கள் என்றும் அறிகிறோம். இதனை,

*''வாங்குமருப்பு யாழொடு பல்லியம் கறங்கக்*
*கையகப் பெயர்த்து மைஇழுது இழுகி*
*ஐயவி சிதறி ஆம்பல் ஊதி*
*இசைமணி எறிந்து காஞ்சிபாடி''*[149]

இப்பாடல் மூலம் பாணர்கள் சிறந்து விளங்கிய தன்மையை அறிகிறோம்.

*''.... .... ... யானும்*
*விளரிக் கொட்பின் வெண்ணரி கடிகுவென்*
*என்போற் பெருவிதுப்பு உறுக வேந்தே'*[150]

இப்பாடல் வரிகள், போர்க்களத்தில் குற்றுயிரும், குலை உயிருமாக உள்ள வீரர்களைக் காப்பாற்றப் பாணர்கள் இன்னிசை பாடுதல் மரபு என்பதை நெடுங்கழுத்துப் பரணர் என்னும் பாவலர் பாடிய பாட்டால் அறிகிறோம்.

பாலமுரளி கிருஷ்ணா போன்ற இசை வல்லுநர்கள் நோயுற்றோரை இசையினால் குணப்படுத்த முடியும் என்பதை நிருபிக்கும் ஆய்வுகளை மேற்கொண்டிருக்கின்ற இருபதாம் நூற்றாண்டில் வாழுகின்ற நாம், இன்றைக்கு ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பே தமிழர்கள் இதனை நடைமுறையில் பின்பற்றியதை நோக்கும்போது அவர்தம் சீரிய மனிதநேய உணர்வு நம்மை சிலிர்க்கச் செய்கிறது.

**மன்னர்களின் வீரப்பெருமை**

சங்க காலத்தில் வாழ்ந்தவர்கள் ஒருபகல் வாழ்க்கைக்கு வருந்துதல் மிகவும் இழிவானதென்று கருதினார்கள் என்பதை,

*"…. …. அவன் அளியிழந் தோரே*
*நுண்பல் சிதலை அரிதுமுயன்று எடுத்த*
*செம்புற்று ஈயல் போல*
*ஒரு பகல் வாழ்க்கைக்கு உலமரு வோரே'*[151]

இப்பாடல் உணர்த்துகிறது. போர் புரிந்து வாழும் வீர வாழ்க்கையே வாழ்வு என்று கொண்டார்கள். சிறந்த வீரனுக்கு பேரழகுடைய பெண் உரியவள் என்ற பெருமையும் இருந்தது என்பதை,

*"திருநயத் தக்க பண்பின் இவள் நலனே*
*பொருநர்க்கு அல்லது பிறர்க்கு ஆகாதே'*[152]

இவ்வடிகள் இதனை உணர்த்துகின்றன. போரிடை வீழ்தலையே நன்மரணமாக மதித்தார்கள். அம்மரணம் பெறாதவிடத்து, பெறாதவனைத் தருப்பையில் கிடத்தி வாளால் இருகூறுபடுத்து வீரமரணம் எய்தும்படிச் செய்தனர். இதனை,

*"…. …. நல்லமர் வீழ்ந்த*
*நீள்கழன் மறவர் செல்வுழிச் செல்கென*
*வாள்போழ்ந்து அடக்கலும் உய்ந்தனர்'*[153]

இப்பாடல் வழி அறியலாம். போரிலே முதுகு காட்ட நேரிட்டால் உண்ணாவிரதமாய் வடதிசை நோக்கியிருந்து உயிர் துறந்தார்கள் என்ற செய்தியை,

*"தன்போல் வேந்தன் முன்புகுறித்து எறிந்த*
*புறப்புண் நாணி மறத்தகை மன்னன்*
*வாள்வடக்கு இருந்தனன்'*[154]

*"களிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை*
*மிகப்புகழ் உலகம் எய்திப்*
*புறப்புண் நாணி வடக்கிருந் தோனே"*[155]

என்று சேரமான் பெருஞ்சேரலாதன், சோழன் கரிகாற் பெருவளத்தான் போன்ற அரசர்களின் வீரப்பெருமையைப் புலப்படுத்துகிறது.

இதிலிருந்து சங்ககாலத்தில் வீரத்திற்கு இருந்த தனிச்சிறப்பும், பெருமையும், உயர்ந்த மதிப்பும், மன்னர்கள் மானமாகிய பண்பினை மதித்த தன்மையும், நாட்டபிமானப் பண்பும் வெளிப்படுகிறது.

**இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் வீரம்**

சேர மன்னர்களின் வரலாற்றைப் பேசும் களஞ்சியமாக விளங்கும் பதிற்றுப் பத்து இமயவரம்பன் ஆரிய வேந்தரை வென்றதையும், பல்யானை செல்கெழுகுட்டுவன் ஆய்குல குறுநில மன்னரை அடிபணிய வைத்ததையும், கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் கடற்கொள்ளையரை அழித்ததோடு, கொடுகூர்க்கொங்கர், மோகூர் பழையன், வியலூர் மன்னர் முதலியோரை வென்று கற்புத் தெய்வம் கண்ணகிக்குக் கோவில் அமைக்க வடநாடு சென்று கல் எடுத்துப் புகழ்பெற்ற நிலை முதலான பல குறிப்புகளையும் விளக்குகின்ற சிறப்புடையது.

கூர்மையான வாள்கொண்டு வெட்டுவதால், பகைவரது மார்பு பிளக்கப்பட்டு உண்டாகிய புண்ணிலிருந்து ஒழுகும் குருதியால், உப்பங்கழியின் நீரானது செந்நிறமாகி குங்குமச் சேற்றைப்போல விளங்குமாறு பகைவரை வென்று அழிக்குமாறு வீரர்களை அனுப்பியவன். அவர்களின் அரண்களை அழித்தவன். வலிமை மிகுந்து விளங்கும் சிறப்பினால் மனஎழுச்சியை உடையவன். கடல் நடுவில் பகைவரை அழிக்குமாறு வீரர்களை அனுப்பி வெற்றி பெற்றவன். அவர்களின் காவல் மரமாகிய கடம்ப மரத்தை வெட்டி, அம்மரத்தால் வீரமுரசம் செய்து கொண்ட போர் வெற்றியையும், அஞ்சாது நின்று அறப்போர் புரியும் சேனைகளையும் உடையவன் சேரலாதன் என்று அவனுடைய வெற்றிச் சிறப்பும் வீரப் பெருமையும் பேசப்பட்டுள்ளது.[156]

**அஞ்சாத அறிவுரை**

பதிற்றுப் பத்தில் காக்கை பாடினியார் நச்செள்ளையாரால் பாடப்பெற்ற பெருமை

வாய்ந்த மன்னன் ஆடுகோட்பாட்டுச் சேரலாதன். சேரமன்னன் யானைப் படைகளை மிகுதியாகப் பெற்றுள்ளான். இத்தகைய யானைப் படையை உடைய சேரனுடைய காலாட்படை பற்றியும் புலவர் கூறுகிறார். இன்று நன்கு உண்டுவிட்டோம்; ஆனால் நாளை அக்கோட்டையைப் பிடித்தால் ஒழிய உண்ணமாட்டோம் என்ற பொருளில்,

*''இன்றினிது நுகர்ந்தனம் ஆயின் நாளை*
*மண்புனை இஞ்சி மதில்கடந்து அல்லது*
*உண்குவம் அல்லேம்''*[157]

என்று கூறுகிறார்கள். இத்தகைய படைகளையுடைய சேர மன்னனின் வீரத்தையும், கொடைச் சிறப்பையும் பலபடியாகப் பாராட்டுகிறார் ஆசிரியர்.

வீரம் என்பது போர்க்களத்தில் பகைவர்க்கு அஞ்சாது எதிர்நின்று போரிடுதலாகும். ஆனால் அதைக் காட்டிலும் சிறந்த வீரம் ஒன்றுண்டு. அதுவே பவைகனுக்கு ஓர் இடுக்கண் நேர்ந்த பொழுது அந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு வெற்றி பெறாமல் விட்டுக்கொடுத்தலாகும். சேரலாதனிடம் இக்குணம் நிறைந்திருந்தது என்பதைக் காக்கைப் பாடினியார்,

*''குரல்புணர் இன்னிசைத் தழிஞ்சி பாடி*
*இளந்துணைப் புதல்வர் நல்வளம் பயந்த*
*வளங்கெழு குடைச்சூல் அடங்கிய கொள்கை*
*ஆன்ற அறிவில் தோன்றிய நல்லிசை*
*ஒண்ணுதல் மகளிர் துனித்த கண்ணினும்*
*இரவலர் புன்கண் அஞ்சும்*
*புரவெதிர் கொள்வனைக் கண்டனம்''*[158]

என்ற அடிகளில் விளக்கிக் கூறியுள்ளதைக் காணலாம். 'பகைவனுக் கருள்வாய் நன்னெஞ்சே' என்ற பாரதியின் கூற்றுக்கிணங்க, இம்மனித நேயப் பண்பு சங்க கால மன்னர்களிடத்து இருந்தமை புலப்படுகிறது.

### நலங்கிள்ளியின் படைப்பெருமை

சோழன் நலங்கிள்ளியின் படைப்பெருமையினைப் பறைசாற்ற வந்த புலவர் ''படை புறப்படுங்கால் முன்னே செல்லும் தூசிப் படையினர் பனை நுங்கைத் தின்பர். இடையில் செல்லும் படையினர் அந்நுங்கு முற்றி பழுத்துக் கனியாயிருக்க அதனைத்

தின்பர். இறுதியில் செல்லும் படையினர் சுவைத்துத் தின்றுபோட்ட பனங்கொட்டைகள் முளைத்துப் பிசிரொடுகூடிய பனங்கிழங்கைச் சுட்டுத் தின்பர்''[159] அத்துணை பெரிய அளவில் சோழனின் படை அணிவகுத்துச் சென்றன என்னும் செய்தியினை புறப்பாடல் வழி அறியலாம்.

*''இரும்பனை வெண்தோடு... செய்யுமிடல் இகலே''*[160]

என்ற பாடலில், உலகம் விளங்க வேண்டும் என்னும் பொது நோக்கம் கொண்ட புலவர், குடி விளங்கும் நோக்கம் வளருமாறு செய்தல் அறிவான முயற்சி என்றும், தகுதியறிந்து செய்த நன்முயற்சி என்றும், சேரர்க்கும், பாண்டியர்க்கும் போர்ப் பெருமையையும், பெரு மகிழ்ச்சியையும் தரும் என்றும், இத்தகைய சீரிய மனித நேயப் பண்பை சோழன் நலங்கிள்ளிக்கும், நெடுங்கிள்ளிக்கும் அறிவுறுத்திய தன்மையினையும் புலப்படுத்தியுள்ளார்.

**கரிகாலனின் வீரச்சிறப்பு**

இவன் இளமைக் காலத்தில் செய்த முதல்போர் வெண்ணிப் போரே என்று அறிஞர்கள் கருதுகின்றனர். இப்போரில் சேர, பாண்டிய மன்னர்களேயன்றி அவர்கட்குத் துணையாக வந்த பதினொரு வேளிராகிய குறுநில மன்னர்களும் போர் செய்து இவனிடம் தோற்றனர். இவ்வெண்ணிப் போரின் வெற்றியை,

*''காய்சின மொய்ம்பிற் பெரும்பெயர்க் கரிகால்*
*ஆர்கலி நறவின் வெண்ணி வாயில்*
*சீர்கெழு மன்னர் மறலிய ஞாட்பின்*
*இமிழிசை முரசும் பொருகளத் தொழியப்*
*பதினொரு வேளிரொடு வேந்தர் சாய*
*மொய்வலி யறுத்த ஞான்றை''*[161]

எனவரும் வாக்கானும்,

*''இருபெரு வேந்தரும் ஒருகளத் தவிய*
*வெண்ணித் தாக்கிய வெருவரு நோன்றாட்*
*கண்ணார் கண்ணிக் கரிகால் வளவன்''*[162]

என்று இவன்மீது பாடப்பட்ட பாடலும் தெளிவுறுத்தப் பட்டுள்ளன. வெண்ணிப் போரை அடுத்து 'வாகைப் பறந்தலை' என்னும் போர்க்களத்தில் இக்கரிகாலனுடன்

போர்குறித்து வந்து இவன் முன் நிற்றற்கு ஆற்றாது இவனெதிரில் செல்ல அஞ்சிப் பகைமன்னர் ஒன்பதின்மர் தத்தம் வெண்கொற்றக் குடைகளைப் போர்க்களத்திலேயே போட்டுவிட்டுப் புறம் காட்டி ஓடினர் என்பதை,

*"விரியுளைப் பொலிந்த பரியுடை நன்மான்*
*வெருவரு தானையொடு வேண்டுபுலத் திறுத்த*
*பெருவளக் கரிகான் முன்னிலைச் செல்லார்*
*சூடா வாகைப் பறந்தலை யாடுபெற*
*வொன்பது குடையு நண்பக லொழித்த*
*பீடின் மன்னர் போல"*[163]

என வருவது கொண்டு உணரலாம். வீரம், வள்ளல் தன்மை, புலமை, நீதி, சூழ்ச்சித் திறன், ஆட்சிவன்மை முதலியவற்றுக்கெல்லாம் எடுத்துக்காட்டாக விளங்கிய கரிகாலன் நம் தமிழ்நாட்டை அரசாண்டு, பெருமையும், புகழும் கொண்டு வாழ்ந்து மறைந்தான். என்றாலும் இன்று நமக்குக் கிடைத்துள்ள சங்கநூல்கள் கரிகாலனின் பெருமையையும், புகழையும் பல்லற்றானும் நமக்கு எடுத்துரைக்கின்றன. "கரிகாலன் வீரத்துடன் தன் அரசுரிமையைப் பெற்ற வரலாற்றைப் பட்டினப்பாலை விரிவாக எடுத்துக் கூறுகின்றது"[164]

## நெஞ்செழியனின் போர்த்திறம்

பாண்டியர் குலத் தோன்றலாகிய நெடுஞ்செழியன் சேர, சோழன் ஆகிய இரு பேரரசரையும், திதியன் முதலிய குறுநில மன்னரையும், ஏனைக் குறிஞ்சி நில மன்னரையும், பிறரையும் வென்று,

*"தென்குமரி வடப்பெருங்கல்*
*குணகுடகட லாவெல்லைத்*
*தொன்றுமொழிந்து தொழில்கேட்ப*
*வெற்றமொடு வெறுத்தொழுகிய"*[165]

கொற்றவர் தம் கோனாக விளங்கினான். அவன் போருக்குச் சென்று விழுப்புண் படாத நாளையெல்லாம் தன் வாழ்நாளொடு வைத்து எண்ணாத பெருமிதம் படைத்த மறவர் இனத்தைச் சேர்ந்த மாறன், தன்னொடு மாறுபட்டார் எவராயினும், அவர்களுடைய நாட்டில் அவன் புகுந்து நாடெனும் பேர் காடாகும்படி அவர்களுடைய

பசுத்திரள் தங்கிய இடமெல்லாம் புலி முதலிய விலங்குகள் தங்கவும், ஊரிலிருந்த வழி பாழாகவும் அதனை அழிப்பான். நாட்டை அழித்துப் பகையடக்கிய பின்னர் அந்நாட்டில் தானே ஆண்டு பல கழிய இறுத்து அது முன்னையினும் பன்மடங்கு மேம்பட்டு அந்நாட்டு நலம்பல பயக்குமாறு புதிய புதிய துறைகள் வகுப்பான். அதைத் தவிர, அவன் அந்நாட்டு மக்களையும், தன் உரிமைக் குடிகளாகவே கருதி, தன் குலத்துப் பெரியோர் சென்ற வழிப் பிழையாது அவர்களை ஆண்டுவருவான்.

மேற்கூறியவற்றால் மூவேந்தர்களின் அஞ்சாமை, அறிவு, கவலையின்மை, மனத்தைரியம், உடல்வலிமை, ஆகியவற்றால் நிலைநிறுத்தப்படும் வீரப்பெருமையும், குடிமக்களிடத்துக் கொண்ட மனித நேயமும், பகைவரிடத்துக் கொண்ட செருக்கும், வீரத்தின் மூலம் நாட்டுப் பற்றையும், நாட்டின் மீது கொண்ட நேயமும் புலப்படுகின்றன.

**மறக்குலத்தாயின் வீரம்**

போர்க்களத்துத் தன் தலைவரோடு புல்லிய தலையினையுடைய புதல்வரும் சேர்ந்து வீழ்ந்துகிடந்த நிலையினைக் கண்ட மறக்குலத்தாய், இது போன்ற நல்வெற்றியும் எமக்குண்டோ என உவகைப் பெருக்கால் கண்ணீர் விழ அழுத காட்சியினைக் கண்டு கூற்றுவனும் நாணுகின்றானாம். அக் காட்சியினை,

*''எந்தையொடு கிடந்தோர் புன்றலைப் புதல்வர்*
*இன்ன விறலும் உளகொல் நமக்கென*
*மூதிற்பெண்டிர் கசிந்தழ நாணிக்*
*கூற்றுகண் ஓடிய வெருவரு பறந்தலை''*[166]

என்று மறக்குலத்தாயின் மறப்பண்பினை மன்பதைக்குக் காட்டும் திறம் போற்றற்குரியது.

'யானை தன் எதிரே செல்லினும், பாம்புதன் மேலே செல்லினும், வலிய இடியே இடிப்பினும் சூல் கொண்ட மகள் அவைகளுக்கு அஞ்சி மீளா மறத்தைப் பூண்ட வாழ்வினை உடையவள்'[167] என்று வீரக்குடிமகள் இயல்பு பெரும்பாணாற்றுப் படையில் பேசப்பட்டுள்ளது. இளந்திரையனின் ஆட்சியில் குடிமகளிர் கூட அஞ்சா நெஞ்சம் படைத்தவர்களாகத் திகழ்ந்தனர் என்பதிலிருந்து அவன் நாட்டையாண்ட தன்மையும் மகளிரின் அஞ்சா நெஞ்சமும் புலப்படுகிறது.

''வேம்பின் கிளைகளை ஒடிப்பவும், காஞ்சிப் பண் பாடவும் நெய்யுடைக் கையராய் மனையோர் வெண்சிறு கடுகினைப் புகைப்பவும், எல்லா வீடுகளிலும் 'கல்' என்று ஆரவாரமும் எதிரொலிக்கின்றன. போருக்குச் சென்ற ஏனையோர் தம்மிடத்தை அடைத்தும், அவ்வீரன் ஒருவன் மட்டும் வரவில்லை. ஒருவேளை பகை வேந்தனைச் சினந்து அவனை வீழ்த்தாமல் மீளமாட்டேன் எனச் சண்டையிடுகின்றான் போலும்''[168] என்ற புறப்பாடலில் ஒரு தாயின் வீர நெஞ்சத்தின் ஈர மிகுதியை - கருணை உள்ளத்தை வெள்ளை மாறனார் எனும் புலவர் வீறுகொண்டு பாடுகிறார்.

*''என்னை மார்பிற் ... அதனினும் அரிதே''*[169]

என்ற புறப்பாடலில், நப்பசலையார் எனும் புலவர் போர்முடிவில் ஒரு தலைவன் வீட்டிற்குச் சென்று அவன் போர்ப்புண்பட்டு இறுதி நிலையில் இருந்த தன்மையைப் பார்த்தார். அவன் எவ்வகையிலும் இறுதி எய்துவான் என்பதைப் பல தீய அறிகுறிகளால் அவன் மனைவி உணர்ந்து கொண்டாள். அவள் மறக்குடி மகளாதலால் ஒருவாறு தேறி, தன் தலைவனின் தாள் நிழலில் வாழ்ந்த துடியன், பாணன், விறலி முதலியோர் வாழ்வு சீர்குலையுமே என்று அவள் நினைப்பதிலிருந்து அவளுடைய மறமாண்பையும், குடிமக்களிடத்து அவள் கொண்ட நேயமும், அன்பும் தெரியவருகின்றன.

புள்ளி பொருந்திய நுதலையுடைய யானைகளைக் கொன்றும் அமையானாய், இடையே மார்பில் புண்ணிடத்துத் தைத்துக் கொண்டு நிற்கும் அம்பைக் காட்டிய வழியான் இதனை அறியேனே என்றவன் கேடகம் கீழ்ப்பட்ட அதன்மேல் வீழ்ந்து கிடக்கும் இளஞ்சிங்கம் ஒன்றினை,

*''புகர்நிறங் கொண்ட களிறட் டானான்*
*முன்னாள் வீழ்ந்த வுரவோர் மகனே*
*உன்னிலெ னென்னும் புண்ணொன் றம்பு*
*மானுளை யன்ன குடுமித்*
*தோன்மிசைக் கிடந்த புல்லண லோனே''*[170]

எனப் பொன்முடியார் நமக்குக் காட்டுவதின் வழி, தாய் ஒருத்தி தன் மகன்மீது கொண்ட அன்பால் சிறுகோல் கொண்டு அச்சுறுத்தும் தாய்மைப் பண்பும், தலைவனுடைய வீரப் பெருமையை எண்ணி தனக்குள் வியந்து பாராட்டிய தன்மையும்

புலப்படுகிறது.

அன்னிமிஞிலி என்ற வீரப்பெண்மணி வாழ்ந்துவரும் நாளில் இவர் வீட்டுப் பசு ஒன்று அவ்வூரில் கோசர்களுக்குச் சொந்தமான நிலத்தில் நன்கு உழுது விதை விதைத்து முளைத்து வந்திருந்த பயிரில் புகுந்து மேய்ந்து விட்டதைக் கண்ட அக்கோசர்கள் வாய்மை மிக்க அவன் தந்தையைப் பிடித்துச் சிறிதும் இரக்கமின்றி கண்ணைப் பிடுங்கி துன்புறுத்திக் கொடுமை பல செய்து விட்டனர்.

இக்கொடுமையைக் கண்ட இவள் பெருஞ்சினம் கொண்டு கருணை சிறிதுமின்றி என் தந்தையைக் கொடுமை செய்த இக்கோசர்களைக் கொன்று அவர்களின் உயிரைப் போக்காத வரையில் நான் கலத்தினும் உண்ணேன். நல்ல உடையும் உடுத்தேன் என்று வஞ்சினம் பூண்டாள். வீரம் பொருந்திய படையினையுடைய நல்ல போர்த்திறனும் வாய்ந்த ''குறும்மியன் திதியன்'' என்ற குறுநில மன்னரிடம் சென்று இக்கொடுஞ் செயலை எடுத்துரைத்தான். அவன்துணை கொண்டு அக்கோசர்களோடு பெரும் போர் செய்து வெற்றியால் சினம் மாறி மகிழ்ச்சி அடைந்தாள். இவ்வுண்மை,

*''பகடுபல பூண்ட வுழவுறு செஞ்செய்''*
*இருமுறை நிரம்பி ஆகுவினைக் கலித்துப்*
*பாசிலை யமன்ற பயறா புக்கென*
*வாய்மொழித் தந்தையைக் கண்களைத் தருளா*
*தூர்முது கோசர் நவைத்த சிறுமையிற்*
*கலத்து முண்ணாள் வாலிது முடாஅள்*
*சினத்திற் கொண்ட படிவ மாறாள்*
*மறங்கெழு தானைக் கொற்றக் குறும்பியன்*
*செருவிய நன்மான் றிதியற் குரைத்தவர்*
*இன்னுயிர் செகுப்பக் கண்டுசின மாறிய*
*அன்னி மிஞிலி*[171]

எனவருவது கொண்டு அறிந்து இன்புறலாம். அக்கால மகளிர் நீதியும், நேர்மையும் பூண்டு, தான் கொண்ட வஞ்சினத்தை நிறைவேற்றும் மனத்திண்மை பெற்றிருந்தனர் என்ற கருத்தினை இப்பாடல் உணர்த்துகிறது.

**நாட்டுப் பற்று**

வீரம், தீரம் என்ற சொற்கள் அகராதியில் காணும் சொற்களாய் இருந்தனவேயன்றி அவற்றிக்கும், இன்றுள்ள நமது வாழ்க்கைக்கும் யாதொரு தொடர்பும் இல்லாமல் போய்விட்டது. நம் நாடு நலம் பெற வேண்டுமாயின், இந்த நல்லுணர்ச்சிகளை நாம் மீண்டும் பெறுதல் வேண்டும். நாட்டுப்பற்றில் ஆர்வம் கொண்டிருந்த ஆடவர்கள், போரிலே தம் பங்கினை ஆற்ற, பெண்களோ வீட்டிலிருந்து கொண்டே குழந்தைகளுக்கு வீரமூட்டியும், வீரர்களைப் போருக்கு அனுப்பியும், தம் நாட்டுப் பற்றாகிய பண்பினை வெளிப்படுத்தினர் என்பது தெரிகிறது.

பாரி என்ற வள்ளல் இறந்தபிறகு பாரி மகளிரும், கபிலரும் பறம்பு மலையை நோக்கிப் பாடிய பாடல்கள் அவர்தம் நாட்டுப்பற்றை மிக நன்றாக உணர்த்துகின்றன. இதனை,

*"அற்றைத் திங்கள் அவ்வெண் ணிலவின்*
*எந்தையும் உடையேம்எம் குன்றும் பிறர்கொளார்*
*இற்றைத் திங்கள் இவ்வெண் ணிலவின்*
*வென்றெறி முரசின் வேந்தரெம்*
*குன்றும் கொண்டார்யாம் எந்தையும் இலமே'*[172]

என்று பாரிமகளிர் பாடிய பாடலில் எத்துணை சோகம்! தாங்கள் பெண்களாயப் பிறந்தமையால் இக்குன்றினை இழந்தோம் என்று கருதுவது போலத் தோன்றுகிறது. இவ்வாறு தேசப்பற்றையும், வீர உணர்ச்சியையும் இன்று நாம் மீண்டும் பெறுவதற்கு வேண்டும் உள்ளக் கிளர்ச்சியை உணர்த்துவதில் சங்க இலக்கியங்கள் முதலிடத்தைப் பெறுகின்றன எனலாம்.

## வீரத்தில் மனித நேயம்

**வீரம் பாடிய மகளிர்**

சங்க காலத்தில் வாழ்ந்த தமிழ் மக்கள் உடல் வீரமும், உள்ள வீரமும் ஒருங்கே பெற்றவர்கள். அவ்வாறு அவர்கள் தோன்ற வேண்டுமாயின் அதற்குரிய காரணம் அவ்வீரர்களைப் பெற்றெடுத்த தாய்மார்களும் வீரம் மிக்கவர்களாய் இருத்தல் வேண்டும். இவ்வுண்மையைப் பலரும் அறிந்திருந்தனர். எனினும் சமயம் நேரும்பொழுது ஒருசிலர் மட்டும் வீரர்களைப் புகழ்வதோடன்றி அத்தாய்மார்களையும்

புகழ்ந்து கூறினர். வீரரைப் பெற்றெடுத்த வீரம் மிக்க மகளிரை ‘மூதின் மகளிர்’ என்று வழங்கினர். இதற்கு பழைய வீரக்குடியில் பிறந்த பெண்டிர் என்பது பொருளாகும்.

தன்மகன் முதுகில் புண்பட்டான் என்றால் போரில் புறம் காட்டி ஓடினான் என்று பொருள்படும். வீரக்குடியில் பிறந்த தாய்க்குத் தன்மகன் செய்த இந்த இழிந்த செயலைப் பொறுக்கமாட்டாது சீறி எழுந்து பின்வருமாறு கூறுகின்றாள்.

*“செங்களம் துழவுவோள் சிதைந்துவே றாகிய*
*படுமகன் கிடக்கை காணூஉ*
*ஈன்ற ஞான்றினும் பெரிதுஉவந் தனளே”*[173]

இப்பாடலில், என்மகன் உண்மையில் புறமுதுகில் புண்பட்டு இறந்திருப்பின் அவனுக்குப் பால் கொடுத்த என் மார்பை அறுத்துவிடுகிறேன் என்று சபதம் செய்து புறப்பட்டாள். போர்க்களத்தில் கிடந்த உடல்களைப் புரட்டித் தன்மகன் உடலைக் கண்டாள். அவன் மார்பில் பட்ட காயத்துடன் இறந்து கிடந்தான். அவ்வீரத்தாய் அதுகண்டு ஈன்றபொழுதைக் காட்டிலும் அதிகம் மகிழ்ந்தாளாம்.

இவ்வாறு வீரத்தையும், வீரமகளிரையும் புகழும் பாடல்களாயினும் போரில் விளையும் மாற்ற முடியாத துன்பத்தை இப்பாடல் படம் பிடித்துக் காட்டுகிறது.

மற்றொரு பாடலில், நரை மூதாட்டி ஒருத்தியின் சிறுவன் போர்க்களம் சென்று, தன்மேல், பாயவந்த களிற்றைக் கொன்று தானும் இறந்து பட்டனன் என மற்றவர்கள் மொழிந்து நிற்பதைக் கேட்ட அளவிலே, அவனைப் பெற்றெடுத்த போது அவளுக்கு உண்டாகிய மகிழ்ச்சியின் எல்லையைக் காட்டினும் பன்மடங்கு பெரிதும் இருந்ததாகப் பூங்கண் உத்திரையார்,

*“மீன்உண் கொக்கின் தூவி யன்ன*
*வால்நரைக் கூந்தல் முதியோள் சிறுவன்*
*களிறுஎறிந்து பட்டனன் என்னும் உவகை*
*ஈன்ற ஞான்றினும் பெரிதே”*[174]

என அழகுற எடுத்துக் காட்டுகிறார். ஔவையாரும்,

*““வருபடை போழ்ந்து வாய்ப்பட விளங்கி*
*இடைப்படை அழுவத்துச் சிதைந்து வேறாகிய*

*சிறப்புடை யாளன் மாண்புகண் டருளி*
*வாடுமுலை ஊறிச் சுரந்தன*
*ஓடாப் பூட்கை விடலை தாய்க்கே'*[175]

எனக் கூறி மகிழ்ந்து வியந்து நிற்பதையும் காணலாம். புறமுதுகு காட்டி ஓடிச் சென்று தன்னுயிரைக் காத்துக் கொள்ளாது இறுதிவரைப் போரிட்ட அந்த வீரன் போர்க்களத்திலேயே மார்பில் காயம்பட்டு இறந்துகிடப்பது கண்டு பெரிதும் மகிழ்ச்சியே அடைந்தாள் அவன் தாய். இதிலிருந்து தாயின் தன்னலம் இல்லாத நற்பண்பும், மகன் வீரத்தின் மீது கொண்ட எல்லையற்ற நம்பிக்கையும் பெறப்பட்டது.

மேலும் ஒரு பாடலில், தாய் ஒருத்தியிடம் சென்று உன் மகன் எங்கே என்று ஒருவர் கேட்டபோது அவள்,

*''புலிசேர்ந்து போகிய கல்லளை போல*
*ஈன்ற வயிறோ இதுவே*
*தோன்றுவன் மாதோ போர்க் களத்தானே'*[176]

அவன் போர்க்களத்திலே காணப்படுவான் என்று மறுமொழி கூறினாள். இதிலிருந்து தமிழ் மகளிர் வீரமகனைப் பெறுவதிலும், தன் மகன் போருக்குச் செல்வதிலும், எத்துணை பெருமை கொண்டனர் என்பதை அறியலாம். இதனால் அவர்களின் உயர்ந்த நோக்கமும், அவர்களுக்கு நாட்டின் மீது இருந்த பற்றும் விளங்கும். சங்க கால மகளிரின் உள்ளக் கிடக்கையும், வாழ்வின் சீரிய நோக்கங்களும், மானமும், அறமும் இழந்து பின் உயிர் வாழாத அவர்களுடைய மனிதநேய உயர் பண்பும் இனிதாகத் தீட்டப்பட்டுள்ளன.

அவ்வரிய சங்கப் பாடல்களை ஒவ்வொரு தமிழ்மகனும் நன்கு கற்று அதன்படி நடந்தால் தான் உலகில் மனிதநேயம் தழைத்து வளரும். அக்காலம் எப்போது வருமோ அப்போதுதான் நம் நாடு முன்னேற்றமடையும் என்பதில் ஐயமில்லை.

ஒக்கூர் மாசாத்தியார் என்னும் பெண்பாற் புலவர் புறநானூற்றுப் பாடலில் ஒரு தாயின் வீரச் சிறப்பினைக் கூறி

*''கெடுக சிந்தை கடிதிவள் துணிவே'*[177]

என்று விம்மிதம் கொள்கிறார். அக்காலத்தவர் அதைக் கண்டு வியப்பெய்தினர். நாமும் இக்காலத்தில் சொல்லிச் சொல்லி வாயார முடிவதில்லை.

''ஒரு பெண்ணின் தமையன் முதல்நாட் போரில் விழுந்து இறந்தான். பகைவர் ஆநிரையைக் கவர்ந்து சென்றனர். மறுநாள் அவள் கணவன் அவ்வாநிரையை மீட்டு வரச் சென்று வீரத்துடன் பொருது மாண்டான். மூன்றாம் நாள் போருக்கு அழைக்கும் முரசு அறையப் பெற்றது. அப்பெண் அதைக் கேட்டுப் பொங்கி எழுந்து வீட்டில் எஞ்சி நின்ற தன் ஒரே மகனை அழைத்து, அன்போடு அணைத்து உச்சிமோந்து, தலைக்கு எண்ணெய் இட்டு, சீவி முடித்தாள். தும்பைப்பூ போன்ற தூய்மையான ஆடையைச் சுற்றிக் கட்டி அவன் கையில் வேலைக் கொடுத்துப் போர்களத்தை நோக்கிச் செல்லும்படி விடுத்தாள்''[178] இதிலிருந்து ஒரு பெண்ணின் துணிவும், வீரமும், தியாகமும், நாட்டுக்கு ஒரு துன்பம் வந்தபோது தன் ஒரே மகனையும் நாட்டின் நலத்திற்காக போருக்கு விடுத்த அரசியல் உணர்ச்சியும் புலப்படுகிறது.

**வாகைச் சிறப்பு**

வாகை வீரத்தால் விளைவது. வீரமின்றேல் வெற்றியுமின்று. செங்கோன்மையும், வீரமும் இணைந்தால் தான், மன்னவன் நாட்டைக் காத்தல் இயலும். மன்னர் வீரம் உடையவனாயின் மக்களும் வீரம் உடையவர்களாகின்றனர். இருவர் வீரமும் இணையின் வெற்றியும், இன்பமும் நிலைக்கும்.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனைப் பாடும் கோவூர்கிழார் மகளிர் இல்லின்கண் மயிற்பெடை மாறுபாடு கொண்டு முன்னும், பின்னும் நடப்பது போன்று நடந்து இல்லம் விட்டுத் தன் கணவர் போரில்பட்ட புண்களைக் காண விருப்பிப் போர்க்களம் சென்றதாகக் கூறுகின்றார்.

*''... தண்டா மாப்பொறி*
*மடக்கண் மயிலியன்று மறலி யாங்கு*
*நெடுஞ்சுவர் நல்லில் புலம்பக் கடைகழிந்து*
*மென்றோண் மகளிர் மன்றம் பேணார்*
*புண்ணுவந்து''*[179]

இங்ஙனம் போர் நடைபெறுங்கால் இல்லின்கண் இருந்து செய்வதறியாது அலமரல் உற்று முன்னும், பின்னும் நடைபோடும் மகளிர் போரில் வெற்றி பெற்றவுடன் கணவர் பெற்ற விழுப்புண் காண போர்க்களம் விழைந்து விரைகின்றனர். இவ்வடிகள் மகளிர்தம் வீரம் உணர்த்தி நிற்கின்றன. மகளிர் இத்துணை வீரம் உடையவர் எனின் ஆடவர் வீரமும், அவர்களை ஆளும் மன்னனின் வீரமும், அவ்வீரத்தில் பெறும்

வெற்றியும் குறிப்பிடாதே விளங்கும்.

அரசு என்ற அமைப்பை சில குறிக்கோள்களை அடைவதற்காக மனித சமுதாயம் ஏற்படுத்திக் கொண்டுள்ளது. அவற்றின் அதிகாரமும், செயல் முறையும் மக்களின் நலம் நாடும் போக்கிலேயே வகுக்கப்பட்டுள்ளன. மனிதன் சிந்திக்கும் ஆற்றலைப் பெற்ற நாளிலிருந்து உலகில் சிறப்புற்று வாழ்வதற்கு வேண்டிய பொருட்கள், தேவைகள், அவற்றை நிறைவு செய்வதற்குரிய வழிகள், அவற்றிற்குச் சாதகமான சமூக அமைப்பு மற்ற வசதிகள் முதலியன பற்றி சிந்திக்கத் தொடங்கிவிட்டான். அவ்வாறு தோன்றிய சிந்தனையின் பயனாகப் பொருளாதாரச் சிந்தனைகள் முகிழ்த்தன.

எந்த ஒரு மனிதனும், தனித்து வாழ இயலாத சூழல் உருவாகும் போது மனிதன் தன்னைப் பாதுகாக்க வேண்டும் என்ற உணர்வு உந்துதலால் சில அமைப்புகளை உருவாக்கிக் கொள்ள நேரிடுகிறது. அவ்வமைப்புக்கள் சமுதாய நலங்கருதி அமைக்கப்பட்ட காரணத்தால் தொடர்ந்து நிலைபெறும் தன்மையினைப் பெறுகின்றன. தனிமனித வாழ்க்கையிலும், சமுதாய வாழ்க்கையிலும் மனிதன் ஆற்றவேண்டிய கடமைகள் பலதரப்பட்டன. ஒவ்வொரு நாடும் தனது முன்னேற்றத்திற்காகத் தனக்கென ஓர் அமைப்பை ஏற்படுத்திக் கொள்ள வேண்டிய கட்டாய நிலைக்கு இன்றைய சமுதாயம் தள்ளப்படுகின்றது.

பண்டைத் தமிழ் மன்னர்களின் அரசாட்சியில் புலவர் பெருமக்கள் சிறந்த செல்வாக்குடன் விளங்கினர். மன்னர்கள் புலவர்களின் வறுமையைப் போக்கி அவர்களுக்குப் பொன்னும், மணியும், பொருளும் அளித்தனர். அவர்களைத் தம் உயிரனைய நண்பர்களாகவும் கொண்டனர். அவர்கள் கூறிய அறிவுரையின்படி தம் வாழ்க்கையினையும், அரசியலையும் நடத்தி வந்தனர். புலவர் தம்மைப் புகழ்ந்து பாடுதலைப் பெறுதற்கரிய பேறாகக் கருதினர்.

இதுகாறும் கூறயவற்றால் பண்டைத் தமிழகத்தில் மனிதநேய மிக்க கோனாட்சியே சிறப்புற விளங்கியது என்பதும், தமிழ் நாட்டை முடியுடைய மூவேந்தரும், குறுநில மன்னரும் செங்கோல் முறை பிறழாது அறநெறியையே அடிப்படையாகக் கொண்டு அரசு புரிந்தனர் என்பதும், பண்டைக் காலத்தில் அறங்கூறவையங்கள் இருந்தன என்பதும், மன்னர் தாம் ஈட்டிய பொருளை அறம், பொருள், இன்பத்திற்காகப் பயன்படுத்தி புலவர் பெருமக்களைப் புரந்து புலவர்

பாடும் புகழுடையோராக விளங்கினர் என்பதும் கூறப்பட்டுள்ளன. இவ்வாறு சங்க இலக்கியங்களில் அரசியல் கூறுகளில் மனிதநேயக் கருத்துகள் மலிந்திருப்பதைக் காண முடிகின்றது. இவ்விலக்கியச் சான்றுகளின் மூலம் சங்ககால அரசியல் நிலையினை நம்மால் தெளிவாக அறிந்து கொள்ள முடிகிறது.

# குறிப்புகள்

## இயல் - மூன்று

1. புறம். 186:2.
2. மதுரை. : 496-499.
3. மதுரை. : 489-492.
4. புறம் : 75.
5. புறம். 3:14.
6. புறம். 38:12-18.
7. புறம். 117:1-7.
8. புறம். 189:5-8.
9. புறம். 186:1-2.
10. புறம். 5:5-7.
11. புறம். 55:10-17.
12. பெரும்பாண். 441-442.
13. புறம். 242: 1,3,5-6.
14. புறம். 35:19-21.
15. புறம். 40:5-9.
16. புறம். 2:1-8.
17. புறம். 183:1-2.
18. புறம். 183:5-7.
19. புறம். 5:5-8.
20. புறம். 10:11.
21. புறம். 35:27-29.
22. புறம். 186:3-4.
23. புறம். 29:9-12.
24. புறம். 54:2-4.
25. மலைபடு. 76-80.
26. புறம். 312:4.
27. பதிற்று. 58:15-19.
28. பொருந. 150-151.

29. பொருந. 76-78.
30. பொருந. 137-138.
31. புறம். 38:7-9.
32. புறம். 2:15-16.
33. புறம். 44:14-16.
34. புறம். 20:21.
35. அகம். 77:7-8.
36. புறம். 20:16-17.
37. பெரும்பாண்: 330-332.
38. பொருந. 230.
39. பெரும்பாண். 36.
40. புறம். 116:10-14.
41. புறம். 75:1-2.
42. புறம். 213:9-11.
43. புறம். 72:4-5.
44. புறம். 55:7-9.
45. மதுரை. 509-510.
46. மதுரை. 197-205.
47. புறம். 18:18-30.
48. புறம். 18-28-30.
49. மதுரை. 106-109.
50. பட்டின. 1-6.
51. பதிற்று. 69:13-14.
52. புறம். 397:23-27.
53. அகம். 77:7-8.
54. அகம். 256:15-20.
55. மதுரை. 641-650.
56. முல்லை. 50.
57. புறம். 37:8-9.
58. பெரும்பாண். 39-41.
59. பெரும்பாண். 78-81.

60. புறம். 91:6-7.
61. புறம். 91:9-11.
62. சிறுபாண். 99-103.
63. புறம். 94:3-5.
64. குறள்: 100.
65. குறள்: 386.
66. புறம். 152:21-22.
67. புறம். 150:20-21.
68. புறம். 150:22-23.
69. குறள்: 383.
70. புறம். 101:1-3.
71. புறம். 101:5-8.
72. புறம். 171:1-4.
73. புறம். 107.
74. புறம். 133:6.
75. குறள்: 211.
76. குறள்: 390.
77. புறம். 158:17-20.
78. புறம். 130:1-2.
79. புறம். 140:5-8.
80. புறம். 34:5-7.
81. புறம். 182:8-9.
82. குறள்: 996:1.
83. புறம். 195:6-9.
84. புறம். 134.
85. புறம். 192.
86. புறம். 246:7-10.
87. புறம். 246:13-15.
88. புறம். 162:5-7.
89. அகம். 126:13-16.
90. புறம். 71:6-19.

91. புறம். 72:9-18.
92. புறம். 73:11-14.
93. குறள்: 219.
94. புறம். 95.
95. புறம். 187:3-4.
96. புறம். 185.
97. சீவக.சிந். முக். இலம். 311.
98. புறம். 90:6-13.
99. அகம். 345:6.
100. புறம். 208:5-9.
101. புறம். 47:1-6.
102. புறம். 205:1-2.
103. புறம். 162.
104. புறம். 45:5-9.
105. புறம். 46:8.
106. புறம். 58:24-28.
107. புறம். 50:8-13.
108. புறம். 20:7-9.
109. புறம். 163:5-7.
110. அகம். 54:13.
111. புறம். 173.
112. புறம். 190:3-5.
113. புறம். 182.
114. குறள்: 990.
115. புறம். 184.
116. புறம். 188.
117. புறம். 44:6.
118. புறம். 215:6-9.
119. புறம். 216:6-12.
120. புறம். 191:1-2.
121. குறள்: 110.

122. புறம். 34:16-18.

123. புறம். 68:6-7.

124. புறம். 315:4-7.

125. புறம். 58:12-18.

126. பா.கவி. தேசபக்திப் பாடல்கள். 1. வந்தே மாதரம் 4:1-2.

127. புறம். 58:19-23.

128. புறம். 367:12-14.

129. புறம். 367:1-3.

130. பொருந. 53-55.

131. புறம். 336.

132. புறம். 44:11-16.

133. புறம். 9:1-6.

134. புறம். 274:4-7.

135. புறம். 89:5-6.

136. புறம். 286:1-2.

137. புறம். 290:6-8.

138. பதிற்று. 45:4-6.

139. பதிற்று. 43:6-11.

140. புறம். 276:4-6.

141. புறம். 152:1-8.

142. புறம். 323:5-7.

143. புறம். 301:15-16.

144. புறம். 302:9.

145. புறம். 31:9-11.

146. அகம். 226:13-17.

147. அகம். 386:3-4.

148. புறம். 26:8-11.

149. புறம். 281:2-5.

150. புறம். 291:3-5.

151. புறம். 51:8-11.

152. புறம். 342:5-6.

153. புறம். 93:9-11.
154. புறம். 65:9-11.
155. புறம். 66:6-8.
156. பதிற்று. 11:7-14.
157. பதிற்று. 58:5-7.
158. பதிற்று. 57:9-15.
159. புறம். 225:1-3.
160. புறம். 45.
161. அகம். 246:8-13.
162. பொருந. 146-148.
163. அகம். 125:16-21.
164. பட்டின. 222-227.
165. மதுரை. 70-73.
166. புறம். 19:13-16.
167. பெரும்பாண். 134-136.
168. புறம். 296.
169. புறம். 280.
170. புறம். 310:48.
171. அகம். 262:2-12.
172. புறம். 112.
173. புறம். 278:7-9.
174. புறம். 277:1-4.
175. புறம். 295:4-8.
176. புறம். 86:4-6.
177. புறம். 279:1.
178. புறம். 279.
179. புறம். 373:9-13.

# சமூகவியல் கூறுகளில் மனிதநேயம்

உலகம் தோன்றிய நாளிலிருந்து மனித சமுதாயம் நாளுக்கு நாள் ஒவ்வொரு துறையிலும் முன்னேறிக் கொண்டு வருகிறது. இதை நாம் அந்தந்த நாட்டு வரலாற்றின் வாயிலாக அறிகிறோம். மனித சமுதாயம் தோன்றிப் பல்லாயிரக் கணக்கான ஆண்டுகள் ஆகியும் முறையாக வாழத் தெரியாத, மக்கள் கூட்டம் பல, இக்காலத்திலும் கூட இருப்பதைக் காண்கிறோம்.

சங்க இலக்கியங்கள் கூறும் சமூகம் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய பழந்தமிழ்ச் சமூகம். அச்சமுதாயத்தின் பழக்க வழக்கங்களும், சிந்தனைகளும், மகிழ்வுகளும், துயரங்களும் நமக்கு ஓவியக் காட்சிகளாகப் புலவர் பெருமக்களால் காட்டப் பெறுகின்றன. அத்தகைய ஓவியக் காட்சிகளில் பழந்தமிழரின் மனித நேயச் சிந்தனைகளையும் நம்மால் அறிந்து கொள்ள முடிகின்றது. மனிதன் தன்னைப் பற்றியும், தான் வாழும் உலகம் பற்றியும், தனக்கும், உலகத்திற்கும் உள்ள தொடர்பு பற்றியும், அத்தொடர்புக்குரிய காரணம் பற்றியும் ஆராய்வது மனித நேயச் சிந்தனையாகின்றது.

மனித இனம் கூடிவாழும் தன்மையுடையது. மனித மனம் தனித்து வாழ விரும்புவது. 'தான்' என்ற செருக்குடன் வாழ நினைப்பது மனித மனத்தின் இயல்பு. அத்தகைய மனத்தை அடக்கி, அதன் செயல்பாட்டை வென்று பரந்த நோக்கில் 'எல்லாம் எல்லோருக்கும், நாம் எல்லோருக்காகவும், நமக்காக எல்லோரும்' என்ற உயர்ந்த நோக்கில் 'யான்' 'எனது' என்ற முனைப்பை நீக்கி 'நாம்' என்ற பண்பைப் பரப்பி மனித இனத்தின் இன்ப துன்பங்களில் பங்கு கொள்ளும் உயர்ந்த உள்ளத்தையும், உணர்வையும் மனிதநேயம் எனக் கொள்ளலாம். சமூகவியற் கூறுகளில் இடம் பெற்ற மனித நேயக் கருத்துகளை சங்ககால மன்னரிடத்தும், புலவரிடத்தும் நிறைந்திருப்பதை சங்க இலக்கியங்கள் வழி அறியலாம்.

ஒருவருடைய குடும்ப வாழ்வில், பழக்க வழக்கங்களில், பொருளியல், சமூக அமைப்பில் சுரண்டல், ஏற்றத்தாழ்வு, பெருமை, சிறுமை, பொய், களவு, பொறாமை, வஞ்சனை, போராட்ட உணர்வுகள், பூசல்கள், சாதிமதப் பிணக்குகள், சமூக பகைச் செயல்கள் என்ற கல்லும் முள்ளும், மேடும் பள்ளமும், தனிமனித வாழ்க்கை என்ற ஒற்றையடிப் பாதையில் குவிந்து மலிந்து குப்பைகளாகக் காட்சி தருகின்றன.

மக்கள் தங்கள் உயிருக்கும், உடைமைக்கும் பாதுகாப்புத் தேட வேண்டிய

நிலைக்கு ஆளாக்கபட்டுள்ளனர். அவர்களிடையே கவலைகள் மிகுந்துள்ளன. இவற்றில் சிக்கிக் கொள்ளாமல் இருக்கத் தமது சொந்த வாழ்க்கைப் பாதையைக் காலம் முழுவதும் கண்காணிப்பதிலேயே ஒவ்வொருவரும் நாட்டம் செலுத்துகின்றனர். அவரிடம் நாம் அறிவியல் ஆய்வெண்ணம், அறிவுத் தெளிவு, பிறரைப் பேணும் பண்பு, சமூகப் பொது நோக்கு, நாட்டின் மேம்பாட்டுழைப்பு ஆகியவற்றை எதிர்பார்க்க இயலாது.

மனித நேயத்திற்கு அதிக சிறப்பளிப்பதும், அரசியல் காரணங்களுக்கு நிகராக மனிதாபிமானப் பண்புகளைச் சிறப்பிப்பதும், சமதர்மச் சமுதாயத்தின் தனித்த இயல்புகளாகக் காட்சி தருகின்றன. மனிதாபிமானத்திற்குச் சிறப்பளிக்கும் அரசியல் போக்குக் கலைகளிலும், இப்பண்பினைச் சிறப்பிக்க வழி வகுக்கின்றது. சமதர்மப் போராட்டம், மனித இயல்புகளை மதித்துப் பாராட்டுவதற்குரிய வழிகளைத் திறந்துவிட்டது என்று உறுதியாகக் கூற முடியும்.

இந்தப் போராட்டம் மனித சமுதாயத்தின் வரலாற்றில் இன்றியமையாத ஒரு திருப்பு மையமாக அமைந்துள்ளது எனலாம். ஒரு நாட்டின் மொழி, கலாச்சாரம், மக்கள், வரலாறு ஆகியன பற்றிய உணர்வுகளைப் புறக்கணிப்பது போன்ற கொடுமை வேறு எதுவும் இருக்க முடியாது. இவைகளை எல்லாம் மதித்துப் போற்றும் போக்கு தன்னுரிமை பெற்ற சமதர்ம உலகில் மட்டுமே ஆதிக்கம் பெறமுடியும். சமதர்மச் சமுதாயம் உலகம் தழுவிய இயல்புடையதாக அமைந்த போதிலும், ஒரு குறிப்பிட்ட நாட்டு மக்களின் உணர்ச்சிகளையும், பண்பாடுகளையும் புறக்கணிப்பதில்லை. மாறாக அவற்றிற்கு முழுக் கலைவடிவம் கொடுக்க முயல்கின்றது எனலாம்.

இத்தகைய உலகம் தழுவிய மதிப்பீட்டைக் கலைப் படைப்புகள் பெற வேண்டுமாயின், அவை முற்போக்குத் தன்மை வாய்ந்த சிந்தனைகளையும், உலகக் கண்ணோட்டத்தினையும் பெற்று நிற்க வேண்டும். அதைத் தவிர, அவற்றைப் படைக்கும் கலைஞன் உலகின் இன்றியமையாத பிரச்சனைகளைப் படிப்போரின் முன் திறம்பட வெளிப்படுத்திக் காட்டும் ஆற்றலைப் பெற்றிருத்தல் வேண்டும். பிறகு அவற்றிற்கும், புறவுலகிற்கும் இடையே உள்ள நெருக்கத்தினையும், மனித ஆற்றல் அவற்றின் மீது வெற்றி கொள்வதற்கான வழிவகைகளையும் எடுத்துக் காட்ட வேண்டும். குறுகிய மனப்பான்மையும், வாழ்வின் பல்வேறு சிக்கல்களைப் புரிந்து கொள்ளும் ஆற்றலைப் பெறாத இயல்பும், உலகம் தழுவிய கலைப்படைப்புகளைப்

படைத்தளிக்க முடியாவண்ணம் கலைஞர்களைத் தடுத்து நிறுத்துகின்றனர்.

மனிதனோடு மனிதனுக்கு இருக்க வேணடிய பிணைப்புகளையும், நாடுகளோடு நாடுகளுக்கு இருக்க வேண்டிய நெருக்கத்தினையும், ஒரு நாட்டின் கலாச்சாரத்தோடு மற்றொரு நாட்டின் கலாச்சாரக் கூறுகளுக்கு இருக்க வேண்டிய உறவுகளையும், ஒரு நாட்டின் கலைப்படைப்புகளோடு மற்றொரு நாட்டின் கலைப்படைப்பிற்கு இருக்க வேண்டிய இணைப்பினையும் வற்புறுத்துவதால் கலை இலக்கியப் பண்பாட்டு நிலையில் சர்வதேச உறவுகளும், பொதுமைப் பண்புகளும், சமதர்ம நோக்குகளும் சங்கப் பாடல்களில் பொங்கித் ததும்புகின்றன.

சமூகவியல் மனித ஒழுகலாறு தொடர்புடையது. தனி மனிதனையும், மனித சமுதாயத்தையும் ஆராய்வதையே சமூகவியல் முக்கிய குறிக்கோளாகக் கொண்டுள்ளது. எனினும் இதைப் பற்றிச் சமூகவியல் தனியுரிமை கொண்டாட இயலாது. மனிதனுடைய நீண்ட வரலாற்றிலேயே நாகரிக நிலை ஆரம்பித்த காலம் முதல், மனித ஒழுகலாறு பற்றி சமயவாதிகளும், இலக்கியவாதிகளும் ஆழ்ந்த ஈடுபாடு காட்டிவந்துள்ளனர். சிறப்பாக மனித இயல்பு அல்லது மனித இயற்கை என்னும் பொருளைத் தத்துவவாதிகள் மட்டுமன்றி இலக்கிய ஆசிரியர்களும் தொன்று தொட்டே எண்ணிப் பார்த்து வந்திருக்கின்றனர்.

சங்ககால சமுதாயத்தைப் பற்றி அறிந்து கொள்ளுமுன், சில அடிப்படைகளை முதலில் அறிந்து கொள்ள வேண்டும். சங்க காலம் ஒரு நீண்ட காலத்தை உள்ளடக்கியது. இக்காலத்தில் மூன்றுவகை நிலையுடைய சமுதாயத்தைக் காண்கிறோம். சங்க காலச் சமுதாயத்தில் வளர்ச்சி அடையாத மக்கள், வளர்ச்சி அடைந்து வரும் மக்கள், நாகரிகம் அடைந்துள்ள மக்கள் என்ற மூவகை நிலையினர் காணப் பெற்றனர். மருத நில மக்களைத் தான் இதில் நாகரிக வளர்ச்சி பெற்ற மக்கள் என்று கருதலாம். விலங்குகளை வேட்டையாடிய மனிதர்கள் மேம்பட்ட விளைச்சலைத் தொழிலாகக் கொண்டபோது நிலை பெற்ற வாழ்க்கை வாழ்ந்தனர். சங்க காலத்தில் இச்சூழ்நிலையில் தான் மிக உயர்வான 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்று கருதிய பண்பாட்டு உயர்நிலை உருவாயிற்று.

சங்க காலத்தில் பொது மொழியும், பொதுப்பண்பாடும் கொண்ட எண்ணிறந்த இனமக்கள் பல்வேறு நிலவியல் பகுதிகளில் வாழ்ந்தனர். நில இயல்புக்கு ஏற்ப மக்கட்பாகுபாடு அக்காலத்தில் இருந்தது. மரபு வழியில் அமைந்த ஐவகை

நிலப்பாகுபாடுகள் திணைகள் என்று அழைக்கப்பெற்றன. திணை என்ற சொல் வேறுபட்ட குணவியல்புடைய மக்களையும், மக்களின் சமூக அற உணர்வுகளையும் வெளிப்படுத்தியது என்பர். திணை என்பது நிலவியல், சமூக இயல்புகளையும் இலக்கியங்களில் காட்டியது. மக்களைத் தவிரச் செல்வர்களிடம் குற்றேவல் செய்து வாழ்ந்த அடியோர்களையும், தொழிலாளர்களையும் குறிப்பிடுகிறது என்பதை அறிய முடிகிறது.

## சாதிப்பிரிவு

சங்க காலத்தில் நிலத்தைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்று ஐந்து வகையாகப் பாகுபாடு செய்திருந்தனர். சங்க இலக்கியங்களில் சாதி பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. எனினும் அவை தெளிவாக, வேறுபடுத்திக் காட்டக்கூடிய வகையில் இல்லை. சாதிமுறையின் தொடக்கத்தையே சுட்டிக் காட்டுவதாகக் காண்கிறோம். சான்றாக இந்நிலங்களில் வாழ்ந்தவர்கள் பொதுவாக குறவர், ஆயர், உழவர், பரதவர், மறவர் என மரபு வழியே அழைக்கப்பெற்றனர். நாளடைவில் அந்தந்த நிலப்பகுதிக்கு உரியவராக நிலை பெற்றனர்.

மலை சார்ந்த நிலப்பகுதியில் வாழ்ந்தோர் நிலத்தின் பெயரால் குறவர் எனப்பட்டனர். இவர்கள் மலைக்காடுகளில் வேட்டையாடுதலைத் தொழிலாகக் கொண்டனர். முல்லை நிலம் ஆடு, மாடுகள், வளர்வதற்கு ஏற்ற நிலமாகும். இவ்வாயர்கள் ஆடு மாடுகளை மேய்ப்பதும், அவற்றின் பயன்களாம் பால், நெய், வெண்ணெய் முதலியவற்றை ஏனைய நிலத்தில் விற்பதைத் தொழிலாகக் கொண்டனர். மருத நிலம் ஆறுகள் பாய்ந்து வளமார்ந்த பகுதியாகும். அங்கு உழவுத் தொழிலை மேற்கொண்டோர் உழவர் எனப்பட்டனர். கடலும், கடல் சார்ந்த நெய்தல் நிலப்பகுதியில் பரதவர்கள் வாழ்ந்தனர். படகிலும், கட்டுமரத்திலும் கடலில் சென்று மீன் பிடிப்பதும், உப்பளத்தில் உப்பு விளைவித்தலும் இவர்களுடைய தொழிலாகும். வளமில்லாத பாலை நிலத்தில் வாழ்ந்த மக்கள் களவுத் தொழிலை மேற்கொண்டனர். நிலத்தைப் போலவே ஈரமில்லா நெஞ்சினராய் வழிப்பறி செய்து வாழ்ந்தனர்.

## தொழிற்பிரிவு

நிலத்தினால் குறிக்கப்பட்டோரைத் தவிர, தொழிலால் மட்டுமே பிரித்துக் காட்டப்பெற்ற பிரிவினரும் இருந்தனர். பாணர், கூத்தர், பொருநர், ஆகிய கலைப்பெருமக்களும் இருந்தனர். இவர்கள் நாடோடிகளாய்க் குடும்பத்தோடு

அரசர்களையும், செல்வர்களையும் நாடி, அவர்களை மகிழ்வித்து வாழ்ந்தனர். அரசரும், செல்வரும், மக்களும் இவர்களைப் பெரிதும் மதித்தனர். ஆற்றுப்படை இலக்கியங்கள் இக்கலைப் பெருமக்களின் வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டு தோன்றின.

பாணன், பறையன், துடியன், கடம்பன் என்போர் ஒரே இனத்தினர் எனலாம். பறை என்னும் கொட்டுகருவியைக் கொண்டோர் பறையர். துடி என்னும் தோற்கருவியை முழக்கியோர் துடியராவர். இவர்கள் நன்மை, தீமைக்குப் பறையும், துடியும் முழக்கினர். மன்னரின் செய்தியை ஊருக்கு அறிவித்தனர். இவர்கள் சமூகத்தில் தாழ்ந்த நிலையில் இருந்துள்ளனர். எனவே தொழில் முறையிலே தான் பிரிவுகள் அமைந்தனவேயன்றி பிறப்பினால் பிரிவுகள் இல்லை. இவர்கள் புலையர், இழிசினர், இழிபிறப்பாளர் என்று புறநானூற்றில் கூறப்படுகின்றனர். சுடுகாட்டில் பிணம் சுடுவது இவர்கள் கடமையாகும்.

*''கேட்டியோ வாழி பாண! பாசறைப்*
*பூக்கோள் இன்றென் றறையும்*
*மடிவாய்த் தண்ணுமை இழிசினன் குரலே''*[1]
*''இழிபிறப்பாளன் கருங்கை சிவப்ப*
*வலிதுரந்து சிலைக்கும் வன்கண் கடுந்துடி''*[2]
*''துடிஎறியும் புலைய*
*எறிகோல் கொள்ளும் இழிசின''*[3]

என்னும் புறநானூற்றுப் பாடல்கள் இவர்கள் மிகவும் தாழ்ந்த நிலையில் இருந்தமைக்குச் சான்றாகும். இவர்களைத் தவிர வாழ்க்கைக்குத் தேவையான பல தொழில்களையும் செய்த மக்கள் இருந்துள்ளனர். தச்சர், கொல்லர், கம்மியர், வண்ணார், குயவர் முதலியோரும், நெய்தல் தொழிலாளரும், மணப்பொருட்கள், இசைக்கருவிகள், பொம்மைகள் முதலியன செய்வாரும் பிறரும் இருந்தனர்.

**பார்ப்பனர்**

சமூகத்தில் உயர்ந்த நிலையில் இருந்தோர் பார்ப்பனராவர். இவர்கள் அந்தணர், பார்ப்பார், மறைநவில் அந்தணர், மறை காப்பாளர், இருபிறப்பாளர் எனப் பலவாறு குறிக்கப்பட்டுள்ளனர். இவர்களை மன்னரும் வணங்கினர். அவர்கட்குத் தீங்கு செய்வது பெரும்பாவமாகக் கருதப்பட்டது. இதனை,

*''ஆன்முலை அறுத்த அறனில்லோர்'* [4]

என்ற வரி புலப்படுத்துகிறது. மன்னரும், பார்ப்பார் நோவன செய்யார் என்பதை,

*''ஆர்புனை தெரியல்நின் முன்னோர் எல்லாம்*
*பார்ப்பார் நோவன செய்யலர்'* [5]

என்றார் தாமறப்பல் கண்ணனார். போர் தொடங்குமுன் அந்தணரைப் பாதுகாப்பான இடத்தில் இருக்க அறிவித்தனர். 'ஆவும் ஆனியல் பார்ப்பன மாக்களும்' என்ற புறம் 9-ம் பாடல் சான்றாகும். பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி அந்தணர்களைக் கொண்டு வேள்விகள் பல செய்தான். காரிக்கிழார் அவனைப் பாடும்பொழுது,

*''இறைஞ்சுக பெருமநின் சென்னி சிறந்த*
*நான்மறை முனிவர் ஏந்துகை எதிரே'* [6]

என்றார். மலையமான் திருமுடிக்காரி பல ஊர்களை அந்தணர்க்குக் கொடுத்தான். இதனை,

*''கழல்புனை திருந்தடிக் காரி நின்னாடே*
*அழல்புறம் தரூஉம் அந்தணர் அதுவே'* [7]

என்றார் கபிலர். போரிலன்றி வேறுவகையில் இறந்தோரைத் தருப்பையில் கிடத்தி வேதம் ஓதி வாளால் போழ்ந்து அடக்கினர் என்பதை,

*''.... நல்லமர் வீழ்ந்த*
*நீள்கழன் மறவர் செல்வழிச் செல்கென*
*வாள்போழ்ந் தடக்கலும் உய்ந்தனர்'* [8]

இப்பாடல் தெளிவுறுத்துகிறது. அந்தணர்கள் வைதீக ஒழுக்கமுடன் புலால் மறுத்து வாழ்ந்தனர். ''அவர்தம் இல்லத்தைக் கோழியும், நாயும், நெருங்கலாகாது என்றும், செழுங்கன்று யாத்த சிறுதாட் பந்தர் அவர் இல்லின் முன் இருந்தது என்றும் அது பைஞ்சேறு மெழுகிய படிவ நன்னகர்'' [9] என்றும் பெரும்பாணாற்றுப் படையில் குறிக்கப்பட்டுள்ளது.

இதிலிருந்து அந்தணர்களை சங்க காலத்தில் மன்னர்கள் பெருமதிப்போடு போற்றிய தன்மையும், அவர்களுக்குரிய ஒழுக்கத்திலிருந்து தவறாமல், பிறர்மீது

இரக்கம் காட்டிய பண்பும் வெளிப்படுகிறது.

**வாணிகர்**

நாடாளும் மன்னனுக்கு அடுத்த நிலையில் இருந்தோர் வணிகர்களே. பண்ட மாற்று முறை வாணிகத்தின் விளைவால் பல்வேறு பிரிவினரிடையே இயக்கமிருந்தது. தத்தம் உற்பத்திப் பொருட்களை விற்பனை செய்யும் வணிகர்களைத் தவிர, வாணிகத்தையே தொழிலாகக் கொண்ட பெருங்குடி வணிகர்களும் இருந்தனர். இவர்கள் 'மன்னர் பின்னோர்' எனச் சிறப்பிக்கப்பட்டனர். கடல் வாணிகத்தில் சிறந்திருந்தனர். மேலை நாடுகளோடும், கீழை நாடுகளோடும், வாணிகம் செய்தனர்.

சங்ககால வாணிகர்கள் நடுநிலை தவறாத உள்ளமுடையயர்கள். நீண்ட நுகத்தடியின் நடுவில் உள்ள ஆணி போன்றவர்கள். பிறரிடம் விருப்பு, வெறுப்பின்றி, நடந்து கொள்வார்கள். அவர்களுடைய உள்ளம் எல்லோரையும் ஒன்றுபோல் நினைக்கும். பழிக்கு அஞ்சி உண்மையே பேசுவார்கள். தம்முடைய பொருள் வேறு, பிறருடைய பொருள் வேறு என்று நினைக்க மாட்டார்கள். தாம் கொடுக்கும் பண்டத்திற்கு அதிக விலை வாங்க மாட்டார்கள். தாம் கொடுக்கும் பண்டத்தின் அளவைக் குறைத்துக் கொடுக்க மாட்டார்கள். பல பொருட்களை விற்பனை செய்யும்போது நியாய விலைக்குத் தான் விற்பார்கள். பொருளின் கொள்முதலையும், லாபத்தையும் சொல்லியே விற்பனை செய்வார்கள். இவ்வாறு வணிகர்களின் பண்பைக் கடியலூர் உருத்திரங் கண்ணனார்,

*"நெடுநுகத்துப் பகல்போல*
*நடுவுநின்ற நன்னெஞ்சினோர்*
*வடுவஞ்சி வாய்மொழிந்த*
*தமவும் பிறவு மொப்ப நாடிக்*
*கொள்வதூஉ மிகைகொளாது கொடுப்பதூஉங் குறைகொடாது*
*பல்பண்டம் பகர்ந்துவீசும்*
*தொல்கொண்டித் துவன்றிருக்கை"* [10]

குறிப்பிடுகிறார். இப்பாடல் வரிகள் ஒரு வாணிகன் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதையும், நேர்மையான வியாபாரி எப்படி நடந்து கொள்வான் என்பதையும் சமுதாயத்திற்கு உணர்த்தி நிற்கின்றன. இதிலிருந்து சங்க கால வணிகர்களின் அறநெறி, அருள்நெறி முதலான மனிதநேயப் பண்பாட்டை அறிய முடிகிறது.

**வேளாளர்**

அக்காலத்தில் உழவுத் தொழில் உயர்வாகக் கருதப்பட்டது. வேளாண்மையினைத் தொழிலாகக் கொண்டு உழுவித்து உண்டு வாழும் மக்களையே வேளாளர் என்பர். மன்னரின் மதிப்புக்குரியோராய், அவர்தம் வெற்றிக்குக் காரணமானவர்களாய் இருந்தோர் வேளாளர் ஆவார். இன்று அது ஒரு குறிப்பிட்ட மக்கள் இனத்தினைக் குறிக்கும் நிலையில் பொருள் மாற்றம் பெற்று விட்டதை,

*''''அகம்நக வாரா முகனழி பரிசில்*
*தாள் இலாளர் வேளார் அல்லர்''*[11]

இப்பாடல் உணர்த்துகிறது. தமிழ்நாட்டில் யாரும் எத்தொழிலையும் செய்ய உரிமையுண்டு. எனவே தமிழர்களின் சாதி வேற்றுமை தொழில் அடிப்படையானது.

*''பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா*
*செய்தொழில் வேற்றுமை யான்''*[12]

என்பதே நமது கொள்கையாகும்.

உழவுத் தொழில் செய்து வாழ்வோர், கொலைத்தொழிலையும், கொடும் தொழிலையும், திருட்டுத் தொழிலையும் அடியோடு கடிந்தவர்கள். அவர்கள் தேவர்களைப் போற்றி வணங்கி, திருவிழாச் செய்து அவர்களுக்காக வேள்வி செய்து வேள்விப் பணியைச் செய்வார்கள். நாட்டு மக்களுக்குச் சிறந்த உணவூட்டும் பசுக்களையும், உழவுக்கு உதவும் எருதுகளையும் காத்து வளர்ப்பார்கள். இவர்களின் உதவியினால் நான்கு வேதங்களையும் அறிந்த அந்தணர்கள் சோற்றுக் கவலையின்றி வேத விதிப்படி நடந்து புகழ் பெறுவார்கள். அவர்கள் தம்மிடம் வரும் விருந்தினர்களை வரவேற்று, உபசரித்து புதிதாகச் சமைத்த பதமான உணவினையும், பலகாரங்களையும் அளிப்பார்கள். வேளாளர்கள் இத்தகைய சிறந்த புண்ணியச் செயல்களையே இடைவிடாமல் செய்து இன்பவாழ்வில் திளைப்பார்கள். இவர்கள் உழவுதொழிலால் வரும் செல்வம் ஒன்றையே விரும்பி வாழும் உழவர்கள். இதனை,

*''கொலை கடிந்தும் களவு நீக்கியும்*
*அமரர்ப் பேணியும் ஆவுதி அருத்தியும்*
*நல்லானொடு பகடோம்பியும்*
*நான்மறையோர் புகழ்பரப்பியும்*

*பண்ணியம் அட்டியும் பசும்பதங் கொடுத்தும்*
*புண்ணிய முட்டாத் தண்ணிழல் வாழ்க்கைக்*
*கொடுமேழி நசையுழவர்''*[13]

என்கிறார் கடியலூர் உருத்திரங் கண்ணனார். இப்பாடல் வரிகள் உழவர்களின் இயல்பையும், அவர்கள் எவ்வாறு வாழ வேண்டும் என்பதையும் சமுதாயத்திற்கு உணர்த்தின. இதிலிருந்து தமிழகத்து வேளாளர்கள் சமுதாயத்தை வாழ்வாங்கு வாழ்விக்கும் சிறந்த மனிதநேயப் பண்புடையவர்கள் என்பதை அறிய முடிகிறது.

ஒழுக்கமே உயிர் என்று கருதினர் தமிழ்ச்சான்றோர். ஒழுக்கமுடையவனே உயர்ந்தவன். அஃது இல்லாதவன் உயர் இனத்தவனாயினும் தாழ்ந்தவனே என்றார் வள்ளுவர்.

*''ஒழுக்க முடைமை உடைமை குடிமை*
*இழிந்த பிறப்பாய் விடும்''*[14]

*''கடைநிலத்தார் ஆயினும் கற்றறிந் தோரைத்*
*தலைநிலத்து வைக்கப் படும்''* [15]

என்கிறது நாலடியார். எனவே கல்வியறிவினால் சாதி வேறுபாட்டைக் களையலாம் என்று எண்ணியுள்ளனர். அவ்வாறே சங்க காலத்தில் குறவர் முதல் மனனர் ஈறாகக் கல்வியில் சிறந்திருந்தனர். வெண்ணிக் குயத்தியார், குறமகள் இளவெயினி போன்றோர் பெருஞ்சிறப்புப் பெற்றிருந்தனர். பாணர் குலத்தவராகக் கருதப்படும் ஔவையார் பெருமையை நாடறியும்.

மேற்கூறியவற்றால் சங்க காலத்தில் பல்வேறு தொழில் பிரிவினர் இருந்தனர் என்றும், இவர்களில் வணிகரும், வேளாளரும் சமுதாயத்தில் உயர்ந்த இடம் பெற்றனர் என்றும், அந்தணர்கள் உயர்ந்தோராக மதிக்கப்பட்டனர் என்றும், கீழோராகப் புலையர் கருதப்பட்டனர் என்றும் உணரலாம். கல்வி அறிவும், ஒழுக்கமும் சாதி வேறுபாடுகளைக் களைய உதவும் என்று சான்றோர்கள் கருதியதும் புலப்படுகிறது.

இனி சங்ககாலச் சமுதாயத்தில் நிலவும், அறம், கடமை, நட்புணர்வு, அவலச்சுவை, வஞ்சப்புகழ்ச்சி, நிலையாமை, வாழ்க்கை நிகழ்ச்சி, புலவர்களின் படைப்பு, பொதுவாழ்வு முதலானவற்றில் உள்ள மனிதநேயக் கருத்துக்களைக் காண்போம்.

# அறத்தில் மனித நேயம்

## அறக்கூறுகள்

அறத்தைப் பண்டைத் தமிழர், தனிமனிதனையும், சமுதாயத்தையும் போற்றி வளர்க்கும் ஒழுக்க நெறியாகக் கருதினர்.மறுமைப்பேற்றை அளித்தாலும், அளிக்காவிட்டாலும் இவ்வுலக வாழ்க்கையில் தனிமனிதனும், சமுதாயமும் நலமாக வாழ்வதற்கும், முன்னேற்றத்தை அடைவதற்கும் அறவாழ்வு இன்றியமையாதது என்னும் நம்பிக்கை நம் முன்னோர்களிடம் நெடுங்காலமாக இருந்து வந்திருக்கிறது. அவர்களின் வாழ்வின் அடிப்படை நிலைக்களன்களாகக் காதல், போர், சமுதாயம், அரசியல் முதலியன அமைந்திருந்தன. சிலவற்றில் சிக்கல்களும், முரண்பாடுகளும் தோன்றின. இவற்றை செம்மைப் படுத்த எண்ணிய போதே அறக்கருத்துகள் மலர்ந்தன. அவை சங்க இலக்கியங்களில் அறக்கூறுகளாய்க் கனிந்து கிடக்கின்றன. இதிலிருந்து அக்கால மக்கள் அறத்தின்மூலம் சமுதாயத்திற்கு மனிதநேயத்தைப் பின்வருமாறு உணர்த்தினர்.

தனிமனிதர்களாகிய சான்றோர்கள் தத்தம் வாழ்க்கையில் கடைப்பிடித்து ஒழுகிய பழக்கங்களை அவர்களோடு நெருங்கிப் பழகியவர்கள் முதன்முதலில் பின்பற்றி நடந்திருக்கலாம். நாளடைவில் அச்சான்றோர்களின் பழக்கங்கள் அவர்கள் வாழ்ந்த சமூகத்தினரால் சிறப்புடையனவாகப் போற்றப்பட்டிருக்க வேண்டும். பண்பால் உயர்ந்த சான்றோர்களை,

*''மையறு சிறப்பின் உயர்ந்தோர்''*[16]

*''உயர்ந்த வேட்டத்து உயர்ந்திசினோர்''*[17]

*''உயர்நிலை உலகத்து உயர்ந்தோர்''*[18]

*''வடுவில் கொள்கை உயர்ந்தவர்''*[19]

எனப் புலவர்கள் போற்றிப் பாராட்டுவது கருதத்தக்கது. இவர்கள் அல்லவை கடிந்து நல்லவை உரைத்து எல்லாரையும் நல்லாற்றுப் படுத்தும் அறவாணர்களாக விளங்கினர். குடும்பங்களில் ஏற்படும் சிக்கல்களைத் தீர்த்துக் கொள்ளப் பெண்டிரும் அணுகித் தக்கன கேட்க விழைந்துள்ளனர். புறப்பாடல்களில் அறக்கூறுகள் மலிந்திருப்பதைக் காணலாம்.

முதுமைப் பருவம் எய்திய ஓர் ஆடவன் அன்பு, அறிவு, ஒழுக்கம், இரக்கம், அறம் முதலிய பண்பில் நிறைவுற்று உலக உயிர்களிடத்தில், எப்போதும் நலம் பல புரிந்து தன்னுயிர்போல் மன்னுயிர்கள் அனைத்தையும் பேணி வாழத்துவங்குவான். இல்லறத்தில் ஈடுபட்டு பொருட்பற்றுக் கொண்டு அறம் பேணி வாழ்ந்த அவன் அதனை விடுத்து உலகியலில் பொருட்பற்றுக்கொண்டு அறமுறையில் புவியையும், புவிவாழ் உயிர்களையும் பேணுபவனாவான். இப்போது அவனுடைய மனைவியும், மக்களும் உறுதுணையாக இருந்து வாழ்தலே அழகும் கடனுமாகும்.

அம்முதுமை மிகுந்த ஆடவன் வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து, வசை ஒழித்து இசை மிகுந்தவனாக அமைந்து வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படுபவனாக அமைந்து உலகத்தைக் காப்பவன் ஆகின்றான். இவனைப் போன்ற பெருமாந்தர்களைக் கண்ட பெருங்குடி மக்கள் 'உலகம் என்பது உயர்ந்தோர் மேற்றே' என்றும், பண்புடையார்ப் பட்டுண்டு உலகம்' என்றும் உரைத்தருளினர்.

நாம் அறத்தை முதன்மையாகக் கொண்டு அதன் நெறியில் நின்று வாழவேண்டும் என்று பற்பல இடங்களில் கூறப்பட்டுள்ளன. இதனை,

*''சிறப்புடை மரபிற் பொருளும் இன்பமும்*
*அறத்து வழிப்படூஉம் தோற்றம் போல''*[20]

*என்று ஒரு புலவர் கூறுகின்றார். இவ்வறத்தின் வழியே செய்யப்படுகின்ற நல்வினை ஒன்றுதான் நமக்கு உறுதுணையாவதென்று வேறொரு புலவர் வற்புறுத்துகிறார்.*

*''வாழச் செய்த நல்வினை அல்லது*
*ஆழுங் காலைப் புணைபிறிது இல்லை''*[21]

என்பது அவர் கூறிய பாட்டு. இந்த நல்வினையைத் திரட்டி வைப்பவர்களே நல்லவர் என்ற பெயருக்கு உரிவயர். இவர் வாழுமிடமே நல்லதாயிருக்கும். நாடும், காடும், மேடும், பள்ளமும், நிலத்தின்கண் காணப்படும் இயல்பாகும். நிலங்கள் எப்படி இருப்பினும் அங்கு வாழும் மக்கள் நல்லவராக இருப்பின் அது நல்ல நாடாகும் என்பதை,

*''எவ்வழி நல்லவர் ஆடவர்*
*அவ்வழி நல்லை வாழிய நிலனே''*[22]

என்று ஔவையார் உரைக்கின்றார். இங்ஙனம் நல்லவராய் வாழ்ந்தோர்க்கே

இவ்வுலகத்துப் புகழுண்டு. ஏனையோர்க்கு மேலுலகத்தும் நற்பேறு இல்லை. இதனை,

> *"இவணிசை உடையோர்க்கு அல்லது அவணது*
> *உயர்நிலை உலகத் துறையுள் இன்மை"*[23]

என்று மற்றொரு புலவர் கூறியுள்ளார். இவ்வாறு எந்நிலத்தில் மக்கள் நல்லவர்களாக இருக்கிறார்களோ அந்நிலமும் அவர்களால் பெருமையுறும் என்பதையும், நாட்டில் வாழும் மக்களை ஒட்டி அந்நாட்டில் நன்மை, தீமைகள் விளைகின்றன என்பதையும் நாடு செழிக்க மக்கள் நல்லவராதல் வேண்டும் என்ற மனித நேயக் கருத்தையும் அறிவுறுத்துகின்றார்.

**தனக்கென வாழாமை**

சங்கத் தமிழன் இவ்வுலகமே தனக்கு வந்து கிட்டுவதாயினும், தீமை புரிய அவன் மனம் இடம்கொடாது. நிலத்தின் கண்ணே அவன் நாட்டம் செல்லும். புகழ்தரும் செயல் என்றால் தன் உயிரைக் கொடுக்கவும் அஞ்ச மாட்டான். பொதுநலப் பணிக்கே தன் வாழ்க்கையை உரித்தாக்கினான். பிறர்க்கு பயன்படும்படியாகத் தன் வாழ்க்கை இருக்க வேண்டும் என்பதே அவனுடைய குறிக்கோள். தன்னலம் பேணுதலை இழிதொழிலாகக் கருதினான். தனக்கென வாழாப் பிறர்க்குரியாளனாய் வாழ வேண்டும் என்பதே தமிழ் உள்ளத்தின் உயர் உள்ளலாகும். அத்தகைய கொள்கையாளரைக் கொண்ட சமூகமே உருப்படும். முன்னேறி முதன்மையடையும்.

பொதுநலப் பணிபுரியும் பெருமக்கள் மல்கியிருப்பதால் உலகமும், உலகியலும் அழியாது வாழ்கின்றன. மக்கள் இரக்கமும், அன்புமற்ற அரக்கராக மாறித் தன்னலக் கொள்கையே எங்கும் தலைவிரித்தாடுமாகில் ஒரு கணப்பொழுதும் இவ்வுலகம் இயங்கமுடியாது. இவ்வுண்மையைத் தமிழ் உள்ளம் அக்காலத்திலேயே உணர்ந்து உலகிற்கு எடுத்து ஓதியது. பிறர் இன்பம் கண்டாலே தனக்கின்பம் எனக்கொண்டது. பிறர் நன்கு வாழத்தான் உழைத்தான் தமிழன். கடலுள் மாய்ந்த இளம்பெருவழுதி என்னும் பாண்டிய மன்னன் தமிழனுடைய உள்ளச் சிறப்பினையும், உயர்ந்த பண்பாட்டினையும், குற்றமில்லாக் குறிக்கோளினையும் ஒரு சீரிய பாடலில் கூறியுள்ளான்.

*''உண்டா லம்லஇவ் வுலகம் இந்திரர்*
*அமிழ்தம் இயைவ தாயினும் இனிதெனத்*
*தமியர் உண்டலும் இலரே'*[24]

என்ற பாடலில், சாவா மருந்தாகிய அமிர்தமே எனினும் தனித்து உண்ணாது வாழ்ந்தவர்கள் சங்ககால மக்கள் என்பதும், தனக்கென வாழாமல் பிறர்க்கு உதவிசெய்து வாழ வேண்டும் என்ற அறப்பண்பும் அறிவுறுத்தப்பட்டுள்ளதைக் காணலாம்.

## கடமைகளில் மனிதநேயம்

கடமை தொடங்குமிடம் வீடு. கடமை முடியுமிடம் நாடு. வீட்டுக் கடமையில் சிறந்து விளங்கினால் நாட்டுக் கடமை நன்கு விளங்கும் என்பது சங்கப் புலவரின் உயரிய கொள்கையாகும். தாய், தந்தை, கொல்லன், வேந்தன், காளை ஆகியோரின் கடமைகளை வகைப்படுத்திக் கவி பாடிய பண்பு நலம் உடையோர் சங்க கால மகளிர். இதனை,

*''ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே*
*சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே*
*வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே*
*நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே*
*ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்*
*களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே'*[25]

என்று பொன்முடியார் கடமைகளை நேராக உணர்த்துவதன் பொருட்டு அவரவர்க்குரிய கடமை குறித்துக் கவிபாடி பிறபுலவர்க்கில்லாத ஒரு தனிப் பெருமையைப் பெற்று விளங்குகிறார். இவர் கடமை பற்றிப் பாடியதற்குக் காரணம் அவர்தம் உலகியல் உணர்வும், சமுதாய உணர்வும், மனப்பாங்கும், சிந்தனைச் செல்வமும், பட்டறிவுமாகும்.

குடும்பத் தலைவியாகிய மனைவிக்குத் துணை செய்பவன் கணவன். அவன் தந்தை, தாய், மகன் மூவரும் தத்தம் கடமையை உணர்ந்து நடக்க வேண்டும். அவ்வாறு நடந்தால் வீடு திருந்தும். நாடு என்பது மன்னவனை முதன்மையாகக் கொண்டது. தொழிலாளர்களால் வளமுறுவது. வீரர்களால் வெற்றிகொள்வது.

மன்னன், கொல்லன், வீரன் மூவரும் தத்தம் கடமை உணர்ந்து நடந்தால் நாடு திருந்தும். மனிதர் ஒவ்வொருவருக்கும் கடமைகள் பல இருக்கின்றன. அவை வீடு, நாடு, உலகம் என்னும் மூவகைப்பட்டு நிற்கும் தன்மையன. கடமைகளையும், நல்ல பண்புகளையும் கொள்கையாகக் கொண்டவர்கள். சில நடைமுறை ஒழுகலாறுகளைக் கடைப்பிடித்து வாழ்வர் என்பது தெரிகிறது.

**தாயின் கடமை உணர்வு**

குழந்தையை ஈன்றெடுத்து வளர்த்தல் தாயின் கடமையாகும். இதனைச் சொல்வது எளிது. தாய் தன்னுடைய உயிரைப் பணயம் வைத்து குழந்தையை ஈன்றெடுக்கிறாள். ஈன்றபோது உண்டாகின்ற துன்பம், அக்குழந்தை வளரும் வரையில் தாயினைத் தொடர்கிறது. குழந்தையைப் பெறுதலும், வளர்த்தலும் தாயின் கடமையாதலால் தன்னலத்தையும் விட்டுத் தரும் பண்பும் உடையவளாகின்றாள். இவ்வாறு தாயானவள் தன் கடமையைச் செய்தல் வேண்டும் என்பதை உலகிற்கு உணர்த்தும் வகையால் பெற்று வளர்ப்பது என்னுடைய கடமையாகும் என்ற கருத்தில் 'ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே' எனக் கூறித் தாய்ப் புலவராகத் திகழ்கின்றார். இளமையில் தாயிடமிருந்து பெறும் அறிவு, வாழ்க்கையின் உயர்வுக்கு வழிகோலும் நிலையினைப் பெறலாம்.

**தந்தையின் கடமை உணர்வு**

குழந்தையைப் பெற்று வளர்த்து விட்டால் மட்டும் போதாது. வளர்க்கப்பட்ட குழந்தைக்கு அறிவையும், பண்பையும் நல்கி சான்றோனாக்குதல் தந்தைக்குரிய கடமையாகும்.

*''தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து*
*முந்தி யிருப்பச் செயல்''*[26]

என்ற குறட்படி தந்தையின் கடமையாகிவிடுகிறது. அக்குழந்தை சமுதாயத்தில் பண்புடைய - அறிவுடைய - பிறரால் மதித்துப் போற்றும் சால்பு உடையவனாக விளங்குதல் வேண்டும். பொதுவாகக் குழந்தையைக் கண்டித்து வளர்க்க வேண்டிய பொறுப்பு தந்தையைச் சாரும். எனவேதான் கண்டித்து வளர்க்கும் கடமையைத் தந்தைக்கு உரியதாக்க வந்த ஆசிரியர் 'சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே' என்றார். இதனாலேயே தாயோடு அறுசுவைபோம். தந்தையோடு கல்வி போம் என்ற

முதுமொழியும் எழுந்தது போலும்.

### கொல்லனின் கடமை உணர்வு

அறிவிலும், பண்பிலும் சிறந்த மகன் தன் கடமைகளைச் செய்து ஒழுக உதவுவது சமுதாயம். மானத்தைக் காக்கும் நாட்டு வெற்றிக்கான படைக்கலன்களை உருவாக்கும் கடமையைச் செய்யும் கொல்லனுக்கு உயர்வு தரும் பொருட்டு இவ்வரி அமைந்திருக்கிறது. நாட்டு வளமைக்குப் பன்முகமாய் உதவிபுரியும் தொழிலாளர் கூட்டத்தின் கடமைகளை நினைவுறுத்துவதே புலவரின் நோக்கமாக இருந்திருக்க வேண்டும் என்பது தெரிகிறது.

### வேந்தனின் கடமையுணர்வு

சமுதாயத்தில் தனக்கு ஏற்ற ஒரு தொழிலை மேற்கொண்டு வாழ முற்படுகின்ற அம்மகனுக்கு அச்சமில்லாத, வசதிமிக்க நல்வாழ்வைக் கொடுக்க வேண்டியது வேந்தனின் கடமையாகும். இதனையே ஆசிரியர் 'நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே' எனக் கூறுகின்றார். இதனால்தான் மக்கள்நலம் பேணும் பல அரசாங்கங்கள், இளைஞர்கட்குப் பல தொழில் நுட்பப் பயிற்சிகளையும் அவர்கள் வாழ்வினை உயர்வுபடுத்தும் வசதிகளையும் அளித்து வருவதைத் தம் கடமையாக மேற்கொண்டன.

### காளையின் கடமையுணர்வு

ஈன்றதாய், சான்றோனாக்கிய தந்தை, துணையான சமுதாயம், நல்வாழ்வு அளித்த மன்னன் ஆகியோரின் உதவிபெற்று வாழும் அம்மகன் எல்லோர்க்கும் நன்மை தரும் வகையில் வாழ்ந்து வெற்றி காண்பது சிறந்தது. அம்மகனின் கடமையைப் பொன்முடியார், 'ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக் களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே' என்றார். இவ்வாறு ஒவ்வொரு குடிமகனும் வாழ்வானேயாயின், நாட்டின் முன்னேற்றமும், பெருமையும் உயரும் என்பதில் ஐயமில்லை. சமுதாயத்தில் தாய், தந்தை, கொல்லன், வேந்தன், காளை முதலானோர் அவரவர் கடமையில் கொண்ட ஈடுபாட்டின் மூலம் சமுதாயத்திற்கு மனித நேயத்தை உணர்த்துகின்றன.

## அவலச் சுவை மூலம் மனிதநேயத்தை உணர்த்துதல்

காலன் ஒருவன், இரவலரைப் போல கிள்ளியின் முன்னர் சென்று வேண்டியிருப்பான். அவனிடம் இரக்கம் கொண்ட கிள்ளி, என்ன வேண்டும் என்று கேட்க, உன்னுடைய உயிர்தான் வேண்டும் என்று அந்தக் காலன் கேட்டிருப்பான். பரிசில் மக்கள் எதனை வேண்டினாலும் மறுப்பவன் அல்லன் கிள்ளிவளவன். எனவே யமனுக்கு உயிரைப் பரிசிலாக ஈந்துவிட்டான். இவ்வாறு நப்பசலையார் அந்நினைவை ஒரு பாடலாக வடித்தார். இதனை,

*"பாடுநர் போலக் கைதொழு தேத்தி*
*இரந்தன் றாகல் வேண்டும் பொலந்தார்*
*மண்டமர் கடக்குந் தானைத்*
*திண்டேர் வளவற் கொண்ட கூற்றே'*[27]

என்று நினைத்துப் புலவர் நெஞ்சுருகப் பாடிப் புலம்பினார். சாதாரண மனிதர் தம்முடைய துன்பத்தையே பெரிது எனக் கருதி வருந்துவர். ஔவையார் மனம் பரந்த உலகைக் காண்கிறது. ஒருவன் இறந்து விட்டதால் எத்துணைப் பேருக்குத் துன்பம். பாடிச் சென்று பரிசில் பெறுவதையே வாழ்நாளின் குறிக்கோளாகக் கொண்ட பாணர் கூட்டம் இனி எங்கே செல்லும். அதியமான் மார்பில் வேல்பாய்ந்து இறந்தான். பாணர்கள் கையில் வைத்துள்ள பிச்சைப் பாத்திரத்திலும் அவ்வேல் பாய்ந்தது. அப்பாத்திரத்தைத் தாங்கிய கையிலும் தைத்தது. இரப்பவர்களை மட்டும் அவ்வேல் கொல்லவில்லை. அவன், சுற்றத்தார் கண்களில் உள்ள மணி போன்றவர். எனவே அக்கண்மணியையும் தாக்கிற்று. அழகிய சொல்லை ஆராய்ந்து பாடும் புலவர்கள் நாவிலும் சென்று தைத்தது. இத்துணைப் பேரையும் உயிர்வதை செய்தது அதியமான் மார்பில் தைத்த வேற்படை. இதனை,

*"அருந்தலை இரும்பாணர் அகன்மண்டைத் துளையுரீஇ*
*இரப்போர் கையுளும் போகிப்*
*புரப்போர் புன்கண் பாவை சோர*
*அஞ்சொனுண் டேர்ச்சிப் புலவர் நாவிற்*
*சென்றுவீழ்ந் தன்றவன்*
*அருநிறத் தியங்கிய வேலே'*[28]

என்ற வரிகள் மூலம் விளக்குகிறார். அதியமான் சாவால் நாட்டுக்கு நேர்ந்த இழப்பினை அடுத்த அடிகளில் கூறுகிறார்.

"இனிப் பாடுநரு மில்லைப் பாடுநர்க்கொன் றீகுநரு மில்லை"[29] என்பதே அவர்கண்ட அவல முடிவு. ஒருவர் உயிரைக் கவர்ந்த யமன் தமிழ் நாட்டில் ஒரு பெரும் பஞ்சத்தை உண்டாக்கி விட்டான் என்கிறார் ஔவையார். இவ்வாறு ஈயாது வைத்து உயிர் துறந்து கெடும் கீழ் மக்களே மிகப் பலராக இவ்வுலகில் உள்ளனர் என்று அவலச் சுவை மூலம் சமுதாயத்திற்குச் சிறந்த மனிதநேயத்தை இப்பாடல்கள் எடுத்துரைக்கின்றன.

## நட்புணர்வில் மனிதநேயம்

அன்பு பல வகைப்படும். தலைவன், தலைவியரிடையே முகிழ்ப்பது காதல். பெற்றோர்க்கும், மக்களுக்கும் இடையே ஏற்படுவது பாசம். நண்பர்களுக்கிடையே மலர்வது நட்பு. ஆண்டவனிடத்து அடியார் செலுத்துவது பக்தி என்று கூறப்படும். சமுதாய வாழ்விற்கும், வளர்ச்சிக்கும் நட்பு என்னும் நயத்தக்க பண்பு பெரிதும் வேண்டப்படுவதாகும். ஒருவரோடு ஒருவர் நட்பாவதற்குப் புணர்ச்சியும், பழகுதலும் வேண்டா. இருவருக்கும் ஒத்த உணர்ச்சியே நட்புக்கு உரிமையைக் கொடுக்கும். இவ்வுண்மையைப்,

*"புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்*
*நட்பாம் கிழமை தரும்'*[30]

என்ற அடிகளால் திருவள்ளுவர் விளக்குகின்றார். மேலும் 'ஒருவர் அணிந்துள்ள ஆடை குலைந்தபோது அதை உடுத்தற்கு உடனே கை விரைந்து சென்று உதவி செய்வது போல, நட்புக் கொண்டவனுக்குத் துன்பம் நேர்ந்தபோது அப்போதே சென்று அத்துன்பத்தை நீக்குவதே நட்பாகும்'[31] என்றும் கூறுகிறார்.

'நட்பிடை வஞ்சித்தவன் இம்மையில் குட்ட நோயிலும், மறுமையில் நரகத்திலும் அழுந்துவான்'[32] என்று திருத்தக்க தேவர் கூறுகிறார். இது நட்பின் அளப்பரும் பெருமையைக் குறிப்பதாகும். மன்னர்களின் உணர்ச்சிக்கு ஒத்த நல்ல நண்பர்களாகப் புலவர்கள் விளங்கினர் என்பதைப் புறநானூற்றுப் பாடல்கள் புலப்படுத்துகின்றன. கபிலர், ஔவையார், பிசிராந்தையார், பொத்தியார், கோப் பெருஞ்சோழன் ஆகியோர் இத்தகைய புகழுக்குரியோர் ஆவர்.

## பிசிராந்தையார் - கோப்பெருஞ்சோழன் நட்பு

சோழ நாட்டின் உறையூரையாண்ட கோப்பெருஞ்சோழன் பாண்டிய நாட்டுப் பிசிராந்தையார் அவனை நேரில் காணாமலேயே நட்புப் பூண்டார். சோழனும் அவ்வாறே புலவரிடம் நட்புக் கொண்டார். சோழன் வாழ்க்கையில் வெறுப்புற்று வடக்கிருக்கத் துணிந்தான். அப்போது பொத்தியார் முதலிய நண்பர்கள் உடனிருந்தனர். கோப்பெருஞ்சோழன் அவர்களை நோக்கி, 'என்னுயிரின் இனிய நண்பர் பாண்டிய நாட்டிலுள்ள 'பிசிர்' என்னும் ஊரைச் சார்ந்தவர். அவர் என் உயிரைப் பாதுகாப்பவர். அவர் நான் செல்வமுற்றிருந்தபோது வராமற் போயினும், யான் துன்புறும் இக்காலத்து உறுதியாக வருவார் என்று கூறுகின்றான். இதனை,

*''பிசிரோன் என்பஎன் உயிர்ஓம் புநனே*
*செல்வக் காலை நிற்பினும்*
*அல்லற் காலை நில்லலன் மன்னே'*[33]

ஆதலால் அவர் என்னுடன் இருக்க அவருக்கு ஓரிடம் ஒதுக்கி வைப்பீராக என்று கூறுகின்றான்.

*''இன்னே வருகுவன் ஒழிக்க அவற்கு இடமே'*[34]

இவ்வாறு சோழன் கூறியபடியே பிசிராந்தையார் அவனுடன் வடக்கிருக்க வந்தார். ஒருவரை ஒருவர் காணாமலேயே இவ்விருவரும் கொண்ட நட்பின் திறத்தைப் பொத்தியார் வியந்து போற்றுகிறார்.

'வேற்று வேந்தனது நாட்டின்கண் விளங்கும் சான்றோன் நட்பே பற்றுக் கோடாகத் துன்பம் நேர்ந்தபோது இவ்விடத்து வருதல் வியக்கும் தன்மை உடையது. இவ்வாறு வருவான் என்று துணிந்து சொல்லிய வேந்தனது மிகுதியும் அவன் சொல்லிய சொல் குற்றமில்லாமல் வந்தவனது அறிவும், வியக்குந்தோறும் வியப்புப் பெருகுகிறது. தன் செங்கோல் செல்லாத நாட்டில் அமைந்தவனது நெஞ்சைத் தன்னிடத்து உரித்தாகப் பெற்றான் சோழன்''[35] என்று வியந்து போற்றும் பொத்தியாரின் சொற்களால் (புறம் : 217) உணர்ச்சியால் கோப்பெஞ்சோழனும், பிசிராந்தையாரும் உள்ளம் ஒன்றிக் கொண்ட நட்பின் உயரிய தன்மை புலனாகிறது.

## பொத்தியார் - கோப்பெருஞ்சோழன் நட்பு

இவர் கோப்பெருஞ்சோழனுடைய உயிர் நண்பர். சோழன் வடக்கிருக்கச்

சென்றபோது, தானும் வடக்கிருந்து உடன் இறக்க விரும்பினார். அப்போது சோழன், தமக்குக் குழந்தை பிறந்த பிறகு வருமாறு சொல்லித் தம்மை அனுப்பி விட்டதாகவும், அதற்குத் தாம் மிகவும் வருந்துவதாகவும், பின்பு வடக்கிருக்கத் தமக்குக் குறித்த இடம் யாது என்று கூறுமாறு பாடுகின்றார்.

*"புகழ்சால் புதல்வன் பிறந்தபின் வாஎன*
*என்இவண் ஒழித்த அன்பி லாள*
*எண்ணாது இருக்குவை அல்லை*
*என்னிடம் யாதுமற்று இசைவெய் யோயே"*[36]

அவர் வேண்டுகோட்கு இசைந்து, நடுகல்லாக நிற்கும் கோப்பெருஞ்சோழன் அவர் வடக்கிருக்க இடமளித்தான். இதனைப் பொத்தியார்,

*"நிலைபெறு நடுகல் ஆகியக் கண்ணும்*
*இடங்கொடுத்து அளிப்ப மன்ற உடம்போடு*
*இன்னுயிர் விரும்பும் கிழமைத்*
*தொன்னட் புடையார் தம் உழைச் செலினே"*[37]

என்று வியந்து பாடுகின்றார்.

*"யாக்கைக்கு உயிர்இயைந் தன்ன நட்பு"*[38]

என்றும்,

*"உடம்பொடு உயிரிடை யென்ன மற்றன்ன*
*மடந்தையொடு எம்மிடை நட்பு"*[39]

என்றும் கூறப்பட்டிருப்பதால் சிறந்த நட்புக்கு உடம்பும், உயிரும் இயைந்து நிற்கும் தன்மை உவமையாகக் கூறியிருப்பது நட்பின் திறத்தைப் புலப்படுத்துவதாகும். இவர்களுடைய நட்பு இத்தகையது எனலாம்.

**ஔவாயார் - அதியமான் நட்பு**

புறநூனூற்றில் ஔவையார் பாடிய 22 பாடல்கள் அதியமானைப் பற்றிப் பாடியிருத்தல் ஔவையார் அதியமானிடம் கொண்ட நட்பிற்குச் சிறந்த சான்றாகும். பெறுவதற்கரிய நெல்லிக் கனியின் சிறப்பினைக் கூறாமல் அதியமான் ஔவைக்குக் கொடுத்து உண்ணுமாறு செய்தான். நெடுங்காலம் வாழச் செய்யும் அக்கனியைத்

தான் உண்டு, பயன்பெறாமல் அதியமான் புலவருக்குக் கொடுத்தது அவன் அவர்பால் வைத்திருந்த நட்பின் ஆழத்தைக் குறிக்கிறது.

அதியமான் இறந்தபோது ''அவனையின்றிக் கழிகின்ற காலையும், மாலையும், இனி இல்லையாகுக. எம்முடைய தலைவன், மலை சூழ்ந்த நாடு முழுவதும் கொடுத்தாலும் ஏற்றுக் கொள்ள மாட்டான். அவன் இறந்த பிறகு நடப்பட்ட கல்லின் மீது மயிற்பீலியைச் சூட்டி, நாரால் அரிக்கப்பட்ட கள்ளினைச் சிறிய கலத்தில் கொடுத்தாலும் கொள்வானோ?''[40] என்று ஔவையார் வருந்திப் பாடும்பாடல் அவர் அதியமானிடம் கொண்டிருந்த அன்பின் பெருக்கைப் புலப்படுத்துவதாகும்.

இதிலிருந்து உண்மையான நட்பு, தனி மனிதனின் உள்ளத் தூய்மையைக் குறிக்கும் அடக்கமான பண்பும், சமுதாயத்தில் மக்கள் மேற்கொள்ள வேண்டிய நட்பின் உயர்வும், அத்தகைய நட்புணர்வால் சங்ககால மக்கள் சமுதாயத்திற்குச் சீரிய மனித நேயப் பண்பாட்டை உணர்த்தினர் என்பதும் தெரிகிறது.

### வஞ்சப் புகழ்ச்சியில் மனிதநேயம்

ஒருவனைப் புகழ்வது போலப் பழித்தலும், பழிப்பது போலப் புகழ்வதும் வஞ்சப் புகழ்ச்சி எனப்படும். இவற்றைப் பயன்படுத்தி சங்கப் புலவர்கள் மன்னர்களுக்குப் பல அரிய கருத்துகளை உணர்த்தி வந்தனர். பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை நெட்டிமையார் பழித்ததுபோல் புகழ்ந்து கூறுகின்றார். வெற்றி பொருந்திய குடுமியே! வேற்றரசருடைய நிலத்தைக் கைப்பற்றி, பாணர் பொற்றாமரைப் பூவைச் சூடவும், புலவர்கள் யானையுடனே அலங்கரிக்கப்பெற்ற தேரினை ஏறுதற்கேற்ப அமைக்கவும் இனிது செய்து நிற்கின்றாய். இது உனக்கு அறமாகாது என்பதை,

*''பாணர் தாமரை மலையவும் புலவர்*
*பூநுதல் யானையொடு புனைதேர் பண்ணவும்*
*அறனோ மற்றிது விறன்மாண் குடுமி*
*இன்னா வாகப் பிறர்மண் கொண்டு*
*இனிய செய்தி நின் னார்வலர் முகத்தே'*[41]

எனக் கூறுவதினின்று அவனைப் பழிப்பதுபோல் வெளிக்குத் தோன்றினும் அவனுடைய வள்ளன்மையை வெளிப்படுத்திப் புகழ்வதை நன்குணரலாம். பழிப்பது

போல் புகழ்வதும் ஒருவகையில் மன்னர்க்கு மகிழ்ச்சியினை ஊட்டவல்லது என்பது தெரிகிறது.

''இவ்வே பீலியணிந்து''[42] எனத் தொடங்கும் பாடலில், ஔவையார் தொண்டைமானைப் பாடுமுகத்தான் அவனுடைய படைக்கருவிகளைப் புகழ்வதுபோலும், அதியமானின் படைக்கருவிகளைப் பழிப்பது போலும் தோன்றினும், நாள்தோறும் அதியமான் போர்செய்த வண்ணமிருக்கிறான். அதனால் தான் அவன் போர்க்கருவிகள் முனை மழுங்கிக் கொல்லனிடத்துச் சென்று சேர்கின்றன எனக் கூறுவாராய் அதியனின் கொடைச் சிறப்பினையும், வெற்றிச் சிறப்பினையும் தொண்டைமானுக்கு வாழைப்பழத்தில் ஊசி ஏற்றுவது போல் புலப்படுத்துகிறார்.

கபிலர் பாரியை இகழ்வதுபோல் புகழ்ந்து பாடும் பாடலாக,

*''பாரி பாரி என்று பல ஏத்தி*
*ஒருவர் புகழ்வர் செந்நாப் புலவர்*
*பாரி ஒருவனும் அல்லன்*
*மாரியும் உண்டீண்டு உலகுபுரப் பதுவே'*[43]

என அழகுறப் பாடியுள்ளது பாராட்டத்தக்கதாகும். கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரியைப் புகழ்வது போல் பாடினும், மாரியாய் மாறும் பாரியின் ஈரநெஞ்சத்தைப் புகழ்ந்து அவன்புகழ் அவனியில் நிலைக்கச் செய்த நற்பெருமை நற்புலவர்க்கே உண்டு.

ஏனாதி திருக்கிள்ளியை மதுரைக் குமரனார் புகழுமுகத்தான் அவனையும், அவனுடைய பகையரசனையும் இணைத்துப் பார்த்து மகிழ்கின்ற நிலையில்,

*''நீயே அமர்காணின் அமர் கடந்தவர்*
*படை விலக்கி யெதிர் நிற்றலின்*
*வாஅள் வாய்த்த வடுவாழ் யாக்கையொடு*
*கேள்விக் கினியை கட்கின் னாயே*
*அவரே நிற்காணிற் புறங்கொடுத்தலின்*
*ஊறறியா மெய்யாக் கையொடு*
*கண்ணுக் கினியர் செவிக்கின் னாரே'*[44]

எனப் பாடுவதினின்று நீ கண்ணுக்கின்னாய் எனப் பழித்தது போலப் புகழ்ந்தும்,

அவர் கண்ணுக்கினியார் எனப் புகழ்ந்தது போல பழித்தும் கூறியுள்ளமை தெரிகிறது. ''சிலையுலாய் நிமிர்ந்த''[45] எனத் தொடங்கும் பாடலில் பழிப்பது போல் புகழ்கின்றார். சோழிய ஏனாதி திருக்குட்டுவனை மதுரைக் குமரனார் பாடியுள்ளார். யானும் அவன் நாட்டுப் பக்கலில் கூட செல்ல மாட்டேன். புலவர்களே! நீங்களும் அவனை உள்ளுதலை ஓம்புமின் என அவன் கொடைச் சிறப்பினை இகழ்வது போல் கூறி நிறையக் கொடுக்கும் நல்லோன் அவ்வள்ளியோன் என்பதை உலகத்திற்குக் காட்டிப் பல படப் புகழ்கின்றார்.

மேற்கூறிய பாடல்களிலிருந்து சங்ககால மன்னர்கள் புலவர்களிடத்துக் கொண்ட நேயமும், புலவர்க்கிருந்த உரிமைப் பண்பும், மன்னர்களின் இனிய பண்புகளும், வெளிப்படுகின்றன. இவ்வாறு நாமும் நம் பைந்தமிழப் புலவர்கள் போல் இடமறிந்து, காலமறிந்து, பொருள் உணர்ந்து பேசக் கற்றுப் பெருமை அடையலாம்.

## படைப்புகளில் மனிதநேயம்

### புலவர் தனி உரிமை

சங்ககால மன்னர்களிடத்துப் புலவர்கள் தனி உரிமை பாராட்டினர். பேகன்-கண்ணகி ஆகியோரின் தனி வாழ்வு பற்றிய சிக்கலில் நான்கு புலவர்கள் தீவிரமாக ஈடுபட்டதைக் காண்கிறோம். இப்பெருமை புலவர்களின் தனி உரிமை என்று கூறுதல் மிகையாகாது. சங்கப் புலவர் பெற்றிருந்த இத்தனி உரிமைச் சிறப்பினைப் பேகன் வாழ்வில் ஏற்பட்ட ஒரு நிகழ்ச்சி மிகத் தெளிவாகப் புலப்படுத்தி நிற்கின்றது. 'இம்மை செய்தமை மறுமைக்கு உறுதுணையாகும்' என்று எண்ணிய வாணிகக் கொடையன்று பேகனது கொடை. தன்னை நாடி வந்தவரின் வறுமையைக் கருதியே அவன் ஈந்தனன். இதனை,

*''கடாஅ யானைக் கலிமான் பேகன்*
*எத்துணை யாயினும் ஈத்த னன்றென*
*மறுமை நோக்கின்றோ வன்றே*
*பிறர் வறுமை நோக்கின்றவன் கைவண்மையே''*[46]

சிறிதளவே பிறர்க்கு ஈயினும் அந்த அளவிற்கு மறுமையில் நற்பயன் கிட்டும்' என்ற வாணிகக் கருத்தின்றிப் பிறர் வறுமை கண்டவழித் தானும் வாடிய அருளாளனாய் வாழ்ந்தனன் பேகன்.

கண்ணகியைப் பிரிந்து வேறு ஒரு பெண்ணை நாடி வாழ்ந்த பேகனிடத்துச் சென்ற புலவர்களின் கூற்றிலிருந்து தெரிவனவற்றுள் தலைமையானவை இரண்டு ஒன்று பேகனது தவறான ஒழுக்கத்தால் அவனுக்கு ஏற்படும் பழியினை எண்ணிக் கண்ணகி கலங்கியது. மற்றொன்று தனக்கு ஏற்பட்ட பிரிவுத் துன்பத்தினும் அவனுக்கு உறும் பழியே கொடிது எனக் கருதும் அறச்செல்வியைப் பிரிந்திருப்பது புலவர்தம் அறநெஞ்சத்தை வாட்டியது. இவ்விரு கருத்துகளையும் பேகன் மனதில் பதியும் வண்ணம் புலவர் தக்க முறையில் எடுத்துக் கூறினார். அவ்வாறு கூறுங்கால் தம் வாழ்க்கை 'பரிசில் வாழ்க்கை' என்று பெயர் பெற்றதாயினும் பரிசிலே வாழ்வு எனக் கொண்ட புன்மை படைத்ததன்று என்பதையும் தெளிவுறுத்தினர்.

கண்ணகியின் துயராற்றாது அவளை அறமின்றித் துறந்த பேகனுடைய கொடுமையும், உயிர்களுக்கெல்லாம், இன்பம் செய்யும் வள்ளல் தன் வாழ்க்கைத் துணைவிக்குத் துன்பம் செய்தல் தகுதியன்று என்னும் உண்மையும், அவள் எத்தகையவள் ஆயினும் இரங்கத் தக்கவள் என்னும் இரக்க உணர்வும், பேகன் தன் மனைவி என்னும் காரணம் பற்றி அன்பு செய்யத் தவறினாலும் அவன் நாட்டைச் சார்ந்த பெண் என்று கருதி அருள் செய்தல் வேண்டும் என்னும் கடமையும் அறிந்து திருந்துமாறு செய்தனர் புலவர்கள்.

இவ்வாறு சான்றோர்கள் மேற்கொண்ட முயற்சியாலும், அறிவுரையாலும், பேகன் மனம் திருந்தி, மனைவியிடம் இணைந்து அன்புடன் இல்லறம் நடத்தலானான். புலவர்களும் பேகனிடத்தில் பரிசில்கள் பெற்று மகிழ்ந்து சென்றனர் என்றும், இந்நிகழ்ச்சியினின்று அரசர் குடும்பத்தில் ஒன்றுமையின்றி இருப்பின், அந்த அரசனால் நாட்டுக்கு நலம் புரிய இயலாது என்றும், ஒற்றுமையிருந்தால் தான் நாட்டை நல்ல முறையில் அரசாள முடியுமென்றும், அரசன் குடும்பத்து ஒருமைப் பாட்டிலேயே மக்களின் வாழ்க்கை நலம் பெருகும் என்றும் கருதியிருந்தனர் என்பதை அறிய முடிகிறது.

கபிலர், பரணர், அரிசில்கிழார், பெருங்குன்றூர் கிழார் ஆகிய புலவர்கள் (புறம் : 143, 144, 145, 146, 147) பொதுவாழ்வாகிய புறத்துறையில் புரவலரைத் திருத்த முனைவதே அரிய செயலாக மேற்கொண்டனர். அதனினும் அரிய செயல் ஒன்றுண்டு. புரவலரின் தனிவாழ்வாகிய அகத்துறையில் தலையிட்டு தவறு களைந்து அறம் நாட்டும் செயல் ஈடு இணையற்றதாகும். சங்க காலச் சமுதாயம்

இச்சிறப்புரிமையினைப் புலவர் பெருமக்கட்கு அளிப்பதிலிருந்து, மன்னனைப் புகழ்ந்து பாடி பரிசில் பெற்றுத் தன் குடும்பம் மட்டும் சிறந்திருந்தால் போதும் என்ற தன்னலமின்றி, மன்னன் மனைவியுடன் ஒற்றுமையாக வாழ வேண்டும் என்ற மனிதநேயப் பண்பை இப்பாடல்கள் உணர்த்துவதைக் காணலாம்.

புலவர் தனிவாழ்வு

மக்களை ஆளும் உரிமை படைத்த புரவலர்களின் தனிவாழ்விலும், பொது வாழ்விலும் தலையிட்டு அறத்தை நிலை நாட்டினார்கள் சங்கப் புலவர்கள். கொடுக்கிலாதானைப் பாரியே என்று கூறியும், பொருள் ஒன்றே பெறுவது சாலும் என்று கருதியும் பிற்காலப் புலவர்கள் வாழ்ந்தமையால் போற்றினும் போற்றுவர் பொருள் கொடாவிடின் தூற்றினும் தூற்றவர் என்று புலமையுலகு பழிக்கப்படுவது ஆயிற்று. இதனை,

*''பீடில் மன்னர்ப் புகழ்ச்சி வேண்டிச்*
*செய்யா கூறிக் கிளத்தல்*
*எய்யா தாகின்றெஞ் சிறுசெந் நாவே'*[47]

என்று வன்பரணர் பாடினார். 'ஈத்துவக்கும் பெருமையற்ற வேந்தர்களைப் புகழ்தல் வேண்டும் என்பதற்காக அவர் செய்யாதன கூறேம்' என்ற பெருமிதமும், 'எம்முடைய சிறிய செவ்விய நா' என்ற அடக்கமும் பண்டைப் புலவர்க்குப் பெருமை தேடித் தந்தன.

பரிசில் பெறும் முறைபற்றிப் பண்டைப் புலவர் கொண்டிருந்த நெறியினை,

*''மிகப்பே ரெவ்வம் உறினும் எனைத்தும்*
*உணர்ச்சி இல்லோர் உடைமை யுள்ளேம்*
*நல்லறிவு உடையோர் நல்குரவு*
*உள்ளுதும் பெரும யாம் உவந்துநனி பெரிதே'*[48]

என்பது செல்வத்தின் பயன் ஈதல் என்னும் அருள்நெறி போற்றியவராதலின் அக்காலப் புலவர் உணர்வற்ற புல்லியரது வளத்தைவிட நல்லறிவுடையாரது நல்குரவையே மாண்பு மிக்கதாகக் கருதினர். வள்ளல் எழுவருள் ஆய் என்பவனை ஈண்டு நினைவு கூரத்தக்கது. ''களங்கனி யன்ன'[49]எனத் தொடங்கும் பாடலில், புலவர் முடமோசியார், ஏனைய செல்வர் தம் வளத்தை நினையாது, ஆயின்

நல்குரவையே மாண்புடைத்து என்று போற்றிக் கூறியிருப்பதைக் காண முடிகிறது. உவர்க் கடலன்ன செல்வரை நாடாமல், கிணற்று ஊற்றன்ன வள்ளல்களைப் புலவர்கள் நாடிப் பொருளுக்குத் தலைமை தாராமல், உணர்வுக்கே தலைமை தந்தார்கள். அவர்தம் தனிவாழ்வில் இஃது ஒரு கூறு.

புலவர் தனிவாழ்வில் வேறோர் இயல்பினை மற்றொரு பாடல் தெளிவுறுத்துகிறது. இதனை

*''வல்லே கலைமதி அத்தை உள்ளிய*
*விருந்துகண்டு ஒளிக்கும் திருந்தா வாழ்க்கைப்*
*பொறிப்புணர் உடம்பில் தோன்றிஎன்*
*அறிவுகெட நின்ற நல்கூர் மையே'*[50]

என்று தம்மை நாடிவரும் விருந்தினரை ஓம்பும் திருந்திய வாழ்க்கைக்காகவும், தம் இனத்தின் பண்பாட்டிற்கு உரமாக வல்ல அறிவின் வளத்துக்காகவுமே புலவர் செல்வர்களிடத்துப் பரிசில் நாடினர். இந்த இரு நோக்கங்கட்காகப் புலவர் பொருள் விரும்பினர் என்பதே அவர்தம் தனிவாழ்வின் இரண்டாவது கூறாகும்

தனிநலமன்றிப் பொதுநலமே புலவர்தம் பரிசில் நாட்டத்திற்குக் காரணம் என்பதை மற்றொரு வகையாலும் நிலை நாட்டலாம். அரிதாக முயன்று பெற்ற பரிசில் சிறியதாயினும் மகிழ்ந்து ஏற்பதும், பெற்ற அப்பொருளால் தம் சுற்றத்தார்க்கு வேண்டுவன தருதலும், பெற்ற பொருளைப் பாதுகாவாமல் தாம் துய்ப்பதோடு முகமலர்ச்சியுடன் பிறருக்கு வழங்குதலும் புலவர் தம் இயல்பாகும்.

*''பெற்றது கொண்டு சுற்றம் அருத்தி*
*ஓம்பாது உண்டு கூம்பாது வீசி'*[51]

என்ற பகுதி மேற்கூறிய கருத்துகளை வலியுறுத்துகிறது. பெற்ற பரிசில் பொருளைத் தனி நலத்துக்காக என்று கொள்ளாமல் பொதுநலம் கருதும் அறிஞர் தம் அருள்நெறி நம் வாழ்விற்குத் தெளிவூட்ட வல்லதாகும்

*''நின்னயந் துறைநர்க்கும் .. நல்கிய வளனே'*[52]

புலமையும், உணர்வுமே வாழ்வாகக் கொண்ட புலவர், பொருள் கிடைத்த போது பொதுநலம் பேணினர் என்பதை இப்பாடல் புலப்படுத்துகிறது. இது புலவர்தம் தனி வாழ்வின் மூன்றாவது கூறாகும்.

மகளிரது துணையின்றேல் புலவர்கள் ஏறுபோல் பீடுநடை பெற்றுப் பிறர்க்கு அறவுரையும், அறிவுரையும் கூறும் திண்மை பெற்றிரார். 'பேணுதகு சிறப்பின் பெண்ணரசிகளின் மாண்பால் புலவர் தம் தனிவாழ்வு எழிலுடையதாய்ப் பொலிந்தது. இதனை,

*"நாணல தில்லாக் கற்பின் வாணுதல்*
*மெல்லியற் குறுமகள் உள்ளிச்*
*செல்வ லத்தை சிறக்கநின் னாளே'*[53]

என்று ஆவூர் மூலங்கிழார் இல்லறத்தைப் பேணும் சிறப்பினைப் போற்றுகின்றது.

*"மன்பதை காக்குநின் ... புலம்புமுந் துறத்தே'*[54]

என்ற இப்பாடல் புலவர் நெஞ்சத்தின் அவலக் குரலுக்கு யாது காரணம் என்பதையும், புலவரைத் துன்புறுத்திய வறுமையின் கொடுமையினையும் தெளிவாகக் கூறுகின்றது.

வறுமையே எமக்குத் துன்பம் தருவதாயினும் ஆகுக. இனியும் பிரிந்திருந்து அவட்குத் துன்பம் தருதல் இயலாது. வறுமைத் துன்பத்தினும் என்னைப் பிரிந்திருப்பதே என் மனைவிக்குப் பெருந்துயர் தருவது.அதனைத் துடைப்பதே இனி என் கடன். இதோ இப்போதே போகின்றேன் என்ற கருத்தினை உட்கொண்டு பேசிய துணிவும், காதலன்பும், இல்லறச் சிறப்பினை உலகு உள்ளளவும் முழக்க வல்லன. புலவர்தம் இவ்வில்லறச் சிறப்பே அவர்தம் தனிவாழ்வின் தலைமையான கூறாகும்.

புலவர்களின் தனிவாழ்வு சிறப்புற அமைந்ததால்தான், நாட்டின் பொது வாழ்வில் செல்வாக்குப் பெற முடிந்தது. தாம் ஒழுங்குற வாழ்ந்தாலல்லது பிறர்க்கு ஒழுங்கினை எடுத்தோதத் துணிவு ஏற்படாது. அப்படித் துணிவு ஏற்பட்டுக் கூறினும், தனிவாழ்வில் சால்புடையார் சொல்லும் சொல்லுக்குச் செல்வாக்கு ஏற்பாடது. அவ்வாறு செல்வாக்கு ஏற்படினும் அது நீடித்து நிற்பதாகாது. ஆயின் சங்கப் புலவரின் சொல் யாண்டும் செல்வாக்குப் பெற்றமையினை யாவரும் அறிவர். வஞ்சினம் கூறப்புக்க ஒரு மன்னன்,

*"உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்*
*புலவர் பாடாது வரைகவென் னிலவரை'*[55]

என்று கூறினான். இவ்வாறு பொது வாழ்வின் தலைவனாயுள்ள மன்னன் ஒருவன் பாடினான் எனின், புலவர்கள் எத்துணை விழுமிய வாழ்வு வாழ்ந்திருத்தல் வேண்டும்

என்பதையும், அவ்வாழ்வின் விழுப்பம் உலகை வாழ்விக்க வல்லது என்பதையும் உணர்த்துகின்றன.

## புலவர்களின் செந்நெறி

சங்கப் புலவர்கள் சிற்றரசர்கள், வேளிர்களாயினும், வள்ளல்களாய் உள்ளவர்களை வாயார வாழ்த்தி முடிவேந்தராயினும் ஈயாதோரை நாணச் செய்து அக்காலத்தில் விளங்கினர் என்பதை,

*"வையக வரைப்பிற் தமிழகம் கேட்ப*
*பொய்யாச் செந்நா நெளிய ஏத்திப்*
*பாடுப என்ப பரிசிலர் நாளும்*
*ஈயா மன்னர் நாண*
*வீயாது பரந்தநின் வசையில்வான் புகழே"*[56]

இப்பாடல் வரிகள் புலப்படுத்துகின்றன. மோசியார் வேள் ஆயை நெடுங்காலம் அறியாதிருந்து பின் அவனது நட்பு உண்ட காலத்துத் தாம் அவனைத் தெரிந்து கொள்வதற்கு முன் சென்ற காலமெல்லாம் வறிதே கழிந்ததே என்று வருந்திப் பாடியுள்ளது யாவரும் அறிந்த ஒன்றாகும்.

*"முன்னுள்ளு வோனைப் பின்னுள்ளி னேனே*
*ஆழ்கஎன் உள்ளம் போழ்கஎன் நாவே*
*பாழூர்க் கிணற்றிற் றூர்கவென் செவியே"*[57]

என்பதில் ஆயினிடத்தில் முடமோசியார் கண்ட குணச்சிறப்புகளின் பயனாக அவன்மீது தாம் கொண்ட அன்பின் பெருக்கே இங்குச் கவிப் பொருக்காய் ஓடுவதை யாவரும் அறியலாம். இப்பாடல்கள் சங்கப் புலவர்களின் செந்நெறிப் பண்பை விளக்குகின்றன.

## புலவரின் தன்மதிப்பு

ஒருவனுக்குரிய மதிப்பு தன்மதிப்பு என்று கூறப்படும். அவன் தன் மதிப்புக் கெடாதவாறு, தன் மதிப்புக்கு இழுக்கு ஏற்படாதவாறு நடந்து கொள்வதன் மூலம், தன்மதிப்பைக் காத்துக் கொள்ள வேண்டியது கடமையாகும். இத்தன்மதிப்பைக் காத்த தகைசால் பெரியவராகப் புலவர் பெருஞ்சித்திரனார் விளங்கினார்.

ஒருவனுடைய தன்மதிப்பைக் கெடுப்பது அவனிடத்தில் வந்து சேரும்

வறுமையே. வறுமை வந்தால் ஒருவனுடைய பெருமை, கல்வி, மானம், குலம், கொள்கை, கற்பு, பண்பு முதலிய எல்லாம் குலைந்து போகும். வறுமையில் சிக்கித் துன்பப்படுகின்ற பொழுது இவற்றை எல்லாம் கெடாது காத்துக் கொள்பவனே தன்மதிப்பைக் காத்துக் கொண்டவனாவான். பேரறிவு படைத்த பெருஞ்சித்திரனார் தன்மதிப்பைக் காத்துக் கொண்ட பெரியவராக வாழ்ந்தார்.

'குமணவள்ளல் கொடுத்த பொருட்கள் முழுவதையும் தாம் மட்டும் அனுபவிக்காது, ஏழைகட்கும், மற்றவர்க்கும் நானும் கொடுக்கின்றேன். மனையாட்டியே! நீயும் உன்னை விரும்பி வாழும் மகளிர்க்கும், உன் அன்பிற்குரிய மகளிர்க்கும், நம் குடும்பத்தார் பசிதீர இதுவரை கடன்கொடுத்தவர்க்கும் வேண்டுமளவு கொடு. இன்னார், இனியர் என்று பார்க்காமல் எல்லோர்க்கும் கொடுக்கலாம். இப்பொருளைச் சேமித்து வைத்திருந்தால் காலம் முழுவதும் நன்றாக வாழலாமே என்று நினைக்க வேண்டாம்'[58] என்று பெருஞ்சித்திரனார் தனது மதிப்பைப் பேணியும், பிறரை மதித்து உதவி செய்து, மதிப்பால் உயர்ந்து மதித்து வாழும் பெருமை பெற்றும், புலவரின் மிகுதியான மனித நேயப் பெருமைக்குச் சித்திரனாராகத் திகழ்ந்தார்.

**புலவர்களின் தன்மானம்**

சங்கப் புலவர்கள் வறுமையால் இடருழந்து வாடியவிடத்தும் தன்மானம் கெடவரும் வாழ்க்கையை மேற்கொள்ளவில்லை. உயரிய எண்ணங்களை, விழுமிய வண்ணம் நுவன்று, கிளர்ந்தெழுந்த தணியா உள்ளத்தாராய் முற்றிய திருவின் மூவராயினும் பெட்பின்றீதலைத் தாம் வேண்டாதவராய் அன்னார் விளங்கினர்.

அரசர் கோயிலைத் தமக்குரிய வீடாகவே மதித்துப் புலவர்கள் இனிது பழகி வந்தனர். பகையரசர் அஞ்சி ஒடுங்கிக் குலைநடுங்கும் அத்தாணி மண்டபத்தின்-கண் தமிழ்ப்புலவோர் பெருமிதத்துடன் தலைநிமிர்ந்து போவதும் வருவதுமாய் இருப்பர். சேரமான் குட்டுவன் கோதையின் மண்டபத்தினுள் தாமும், ஏனைப் புலர்வர்களும் பழகியிருந்த தன்மையை மதுரைக் குமரனார் என்னும் புலவர்,

*''எங்கோன் இருந்த கம்பலை மூதூர்*
*உடையோர் போல விடையின்று குறுகிச்*
*செம்மல் நாளவை அண்ணாந்து புகுதல்*
*எம்மன வாழ்க்கை யிரவலர்க் கெளிதே'*[59]

என்று பாடியதிலிருந்து புலவரின் தன்மானப்பண்பு வெளிப்படுகிறது. இப்புலவர்கள் இரவலர் வாழ்க்கையைப் பூண்டு, அரசர்களின் கைவண்மையை எதிர்நோக்கி வாழ்ந்தனர் என்றும், அவ்வரசர்களின் முன்னிலையில் அஞ்சி ஒடுங்கி அவலமுற்றழிந்தறியார் தம்மைக் காக்கும் வள்ளல்களே ஆயினும், அரசர்களைப் புலவோர் தம் நண்பர்களாகவே உண்டு உயர்வு, தாழ்வு எனும் யாதொரு வேற்றுமையின்றி அளவளாவி மகிழ்ந்தனர் என்றும் தெரிய வருகிறது.

## புலவரைப் புலவர் போற்றும் பண்பு

புலவர்கள் ஒருவருக்கொருவர் தூற்றிக் கொள்ளாமல் சங்ககாலத்தில் பாசப்பிணைப்போடு வாழ்ந்தார்கள் என்றும், புலவர்களைப் புலவர்களே புகழ்ந்தேத்தும் பாங்கினைப் பெற்றிருந்தனர் என்றும் சங்கப்பாடல்கள் வழி தெளியலாம்.

கபிலரைப் போற்றாத புலவர்களே இல்லை. பரணரைப் போற்றும் ஔவையார், பெருஞ்சித்திரனார், மோசிகீரனார் போன்றோர் பாடிய பாடல்கள் எல்லாம், புலவர்களே புலர்வகளால் போற்றப்பட்டதற்குச் சீரிய எடுத்துக்காட்டுகளாகும். புலவர்கள் புலவர்களைப் புகழும் பாடல்களுள் மிகுதியாகப் புகழப்பெறுபவர் கபிலரேயாவார். கபிலரைப் புகழும் புலவர்களாக மாறோக்கத்து நப்பசலையார், பொருந்தில் இளங்கீரனார் ஆகிய இருவரும் காணக் கிடக்கின்றனர். பாண்டிய நாட்டைச் சார்ந்த கபிலர், பாரியின் நெஞ்சத்தில் தஞ்சம் புகுந்தவராய் நண்பராய் விளங்கினார்.

கபிலர் சிறந்த செந்நாப் புலவராய் சொல்லில் வாய்மையும், அறம்புரி கொள்கையில் தூய்மையும், நட்புக் கடனாற்றுவதில் நேர்மையும் கடைப்பிடித்த காரணத்தால் தான் புலவர்கள் புகழும் பெற்றியராய் விளங்கினார். இவரைப் பதிற்றுப்பத்தில்,

> *"அரசவை பணிய அறம்புரிந்து வயங்கிய*
> *மறம்புரி கொள்கை வயங்குசெந் நாவின்*
> *உவலை கூராக் கவலையின் நெஞ்சின்*
> *நனவிற் பாடிய நல்லிசைக்*
> *கபிலன்'*[60]

என்று பெருங்குன்றூர் கிழாரும், அகநானூற்றில் இவரை,

*"உலகுடன் திரிதரும் பலர்புகழ் நல்லிசை*

*வாய் மொழிக் கபிலன்'*[61]

என்று மதுரை நக்கீரனாரும் கூறியுள்ளதிலிருந்து நன்குணரலாம். கபிலர் தன்னைப் பாடவேண்டுமென்று சேரமான் மாந்தரஞ்சேரல் இரும்பொறையும் விழைந்ததில் தவறில்லை. வேந்தனின் விழைவை வியனுலகு அறியச் செய்ததோடு புலவர் கபிலர் சிறப்பினையும் அறிய முடிகிறது.

இளங்கீரனார், நப்பசலையார் போன்ற புலவர்களால் போற்றப் பெற்ற கபிலர், தமது பாடலில் கழாத்தலையார் என்னும் புலவரைப் பரவிப் போற்றுகின்றார். இதனை

*"வெட்சிக் கானத்து ... நின் வேலே'*[62]

என்ற பாடல் மூலம் கழாஅத்தலையாரை இருங்கோவேளின் முன்னோரில் ஒருவன் இகழ்ந்துள்ளான் என்பதையும், புலவர் சினக்கப் பொல்லாப் பழியால் வசை பாடிய காரணத்தால் அவன் நகரமாகிய அரையமே அழிவுற்றது என்பதையும், சொல் வன்மையால் கோன் வன்மையையும் மாற்றியமைக்கும் வல்லமை பெற்றவர் கழாஅத்தலையார் என்பதையும் அறிந்து கொள்ள முடிகிறது.

பெண்பாற் புலவர்களில் சிறந்து விளங்கும் ஔவையார் தமது பாடலில் பரணரைப் பற்றிப் பாடியுள்ளார். பரணரும் அதிகனைப் புகழ்ந்து பாடியிருப்பார். அதனைக் கண்ணுற்ற ஔவையார் அதிகனையும், பரணரையும் ஒருங்கே புகழுமாறு ஒரு பாடலைப் பாடியுள்ளார். இதனை,

*"... அமர் கடந்துநின் னாற்ற றோற்றிய*

*அன்றும் பாடுநர்க் கரியை யின்றும்*

*பரணன் பாடினன்'*[63]

என்று உரைப்பதினின்று சங்கப்புலவர்கள் உண்மையை, உள்ளதை உள்ளவாறே உரைக்கும் உத்தமர்கள் என்பதை உணரமுடிகிறது.

'பாரி, ஓரி, மலையமான் திருமுடிக்காரி, எழினி, பேகன், ஆய், நள்ளி எனக் கூறப்பெற்ற எழுவரும் இறந்தபின்பு இரந்தோரது இளிவரவைத் தீர்க்க வல்லவன் நீ என எண்ணி நின்பால் வந்தேன்'[64] என்ற இப்பாடலில் 'திருந்துமொழி மோசி பாடிய ஆயும்' எனச் சுட்டி முதிரமலைத் தலைவன் குமணனுடன் மோசியையும் புகழ்கின்றார்.

இதுகாறும் கூறியவற்றால் புலவர்களைப் புலர்வகளே போற்றி மதித்தனர் என்பதும், புலவர்கள் பாடும் புகழினைப் பெறவேண்டும் என விழைந்தனர் பண்டையோர் என்பதும், பெயரைச் சுட்டாமல் அன்னாரின் சிறப்புகளை எடுத்தோதிப் புகழ்ந்தனர் என்பதும், இத்தகைய உயரிய மனிதநேயப் பண்பாட்டைச் சமுதாயத்திற்கு உணர்த்தினர் என்பதும் பெறப்பட்டன.

## பெண்பாற் புலவர்களின் பண்புநலன் : பெருங்கோப்பெண்டு

மகளிரின் சிறந்த பண்பை அவர்களின் கற்பு ஒழுக்கத்திலே சிறப்பாகக் காண முடிகின்றது. பூதப் பாண்டியனும், பாண்டியன் தேவியும் இருவரின் அன்பு வாழ்க்கை புலவர் பலரால் பாராட்டப்படும் பண்புடையதாக விளங்கியது. கற்புநலம்சான்ற மகளிர் தம் கணவர் இறந்தவுடன் அவரைப் பிரிந்து வாழ விரும்பாத நிலையில் உடன் உயிர்விடுதல் பண்டைய மரபாகும்.

ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் இறந்தபொழுது அவன் தேவியான பெருங்கோப்பெண்டு என்பாள் எரியில் விழத் துணிந்தாள். அதைக் கண்ட சான்றோர்கள் அவளைத் தடுத்தனர். அப்போது பெருங்கோப்பெண்டு அவர்களை நோக்கிச் சினந்து,"... தீப்பாய்ந்து உயிர் போக்கி உயர்வடையத் துணிந்த என்னை இடைநின்று தடுத்தல் ஒழிக"[65] எனக் கூறி விடைபெற்று விரைந்து தீப்பாய்ந்து விழுப்புகழ் பெற்றாள் என்று அறிய முடிகின்றது. அவ்வாறு பண்டைத் தமிழகத்தில் கணவர் வாழ வாழ்ந்து, அவர் வீழ வீழ்ந்து புகழ் பெற்ற மகளிர் பலராவர். அத்தகைய மகளிரின் பண்பு நலமும், கற்புச் சிறப்பும் புலப்படுகின்றது.

### மாரிப்பித்தியார்

போர், ஈகை, செங்கோன்மை என்ற மூன்றையே ஆண்பாற் புலவர்கள் பாடிச் சென்றுள்ளனர். பெண்பாற் புலவர்கள் இம்மூன்றைத் தவிர வேறு பல கருத்துகளை அடிப்படையாகக் கொண்டு பாடல்களைப் பாடித் தனிப்பெருமை கொண்டனர். வீரம்பாடிய பெண்பாற்புலவர் ஒக்கூர் மாசாத்தியார், காவற் பெண்டு, கடமை பாடிய பெண்பாற் புலவர் பொன்முடியார், கையறு நிலை பாடிய பெண்பாற் புலவர் பெருங்கோப்பெண்டு, மாறோக்கத்து நப்பசலையார் ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள். துறவு பாடிய பெண்பாற் புலவர் மாரிப்பித்தியார், புறநானூற்றில் இரண்டு பாடல்களைப் பாடியுள்ளார். துறவு பூண்ட ஒருவர் பற்றிப் பாடப்பட்டவை. துறவின் முழுநிலையான அருள்நிலை வாய்க்கப் பெற்றவர். உலகப் பற்றும், உலகப்

பொருட்பற்றும், அவற்றால் பிறக்கும் துன்பத்தைத் துறந்து, இன்ப வாழ்வினராகத் திகழ்வார்.

துறவின் தொடக்க நிலையான இல்வாழ்க்கையில் அன்பு நின்று இன்பம் பயக்க, துறவின் முழுநிலையான அருள் வாழ்க்கையில் அந்த அன்பு அருளாக மாறி நல்லின்பம் நல்குகின்றது.

*''கழைக்கண் நெடுவரை அருவி ஆடிக்*
*கான யானை தந்த விறகின்*
*கடுந்தெறல் செந்தீ வேட்டுப்*
*புறம்தாழ் புரிசடை புலர்த்துவோனே''*[66]
*''கறங்குவெள் ளருவி ஏற்றலின் நிறம்பெயர்ந்து*
*தில்லையன்ன புல்லென் சடையோடு*
*அள்ளிலைத் தாளி கொய்யு மோனே'*[67]

இவ்விரு பாடல்களும் துறவுக்கோலத்தின் நிலையினையும், தம் நண்பர் துறவியானதால் தமக்கு உண்டான துன்பத்தையும் இப்புலவர் வெளிப்படுத்துவதிலிருந்து புலவரின் இரக்கமுள்ள மனநலம் புலப்படுகின்றது.

குறமகள் இளவெயினி

அக்காலத்தில் குறவர்க்குத் தலைவராக இருந்த ஏறைக்கோன் என்பவரின் அன்பு, அறிவு, ஆண்மை என்ற மூன்று பண்புகளை இவர் பாடலில் கூறியிருப்பதைக் காணலாம். தம்மைச் சார்ந்தவர் தமக்குத் தீமை செய்தால் அதனைப் பாராட்டாது பொறுத்தருள வேண்டும். 'குற்றம் பார்க்கில் சுற்றம் இல்லை'[68] என்பது முதுமொழி. சான்றோர்க்குரிய பண்பு இத்தகைய அன்பினை உடையதாக இருக்க வேண்டும். பிறருடைய வறுமையைக் கண்டபோது அதனை முன்பே அறிந்து போக்காதது தம்முடைய குற்றம் என்று எண்ணி உள்ளம் நாணுதல் வேண்டும். படையில் சென்று போர் புரிவோர் பழியொடு வரும் செயலை மேற்கொள்ளக் கூடாது. வஞ்சகம், சூழ்ச்சி முதலியவற்றின் மூலம் வெல்லக் கருதாது நேர்மையான வழியில் வெற்றிகாண வேண்டும் என்பதை,

*''தமர்தன் தப்பின் அதுநோன் றல்லும்*
*பிறர்கை யறவு தான்நா ணுதலும்*
*படைப்பழி தாரா மைந்தினன் ஆகலும்'*[69]

என்ற இப்பாடல் மூலம் அன்பு, அறிவு, ஆண்மை என்ற மூன்றிலும் சிறந்தோர் மேன்மை மிகுந்த சான்றோர்களாகக் கருதப்பட்டனர் என்பது புலப்படுகிறது. மேற்கூறியவற்றால் சங்ககாலச் சமுதாயத்தில் பெண்பாற் புலவர்களின் கற்புச் சிறப்பும், துறவு உள்ளமும், அன்பு, அறிவு, ஆண்மை முதலான பண்புகள் ஆண்மகனிடத்தில் சிறந்து நிற்றல் வேண்டும் என்று விரும்புகின்ற பெண்மை உள்ளமும் மேம்பட்டு இருந்தமை தெரியவருகிறது.

## வாழ்க்கை நிகழ்ச்சிகளில் மனிதநேயம்

### சமுதாயம் தழுவிய பண்பு

''பண்பெனப் படுவது பாடறிந்து ஒழுகல்''[70] என்று கலித் தொகை கூறுவது ஈண்டு கருதத்தக்கது. உலகியலில் நலம் பயக்கும் ஒழுகலாறுகளை உணர்ந்து ஒழுகுவதே பண்புடைமையாகும். அவற்றை உணர்ந்து ஒழுகும் நிலையே பண்பாட்டின் நிலையாகும். இத்தகைய பண்பாடு பழந்தமிழரிடையே சிறந்திருந்த நிலையினைச் சங்க இலக்கியங்களினின்று அறியலாம்.

பண்டைத் தமிழர்கள் சமுதாயத்தின் நல்வாழ்விலே பெருங்கவலை கொண்டவர்கள். நாடு வாழ்ந்தால் தான் நாம் வாழமுடியும் என்ற உண்மையை உணர்ந்தவர்கள். நாட்டு மக்கள் எல்லோரும் வறுமையின்றி வாழ வேண்டும் என்ற ஆவலும், முயற்சியும் உடையவர்கள் என்பதை, சங்கப் பாடல்கள் நமக்கு உணர்த்துகின்றன. சங்ககால மக்கள் அன்பிலும், பண்பிலும் சிறந்து, பொது மக்களின் நல்வாழ்வு ஒன்றையே சிறப்பாகக் கருதி, அல்லும், பகலும், முயன்றனர் என்பதை சங்க நூல்கள் விளக்குகின்றன.

பொது மக்களின் நல்வாழ்விற்கு அடிப்படையாகக் கொண்ட கொள்கைகளும், கருத்துகளும் இன்றைய சமுதாய நல்வாழ்விற்கும் அடிப்படையாக அமைந்து விளங்கக் காணலாம். நாட்டு மக்கள் பசியின்றியும், பிணி இல்லாமலும் வாழ வேண்டும் என்று பண்டைத் தமிழர் விரும்பினர். அக்கால மக்கள் விரும்பிய விருப்பம் இன்றைய விருப்பமாகவும் இருப்பதைக் காணலாம். சங்ககால மக்களின் தலையாய கொள்கைகளுள் இது முதன்மையானது.

நாட்டு மக்கள் பசியும், பிணியுமின்றி வாழவேண்டுமானால், நாட்டின் அரசு நன்னெறியில் திறமையுடன் நடைபெறுதல் வேண்டும். உள் நாட்டுக் குழப்பம்,

அயல் நாட்டவரின் படையெடுப்பு இவற்றிற்கு ஆளாகாமல் அமைதியை நிலை நாட்டும் திறன்மிக்க அரசாங்கம் தேவை என்பது பண்டைத் தமிழரின் கோட்பாடாகும். அடுத்து, நாட்டில் நல்லறம் தழைக்க வேண்டுமானால் தீமைகள், அறநெறிக்கு மாறான செயல்கள் நாட்டில் நிகழக்கூடாது என்பது அவர்களுடைய விருப்பம். இம்மூன்று கருத்துகளும் ஐங்குறுநூறில் வேட்கைப் பத்தில் ஐந்து, ஆறு, ஏழு பாடல்களில் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன.

*''பசி இல்லாகுக! பிணிசேண் நீங்குக'*[71]
*'வேந்து பகை தணிக! யாண்டுபல நந்துக'*[72]
*'அறம் நனி சிறக்க! அல்லது கெடுக'*[73]
*அரசு முறை செய்க! கனவு இல்லாகுக' '*[74]

என்றும், 'அம்மன்னன் எத்தகைய பகையுமின்றி வாழ்வதனால் நாடும், நாட்டு மக்களும் செழிப்புற்று நீண்ட நாள் பசியும், பிணியுமின்றி வளமாக வாழ்க'! என்று தலைவி விரும்புவதாகக் கூறப்படுகிறது. மேலும் ஒரு தாயோ 'அறங்கள் எல்லாம் சிறந்து வளர்க! அறமல்லாத தீயவைகள் எல்லாம் அடியோடு கெடுக' என்ற கருத்தில் அமைந்த இம்மூன்று கொள்கைகளும் மூன்று உண்மைகளாக அமைந்து அக்கால மக்களின் சமுதாயம் தழுவிய பண்பினை உணர்த்துகின்றது. எனவே நாட்டிலே அமைதியும், நோயின்மையும், பகையின்மையும், பசியின்மையும் ஆகியன நிலைக்க வேண்டும் என்பதில் மக்கள் கொண்டிருந்த மனிதாபிமான நாட்டமும், அக்காலப் பெண்ணின் தூய்மையான தன்னலமற்ற உள்ளம் எத்துணை விரிந்து பரந்தது என்பதும் புலப்படுகின்றது.

### விருந்தோம்பும் பண்பு

சங்க கால மகளிர் தங்கள் இல்லறக் கடமைகளுள் விருந்தோம்பலை இன்றியமையாத பண்பாக மேற்கொண்டனர் என்பதற்குச் சங்க இலக்கியங்களில் பல சான்றுகள் காணப்படுகின்றன. இல்லறம் நடத்துவோர் பெருஞ்செல்வராயினும், வறியவராயினும், தாம் ஈட்டும் பொருளை ஆறு கூறுகளாகப் பகுத்துப் பயன்படுத்துதல் அக்காலத்தே ஒரு பொதுக் கொள்கையாக இருந்து வந்தது. அவற்றுள் ஒரு கூறு மன்னனுக்குரிய இறைப்பொருளாகியது. மற்றவை தென்புலத்தார், தெய்வம், விருந்து, சுற்றத்தார், தான் என்னும் ஐந்து பகுதியினருக்கு உரியன. சாவா மருந்து எனினும் விருந்தினரை நீக்கித் தனித்து உண்ணாது வாழ்ந்தவர்கள் சங்ககால மக்கள்.

விருந்தோம்பும் பண்புடைய இல்லாள் ஒருத்தி, தன் வீட்டிற்கு விருந்தாக வரும் பாணர்களுக்கும், புலவர்களுக்கும், உணவு அளித்து, அவர்கள் உண்பதனால் உண்டாகும் ஆரவாரத்தில் மகிழந்து, மேலும், அவர்கள் விரும்பியவற்றை அளித்து உண்பித்தலில் தளராதவள் என்பதையும், அவள் கணவனும் அவனைப் போன்றே கை ஓயாமல் கொடுக்கும் பண்பு படைத்தவன் என்பதையும்

*''...... மனையோள்*
*பாணர் ஆர்த்தவும், பரிசிலர் ஓம்பவும்*
*ஊண்ஒலி அரவமொடு கைதூ வானே*
*உயர்மருப்பு யானைப் புகர்முகத்து அணிந்த*
*பொலம்.....*
*பரிசில் பரிசிலர்க்கு ஈய*
*உரவுவேற் காளையும் கைதூ வானே''*[75]

இப்பாடல் மூலம் காணமுடிகின்றது. சங்ககால மகளிரின் தலையாய மாண்பு விருந்தினரை ஏற்று உபசரித்தலே, என்பதைத் தொல்காப்பியமும்,

*''விருந்துபுறந் தருதலும் சுற்றம் ஓம்பலும்*
*பிறவும் அன்ன கிழவோள் மாண்புகள்''*[76]

எனக் கூறுகின்றது. சங்க காலத்து மறக்குடி மகள் ஒருத்தி தன் குடியின் முன்னோர் புகழ் நின்று நிலவுமாறு, போரிட்டு மாய்ந்து பின் நடுகல்லாகியதை அறிந்தாள். அந்நடுகல்லை நாள்தோறும் வழிபடுங்கால், 'நாள்தோறும் விருந்தினர் வரப் பெறுதல் வேண்டும். என கணவன் சிறந்த பகையைப் பெறுதல் வேண்டும் என்று கூறி வழிபட்டு வந்தாள் என்பதை,

*''ஒலிமென் கூந்தல் ஒண்ணுதல் அரிவை*
*நடுகல் கைதொழுத பரவும் ஒடியாது*
*விருந்தெதிர் பெறுகதில் யானே என்னையும்*
*ஓ.... வேந்தனொடு*
*நாடுதரு விழுப்பகை எய்துக எனவே''*[77]

புறப்பாடல் கூறுகின்றது. 'ஒரு நாளன்று, இரு நாளன்று. பல நாட்கள், தனித்துச் செல்லாமல் பலரோடு கூடிப் பலமுறை சென்றாலும், எம்மை முதல் நாளில் வரவேற்று

எமக்கு வேண்டுவன அளித்து விருந்தோம்பியது போலவே விருந்தோம்பும் பண்புடையவன்'[78] என்று அதியமான் போற்றப் பெறுகின்றான்.

சுவைச் சுவைக்கத் தெவிட்டாத மணம் வீசும் தாளிதம் செய்த இனிய அட்டில், அமிர்தத்தைத் தன் சுவையால் வென்ற உணவு. இத்தகைய உணவை வந்த விருந்தினர்க்குக் குற்றமற்ற இல்வாழ்க்கைப் பண்புடைய குடும்ப மகளிர் இடைவிடாது வழங்கி மகிழ்கிறார்கள் என்பதை,

> *"அமிழ்தட்டு ஆனாக் கமழ்குய் அடிசில்*
> *வருநர்க்கு வரையா வசையில் வாழ்க்கை*
> *மகளிர்'*[79]

புறநானூறு விருந்து போற்றும் மகளிரைப் போற்றுகின்றது.

இவ்வாறு சங்ககாலத்தில் முடிமன்னர், குறுநில மன்னர், பெருஞ்செல்வர் போன்றோர் வண்மையுடையோராய் விளங்கி தம்மை நாடி வந்த விருந்தினர்க்கு பரிசில் கொடுத்துப் போற்றும் செயலைத் தங்கள் பண்பாகக் கொண்டு விருந்தோம்பி மகிழ்ந்தனர் என்பது தெரிகிறது. சங்க காலத்து சிறந்து விளங்கிய விருந்தோம்பல் பண்பு இன்றைய சமுதாயத்திலும் நின்று விளங்குகின்றது.

## அருள், அறிவு, அறம்

அறிவின் பயன் அறத்தை ஓம்புதலும், பிறிதின் நோய் தன் நோய் போலப் போற்றுதலேயாகும். அறத்தொடு தொடர்புற்ற அறிவு அருளாய்க் கனிந்து பயன்தரும். கோவூர்கிழார் போன்ற சங்கச் சான்றோர் இத்தகைய அருட்பெருஞ் செல்வராய் வாழ்ந்தனர்.

> *"வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற் போகி*
> *நெடிய வென்னாது சுரம்பல கடந்து*
> *வடியா நாவின் வல்லாங்குப் பாடிப்*
> *பெற்றது மகிழ்ந்து சுற்றம் அருத்தி*
> *ஓம்பா துண்டு கூம்பாது வீசி*
> *வரிசைக்கு வருந்துமிப் பரிசில் வாழ்க்கை*
> *பிறர்க்குத் தீதறிந் தன்றோவின்றே, திறப்பட*
> *நண்ணார் நாண வண்ணாந் தேகி*

*ஆங்கினி தொழுகி னல்ல தோங்குபுகழ்*
*மண்ணாள் செல்வ மெய்திய*
*நும்மோ ரன்ன செம்மலு முடைத்தே'*[80]

என்ற இப்பாடற்கண் 'வடியா நாவின் வல்லாங்குப் பாடி' என்னும் தொடரால் புலவர்தம் அடக்கத்தையும், வரிசைக்கு வருந்தும் பரிசில் வாழ்க்கை என்பதாலும், 'நண்ணார் நாண அண்ணாந் தேகி ஆங்கினி தொழுகினல்லது' என்பதாலும், அவர்தம் புலமையின் சிறப்பையும் கூறுகின்றது. மேலும் 'பெற்றது மகிழ்ந்து' என்பதால் பொருளாசையற்ற நெறியும், சுற்றம் அருத்தி ஓம்பாது உண்டு கூம்பாது வீசி என்பதனால் தாம் அடிமையாகாத சிறப்பும் புலப்படுகின்றன.

இப்பகுதிகளால் துன்பங்களுக்கெல்லாம் காரணமான அவா என்னும் மனமாசு புலவரிடமில்லை என்பது தெரிகிறது. தம்மைப் போல பிறரையும் கருதுதலின் பொருளைப் பாதுகாவாமல் பிறர்க்கு வீசி வாழும் அருட்பண்பு புலவர்க்கு இயற்கை என்பதைக் கோவூர்கிழார் சுட்டியுள்ளார். அறம் நினைந்து நெடுங்கிள்ளியை நன்றின்பால் உய்க்கப் புகுந்த புலவர், தம்மொடு தொடர்பற்றாரிடத்தும் செலுத்திய அருள் உணர்வே இப்பாடல் தோன்றியதன் காரணமாகும். இதனை,

*"களிறுகண் டழூஉ மழாஅன் மறந்த*
*புன்றலைச் சிறாஅர் மன்றுமருண்டு நோக்கி*
*விருந்திற் புன்கணோ வுடையர்*
*கேட்டனை யாயின்நீ வேட்டது செய்ம்மே'*[81]

என்ற இப்பாடல் மூலம் இக்குழந்தைகளை நீ கொல்லின் நின் குடியின் அருட்பண்பு மாளும் என்பதைக் கூறாமல் கூறிய நுட்பமும், அதற்கேற்ப 'கேட்டனை யாயின் நீ வேட்டது செய்ம்மே' எனத் தம் முடிவுக்கே மன்னனை ஈர்க்காமல் ஈர்க்கும் பெருந்திறனும் உணரத்தக்கன.

அருள் நாட்டம் கிள்ளி வளவனுக்கு மட்டுமின்றி மலையமானுக்கும் இருந்தது என்பதை எடுத்துக் கூறுகின்றது இப்பாடல். இறுதிப் பகுதியிலே களங்கமற்ற குழந்தைகளின் நிலையைப் புலவர் கூறியுள்ளார். இப்பாடல் அறவழிப்பட்ட அறிவு அருளாய்க் கனிந்த நிலையினையே புலப்படுத்துகின்றது. மனத்துக்கண் மாசின்றித் தாம் முதற்கண் அமைந்து, பின்னர், பிறரையும் நன்னெறிக்கண் செலுத்தும் அறச் செல்வராய் வாழ்ந்தனர் பண்டைப் புலவர். அதனால் அருள் என்னும் அன்பு ஈன்

குழவிக்கும் உரியராய் வாழ்ந்தனர். இப்பெருமை சான்ற வாழ்வு நம்மனோர்க்கு வழிகாட்டுவதாகும்.

இளந்தத்தனார் என்ற புலவர்மாட்டு கோவூர்கிழார் காட்டிய பரிவு, அவர்தம் கண்ணோட்டப் பண்பினைத் தெளிவாக்க வல்லது. நெடுங்கிள்ளி புலவரை ஒற்றர் எனத் தவறாகக் கருதினான். நலங்கிள்ளி வாழ்ந்த ஊரிலிருந்து போந்தவர் அப்புலவர் என்ற ஒரே காரணத்தால் நெடுங்கிள்ளி புலவரைக் கொல்ல முடிவு செய்தான். கோவூர்கிழார் புலவர்க்குரிய பண்புகளை எடுத்துக்கூறி, தலைமைப் பண்பிலே மன்னரைப் போன்ற சிறப்பு அவர்களுக்கும் உண்டு. எவரிடமும் பணிந்து இரந்து வாழத் தேவையில்லை. இக்கருத்தைத் தெளிவாகக் கூறி இளந்தத்தனாரின் உயிரைக் கோவூர்கிழார் காப்பாற்றினார்.

மேற்கூறிய இப் பாடல்கள் சங்கப் புலவர்கள் மன்னர்களிடத்துச் சென்று அஞ்சாது அறிவுரை கூறும் மனத்திண்மையையும், புலவர்களுடைய இச் செயல்களுக்கெல்லாம் காரணம், மன்னரிடத்துக் கொண்ட மிகுதியான மனித நேய உணர்வுதான் என்பதையும் அறிவுறுத்துகின்றன.

### இரக்க உணர்வு

வல்லாண் முல்லை என்ற துறையிலமைந்த புறப்பாட்டில் காதலர்கள் இரக்க உணர்வுமிகுந்தவர்களாக இருத்தல் கூறப்படுகிறது. வேட்டுவன் ஒருவன் வீட்டு முன்றிலில் நன்றாக உறங்கி விடுகிறான். அங்கே பார்வை மானாகப் பெண் மான் கட்டப்பெற்றிருந்தது. அதன் அருகே ஆண்மான் ஒன்று வந்து விளையாடி மகிழ்ந்திருக்கிறது. அவற்றின் அருகே மான்தோலில் தினை உலர்த்தப்பட்டிருக்கிறது. அதைக் காட்டுக் கோழியும், காடையும் வந்து தின்கின்றன. அவற்றை ஓட்டக் கருதி அங்கே வந்த வேட்டுவன் மனைவி என்ன செய்வதென்று அறியாமல் திகைக்கிறாள். கணவனை எழுப்புவதானால் அவனுடைய உறக்கம் கெடுமே என்றும், மான்களின் இன்பம் கெடுமே என்று அஞ்சுகிறாள். இத்தகைய அன்புணர்வால் பறவைகள் தினை உண்பதைத் தடுக்க அவளால் முடியவில்லை.

> *"இன்புறு புணர்நிலைய கண்ட மனையோள்*
> *கணவன் எழுதலும் அஞ்சிக் கலையே*
> *பிணைவயின் தீர்தலும் அஞ்சி யாவதும்*
> *இல்வழங் காமையின் கல்லென ஒலித்து*

*மான்அதட் பெய்த உணங்குதினை வல்சி*
*கானக் கோழியொடு இதல்கவர்ந்து உண்டென'*[82]

என்ற பாடலால் தலைவியின் இரக்க உணர்வை அறியமுடிகிறது. தலைவனும் இரக்க உணர்வுடையவன் என்பதை அவன் தலைவியைக் காண விரைவில் ஊருக்குத் திரும்புகின்ற செயலாலும், அவ்வாறு திரும்பும் வழியில் ஏதேனும் இரு உயிர்கள் இணைந்திருந்தால் அவற்றின் இன்பத்தைக் குலைக்க அஞ்சுகின்ற கருணை உள்ளமும் வெளிப்படுகிறது.

### ஆய்ச்சியர் வாழ்வு

'முல்லை நிலத்துப் பெண்கள் வாழும் வாழ்க்கை எளிமையும், அமைதியும் நிறைந்தது என்பதைத் தமிழ் இலக்கியம் காட்டுகிறது. வீட்டைச் சுற்றி முள்வேலி இடப்பட்டிருக்கிறது. அதன் அருகே எரு மிகுதியாகக் கிடக்கிறது. இத்தகைய வீட்டில் விடியற்காலையில் ஆய்ச்சி எழுந்து தயிர் கடைய, அவ்வொலியானது புலியின் முழக்கம் போல் கேட்கிறது. தயிரில் வெண்ணெய் நுரைகளை எல்லாம் தனியே எடுத்துச் சேர்க்கிறாள். பிறகு தயிர்க்குடத்தை சுமட்டின் மேல் வைத்துக்கொண்டு, காலையில் மோரை விற்றுப் பெறும் பண்டங்களைக் கொண்டு வந்து, தன் சுற்றத்தார் அனைவருக்கும் உணவு அளிக்கிறாள். சேர்த்த வெண்ணெயை நெய்யாக்கி, அதற்கு விலையாகக் கட்டிப் பசும்பொன் கொடுத்தாலும் வேண்டாம் என்று மறுத்து, அதற்கு விலையாக எருமையும், பசுவும் கொடுத்தால் பெற்றுக்கொள்வதாக பெரும்பாணாற்றுப்படை'[83] கூறுகிறது.

கட்டிப் பசும்பொன் கொடுத்தாலும் வேண்டா என்று மறுத்து வாழ்க்கைக்கு உதவியானவற்றைக் கொடுக்க வல்லவர்க்கு, நெய் கொடுத்து மகிழும் ஆய்ச்சியின் மனப்பான்மை ஆராயத்தக்கது. இயற்கையோடு இயைந்த வாழ்க்கையாகையால், வாழ்க்கைக்கு நேரே பயன்படாத பசும்பொன்னை அவள் பொருட்படுத்தாமல் விடுகிறாள். ஆனால் மருதநிலத்தார் கொடுக்கும் உணவுப் பொருளுக்கு மோர்விற்கும் அவள், அவர்கள் பசுவும், எருமையும் தந்தால் நெய் தருகிறாள். இதிலிருந்து செல்வத்தைப் பொருட்படுத்தாத எளிமையும் அந்நிலையிலேயே உணவுக்கும், தொழிலுக்கும் உதவியானவற்றைப் பொருளென மதிக்கும் அமைதியான பண்பும் அவளுக்கு இயல்பாக அமைந்திருப்பதைக் காணலாம்.

**மானப் பண்பு**

பண்டைத் தமிழரிடம் சிறந்து நின்ற பண்புகளில் மானம் போற்றும் பண்பு தலைமையிடம் வகிக்கிறது. வாழ்வில் எத்துறையை மேற்கொள்ளினும் அத்துறையில் தமக்கு மானம் அழிய வருமாயின் உயிர்விடுத்து மானம் காக்க முனைந்தனர். இதனை,

*''மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்*
*உயிர் நீப்பர் மானம் வரின்'*[84]

என்ற குறட்பா உணர்த்துகின்றது. சேரமான் கணைக்கால் இரும்பொறை என்னும் சேர வேந்தன் ஒருகால், சோழன் செங்கணானோடு பொருது சிறைப்பட்டான். சிறையில் இருந்தபோது சிறைக் காவலரிடம் நீர் வேண்டிப் பெற்றான். பெற்ற நீரை மாற்றான் சிறையில், மானமழியக் கேட்டுப் பெற்ற நீரை அருந்துவதைத் தடுத்தது, அவனுடைய மான உணர்ச்சி. அந்நிலையில் தன் கருத்தினைக் கூறி நீரை அருந்தாமல் உயிர்விடுத்து நீள்புகழ் எய்தினான். இதனை,

*''குழவி யிறப்பினும். ... இவ்வுலகத் தானே'*[85]

என்ற இப்பாடல் மூலம் தமிழ் மக்களின் மான உணர்வினை உணர்த்தும் ஒளி விளக்காய்த் திகழ்கின்றது என்பதையும், தமிழ் மக்கள் மானம் காத்தலைப் பெரிதும் போற்றினர் என்பதையும் அறிய முடிகிறது.

மற்றொரு பாடலில் சேரமன்னன் நேர்நின்று போர்செய்து சோழன் எறிந்த வேலை மார்பிலே தாங்கினும் அது ஊடுருவிச் சென்று முதுகிலே புண்ணை ஏற்படுத்தியதனால், மானம் மிக்க சேரலாதன் அதுவும் புறப்புண்ணுக்கு ஒப்பாகும் என்று கருதி, உயிர் வாழ விரும்பாமல் வடக்கிருந்து உயிர் நீத்தான். இத்தகைய மானமுடைய பெருவேந்தன் இன்மையால் ஞாயிற்றையுடைய பகல் இனித் தமக்கு முன்பு போல ஆகாது என்று கழாஅத்தலையார் பாடுகின்றார்.

*''புறப்புண் நாணி மறத்தகை மன்னன்*
*வாள்வடக் கிருந்தன னீங்கு*
*நாள்போற் கழியல ஞாயிற்றுப் பகலே'*[86]

என்ற அடிகளால் புறப்புண்ணுக்கு நாணி உயிர்நீத்த சேரலாதனின் மானம் மிக்க பெருந்தன்மையைப் புலவர் பாராட்டுகின்றார். இதிலிருந்து உயிரினும் மானம் போற்றிய பெருமை நன்கு புலனாகிறது.

பெருந்தலைச் சாத்தனார் என்ற புலவர் கடிய நெடுவேட்டுவனிடம் பரிசில் பெறுதவற்காகச் சென்றபோது அவன் பரிசில் தரக் காலம் நீட்டித்ததைப் பொறுக்கலாற்றாது கூறும் மொழிகள் அவர்தம் மான உணர்ச்சியைப் புலப்படுத்தும்.

*''முற்றிய திருவின் மூவ ராயினும்*
*பெட்பின்றி ஈதல் யாம்வேண் டலமே'*[87]

தாம் பரிசில் பெறாமல் போவதால் கடிய நெடுவேட்டுவனுக்கு எத்தகைய தீமையும் நேரக்கூடாது என்ற நல்லுள்ளத்தோடு 'நீ நோயின்றி இருப்பாயாக' என்று புலவர் வாழ்த்திச் செல்கிறார்.

மதுரைக் குமரனார் சோழன் குராப்பள்ளித் துஞ்சிய பெருந்திருமாவளவனிடம் சென்றபோது அவன் அவருக்குப் பரிசில் தருவதில் காலம் தாழ்த்தியதால் புலவர் மான உணர்வு மேலிட்டு, 'யாம் மிகப் பெரிய துன்பமுற்றாலும் சிறிதும் அறிவில்லாதவருடைய செல்வம் பயன்படாமையின் அதனை நினைக்க மாட்டோம்' என்றும், நல்லறிவு வாய்ந்தோரது வறுமை பயன்படுதலின் அதனை யாம் மகிழ்ச்சியோடு மிகப் பெரியதாக நினைப்போம்' என்றும் உரைக்கின்றார் என்பதனை,

*''மிகப்பே ரெவ்வ முறினும் எனைத்தும்*
*உணர்ச்சி யில்லோர் உடைமை உள்ளேம்*
*நல்லறி வுடையோர் நல்குர*
*வுள்ளுதும் பெருமயாம் உவந்துநனி பெரிதே'*[88]

இப்பாடல் மூலம் அறியமுடிகிறது. இதிலிருந்து சங்ககாலப் புலவர்கள் வறுமையால் துன்பமுறினும், விருப்பமின்றியோ, காலம் தாழ்த்தியோ கொடுக்கும் பொருளை ஏற்பது தம் மானத்திற்கு இழுக்கு எனக் கருதி அதை ஏற்க மாட்டார்கள் என்பதையும், சங்கத்தமிழர் மானத்தைத் தம் உயிரினும் மேலாகக் கருதும் உயரிய மனித நேய உணர்வையும் அறிந்து கொள்ள முடிகிறது.

### சங்க காலக் கல்வி

சங்க காலத்தில் கல்விக்குச் சிறப்பிடம் அளிக்கப் பெற்றது. சங்க இலக்கியங்கள் பழங்காலச் சமுதாயத்தை மீட்டுருவாக்கிக் காட்டும் கலைப் பேழையாக விளங்குவதோடு கல்வி பற்றிய உண்மைகளை உணர்த்தும் கருவூலமாகவும் திகழ்கின்றன. நூல்களை நேராகத் தாமே பயில்வதை விட, 'கற்றலின் கேட்டலே

நன்று' என்பதை உணர்ந்து பிறர் கூறக் கேட்டுத்தம் நுண்ணறிவினை பெருக்கிக் கொள்வதைத் தான் சிறந்த முறையாகக் கொண்டனர் பழந்தமிழர் என்பதற்கு,

*''சில்செவித் தாகிய கேள்வி''*[89]

*''ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி''*[90]

*''சிலசொல்லால் பலகேள்வியர்''*[91]

*''பலகேள்வித் துறைபோகிய*
*தொல்லாணை நல்லாசிரியர்''*[92]

போன்ற வரிகளை ஆழ்ந்து பயிலும்போது பிறர் கூறக்கேட்டு அறிவினைப் பெருக்கிக் கொள்ளும் முறை பரவலாக இருந்தது என்பது தெரிகிறது. தொல்காப்பியர்,

*''கல்வி தறுகண் இசைமை கொடைஎனச்*
*சொல்லப்பட்ட பெருமிதம் நான்கே''*[93]

என்று கல்வியை முன்னர் வைத்தார். இத்தகைய பெருமிதத்தைத் தற்காலத்தில் கற்ற பலரிடம் காண இயலவில்லை. அதற்குச் காரணம் வயிறு வளர்ப்பதற்குரிய கல்வியில் மட்டும் நாட்டம் செலுத்துவது தான். கல்வியிற் பெரியோர் மக்களாலும், மன்னர்களாலும் பெரிதும் மதிக்கப்பட்டனர். 'இளமையில் கல்' [94] 'இளமையில் கல்வி சிலைமேல் எழுத்து' என்பன தமிழர்தம் கோட்பாடுகளாகும். எந்த அளவிற்குச் சிறப்புடையவர்களானாலும் மதிப்பிற்கும், மரியாதைக்கும், பெருமிதத்திற்கும் குறைவு நேர்ந்தால் தங்கள் கல்விச் செருக்கால் மற்றவர்களைப் பொருட்படுத்தாத மனப்போக்கினைப் பெரியவர்கள் பெற்றிருந்தனர். இதனை,

*''எத்திசைச் செலினும் அத்திசைச் சோறே''*[95]

*''பெரிதே உலகம் பேணுநர் பலரே''*[96]

என்று ஔவையார், பெருஞ்சித்திரனார் முறையே அதியமானையும், இளவெளி மானையும் நோக்கிக் கூறியமை கற்றவர்களின் மதிப்புப் புலனாகின்றது.

*''ஆன்றவிந் தடங்கிய கொள்கைச்*
*சான்றோர் பலர்யான் வாழுமூரே''*[97]

என்ற வரிகளில் பொதிந்து கிடக்கும் கருத்தாழம் உற்றுநோக்கற்குரியது. வெறும் செய்திகளின் தொகுப்பு கல்வியாகாது. உண்மைகளை ஆராய்ந்து அழகு, இளமை, செல்வம் ஆகியவற்றைப் பொது நலனுக்காகச் செலவிட்டு குறிக்கோள் வாழ்க்கை

வாழ்பவர்கள் பலர் இருப்பதால் தான் நரை, திரை, மூப்பு ஆகியன தோன்றற்கு இடமில்லை என்கிறார் புலவர். அத்தகையோரைச் சமுதாயம் குறைவாகவே மதித்திருக்கிறது என்று கருத இடமுண்டு.

சங்க காலக் கல்வி முறை, இக்காலக் கல்வி முறையினின்றும் மாறுபட்டது. கல்வி நிலையங்கள் எவ்வெவ் ஊர்களில் இருந்தன என்ற குறிப்புகள் இல்லாது போனாலும், மாணவ, ஆசிரியர் நேரடித் தொடர்பு இருந்தது என்பதும், முழுநேர அமைப்பினைப் பெற்றிருந்தது என்பதும் அறியக் கிடக்கின்றது. கற்க வேண்டிய முறைபற்றி நம் நல்லூழின் காரணமாக ஒரு பாடல் இடம் பெற்றுள்ளது.

*''உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்*
*பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே'*[98]

இவ்வரிகளிலிருந்து, ஆசிரியருக்கு உற்றுழி உதவியும், உறுபொருள் கொடுத்தும் கல்வி கற்றனர் என்றும், தந்தை-மகன் உறவு ஆசிரிய-மாணவரிடையே இருந்தது என்றும் தெரிய வருகிறது. ஆட்சிப் பொறுப்பினை ஏற்று நடத்தும் அரசர் குடியில் பிறந்தாலும் வழிபாட்டு முறையிலிருந்து மாறுபடாமல் கற்க வேண்டும் என்ற குறிப்பினையும் இப்பாடல் மூலம் அறிந்து கொள்ள முடிகிறது.

*''வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்*
*கீழ்ப்பால் ஒருவன் கற்பின்*
*மேற்பால் ஒருவனும் அவன்கட் படுமே'*[99]

சமுதாயத்தில் உள்ள குறைகளை நீக்கக் கல்விதான் உறுதுணை புரிய வேண்டும் என்ற கண்ணோட்டத்தில் நோக்கினால் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன், 'தமிழகத்தின் முதல் கல்விச் சமூகவியல் வல்லுநர்' என்று கூறலாம் என்பதை இப்பாடல் உணர்த்துகிறது. ஆயின் கல்வி பொதுவுடைமையாக்கப்பட்ட ஒன்று என்று கூற இயலாது. அவரவர் தம் தொழிலுக்குத் தேவையான கல்வியினைத் தான் பெற்றிருந்தனர் என்று கருதத் தோன்றுகின்றது. இதனை,

*''கல்லா இளையர் சொல்லிக் காட்ட''*[100]
*''கல்லா இளைஞர் கவளம் கைப்ப''*[101]
*''கல்லா மாந்தர்''*[102]
*''கல்லா ஒருவற்கும்'*[103]

போன்ற அரிய தொடர்களை நோக்கும் போது 'கல்லா' என்ற சொல்லிற்குத் தம்முடைய தொழிலுக்குரிய கல்வியினைத் தவிர, வேறு ஒன்றனையும் கல்லாத என்ற பொருளையும் உரையாசிரியர்கள் நல்குவதால் தொழிலின் அடிப்படையில் தான் சங்க காலக் கல்வி முறை இருந்தது என்று நினைக்கத் தோன்றுகிறது.

*"சிறப்பில் சிதடும் உறுப்பில் பிண்டமும்*
*கூனும் குறளும் ஊமும் செவிடும்*
*மாவும் மருளும் உளப்பட வாழ்நர்க்கு*
*எண்பே ரெச்சம் என்றிவை எல்லாம்*
*பேதைமை அல்லது ஊதியம் இல்லென*
*முன்னும் அறிந்தோர் கூறினர்"*[104]

என்ற பாடற்பகுதி கல்வியறிவு பெறமுடியாத மக்களின் பட்டியலைத் தருகின்றது. இத்தகையோரை இன்றைய கல்வியாளர்கள் மெதுவாகக் கற்போர் என்ற வகையில் சேர்க்கின்றனர். அக்காலத்தில் வாய்ப்பும், சூழலும் குறைவாக இருந்தமையால் மேற்குறித்தவர்களைத் தகுதியவற்றவர் எனக் கருதினர். உலகின் பல்வேறு பகுதிகளில் அக்காலத்திலிருந்த மூட நம்பிக்கைகளை ஒப்புநோக்க இத்தகைய கருத்து ஒன்றும் நகைத்தற்குரியதன்று

*"மண்ணாள் செல்வ மெய்திய*
*நும்மோ ரன்ன செம்மலும் உடைத்தே"*[105]

என்று கோவூர்கிழார் நெடுங்கிள்ளியை நோக்கிப் பாடினார். இத்தகைய அஞ்சாமையை அக்காலக் கல்வி நல்கியது. அத்தகு அஞ்சாமை இன்று, தன்னலப் பேருருவம் கொண்டமையால் கற்ற பேரறிஞர்களிடம் விடை பெற்றுக் கொள்கிறது. இவ்வஞ்சாமை குன்றியமைக்குக் காரணம் பிறமொழி மோகமும், தாழ்வு மனப்பான்மையும் ஆகும்.

சங்க காலத்தில் வாழ்நாள் முழுமையும் தமிழையும், அதிலுள்ள இலக்கண, இலக்கியங்களையும் கற்றுத் தேர்ச்சி பெறவேண்டும் என்ற ஆர்வம் பெரியோரிடம் இருந்தது. எத்தகைய சிறப்புச் செய்த போதும் தம்மை வியவாமலிருத்தலை மேற்கொண்டிருந்தனர். மோசிகீரனார் அரசு கட்டிலில் உறங்கியமையைக் குற்றமாகக் கருதாமல் பெருஞ்சேரல் இரும்பொறை சாமரை வீசினார். இதனை,

*"அறியா தேறிய என்னைத் தெறுவர*
*இருபாற் படுக்குநின் வாள்வா யொழித்ததை*
*அதூஉஞ் சாலுநற் றமிழ்முழு தறிதல்"*[106]

என்றார் மோசிகீரனார். 'அறியா தேறிய என்னை' என்ற வரியின் பொருளை உணரலாமேயன்றி உணர்த்த முடியாது. பெருமை தமிழுக்கே என்றார். இத்தகைய மனநிலையை ஒவ்வொருவரும் பெற வேண்டும் என்பதைக் குறிப்பாக உணர்த்துகிறது. அண்டர்மகன் குறுவழுதி என்பார் கல்வியினை,

*"வல்லாண் சிறாஅன்"*[107]

என்று குறிப்பிட்டு 'அறிவே ஆற்றல்' என்ற கருத்தில் தான் அப்பெருமகனார் அப்படிப் பாடியிருக்கின்றார். சங்ககால மன்னரும்,

*"அறிவுடையோன் ஆறு அரசும் செல்லும்"*[108]

என்ற முறைப்படி கல்வி கேள்விகளில் அறிவுடைய மக்களையே மதித்தனர். அக்காலத்தில் சமுதாய மக்கள் அனைவரும் கல்வி கற்றிருந்தனர். பெண்டிர் இசைப்புலமை உடையவராய் விளங்கினர். ஒளவையார் அரசர்களுக்கு அறிவுரை கூறித் திருத்தும் ஆற்றல் பெற்று விளங்கியது, அனைவரும் அறிவர்.

ஒளவையார், அதியமானிடமிருந்து தொண்டைமானிடம் தூது சென்றதை நோக்க அக்காலப் பெண் கல்வியின் திறத்தைக் காணலாம். அரசர் இருவரும் போரிட்ட போர்க்களத்தில் ஒளவையார் இருந்து தம் அரசனை ஊக்கப்படுத்தினார் என்பதிலிருந்து படித்த பெண்கள் அரசனால் மதிக்கப்பட்ட உயர்வை நன்கறியலாம். முடிமன்னரும், சிற்றரசரும், பெரு வள்ளல்களும் இயற்றமிழில் வல்ல புலவரையும் இசைத் தமிழில் வல்ல பாணரையும், நாடகத்தில் வல்ல கூத்தரையும் நன்முறையில் ஆதரித்து முத்தமிழைப் பேணி வந்தனர் என்பது தெரிகிறது. இங்ஙனம் பலதுறை ஆடவரும் கல்வி கற்றுச் சிறந்திருந்தனர் என்பதைச் சங்க நூல்களால் அறிகிறோம்.

'நெற்றிக்கண் காட்டினும் குற்றம் குற்றமே' என்பதை அறியாதவர் எவரும் இருக்கமாட்டார். இவ்வாறு நம்மையெல்லாம் பெருமை கொள்ளச் செய்த நக்கீரர் கல்வியிற் பெரியவராகப் புகழ்பெற்று விளங்கினார். எண்ணற்ற புலவர்கள் பல்வேறு அடைமொழிகள் கொடுக்கப்பட்டு சிறப்பிக்கப்படுகின்றனர். ஆயின் அடைநெடுங்கல்வியார் என்ற புலவர் கற்ற கல்வியினால் சிறப்புப் பெற்ற புலவராகத்

திகழ்கின்றார். தற்காலத்தில் டாக்டர் பட்டம் பெறுகின்ற பெருமக்களைப் பேரறிஞர்கள் என்று போற்றுகிறோம். இத்தகையோரைத் தமிழில் அக்காலத்தில் 'அடை நெடுங்கல்வியார்' என்று சிறப்புப்பட்டம் நல்கிப் பெருமைப்படுத்தி இருந்தனர் என்பது தெரிகிறது.

'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற விழுமிய தத்துவத்தை நல்கியது சங்ககாலக் கல்வி. எதிலும் நாட்டமில்லாமல் இயந்திரமாக மாற்றுகின்றது இக்காலக் கல்வி. சமுதாயத்திற்கும், வாழ்க்கைக்கும் ஏற்ற கல்வியாக இருந்தது அக்காலக் கல்வி. அதிலுள்ள சீரிய கருத்துகளை எடுத்துக் கொண்டு புதியதோர் உலகம் படைத்து மகிழலாம். இவ்வாறு சங்க கால மக்கள் தங்களுடைய வாழ்க்கை நிகழ்ச்சிகளில் கல்வியின் மூலம் மேம்பட்ட மனித நேயத்தை உணர்ந்து வாழ்ந்தனர் என்பதை அறிய முடிகிறது.

### நிலையாமைப் பொருளில் மனிதநேயம்

இவ்வுலகில் பிறந்த மக்கள் முடிவில் இறப்பது உறுதி. இந்நிலவுலக வாழ்க்கை நிலைத்து நிற்பதன்று. அவர்கள் இல்வாழ்க்கையில் ஈட்டும் பொருளும், அவர்கள் இளமையும், துய்க்கும் இன்பமும் நிலையற்றவை என்பதில் சிறிதும் ஐயமில்லை. தொல்காப்பியர் நிலையாமையைக் 'காஞ்சி' என்ற சொல்லால் குறிப்பிடுகின்றார். இதனை,

> *''பாங்கரும் சிறப்பின் பல்லாற் றானும்*
> *நில்லா உலகம் புல்லிய நெறித்தே''*[109]

என்ற நூற்பாவால் காஞ்சித் திணையை அவர் விளக்குகிறார். நிலையாமையாகிய இவ்வுண்மையை உணர்ந்து, மக்கள் பிறர் நலம் பேணி நல்லறங்களைச் செய்வாராயின் அவர்கள் புகழ் பெறுவர். அவர்கள் பெற்ற இப்புகழ், மறைந்த பின்பும் இந்நிலவுலகில் நிலைத்து நிற்கும். இவ்வுண்மையை,

> *''மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர்*
> *தம்புகழ் நிறீஇத் தாமாய்ந் தனரே''*[110]

இப்பாடல் உணர்த்துகிறது. உண்மையில் நிலையாமை உணர்வு மக்கள் உள்ளத்தில் நிலைபெறுமானால் அவ்வுணர்வு அவர்களை நல்லனவே செய்யத் தூண்டும் என்பது உறுதி.

சோழன் நலங்கிள்ளியை உறையூர் முதுகண்ணன் சாத்தனார் பாடும் புறப்பாடலில் நிலவினைச் சான்றாகக் காட்டி நிலையாமையை உணர்த்துகின்றார். ''வளர்ந்த ஒன்று பின் குறைதலும், குறைந்த ஒன்று பின் வளர்தலும், பிறந்த ஒன்று பின் இறத்தலும், இறந்த ஒன்று பின் பிறத்தலும் ஆகிய இவ்வுண்மைகளைக் கல்வி அறிவில்லாதவரையும் அறியுமாறு செய்து நிலவாகிய தெய்வம் இயங்குகிறது''[111] மற்றோரிடத்தில் இவ்வுலக நிலையாமையைப் பொருத்தமான உவமை வாயிலாக உணர்த்துகிறார். இதனை,

*''ஊழிற் றாகநின் செய்கை விழவிற்*
*கோடியர் நீர்மைபோல முறைமுறை*
*ஆடுநர் கழியுமிவ் வுலகத்து''*[112]

என்ற வரிகள் நிலையாமைத் தன்மையை உணர்த்துகின்றன. கூத்தரின் கோலம் தோன்றி இயங்கி மறைவது போல, உலக வாழ்க்கையும் தோன்றி மறையும் தன்மையுடையது என்பதைத் தெளிவுபடுத்துகிறது. பக்குடுக்கை நன்கணியார், இவ்வுலக நிலையாமையை எடுத்துரைக்கும் பாங்கு குறிப்பிடத்தக்கது.

*''ஓரில் நெய்தல் கறங்க ஓரில்*
*ஈர்ந்தண் முழவின் பாணி ததும்பப்*
*புணர்ந்தோர் பூவணி யணியப் பிரிந்தோர்*
*பைதல் உண்கண் பனிவார் புறைப்பப்*
*படைத்தோன் மன்றவப் பண்பி லாளன்*
*இன்னா தம்மஇவ் வுலகம்*
*இனிய காண்கிதன் இயல்புணர்ந் தோரே''*[113]

என்ற இப்பாடலில், இனிய இன்பத்திலும், கொடிய துன்பமே இவ்வுலகில் மிகுதியாக உள்ளது. இன்பம் நிலையாதது என்பதை உணர்ந்து துன்பங்களை இனியனவாகக் கொண்டு அமைதி பெறுதலே அறிவுடைமை என்ற உலக நிலையாமையை உணர்ந்து நன்மை புரிய வேண்டும் என்பதை உணர்த்துகிறார்.

தாயங்கண்ணனார் என்னும் புலவர் ஒரு நாட்டின் காட்சியின் மூலம் நிலையாமை உணர்வை மேலோங்கச் செய்வதைக் காணலாம். ''வளர்ந்த கள்ளிச் செடிகளையும், பகலிலே கூவும் ஆந்தைகளையும், பிணம் எரிக்கும் தீயொளியில் தோன்றும் பேய்களையும் உடைய சுடுகாடு அச்சம் தருவதாகும். அச்சுடுகாட்டில் காதலையுடைய

மகளிர் அழுத கண்ணீர், பிணம் எரிந்து எலும்புடன் கூடிய வெப்பம் மிக்க சாம்பலை அவிக்கும். எல்லோருடைய இறுதிக் காலத்தைக் காணும் அச்சுடுகாடு மக்கட்கெல்லாம் இருப்பிடமாகித் தன் இறுதிக் காலத்தைப் பிறர் காண்பதை அறியாததாகும்''.[114] பிறந்த மக்கள் எல்லாம் முடிவில் இறந்து நெருப்புக்கு இரையாகுமிடம் சுடுகாடு என்றும், நம் எல்லோரது இறுதிக்கும் இடமாகிய, அது இறுதி இல்லாதது என்றும் இப்புலவர் நிலையாமையின் உண்மையைத் திறம்பட உறுதிப்படுத்துகிறார்.

சேர, சோழ, பாண்டிய நாடுகள் பொதுவானவை என்று போற்றாமல் அவை தமக்கே உரியவை எனக் கொண்டு ஆண்ட மூவேந்தர்களின் வாழ்நாட்களும் அழிந்தன. தமக்குத் துணையாகும் எனக் கருதி சேமித்து வைத்த பொற்குவியலும் அவர்களுக்குத் துணையாகாமல் அழியும் தன்மைத்தாகும் என்று பிரமனார் என்ற புலவர் நிலையாமையைக் குறிப்பிடுகிறார்.

*''பொதுமை சுட்டிய மூவர் உலகமும்*
*பொதுமை யின்றி ஆண்டிசி னோர்க்கும்*
*ஆண்ட வன்றே ஆண்டுகள் துணையே*
*வைத்த தன்றே வெறுக்கை''*[115]

மூவுலகையும் தன்னடிப்படுத்தி வீரச் சிறப்புடன் ஆண்ட மூவேந்தர்களும் அழிந்தனர். அவர்களின் பெரும்பொருளும் அழிவினையுடையது என்பது இப்பாடலின் வாயிலாக நிலையாமை வற்புறுத்தப்டுவதை உணரலாம்.

பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதியைப் புகழ்கின்ற போது, ஈசலின் வாழ்க்கையினை இவ்வுலகிற்கு எடுத்துக் காட்டுகின்றார். வழுதியின் அருளை இழந்த பகையரசர்கள், நுண்ணிய பல கறையான்கள் ஒருங்கிணைந்து அரிதாக உழைத்து உருவாக்கிய செம்புற்றினின்று புறப்பட்ட ஈசலைப்போல, ஒரு பகற் பொழுதின் கண்ணே தவறாது அழிந்து படுவர் என்பதை,

*''நுண்பல சிதலை யரிதுமுயன் றெடுத்த*
*செம்புற் றீயல் போல*
*ஒருபகல் வாழ்க்கைக் குலமரு வோரே''*[116]

இப்பாடலில் நிலையாமையை எடுத்துரைக்கின்றார். இவ்வாறு சங்கப் பாடல்கள் நிலையாமை உணர்வை மக்களுக்கு ஊட்டி நல்லன செய்தற்குரிய மனிதநேயப்

பண்பாட்டின் வளர்ச்சிக்கு ஊக்கமளிப்பனவாய் உள்ளன.

**ஊழ்வினையில் மனிதநேயம்**

சங்க இலக்கியத்தில் ஊழ்வினை பற்றிச் சில பாடல்கள் எடுத்தியம்புகின்றன.

*"நீர்வழிப் படூஉம் புனைபோல் ஆருயிர்*
*முறைவழிப் படூஉம் என்பது"*[117]

நீரின் வழியே போகும் தெப்பம் போல, அரிய உயிர் ஊழின் வழியே செல்லும் என்ற பொருளமைந்த இப்பாடலில் 'முறை' என்ற சொல் ஊழ்வினையைக் குறிப்பதாகும்.

*"உருகெழு தாயம் ஊழின் எய்தி"*[118]

என்ற வரியும் இப்பொருள்பட அமைந்திருப்பதைக் காணலாம்.

*"தீதும் நன்றும் பிறர்தர வாரா*
*நோதலுந் தணிதலும் அவற்றோ ரன்ன"*[119]

என்று இவ்வாறு ஊழ்வினையைச் சுட்டிக்காட்டி வன்முறை, பகைமை, பொறாமை போன்ற உணர்வுகளை அகற்றி, பிறர்க்கு நன்மை செய்யத் தூண்டும் ஒரு அரிய மனித நேயப் பண்பாட்டைச் சமுதாயத்திற்கு உணர்த்தும் வகையில் இப்பாடல்கள் எடுத்துரைக்கின்றன.

**பொதுவாழ்வில் மனிதநேயம்**

சங்கப் புலவர்கள், மன்னர்களின் பொதுவாழ்வில் ஒன்றாகக் கருதும் கொடை மாண்பைப் பற்றிக் கூறத் தவறவில்லை. சங்க காலத்தில் கொடைப்பண்பில் சிறந்து விளங்குவது தலை சிறந்த பண்பாடாகப் போற்றப்பட்டது.

*"வறியார்க்கு ஒன்று ஈவதே ஈகை"*[120]

என்ற குறட் கருத்துப்படி ஈகை என்பது பொருள் இல்லாதவர்க்குப் பொருள் கொடுத்து உதவுவதாகும். அறங்கள் பலவற்றுள் ஈகையாகிய அறம் தலை சிறந்தது எனலாம். இத்தகைய அறம் செய்வோர் உலகில் பெரும்புகழ் எய்துவர். ஈதலால் வரும் புகழே சிறந்தது என்பதை,

*''ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது*
*ஊதியம் இல்லை உயிர்க்கு''*[121]

இக்குறள் உணர்த்துகிறது. சங்ககாலத்தில் வறுமையுற்றோர்க்கு ஓயாது பொருளை வழங்கி அவர்களை வாழவைத்த வள்ளல்களையே புலவர்கள் சிறப்பித்துப் பாடினர். புலவர்களால் பாடப்பெறும் இச்சிறப்பினைப் பெறுவோரே பாகனால் செலுத்தப்பெறாத வானவூர்த்தியை எய்தி விண்ணுலக இன்பத்தைப் பெறுவர் என்பதை,

*''புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்*
*வலவன் ஏவா வானவூர்தி*
*எய்துப வென்பதஞ் செய்வினை முடித்தென''*[122]

இப்பாடல் மூலம் உணர முடிகிறது. பல மன்னர்களும், குறுநில மன்னர்களாகிய கடையெழு வள்ளல்களும், தலைவர்களும், புலவர், பாணர், பொருநர், விறலியர் போன்றோர்க்குப் பரிசில் நல்கி அவர்களுடைய வறுமையைப் போக்கிய கொடைப் பண்பினைச் சங்கப் பாடல்களின் வழி அறியலாம்.

பாரி

வேள்பாரி மன்னர்க்குரிய அஞ்சாமை, ஈகை,அறிவு, ஊக்கம் ஆகிய பண்புகளில் சிறந்து விளங்கினான். ஆயினும் இவனிடத்தில் முதன்மை பெற்று விளங்கிய பண்பு கொடை நலம் பேணும் ஈகைப் பண்பாகும். பறம்பு மன்னன், பாரி, கருணையிலா ஆட்சி கடிது அழியும் என்பதையும், குடியுயரக் கோன் உயரும் என்பதையும் கருத்தில் கொண்டவன். அதனால் அவன் தன் நாட்டு மக்களிடம் அன்பும், அருளும் கொண்டு ஆட்சிபுரிந்து வந்தான். குடிநலமும், கொடை நலமும் ஒருங்கே காத்த பறம்பு மன்னன் பாரி கருணையாட்சி புரிந்தமையால் அவன் நாட்டுக் குடிமக்கள் அவனைப் போற்றி மகிழ்ந்தனர்.

பாரி தன்னை நாடி வந்தவர்களுக்கு இல்லை என்று கூறாமல் அவர்கள் வேண்டியவற்றை அளிக்கும் கொடையாளனாக விளங்கினான். 'இவன் கொடை வழங்கும் போது, தன்னை நாடி வந்தவர்க்கு ஒரு சமயம் தன் நாட்டைச் சேர்ந்த 300 ஊர்களையும் பரிசிலாக அளித்து மகிழ்ந்தான்'[123]

மற்றொரு பாடலில் பாரியின் கொடைத்தன்மையை, ''புல்லிய எருக்கம் பூவாயினும் தெய்வங்கள் அதை விரும்புவது போல, அறிவில்லாதவரும், புல்லிய

குணங்கள் உடையவரும் தன்னிடம் வரின் பாரி அவர்களுக்கு விருப்பத்தோடு பொருள் வழங்கி மகிழ்விப்பான்''[124] என்று கபிலர் புகழ்கின்றார். வந்த பரிசிலர் தரம் பார்க்காது தன்னை நாடி வந்தவர்க்கெல்லாம் பொருள் வழங்கும் கொடைத்திறம் வியந்து போற்றற்குரியது. கொடைத்திறம் வளர்த்த வள்ளல்கள் பலருள் மேம்பட்ட கொடை வள்ளலாக விளங்கினான் பாரி. அவனுடைய கொடைத் தன்மையால் அவன் புகழ் தமிழகம் முழுவதும் பரவியிருந்தது.

**பேகன்**

வையாவிக் கோப்பெரும் பேகனின் கொடைத்திறத்தையும், படை வீரத்தையும் புகழும் பரணர்,

> *''கொடைமடம் படுத லல்லது*
> *படைமடம் படான்பிறர் படைமயக் குறினே''*[125]

என்று பாடுகின்றார். பேகனும், பாரியைப் போலக் கொடை மடம் உடையவன் என்பது தெரிகிறது. பரிசில் பெற்றுவரும் இரவலன் வழியில் வறுமை மிக்க மற்றொரு இரவலனை நோக்கி, 'அண்ணலாகிய பேகனைக் காண்பதன் முன் யாம் உங்களைவிட வறியவர்களாக இருந்தோம். இப்பொழுது வறுமை நீங்கி இத்தன்மையேமாயினோம்'[126] என்றும், எவ்வளவு ஆயினும் ஈதல் நன்றெனக் கருதும் பண்புடையவன் பேகன் என்றும், மறுபிறப்பின் பயனை நோக்காமல், பிறருடைய வறுமையைக் கருதி வழங்கும் வள்ளல்தன்மை உடையவன் என்றும் புலவரை ஆற்றுப்படுத்தும் முறையில் பரணர் பேகனின் கைவன்மையைப் புகழ்கிறார்.

**மலையமான் திருமுடிக்காரி**

இம்மன்னன் தம்மினும் வலிமையுடையவன் எனக் கருதி மூவேந்தர்கள் தனித்தனியாக அவனுக்குத் தந்த பொருள் அவனுடைய குடியை வாழ்த்தும் பரிசிலருடையது என்று கபிலர் உரைக்கின்றார்.

> *''வீயாத் திருவின் விறல்கெழு தானை*
> *மூவருள் ஒருவன் நுட்பா கியரென*
> *ஏத்தினர் தரூஉம் கூழே நுங்குடி*
> *வாழ்த்தினர் வரூஉ மிரவல ரதுவே''*[127]

பண்டைத் தமிழ் மக்கள் தம் முயற்சியால் ஈட்டிய பொருளை இரவலர்க்கு ஈத்துப் பெறும் புகழையே புகழாகக் கருதினர். தாயத்தாற் பெற்ற செல்வத்தை வழங்கிப் பெறும் புகழை விரும்புவதிலர் என்பது இதனால் உணர முடிகின்றது.

'மலையமான் மதுவை உண்டு மகிழ்ந்திருக்கும் நேரத்தில் அல்லாமல், தான் மதுவை உண்டு மகிழாத நிலையில் புலவருக்கு வழங்கிய பொற்படைகளால் அணியப்பட்ட தேர்கள் முள்ளூர் மலையுச்சியின்கண் உண்டாகிய மலைத்துளியினும் பலவாகும்'[128] என்று மன்னர்கள் புலவர்களுக்கு விலையுயர்ந்த தேர்களை வழங்கும் கொடைச்சிறப்புத் தெளிவாகிறது.

தம் தகுதியறிந்து கொடுக்காத பரிசிலைக் கபிலர் பெற விரும்பவில்லை. அதனால் அவர் காரியை நோக்கி, ஒரு திசையிலுள்ள ஒரு கொடையாளியை நினைத்துப் பரிசில் பெற நான்கு திசைகளிலிருந்தும் பலதிறப்பட்ட பரிசிலர் வருவார்கள். எல்லோரையும் ஒரே தன்மையாக மதித்தலைக் கைவிட்டுப் புலவர் பெருமையறிந்து அதற்கு ஏற்பப் பொருள் வழங்குவாயாக என்று புலவர்களின் பெருமையை உணருமாறு அறிவுறுத்தினார். இவ்வாறு கபிலர் கூறக் கேட்ட நல்லறிவுடையோனாகிய காரி, அவருடைய மேன்மையையும், புலமையையும் அறிந்து பாராட்டினான். காரியிடம் பொருள்பெறச் செல்பவர் எந்த நாளில் சென்றாலும், பறவைச் சகுனம் தடைப்பட்டாலும், எந்த வேளையில் அவன் அவைக்களத்தை அடைந்தாலும் அவனைக் காணும்போது, திறமையற்ற சொற்களைப் பேசினாலும் வெறுங்கையோடு திரும்ப மாட்டார்கள். பரிசில் பெற்றே திரும்புவார்கள் என்று காரியின் கொடைப் பண்பினைக் கூறிப் பாராட்டி மகிழ்ந்தார்.

வல்வில் ஓரி

'மழை போன்ற கொடைப்பண்பு உடைய வல்வில் ஓரியைக் காணச் சென்ற கூத்தர் சுற்றத்திற்கு வெள்ளி நாரால் தொடுக்கப்பட்ட பொன்னரி மாலையினையும், பிற அணிகலன்களையும் யானையணிகளுடனே அவன் வழங்க மிகுதியான பரிசு பெற்ற மகிழ்ச்சியால் அக்கூத்தர் ஆடுவதையும், பாடுவதையும் மறந்து சென்றனர்'[129] என வன்பரணர் பாடுகின்றார்.

கொடை வேண்டுமளவுக்கும் அதிகமாக ஓரி கொடுத்தலால் அவற்றைப் பெற்ற கூத்தரும், பாணரும் அளவுக்கு மீறிய மகிழ்ச்சியால் ஆடிப்பாடுதலையும், யாழில் பண் இசைப்பதையும் மறந்தனர் என்பது தெளிவாகின்றது. இது வல்வில் ஓரி போன்ற

பெரு வள்ளல்களின் இடைவிடாது வழங்கும் கொடைப் பண்பினைப் புலப்படுத்துகிறது.

## ஆய்

‘ஏணிச்சேரி முடமோசியார் ஆய் என்ற வள்ளலின் கொடைத்தன்மையைக் கூறுங்கால், அவனையும் அவன் மலையையும் பாடிவரும் பரிசிலர்க்கு அவன் விருப்பத்தோடு கொடுத்த யானைகளின் எண்ணிக்கை கடற்போரில் அவனால் தோற்கடிக்கப்பட்ட கொங்கர்கள் விட்டுச் சென்ற வேலினும் பலவாகும்’[130] என்று சிறப்புற விளக்குகிறார்.

மறுமைப் பயன் கருதி இப்பிறப்பில் இல்லாதவர்க்குக் கொடுத்து உதவுவது அறவிலை வாணிகம் என்பர். இம்மைப் பயன், மறுமைப் பயன்களைக் கருதாது பிறர்க்கு உதவுவதே சிறந்த கொடைப்பண்பு. ‘இப்பிறப்பில் செய்த ஒன்று மறுபிறப்பிற்கு உதவும் என்று கருதிப் பொருளைக் கொடுத்து அதற்கு அறத்தைத் தேடிக் கொள்ளும் வணிகன் ஆய் அல்லன் என்றும், அவன் சான்றோர் சென்ற நெறி எனக் கருதி அவன் கொடைத் திறத்திலேயே சிறப்புற்றான் என்றும் புலவர் ஆய் அண்டிரனின் கொடைச் சிறப்பைப் போற்றுகிறார்’[131] இதனால் எவ்வகையிலும் தன்னலம் கருதி கொடை வழங்குவது சீரிய பண்பாடு ஆகாது என்பது உணர்த்தப்படுகிறது.

## நள்ளி

பாணர்களுக்கு இடைவிடாது கொடுக்கும் கண்டீரக் கோப்பெரு நள்ளியின் கைவண்மையால் மாலை நேரத்தில் மருதப்பண் வாசித்தலையும், காலை நேரத்தில் செவ்வழிப்பண் வாசித்தலையும் மரபாகக் கொண்ட பாணர்கள் அவற்றை மறந்தனர் என்று வன்பரணர் அம்மன்னனின் ஈகைத்திறத்தை உணர்த்துகிறார்.[132]

வள்ளல் தன் ஊரும் பேரும் தெரிவிக்காமல் இரவலர்கள் பசியைப் போக்கி பொருள் உதவி செய்தல் போற்றுதற்குரிய கொடைப் பண்பாகும். இரவலன் ஒருவன் தளர்ந்த நடையினை உடையவனாய் பலாமரத்தின் அடியில் தன் சுற்றத்துடன் தங்கியிருந்தபோது, அங்கு வந்த வில்லையுடைய வேட்டுவன் ஒருவன் விலங்கின் ஊனைத் தீயில் சுட்டு அவர்களை உண்ணச் செய்ததோடு, தான் காட்டு வழியிலிருப்பதால் அவர்களுக்குக், கொடுப்பதற்கு அணிகலன்கள் வேறொன்றும்

இல்லை என்று கூறித் தன் மார்பில் அணிந்திருந்த முத்து மாலையும், முன் கைக்கு அணிந்த கடகத்தையும் கொடுத்தான் என்றும், அவனுடைய பெயரையும், நாட்டையும் கேட்டபோது அவன் கண்டீரக் கோப்பெருநள்ளி என்பதை இரவலன் அறிந்தான் என்றும் வன்பரணர் இவனுடைய உயர்ந்த கொடைத் திறத்தைப் பாராட்டுகின்றார்.

*''மார்பிற் பூண்ட வயங்குகா ழாரம்*
*மடைசெறி முன்கைக் கடகமோ டீத்தனன்*
*எந்நா டோவென நாடும் சொல்லான்*
*யாரீரோ வெனப் பேருஞ் சொல்லான்*
*பிறர்பிறர் கூற வழிகேட் டிசினே''*[133]

கண்டீரக் கோப்பெருநள்ளி அவ்விரவலர்களுக்கு உண்ண உணவும், பரிசும் கொடுத்தாலும் தன்னுடைய பெயரையும், நாட்டையும் அவர்கள் கேட்டும் சொல்லாது சென்றது, அக்கொடைப் பண்பு தன் பெயருக்காகவும், புகழுக்காகவும் செய்யாமல் பசியாலும், வறுமையாலும் துன்பமுற்று வரும் இரவலர்களின் வறுமை நீங்கக் கொடுத்து உதவும் உயர்ந்த மனிதநேயப் பண்பாட்டினை அறிய முடிகிறது.

**அதியமான்**

அதியமானிடம் செல்லும் பரிசிலர் உறுதியாகப் பொருளைப் பெறுவர் என்பதை ஔவையார் சுவைபடப் பாடுகிறார். நாம் ஒரு நாள், இருநாள் மட்டுமின்றிப் பலநாளும், தினந்தோறும் பலரோடுகூடச் சென்றாலும், முதல் நாள் சென்றபோது அதியமான் எத்தகைய விருப்பத்தோடு வரவேற்றானோ, அத்துணை விருப்பத்தோடு வரவேற்பான். பரிசில் பெறுங்காலம் நீட்டிப்பினும், நீட்டியாது ஒழியினும், யானை தனது கொம்பிடையே வைத்த கவளம்போல, அவன் கொடுக்கும் பரிசில் நம்கையில் இருப்பதைப் போன்றதாகும்'[134] என்று ஔவையார் தம் நெஞ்சிற்கு உரைப்பதுபோல் அவன் கைவண்மையைப் போற்றுகிறார். அதியமானிடம் சென்ற பரிசிலர், கொடைப் பொருளைப் பெறுவது தவறாது எனப் புலவர் அவனுடைய கொடை மேம்பாட்டையும், இரவலரைப் புரக்கும் பாங்கும் தெரிய வருகிறது.

அதியமானிடம் பொருள் மிகுதியாக இருந்தாலும் பரிசிலர்க்குக் கொடுத்து எஞ்சியதைத், தான் உண்ணுவான். தான் படை வீரர்களுக்குத் தரும் பொருட்களைவிடத் தன்னை நாடிவரும் இரவலர்க்கு மிகுதியாகக் கொடுப்பான் என்பதை,

*"உடையன் ஆயின் உண்ணவும் வல்லன்*
*கடவர் மீதும் இரப்போர்க்கு ஈயும்*
*மடவர் மகிழ்துணை நெடுமான் அஞ்சி'*[135]

அதியமானின் வள்ளல் தன்மையை இப்பாடல் புலப்படுத்துகிறது. இரவலர்களுக்குக் கொடுத்து மிஞ்சியிருப்பதை உண்ணும் அதியமானின் கருணைத்திறம் புலவரின் இவ்வுரையால் இனிது விளங்குகிறது. பழங்காலப் புலவர் தம் மானம் கெடவரும் பரிசிலை, தம் புலமையின் அளவினை மதியாதார் தரும் பரிசினை மதித்தாரல்லர். இதனை,

*"வாணிகப் பரிசிலன் அல்லேன் பேணித்*
*தினை அனைத்து ஆயினும் இனிதவர்*
*துணையளவு அறிந்து நல்கினர் விடினே'*[136]

என்று பெருஞ்சித்திரனார் அதியமானைப் பாடினார். புலமைக்கு நிகழ்ந்த வேதனையும், வண்மைக்கு நேர்ந்த இளிவரவும் குறித்த புலவர் மற்றொன்றையும் கூறியுள்ளார். பாட்டுப்பாடியதால் விலையாகப் பரிசுக் கொடுத்தான் என்று பண்டமாற்று பேசும் 'வாணிகப் பரிசிலன் அல்லேன்' என்று தம் பெருமிதத்தையும், அதியமான் நெஞ்சு தைக்க எடுத்தியம்பினார். அதியமான் இத்தகைய கொடையால் எய்தும் பண்பினை இயல்பாகப் பெற்றான் என்பதை அறிய முடிகிறது.

மேற்கூறியவற்றால் சங்ககாலக் கடையெழு வள்ளல்கள் கொடை வழங்குவதையே கடமையாகக் கொண்டிருந்தனர் என்பதும், அக்கொடையை வேண்டுமளவிற்கு மிகுதியாகக் கொடுத்தனர் என்பதும், அவற்றைப் பெற்ற இரவலர்கள் அளவுக்கு மீறிய மகிழ்ச்சியால் ஆடிப்பாடுதலையும், யாழில் பண் இசைப்பதையும் மறந்தனர் என்பதும் பெறப்படுகின்றன.

**பொருநர்களின் வறுமையை நீக்குதல்**

'இரவு நேரத்தில் அரண்மனை முற்றத்தில் அதியமானின் பொருநன் சென்று தடாரிப் பறையைக் கொட்டியவுடன், பொருநன் இரங்கத்தக்கவன் என்று எண்ணி, அவன் இடையிலிருந்த பழமையான ஆடையை நீக்கி நல்லுடைகளைத் தந்து, கள்ளையும், ஊன் கலந்த சோற்றையும், வெள்ளிக் கலத்திலிட்டு அதனை உண்பித்ததோடு அவன் சுற்றத்தாரது வறுமையை நீக்க நெற்குவியலையும்

கொடுத்தான்''[137] என ஔவையார் பாடுகின்றார். வறுமையால் வாடிய பொருநனுக்கு அதியமான் அன்போடு உணவும், உடையும் தந்து வறுமை தீரப் பொருளும் வழங்கிய திறம் இப்பாடலில் புலப்படுகிறது.

'அரண்மனையின் முற்றத்திலே நின்று தண்ணொளி வீசும் நிலவு திகழும் பனிபெய்யும் விடியற் காலத்தே, தன் கையிலிருந்த ஒருகண் மாக்கிணையை அறைந்து பொருநன், பொகுட்டெழினி நெடுங்காலம் வாழுமாறு பாட, உடனே அவன் அப்பொருநனின் கிழிந்த ஆடையை நீக்கி, நுண்ணிய நூலினாலியன்ற உடையைக் கொடுத்து உடுக்குமாறு செய்து, கள்ளைப் பொற்கலத்தில் பெய்து, முறைப்படி அவனை இருத்தி உண்ணுமாறு செய்து சிறப்பித்தான்''[138] என்று ஔவையார் பாடுகின்றார்.

விடியற்காலையில் பொருநன், எருதுகளாகிய செல்வத்தை, வள்ளலின் அரண்மனைக்குச் செல்லாமல் பிறன்மனை முற்றத்தில் நின்று கொட்டிய தடாரிப்பறை ஓசையைக் கேட்டு, அவன் வறுமை நீங்கும் வண்ணம் அவன் அணிந்திருந்த கந்தையை நீக்கி, வெண்மையான ஆடையை உடுக்கும்படிச் செய்து அவன் பசித்துன்பத்தைப் போக்கியதாகக் கல்லாடனார் பாடுகிறார்.[139]

வேறொரு மனைமுற்றத்திலிருந்து கேட்ட பொருநனின் பறை ஒலியைக் கேட்டு அவன் வறுமைத் துயரத்தை அம்பர் கிழான் அருவந்தை நீக்கியது அவனது கொடைப் பெருமையைப் புலப்படுத்துகின்றது. ''அவியன் என்ற வள்ளலின் அரண்மனையை அடைந்த பொருநன் ஒருவன் விடியற்காலத்தே தடாரிப் பறையைக் கொட்டி, அவன் தன் எருதுகளை வாழ்த்தி அவன் பெருமையைச் சொல்லிப் பாடப், பொருநனின் வறுமைத் துயர் நீங்குமாறு கள் தெளிவை உண்ணச் செய்ததோடு, பாம்பின் தோல் போன்ற மென்மையான ஆடையை உடுக்குமாறு செய்து மகிழ்வித்தான்''[140] என்று மாறோக்கத்து நப்பசலையார் பாடுகின்றார்.

கிணைப் பொருநன் ஒருவன் சோழிய ஏனாதி திருக்குட்டுவனின் அரண்மனையில் 'விடியற்காலத்தே தடாரிப் பறையை இசைத்ததும், அம்மன்னன் ஒரு யானையை பரிசிலாகத் தந்ததாகவும், பொருநன் அச்சமுற்று அந்த யானையை அவனிடம் திருப்பிவிட, மன்னன் தான் கொடுத்த பரிசில் சிறியதெனப் பொருநன் கருதிவிட்டான் என்று எண்ணி மற்றொரு பெரிய யானையைப் பரிசிலாகத்

தந்ததாகவும்'[141] கோனாட்டு எறிச்சலூர் மாடலன் மதுரைக்குமரனார் எடுத்துரைக்கின்றார்.

'சேரமான் வஞ்சன் என்னும் அரசனைப் பொருநன் விடியற்காலத்தில் அணுகித் தடாரிப் பறையை இசைத்தவுடன், மன்னன் பெரிதும் மகிழ்ந்து பொருநனின் கிழிந்த உடையைக் களைந்து, உயர்ந்த உடையைத் தந்து உண்கலத்தில் கள்ளையும், மான் இறைச்சியாகிய வறுத்த பொரிக்கறியையும், சிறந்த நெல்லரிசிச் சோற்றையும் உணவாக அளித்ததோடன்றித் தன் மார்பில் அணிந்திருந்த விலையுயர்ந்த மாலையையும் பரிசிலாகக் கொடுத்த வள்ளல் தன்மையைத் திருத்தாமனார் என்ற புலவர் புகழ்ந்து பாடியுள்ளார்.'[142]

'சிறுகுடி கிழான் பண்ணனை, நீர் நிலைகளும், விளைநிலங்களும், வற்றிய பஞ்ச காலத்திலும், தடாரியை இசைக்கும் பொருநன் அணுகித் தன் வறுமை நிலையை அறிவித்தபோது, அப்போதே அவன் துயரம் நீக்குமாறு தன்னிடம் உள்ள பொருட்களைக் கொடுத்து உதவினான் என்று புலவர் பாடுகின்றார்.'[143] தன் நாட்டில் பஞ்சம் இருந்தபோதும் தன்னலம் கருதாது தன்னிடம் உள்ள பொருளைப் பொருநனுக்குக் கொடுத்து உதவிய சிறுகுடி கிழான் பண்ணனின் அரும்பெரும் கொடைப் பண்பு புலனாகிறது.

சோழநாட்டுப் பிடவூர் கிழான் மகன் பெருஞ்சாத்தனின் அரண்மனை முற்றத்தில் இருள்சூழ்ந்த மாலை நேரத்தில் தடாரிப் பறையைக் கொட்டிய பொருநனைக் கண்டு சிறிதும் காலம் தாழ்த்தாமல், அவனுக்கு விலையுயர்ந்த அணிகலன்களை நல்கியதோடு, நெல்லரிசியாலான சோற்றோடு, பொரிக் கறியும், ஆட்டிறைச்சியும் உண்ணுமாறு செய்தான் என, அவன் தன் வரையாது வழங்கும் ஈகைத்திறத்தின் நக்கீரர் என்ற புலவர் போற்றிப் புகழ்கின்றார்.[144]

மற்றொரு பொருநன் தன் வறுமையை நீக்கக் கருதிச் சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியின் செல்வமனையை அடைந்து தடாரிப் பறையைக் கொட்டி, வேள்வியில் தரும் அவியுணவை உண்ணும் தேவர்கள் பாதுகாக்க, அறம் செய்யும் உள்ளமுடைய அவன், நீண்ட நாட்கள் வாழ்வானாக என வாழ்ந்த அவன் பொருநனை நோக்கிப் 'புரவலரை நாடிச் செல்லும் கிணைப் பொருநனே! நீ எம்மால் புரக்கப்படுதலை உடையை' என்று சொல்லி,

*"மலை பயந்த மணியும் கடறுபயந்த பொன்னும்*

*கடல்பயந்த கதிர்முத்தமும்*

*வேறுபட்ட உடையும் சேறுபட்ட தசும்பும்*

*கனவிற் கண்டாங்கு வருந்தாது நிற்ப*

*நனவின் நல்கியோன்'*[145]

என்று பொருநன் இனி வறுமையுற்று வருந்தாமல் செல்வ நிலையிலே நிலைத்து நிற்குமாறு பொருட்கள் வழங்கிய திறம் தமக்குக் கனவுபோலத் தோன்றுவதாக உலோச்சனார் என்ற புலவர் கூறுகிறார். இவ்வாறு புலவர் கூறுவது அவர் எதிர்பாராத அளவு பெரும்பொருள் வழங்கிய பெருநற்கிள்ளியின் இணையற்ற கொடைப் பண்பைக் குறிப்பதாகும்.

சோழன் செருப்பாழியெறிந்த இளஞ்சேட் சென்னியின் அரண்மனையின்கண் பொருநன் நின்று தன் தடாரிப் பறையைக் கொட்டி அம்மன்னன் பகைமேற் செல்லுதலாகிய வஞ்சித்துறைப் பாடல்களை இசைத்துப் பாடப், பெறுவதற்கரிய அணிகலன்களும், பிற பொருட்களுமாகிய செல்வத்தை அவனால் தாங்க இயலாத அளவில் வழங்கினான்.[146] என்று புலவரால் இச்சோழ மன்னனின் கொடைத்திறம் பேசப்பட்டுள்ளது.

மாங்குடி கிழார் என்ற புலவரும் கிணைப்பொருநன் ஒருவன் 'தன்பறையை இசைத்துத் தான் பாசறையில் மறக்கள வேள்வி செய்த இம்மன்னனைச் சென்று அடைந்ததன் காரணம் ஒளி வீசுகின்ற அவன் மாலையைப் பெறுவதேயாம்'[147] என்று அப்பொருநன் கூறுவதாக உரைக்கிறார்.

பாண்டியன் தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனிடம் கிணைப்பொருநன் சென்று பரிசில் கேட்டதைக் கல்லாடனார், பாடுகின்றார். சோற்றுக்குரிய அரிசி இல்லாமையால் செய்தற்குரிய இன்றியமையாத செயலில் உள்ளம் செல்லாது பொருள் ஒன்றையே விரும்பி அரிய பலவழிகள் கடந்து, பாசறையின்கண் தங்கிப் போராகிய உழவினைச் செய்யும் இம்மன்னனின் புகழை நினைந்து களிறாகிய பரிசில் பெறும் பொருட்டு அம்மன்னனிடம் வந்ததாக கிணைப்பொருநன் கூறுவதைப் புலவர் பாடுகின்றார்.[148]

## பாணர்களின் வறுமையைப் போக்குதல்

சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோ பகைவர்களை எதிர்த்து அவர்தம் பொருட்களைப் புறக்கொடையாகப் பெற்றான். அவ்வாறு பெற்ற வீரத்தைப் பாடினி அவனிடமிருந்து அணிகலன்களைப் பரிசிலாகப் பெற்றாள். இப்பாடினியின் குரலுக்கேற்ப பாடும் பாணனும், வெள்ளி நாரால் தொடுத்த பொற்றாமரைப் பூவைப் பெற்றான்.[149] இவ்வாறு சேர மன்னனின் கொடைத்திறம் பேசப்பட்டுள்ளது.

சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் பாணர்க்கருளிய கொடைச் சிறப்பை விளக்குகிறார் ஆலத்தூர் கிழார். 'காலையிலும், மாலையிலும் பாலில் இட்டுத் தேனொடு சமைத்த வரகுச் சோற்றோடு, முயலினது சூட்டிறைச்சியையும், தானும், தன் சுற்றமும் உண்ணும்படிச் செய்து பரந்த உள்ளத்தோடு பலகாலும் ஈரமொழிகளைக் கூறித் தனக்கு நீங்காத செல்வம் முழுவதையும் அளித்தவன் கிள்ளிவளவன் என்று பாணன் கூறி அவனை வாழ்த்தி அவன் செய்த நன்றி மறக்கற்பாலதன்று என்றும் பாணன் உரைப்பதாகக் கூறியுள்ளார்.[150] பிறர்க்கு நீங்காத செல்வம் வழங்கும் கிள்ளிவளவனின் கொடைப்பண்பு இப்பாடலில் தெரிகிறது. 'புலவர்களுக்கும், பாணர், விறலியர் போன்ற கலைஞர்களுக்கும் வஞ்சி, மதுரை போன்ற நெருநகரங்களையும், கொடைப் பொருளாக மன்னர் வழங்கும் அவர்தம் அருள் தன்மையைச் சங்கப் பாடல்கள் புகழ்ந்து கூறுகின்றன.[151] இதிலிருந்து மன்னருடைய ஈகைத்திறம் புலனாகிறது.

## தரமறிந்து கொடை வழங்குதல்

பார்ப்பார்க்கு நீர்வளம் மிகுந்த மருத நிலத்து ஊர்களைக் கொடுத்தும், பசித்துவரும் இரவலர்க்கு மிகுதியாகச் சோறு அளித்தும் பரிசிலர்க்குச் சிறப்பமைந்த நல்ல அணிகலன்களை மிகுதியாகக் கொடுத்தும் ஆதரிப்பவன் தந்துமாறன், எனச் சிறுவெண்டேரையார் அவன் வள்ளல் தன்மையை விளக்குகிறார்.[152] இவ்வாறு அவன் அறச்செயல்களைச் செய்வதன் நோக்கமே தன்னுடைய இறப்பிற்குப் பின்னர் புகழுடன் விளங்கவேண்டும் என்பதேயாகும்.

ஔவையார் நாஞ்சில் வள்ளுவனின் கொடைப் பெருமையை நாவாரப் புகழ்கின்றார். விறலியர் மனைப்பக்கத்தில் பறித்த இலைக்குமேல் தூவுவதற்குத் தாம் நாஞ்சில் வள்ளுவனைச் சிறிது அரிசி கொடுக்குமாறு வேண்ட அவன் பரிசிலர்களின் தரத்தை அறிதலோடு தனது மேம்பாட்டையும் சீர்தூக்கிப் பெரிய மலைபோன்ற

யானையைக் கொடுத்தான்.[153] என அவன் கொடைத்தன்மையைப் புலப்படுத்துகிறார். இதிலிருந்து வள்ளல்கள் பரிசிலரின் தரத்தை அறிந்து கொடுப்பது மட்டுமின்றித் தம் மேம்பாட்டைக் கருதி வழங்குபவர் என்பதும் பெறப்படுகிறது.

இரவலர்கள் சில வள்ளல்களை அணுகி அவர்தம் முன்னோருடைய கொடைப் பெருமையை விளக்கித் தமக்குப் பரிசு தருமாறு கேட்பதுண்டு. நீர்நிலை வற்றிப்போகும் கோடைக்காலமாயினும் வெள்ளியாகிய மீன் தெற்கின்கண் சென்று பஞ்சம் உண்டானபோதும் தம்மை நினைக்குமாறு வேண்டிப் பொருட்களை அவனுடைய முன்னோனாகிய ஆதனுங்கன் வழங்கியதுபோல, பசித்த தம் சுற்றத்தாருடைய துயரம் கெடச் சிறந்த நல்ல கலன்களை நல்குமாறு நல்லேர் முதியனைக் கள்ளில் ஆத்திரையனார் பாடுகின்றார்.[154]

பிட்டங்கொற்றனிடம் பரிசிலர் பல நாட்கள் தொடர்ந்து சென்றாலும் அதியமான்போலத் தன்னிடம் தொடர்ந்து வருவோர்க்குத் தவறாமல் பொருள் வழங்கி உதவுபவன். ''இன்றுபோனாலும் தருவான். சிறிது நாட்கள் கழித்துச் சென்றாலும் தருவான். முன்னேயும், பின்னேயும் தந்தான் என்று நினைக்காது பல நாட்கள் தொடர்ந்து சென்றாலும் யாம் வேண்டியபடியே எம்முடைய வறிய கலத்தை நிரப்புவான். இவன் தான் விரும்பியவாறு செய்தற்கரிய போர்த் தொழில்களை முடிப்பானாக''[155] என்று காரிக்கண்ணனார் பிட்டங்கொற்றனின் கொடைத் தன்மையைப் போற்றி வாழ்த்துகிறார்.

### கொடைத்தன்மையால் எய்தும் பண்பு

காட்டில் வாழும் குமணனிடம் புலவருக்குப் பரிசில் தரப் பொருள் ஒன்றுமில்லை. எனினும் புலவர் தன்னிடம் பரிசில் பெறாமல் போவதை அவன் மனம் விரும்பவில்லை. பரிசிலர் பரிசு பெறாது செல்வது எனது நாட்டை இழந்ததைக் காட்டிலும் மிகவும் துன்பமுடையது என்று எண்ணிக் குமணன் தன்னுடைய வாளைப் புலவரிடம் கொடுத்து தன் தலையை வெட்டி எடுத்துச் சென்று இளங்குமணனிடம் பொருள் பெறுமாறு கூறினான்.

> *''பாடுபெறு பரிசிலன் வாடினன் பெயர்தலென்*
> *நாடிழந் ததனினு நனியின்னாதென*
> *வாடந் தனனே தலையெனக் கீயத்*
> *தன்னிற் சிறந்தது பிறிதொன் றின்மையின்''*[156]

என்ற பெருந்தலைச் சாத்தனாரின் பாடல் குமணனின் கொடைத் திறத்தையும், அவனைப் போன்ற பெருவள்ளல்கள் தம்மிடமுள்ள மிகச் சிறந்த பொருட்களையே புலவருக்குப் பரிசிலாகத் தருவர் என்பதையும் அறிய முடிகிறது.

'வாணிகப் பரிசிலன் அல்லேன் என்று பெருஞ்சித்திரனார் தம்மை எதிர்மறையில் குறிப்பது கொண்டு, அக்காலத்து வாணிகப் பரிசிலரும் இருந்திருத்தல் கூடும் என்று நாம் முடிவு செய்யலாம். அத்தகையோர் பெருந்தொகையினராய் இருந்திருப்பின் 'புலவர் பாடாது வரைக என் நிலவரை' என வஞ்சினம் எழுப்பும் சமுதாயம் அமைந்திருக்க முடியாது. முரசு கட்டிலில் துஞ்சியவருக்குக் கவரி வீசும் மன்னன் வாழ்ந்த காலத்தில் வாணிகப் புலவர் செல்வாக்குப் பெற்றிருக்க இயலாது. பொருளுக்குக் கலைச்செல்வம் தன்னை விற்றுவிட்ட பிற்கால அவல வாழ்விலே தான் வாணிகப் பரிசிலர்களைக் காண்கின்றோம்.

*"முற்றிய திருவின் மூவ ராயினும்*
*பெட்பின்றி ஈதல் யாம்வேண் டலமே"*[157]

என்று பெருந்தலைச் சாத்தனார் இக்கருத்தினை வலியுறுத்துகிறார். பரிசில் கிடைத்து தம் புலமைக்கு இழிவுற நேரின் அதனை மறுத்து ஒதுக்கி, பொருளாளனை இடித்துரைக்கும் பெருமிதம் சங்காலப் புலவர் தம் சீர்மையாகும்.

*"மரங்கொல் தச்சன் கைவல் சிறாஅர்*
*மழுவுடைக் காட்டகத்து அற்றே*
*எத்திசைச் செலினும் அத்திசைச் சோறே"*[158]

பொருளற்ற வறுமையில் உழல்வதால் போற்றற்குரிய தன்மதிப்பினை இழந்துவிடுதல் உயர்ந்த மக்களிடத்துக் காணப்படமாட்டாது. சான்றோர்கள் வறுமையை ஓர் இழிவென்று கருதார். மானம் அழியவரும் இழிதகவே அவர் வாழ்வில் இராது. ஆகையாலே தான் பெருஞ்சித்திரனார், ஔவையார், கோவூர் கிழார் போன்ற கலைச்செல்வர், பொருட் செல்வர்களாய் வாழ்ந்த இளவெளிமான், அதியமான், நெடுங்கிள்ளி போன்றோரைச் சினந்தும், கடிந்தும் கூறத் தயங்கவில்லை.

இங்ஙனம் கலைநலம் சான்ற பெருமக்கள் சால்புடையவர்களாய் வாழ்ந்தார்கள். ஆதலால் அவர்களைப் பெரிதும் போற்றிப் பணிந்து ஒழுகுவதைத் தமக்குச் சீரிய கடமையாய்க் கொண்டொழுகினர் அக்காலப் பொருட் செல்வர். கலைஞர்க்குத் துன்பம்

வந்தால் அதனை வல்விரைந்து களைதலில் பழங்காலத்துப் புரவலர்கள் அளவிறந்த ஆர்வம் கொண்டனர்.

**உயரிய சிந்தனைகள்**

உலகப் பெரியோர் ஒவ்வொருவரும் மனிதனை மனிதனாக்கவே விரும்பியுள்ளனர். உலகமும், அதில் உள்ள யாவும் மனிதனுக்காக என்றே அவர்கள் எண்ணி அந்தக் கருத்தின் அடிப்படையில் மனித உருவாக்கத்திற்கு முயன்றுள்ளனர்.

ஈகையை வற்புறுத்திய இலக்கியம் ஈயாமையை இழித்துரைக்கப் பின்வாங்கவில்லை. அங்ஙனம் வெறுத்துக் கூறும் இலக்கியம், இரவாது நிற்கும் வறுமையில், செம்மை நிலையைப் போற்றவும் பின்வாங்கவில்லை. ஈகையின் ஏற்றத்தைப் புகழ்ந்தால் அது இரத்தல் ஏற்புடையது என்ற கருத்தைக் காட்டியதாகாது. நம் தெய்வத் திருக்குறளும் ஈவாரை ஏத்தியதோடமையாது, இரத்தலை வெறுத்து,

*"கரவாது உவந்தீயும் கண்ணன்னார் கண்ணும்*
*இரவாமை கோடி உறும்"*[159]

எனக்கூறி இரத்தலைக் காட்டிலும் இறத்தல் நன்று என இயம்புகின்றது. 'ஏற்பது இகழ்ச்சி'[160] என்று கூறும் தமிழ்நீதி அடுத்த அடியிலேயே 'ஐயமிட்டு உண்'[161] என்று விதிக்கிறது.

*"ஈயென இரத்தல் இழிந்தன்று அதன்எதிர்*
*ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று*
*கொள்எனக் கொடுத்தல் உயர்ந்தன்று அதனெதிர்*
*கொள்ளேன் என்றல் அதனினும் உயர்ந்தன்று"*[162]

என்னும் இரட்டைக் கொள்கை தமிழகத்தின் முதன்மையான கொள்கையாகும்.

இவ்வாறு கழைதின் யானையார் உரைக்கும் கூற்றில் இரத்தலின் இழிவையும், கொடுத்தலின் உயர்வையும், கொடுத்த பொருளை ஏற்க விரும்பாத பெருமிதத்தையும் உணரலாம். படிப்படியாக இழிந்ததும், உயர்ந்ததும் காட்டுமுகத்தான், இரத்தலின் இழிவையும், ஈதலின் ஏற்றத்தையும் காட்டும் இப்பாடல் தமிழர் சமுதாயத்தின் மனிதநேயப் பண்பாட்டுச் சிறப்பினைப் பாங்குறக் காட்டியுள்ளதைக் காணலாம்.

## இனம் இனத்தோடே

சான்றோர்கள் எப்போதும் சான்றோரையே விரும்பிச் சேர்ந்து வாழ்வார்கள் என்றும், கல்வி, அறிவு, ஒழுக்கங்களில் நிரம்பாதவர்கள் சான்றோரை விரும்பிச் சேர மாட்டார்கள் என்றும், தங்களைப்போல ஒன்றும் நிரம்பாதவர்களைத் தான் நேசிப்பார்கள் என்றும் கூறுகின்ற பாடலில் அழகான உவமானம் ஒன்று காட்டப் பட்டுள்ளது.

பொன்னும், பவளமும், முத்தும், மணியும் வெவ்வேறு நாடுகளிலும், இடங்களிலும் பிறந்தனவாயினும் அவைகளை ஒன்றாகச் சேர்த்து வரிசையாக மாலையாக்கினால் அது கண்ணுக்கு அழகு தரும். மக்கள் அந்த விலைமதிப்புள்ள மாலையை விரும்பி அணிவார்கள். இதைப்போலவே தான், அறிவு நிரம்பியவர்கள் மொழி, மத, இன வேறுபாடுகள் இல்லாமல் ஒன்றுபட்டிருப்பர். மற்றவர்களுக்கு நலம் புரிவதிலே ஈடுபட்டிருப்பர். சான்றோர்களின் ஒற்றுமைத் தன்மையை,

*''பொன்னும் துகிரும்... பாலர் ஆகுபவே''*[163]

என்ற புறப்பாடலின் இனிய பொருளைப் பார்த்தால் 'இனம் இனத்தோடே' என்ற பழமொழியின் பரந்த பொருளைக் காணலாம். தமிழர்களின் மனித நேயத்தை விளக்கும் இது ஒரு சிறந்த பாடலாகும்.

## செல்வமும் ஆலமரமும்

இரவலரை வரவேற்று உதவி செய்யும் கருணையாளர்களிடம் உள்ள செல்வம் வறுமையுள்ளவர்களின் செல்வமாகும். இத்தகைய புரவலர்களிடம் உள்ள வறுமை இரவலர்களின் வறுமையே ஆகும் என்ற உண்மையை விளக்கும் பாடலில், செல்வரை ஆலமரத்திற்கு ஒப்பாகவும், அவர்களிடம் செல்லும் இரவலரைப் பறவைக் கூட்டத்திற்கு ஒப்பாகவும் கூறியிருக்கின்றது. இதனை,

*''கடவுள் ஆலத்துத் தடவுச்சினைப் பல்பழம்*
*நெருநல் உண்டனம் என்னாது பின்னும்*
*செலவா னாவே களிகொள் புள்ளினம்*
*அனையர் வாழியோ இரவலர் அவரைப்*
*புரவெதிர் கொள்ளும் பெருஞ்செய் யாடவர்*
*உடைமை யாகுமவ ருடைமை*
*அவர் இன்மை யாகுமவரின் மையே''*[164]

செல்வம் பெற்ற மக்கள் எப்படி வாழ்க்கை நடத்த வேண்டும் என்பதை அறிவுறுத்துகிறது. இக்கால நிலைக்கு இக்கருத்து முரண்பட்டதாகும். இக்காலத்தில் பிறரிடம் சென்று பிச்சை கேட்டுப் பொருள் வாங்கிப் பிழைப்பதை அறிவுள்ளோர் ஆதரிப்பதில்லை. உழைத்து ஊதியம் பெற்று வாழவேண்டும். ஊதியம் என்பது பற்றாக்குறையாக இல்லாமல் வாழ்க்கைக்குப் போதுமானதாக இருக்க வேண்டும். இதுவே இக்காலக் கொள்கையாகும். எனவே, செல்வமுள்ளவர் கொடையாளியாக வாழவேண்டும் என்னும் கொள்கை சங்ககாலச் சமுதாய அமைப்பிலே இன்றியமையாத ஒரு மனிதநேயமிக்க கொள்கையாக இருந்தது என்பது தெரிகிறது.

செல்வம் படைத்தவர்கள் சிலர். வறியவர்கள் பலர். இந்தச் சமுதாய அமைப்பு நிலைத்திருந்த காலத்தில் ஈகையும், இரப்பும் நிலவியிருந்ததால் மக்களுள் சண்டையின்றி ஒழுக்கமும், நீதியும் நிலவியிருந்தன. பிறருக்கு உதவி செய்வது மக்கள் கடமை. உதவி செய்யும் பண்பே மக்கட்பண்பு என்ற உண்மை, உதவி செய்வோர் மூலம் உலகில் பரவி வந்தது. மிருகங்கள், பறவைகளைவிட மனிதர்கள் உயர்ந்த பண்புள்ளவர்கள் என்பதைச் சமுதாயத்திற்கு அறிவுறுத்த இதைத்தவிர, வேறு வழியில்லை. ஆதலால்தான் ஈகைத்தன்மையை ஏற்றிப் போற்றினர்.

## ஆற்றுப்படை உணர்த்தும் கொடை மாட்சி

பண்டைத் தமிழ்ச் சமுதாயத்தில் இரவலர் என்னும் பகுதியில் தான் அக்காலக் கலைஞர் பெரும்பாலோர் அடங்குகின்றார்கள். இயல், இசை, கூத்து என்னும் முத்திறத்துக் கலைஞர்களும் இரப்போர் வரிசையிலேயே சேருகின்றார்கள். இவர்கள் பரம்பரையாக இக்கலைகளை வளர்த்து அவற்றின் பேரால் மன்னர்களும், மற்றவர்களும் அவர்களை ஆதரிப்பதே கடமை, புகழ் என்னும் கொள்கைகளையும் ஏற்படுத்தியிருந்தார்கள். வீரப்புகழுக்கு இணையாக அல்லது அதனினும் சிறிது மேம்பட்டதாக கொடைப் புகழைக் கருதி வந்தது தமிழ்ச் சமுதாயம்.

சங்க இலக்கியங்களில் தனியே பிச்சை எடுப்பவர்களைப் பற்றிக் குறிப்பிடவில்லை. இரவலராகிய கலைஞர்கள் பொருள் விரும்பிச் செல்வதையோ, அரசரையும், மற்றவர்களையும் அணுகுவதையோ ஒரு குறையாக அவர்கள் குறிப்பிடவில்லை. பொதுவாக ‘ஏற்பது இழிவு ஈவது சிறப்பு’ என்ற கருத்து இருக்கிறதே தவிர, இரவலர்களைத் தனியே எடுத்துப் பேசித் தடுத்த நிலைகள் காணப்படவில்லை.

தமிழ்ச் சமுதாயத்தில் ஈகை என்ற ஓர் அடிப்படைக் கொள்கை வேரூன்றியது. சங்கத் தமிழில் பல இடங்களில், இரப்போரின் வறுமையைத் தீர்க்க வேண்டும் என்னும் மனிதாபிமான உணர்ச்சியினாலேயே ஈகையறம் கடைப்பிடிக்கப்பட்டது என்று தெரிகிறது. வறுமையின் எல்லைக்கே சென்றுவிட்ட இந்த வாழ்வுக் காட்சிகளைப் போலவே, அருளின் எல்லைக்கே சென்றுவிட்ட வள்ளல் நெஞ்சங்களையும் சங்கத்தமிழ் நமக்குக் காட்டுகின்றது.

சங்கத்தமிழ் இலக்கியம் வளம்மிக்க ஒரு சமுதாயப் பண்ணையின் விளைவு என்பதில் ஐயமில்லை. சிந்தனைவளம் நிறைந்த சமுதாயத்தில்தான் சிறுசிறு குறைகளால் ஊடறுக்கப்படாமல் சமுதாயப் பெருவாழ்வு ஓங்கி வளர இடமுண்டு. சங்கத் தமிழ்ச் சமுதாயத்தை வளமிக்க சமுதாயமாக இருந்தாலும், அக்காலத்தில் வறுமை இல்லாமல் இல்லை. அது பொருள் வறுமையாக இருந்ததே தவிர சிந்தனை வறுமையாக வளர்ந்து விடவில்லை என்பதுதான் சங்க காலத்தின் சிறப்பாகும். இத்தகைய வறுமை ஏற்படாதபடி செய்து கொண்டே இயங்கியது சங்கத் தமிழ்ச் சமுதாயம்.

இதனை உணர்ந்து சமுதாய வாழ்வை இயக்கி வந்தது சங்ககாலச் சிந்தனை வளம். சங்கத்தமிழ் ஆற்றுப்படைப் பாடல்கள் நமக்கு வழங்கும் செய்தி இதுவாகும். தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் நாள் ஒவ்வொன்றும் கலைஞரைப் போற்றியே தொடங்குகிறது. ஆட்சிவினைகள் தொடங்குமுன், தனது மாளிகையின் அடையா நெடுவாயிலில் வந்தமர்ந்த கலைஞரை,

*“பாணர் வருக பாட்டியர் வருக*
*யாணர் புலவரொடு வயிரியர் வருகென*
*இருங்கிளை புரக்கும் இரவலர்க் கெல்லாம்*
*கொடுஞ்சி நெடுந்தேர் களிற்றொடும் வீசி”*[165]

போற்றுகின்றான். தம் வயிற்றைக் கருதாது பிறர் நலத்தையே கருதும் கலைஞர்களை அரசன் மறத்தலாகாது என்பது சங்காலக் கொள்கை என்பது தெரிகிறது.

### பொருநராற்றுப்படை

சோழவள நாட்டைச் சோறுடைத்தாக்கிய பெருமைக்குரிய கரிகாலன், கலைஞர்களிடம் கொண்டிருந்த ஈடுபாடும், அவர்களிடம் நடந்து கொண்ட முறையும்

செல்வ வாழ்வு அடைந்தோர் பின்பற்றத்தக்கவை. வந்த கலைஞர்களை வரவேற்று உபசரித்து, கலைஞர்களை அவன் அரண்மனையிலேயே தங்கச் செய்து, அவர்களை மகிழ்விப்பவன். மாமிச உணவைக் கடித்துச் சுவைத்துப் பல நாட்கள் தொடர்ந்து உண்டதால் அவர்களின் பல்கூட மழுங்கிவிட்டது. இந்நிலையில் ஒருநாள் கலைஞர்கள் ஊருக்குப் போகலாமா என்று கேட்க, மன்னனோ அதை எதிர்பார்க்கவில்லை. தெவிட்டாத கலையை உண்பவன் அவன். தெவிட்டும் காலக்கணக்கை அவன் பார்ப்பதில்லை. ஆகையால் இன்னும் கொஞ்ச நாள் இருந்து போகலாம் என்று ஆற்றாமையோடு கூறுகிறான்.

பழுமரம் நாடும் பறவைபோல கரிகாலனின் அரண்மனையில் புகுந்ததும் மன்னன் கலைஞர்களைப் பருகிய நோக்கெனும் பாசத்தால் பிணித்து, ஆடை நல்கி, அருளில் இருத்தி, பொலங்கலம் நிறைய மதுவினைப் பன்முறை கொடுத்தான். ஆறுசெல் வருத்தம் நீக்கி, பல்சுவை உணவை பல நாட்கள் வழங்கி, பரிசுப் பொருட்களையும் வேண்டிய அளவு கொடுத்தான். இதைத்தவிர செங்கோல் மன்னன் கரிகாலனின் புகழ் எல்லாம் பேசப்படுகின்றது.

கலைஞர்கள் கரிகாலனிடம் விடைபெற்றுக் கொண்டு, அவன் கொடுத்த பெரும் பரிசில்களுடன் புறப்பட, மன்னன் அவர்கள் ஒவ்வொருவரையும் தானே முன்னின்று குதிரை வண்டியில் ஏற்றி, பெரியோரை வழியனுப்பும் அக்கால முறைப்படி, ஏழடி தூரம் அவர்கள் பின்னால் நடந்து சென்று வழியனுப்பி வைக்கிறான். இதிலிருந்து கரிகாலன் கலைக்குக் கொடுத்த மதிப்பினைத் தெரிந்து கொள்ள முடிகிறது. இவை அரசர்களின் வாழ்விலே ஒருநாள், இருநாள் ஏற்பட்ட நிகழ்ச்சிகள் அல்ல. அவர்களின் நெஞ்சமும், கோட்டை வாயிலும் கலைக்கு எப்போதும் திறந்தே இருந்தன. கலைஞர்களை வரவேற்று மகிழ்வதில் அவர்கள் சலிப்படைந்ததே இல்லை.

**சிறுபாணாற்றுப்படை**

ஓய்மானாட்டு நல்லியக்கோடனிடம் வருகிறது ஒரு பாண் கலைஞர் பட்டாளம். நல்லியக் கோடனிடம் பல்வகைப் பரிசில் பெற்றுவரும் பாணன் கண்டு தனக்கு வளம் பல வழங்கிய வள்ளலின் நாட்டுச் சிறப்பையும், கொடைத்திறத்தையும் விருந்து படைக்கும் பேருள்ளத்தையும் கூறி அவனிடம் ஆற்றுப்படுத்துவதாக இப்பாடல் அமைந்துள்ளது. செல்லரித்துச் சிதைந்த குடிசையில் உப்பில்லாக் கீரை உண்டு வருந்திய தன் ஏழ்மை நிலையையும், நல்லியக்கோடனை நாடிப் பெருஞ்செல்வம்

பெற்றுத் திரும்பும் செல்வநிலையையும் எடுத்துக் கூறி வறுமை மிக்க பாணனைத் தேற்றிச் செம்மல் உள்ளத்தோடு செல்லுமாறு வந்த பாணன் வழிப்படுத்துகின்றான்.

*"காம்புசொலித் தன்ன அறுவை உடீஇப்*
*பாம்புவெகுண் டன்ன தேறல் நல்கிக்*
*காவெரி ஊட்டிய கவர்கணைத் தூணிப்*
*பூவிரி கச்சைப் புகழோன் தன்முன்*
*பனிவரை மார்பன் பயந்த நுண்பொருட்*
*பனுவலின் வழாஅப் பல்லே றடிசில்*
*வாணிற விசும்பிற் கோண்மீன் சூழ்ந்த*
*இளங்கதிர் ஞாயி றெள்ளுந் தோற்றத்து*
*விளங்குபொற் கலத்தில் விரும்புவன பேணி*
*ஆனா விருப்பின் தானின் றூட்டி'*[166]

உவகை அடைகிறான் நல்லியக்கோடன். தான் அரசனே என்றாலும், தன்னிடம் இல்லாததோர் செல்வத்தைப் பெற்றிருப்பவனைப் போற்றி அதைப் பெற்று அனுபவிக்க வேண்டும் என்று அக்கால மன்னர்கள் கொண்டிருந்த மனநிலையை இதில் காண்கிறோம். ஆற்றுப்படை இலக்கணமும், தமிழ் நெஞ்சத்தின் எழிலார்ந்த பண்பும் இவ்விடத்தில் வீறும், விளக்கமும் பெற்றுள்ளன.

## பெரும்பாணாற்றுப் படை

'காஞ்சியிலிருந்து தொண்டை நாட்டையாண்ட தமிழ் மன்னன் தொண்டைமான் இளந்திரையன். வறிய பாணன் இளந்திரையனைக் காணச் செல்லும் வழியில் பெறப்போகும் வரவேற்பினையும், உபசரிப்பினையும் வளம்பெற்ற பாணன் வகைப்படுத்திச் சொல்லியுள்ளான்.'[167] 'சென்மோ இரவல சிறக்க நின் உள்ளம்' என வந்துள்ள இவ்வடிகளே பாணனை ஆற்றுப்படுத்தும் அருள் உள்ளத்தைக் காட்டுவன. அக்காலத்தில் மிகுந்திருந்த ஆறலைக் கள்வர் தொல்லையை அறவே நீக்கி,

*"அத்தஞ் செல்வோர் அலறத் தாக்கிக்*
*கைப்பொருள் வெளவுங் களவேர் வாழ்க்கைக்*
*கொடியோ ரின்றவன் கடியுடை வியன்புலம்'*[168]

என்று பாராட்டப்பெற்ற சிறந்த வீரன். போருக்கும் புகழுக்கும் முன் சென்ற அவன் உள்ளத்தில் கலைக்கும் கலைஞர்களுக்கும் மென்மையானதோர் இடமிருந்தது. பாணர்கள் இளந்திரையனைத் தேடிக் கொண்டு வருகின்றபோது அவர்களின் பசியையும், வறுமைத் தோற்றத்தையும் கண்ட மன்னன் முதலில் அழுக்காடைகளை நீக்கிப் புதிய ஆடைகளைக் கொடுத்துப் பின் அவர்களின் பசியைப் போக்க உணவும் கொடுத்தான். இதனை,

*''மீன்பூத் தன்ன வான்கலம் பரப்பி*
*மகமுறை மகமுறை நோக்கி முகனமர்ந்து*
*ஆனா விருப்பிற் றானின் றூட்டி''*[169]

மகிழ்கிறான் இளந்திரையன். கலைஞரின் மக்களைத் தன் மக்கள்போல் கருதி, அப்படியே உறவுமுறை கூறி விரும்பி அவர்களுக்கு உணவூட்டி மகிழ்கிறான். செல்வம், கலையைத் தன் ஆனா விருப்பத்திற்குரியதாக உயர்த்தி வைத்துக் கண்டது என்பதற்கு இது சிறந்ததோர் எடுத்துக்காட்டாகும். இளந்திரையன் நில்லா உலகில் நிலைபெற வேண்டிப் புகழைச் சேர்க்க விரும்பியவன். ஆதலால் தன்னை நாடி வந்த பாணர்க்குப் பாண் கடனும், புலவர்க்குப் பூண் கடனும் ஆற்றியவன். கொடை வழங்கும் உள்ளத்தான் ஆதலால் பரிசில் பலவும் தந்து அனுப்புவன் என்று ஆற்றுப்படுத்தினான்.

**கூத்தராற்றுப் படை**

மலைபடுகடாம் என்னும் நூலின் பாட்டுடைத் தலைவனாகிய நன்னன் சேய் நன்னன் அக்காலக் குறுநில மன்னர்களில் ஒருவன். கலைஞர்களை அவன் மகிழ்ந்து வரவேற்கும் சிறப்பு குறிப்பிடத்தக்கது. கலைஞர்களைக் கண்டதும், அவன் உள்ளம் மகிழ்ச்சியால் விரிகின்றது. வறுமை துடைக்கும் ஒருவனைக் கண்டோம் என்று கலைஞர் மகிழ, கலைஞர்கள் என்னை நாடி வரப்பெற்றேனே என்று அரசன் மகிழ்கிறான். இதனை,

*''பரந்திடங் கொடுக்கும் விசும்புதோய் உள்ளமொடு*
*நயந்தனிர் சென்ற நும்மினுந் தான்பெரிது*
*உவந்த உள்ளமோ டமர்ந்தினிது நோக்கி''*[170]

என அவன் இயல்பைக் கூத்தர்களுக்கு விளக்குகிறார் ஆசிரியர்.

"கலம்பெறு கண்ணுளர் ஒக்கல் தலைவ
தூமலர் துவன்றிய கரைபொரு நிவப்பின்
மீமிசை நல்யாறு கடற்படர்ந் தாஅங்கு
யாமவ ணின்றும் வருதும் நீயிரும்
கனிபொழி கானம் கிளையொ டுணிஇய
துனைபறை நிவக்கும் புள்ளின மான'[171]

"நன்னன்சேய் நன்னற் படர்ந்த கொள்கையொடு
உள்ளினிர் சேறிர் ஆயிற் பொழுதெதிர்ந்த
புள்ளினிர் மன்ற வெற்றாக் குறுதலின்'[172]

இவ்வரிகள் கூத்தர்களை ஆற்றுப்படுத்தும் மன்னனின் அருள் உள்ளத்தைக் காட்டுகின்றன.

'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்னும் நல்லுள்ளம், அழுக்காறில்லாத அறவுள்ளம் பெற்று வாழ்ந்த மனிதநேய வாழ்க்கைப் பண்பாடே தமிழில் ஆற்றுப்படை இலக்கியமாகச் சுடர்விட்டு ஒளிவீசுகிறது. பாணாற்றுப் படையாக புறநானூற்றில் எட்டுப் பாடல்கள் உள்ளன. (68, 69, 70, 138, 141, 155, 180, 181) விறலியாற்றுப் படையாக நான்கு பாடல்கள் உள்ளன (64, 103, 105, 133) பதிற்றுப்பத்தில் பாணாற்றுப்படை இரண்டு பாடல்கள் உள்ளன (66, 67) விறலியாற்றுப் படை ஆறு பாடல்கள் உள்ளன (40, 49, 57, 60, 78, 87).

## உலகளாவிய மனித நேயம்

மக்கட் சமுதாய முழுமைக்கும் ஏற்ற சில மனிதநேயக் கருத்துக்களை சங்கப் பாடல்கள் கொண்டு தெளியலாம். உலகளாவிய மனித நேயத்தினால் பொதுநலப் பணிபுரியும் பெருமக்கள் மல்கியிருத்தலைக் காணலாம். இதனால் உலகமும், உலகியலும் அழியாது வாழ்கின்றன.

### நல்வினையின் நன்மை

தமிழன் உள்ளத்தில் கலக்கம் கிடையாது. பலவித உண்மைகளையும், உலகியல் அனுபவங்களையும் சீர்தூக்கி ஆராய்ந்து முடிவு கண்டவன் தமிழன். பயன் கிடைப்பினும், கிடைக்காவிடினும் உயர்ந்தனவற்றையே அவன் உள்ளம் நாடியது. சிட்டுக்குருவி வேட்டைக்குச் சென்று ஒரு குருவியும் கிடைக்காது வீடு திரும்புவதும்

உண்டு. ஆதலால் குருவி அடிப்பதைவிட யானை வேட்டைக்கு முயல்வதே மேல் என்ற நல்ல செயலில் முனைந்தது தமிழ் உள்ளம்.

உலகம் இன்பமுற்று வாழ வேண்டுமானால் ஒருவன் நல்லனவே செய்ய வேண்டும். நல்லது செய்ய முடியாது போயினும் குற்றமில்லை. இத்தகையவன் ஒரு கெடுதலும் செய்யாதிருத்தல் அதுவே மேலானது என்பதை,

"நல்லது செய்தல் ஆற்றீ ராயினும்
அல்லது செய்தல் ஓம்புமின்"[173]

இவ்வரிகள் ஒருவன் செய்ய வேண்டிய சமூகத் தொண்டினை விளக்குகிறது. அவ்விதம் ஒருவன் தீமை புரியாதிருந்தால் அவனுக்கு நல்ல நெறியுண்டு. சமூகமும் தீதில்லாமல் வாழும் என்பது திண்ணம். நிலையில்லாத வாழ்க்கை பெற்றுவிட்ட மனிதர்கள், தம் வாழ்நாளில் நன்மையைச் செய்யாவிட்டாலும், பிறர்க்குத் தீமை செய்ய வேண்டாம் என்ற கருத்தை உணர்த்துகின்ற மனிதநேயத்தை இப்பாடல் புலப்படுத்துகிறது.

"செய்குவங் கொல்லோ... மாய்தல்தவத் தலையே"[174]

அதாவது, துறக்கம் கிடைப்பினும், கிடையாது போயினும், மறுபிறப்பு உண்டெனினும், இல்லையெனினும் நீ நல்லதையே செய்தல் வேண்டும் என்றான் தமிழன். நாம் செய்த நன்மைக்கு ஒரு நாளும் கெடுதல் வராது. நாம் செய்யும் நன்மையே நமக்குச் சிறந்தொரு நன்மையாகும். நாம் நன்மையைச் செய்து இம்மையில், அதனாலடையும் புகழ் சாகாது மலைபோல் நிலைத்து நிற்கும். துறக்க இன்பத்தையும், மறுபிறப்பு இன்மையையும் விட, இவ்வுலகில் பொன்றாது நிற்கும் புகழ் பெறுவாயாக என்று கூறியது தமிழ் உள்ளம் என்ற அரிய கருத்தினை இப்பாடல் நமக்கு உணர்த்துகிறது.

மற்றொரு பாடலில் நல்வினையால் நன்மை விளைவதையும், தீவினையால் தீமை விளைவதையும் ஐயமில்லாமல் கற்றவன் சங்கத் தமிழன். அவற்றை இல்லை என்று மறுப்பவர் என்றும் தீமையே புரிந்தொழுகும் தீத்தொழிலாளராய் திரிவர் என்பதையும் உணர்ந்தான். அவர்கள் என்றும் சமூகத்தையே கெடுப்பவர்கள் ஆதலால் அவர்களுடன் கூடுதல் ஆகாது என்றும் எச்சரித்தான் தமிழன் என்பதை,

"நல்லதன் நலனும் தீயதன் தீமையும்
இல்லை என்போர்க்கு இன்னா கிலியர்"[175]

இப்பாடல் மூலம் அறிய முடிகிறது. இந்நிலவுலக வாழ்வை இம்மை என்றும், உயிர்கள் மறுபடியும் பிறக்கும் மறுபிறப்பு மறுமை எனவும் கொள்ளப்படுகின்றன. இம்மையில் நல்வினையாகிய அறச்செயலைச் செய்பவர் துறக்கம் எய்துவர் என்று புறப்பாடல் ஒன்று அறிவுறுத்துகிறது.

*''ஈண்டுச் செய் நல்வினை யாண்டுச்சென் றுணீஇயர்*
*உயர்ந்தோர் உலகத்துப் பெயர்ந்தனன் ஆகலின்*
*ஆறுகொண் மருங்கின் மாதிரந் துழவும்*
*கவலை நெஞ்சத் தவலந் தீர*
*நீதோன் றினையே நிரைத்தா ரண்ணல்''*[176]

இம்மையில் நல்வினை செய்தவர் விண்ணுலகம் எய்துவர் என்பதை இப்பாடல் உணர்த்துகிறது. ஊழின் வலிமையையும், அதன் பயனையும் விளக்கும் புறப்பாடல்கள் இம்மையில் தீவினையை அறவே அகற்றி நல்வினைகளைப் புரிதற்கேற்ற நல்லுணர்வுகளை ஊட்டுவனவாய் உள்ளன. இந்நல்லுணர்வுகள் உள்ளத்தைத் தூய்மைப்படுத்தி மக்களைப் பண்பாடு உடையவர்களாக விளங்கச் செய்யும் திறத்தனவாகும்.

உலக வாழ்வாகிய இல்லறத்தையும், தவமாகிய துறவறத்தையும் சீர்தூக்கிப் பார்த்தால், தவத்திற்கு உலகம் சிறு கடுகளவும் நிகராகாது. இவ்வுண்மையினை அறிந்தோர் தவத்தைக் காதலித்து உலகத்தில் பற்று விடுவர். திருமகள் பற்று விட்டோரை நீங்க மாட்டாள். பற்றில் அழுந்தியிருப்போரைத் திருமகள் கைவிட்டு நீங்குவாள். ஆதலால் தவம் செய்தவதற்குரியதாகும் என்பதை,

''வையமும் தவமும் தூக்கின் தவத்துக்கு
ஐயவி அனைத்தும் ஆற்றாது ஆகலின்
கைவிட் டனரே காதலர் அதனால்
விட்டோடை விடாஅள் திருவே
விடாஅ தோரிவள் விடப்பட் டோரே''[177]

என்று தவத்தின் பெருமையையும், இல்லற வாழ்வில் தான் எல்லாமே உள்ளது என்று எண்ணக் கூடாது என்பதனையும் ஒரு புலவர் வற்புறுத்திக் கூறியுள்ளார்.

**பொதுநலப் பண்பு**

தன்னலம் துறந்து பிறர் நலம் பேணலும், பொதுநலம் பெருக்கலும் தியாகப் பண்பாகும். இப்பண்புடையவர் பிறர்க்குத் தொண்டு செய்வதையே தம் வாழ்வின் குறிக்கோளாகக் கொண்டு தமது உடல், பொருள், ஆவி என்ற மூன்றனையும் பிறர் நலனுக்காகவே மகிழ்வுடன் வழங்குவர். நிலவு நெடுந்தொலைவில் இருப்பினும் அஃது உலகிலுள்ள இருளைப் போக்கி, மக்களுக்கு இன்பத்தை நல்குவதோடு, தன்னிடம் உள்ள கறையாகிய இருளைப் போக்கிக் கொள்ள நினைப்பதில்லை. தியாகப் பண்புடையோர் இத்தகையராவார். 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்ற குறிக்கோளின்படி, தம் வாழ்வின் நலம் கருதாது பிறர் வாழ்வின் நலம் கருதிப் பணிபுரிவோர் தியாகச் சீலராவார்.

> ''வாழ்தல் வேண்டிப்
> பொய்கூறேன் மெய்கூறுவல்''[178]

என்ற தெளிவு அமைந்த வாழ்வின் சீர்மை பொய்யையே போற்றும் உலகினுக்கு உய்யும் வழிகாட்ட வல்லது. புரைதீர்ந்த நன்மை பயக்குமாயின், பொய்மையும் வாய்மையாம் என்ற கருத்துப்பட, இப்பாடல் உலகளாவிய மனிதநேயமாகத் திகழ்கிறது.

சேர, சோழ, பாண்டிய நாடு என்ற எல்லைகளை எல்லாம் மறந்து மக்கள் என்ற பொதுநிலை நோக்கோடு புலவர்கள் உணர்த்திய பாடல்களும் பல உண்டு. கவிச் செல்வமும், புவிச் செல்வமும் ஒருங்கே வாய்க்கப் பெற்ற கடலுள் மாய்ந்த இளம் பெருவழுதியும், இவ்வுலகம் உள்ளளவும் மாயாப் புகழ்படைத்த கணியன் பூங்குன்றனாரும் தமிழ்ப் பண்பாட்டினை குன்றின் மேலிட்ட விளக்காக்கியவராவர்.

தன்னலமும், அவா, வெகுளி, மயக்கங்களும் தீயன பிறவும் நிறைந்துள்ளது இவ்வுலகம். இத்தீயனவற்றுக்கு இடம் தந்த உலகம் அழிந்துபடாமல் இருப்பதற்குக் காரணம் உலகம் இன்பப் பொழிலாக இருக்க வேண்டும் என்பதாகும். ஆயின் நாம் காணும உலகமோ துன்பத்தினின்று விடுதலை பெறுவதற்கு வழி தெரியாமல் அல்லல் உற்றுத் தவிக்கின்றது. எங்ஙணும் பகையும், பூசலும் நிறைந்த இந்த நிலையினை மாற்ற வழியுண்டு. இச்சிந்தனையை நிலைக்களனாகக் கொண்டு நிகழ்கின்றது பூங்குன்றனாரின் உணர்வு. தன்னலமற்ற தொண்டின் மாண்பினையும், விருப்பு வெறுப்பற்று யாவர் மாட்டும் உறவு கொள்ளும் பரந்த மனப்பான்மையும்

எடுத்தியம்புகின்றன அப்பாடல்கள். இதனை,

> "தமக்கென முயலா நோன்றாட்
> பிறர்க்கென முயலுந ருண்மை யானே"[179]

என்ற இப்பாடலில் எலும்பாலும் பிறர்க்கே உரியராய் வாழும் சான்றோரது உள்ளத்திலே பிறரை வெறுக்கும் பிழையுணர்வு தோன்றாதாகலின் 'முனிவிலர்' என அடுத்துக் கூறினார். சான்றோர்கள் உலகம் முழுதும் கிடைத்தாலும் பழிச்செயல் மேற்கொள்ள மாட்டார்கள். இத்தகைய பண்புகள் படைத்த தொண்டர்கள் வாழ்வதால் தான் உலகம் வாழ்கின்றது. பற்றும், பகையும் பிறப்பதற்குக் காரணமான தன்னலம் உலகை அழிக்க முனைவது. தமக்கென வாழாமையும், பிறர்க்கென முயல்தலும் கொண்ட சான்றோர் தம் பொதுநல நினைவு உலகை வாழ்விக்க முனைவது. அச்சான்றோர் தம் நல்லியல்பு குறையும் நாளே உலகம் அழியும் நாளாகும்.

உலக மக்கள் மத, இன, மொழி, நாடு என்ற வேற்றுமையின்றி, ஒன்றுபட்டு வாழ்வார்கள். இன்று உலகில் நிலவும் துன்பங்களுக்கெல்லாம் காரணம் ஒன்று தன்னலம். மற்றொன்று உள்ளம் பண்படாமை. பண்பட்ட உள்ளத்தில் தன்னலம் அரும்பாது. உள்ளம் பண்படாமையின் விளைவே தன்னல வெறி. 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்று சொல்லுதல் எளிது. அதனைச் செயல் முறையில் காட்டும் நெறிகளைத் தெளிந்து சொல்லுதல் அரிது. செயற்கரிய அச்செயலை,

> "யாதும் ஊரே... அதனினும் இலமே"[180]

என்ற பூங்குன்றனார் பாடல் செவ்வனே தெளிவுறுத்துகின்றது.

இப்பாடலின் கருத்துக்கு மாறாக பலர் இனவேற்றுமை பாராட்டுவதைக் காண்கிறோம். இப்பார் முழுவதையும் தமது சொந்த ஊர் என்று கருதி மகிழ்ந்து இறும்பூது அடையும் வெற்றியினைப் பாடலின் முதல் வரியிலேயே தெரிவிக்கின்றார். எல்லா ஊரையும் நம் ஊராகவும், எல்லாரையும் நம் உறவினராகவும் எண்ணிப் போற்றும் இயல்பு வந்தபிறகு, நாம் வாழ்கின்ற போது நம்மை வந்தடைந்த இன்பமோ, துன்பமோ அவற்றிற்காக அடையும் நல்லதோ, தீயதோ நம்மாலே விளைவதன்றிப் பிறராலே வருவதில்லை என்ற பேருண்மையை அடுத்த இரண்டு வரிகளில் காண முடிகிறது. அதற்கடுத்த வரியில், சாதலோ இவ்வுலகில் புதியதன்று. வாழ்தலோ இனிது என மகிழ்வதும், வெறுத்து அதனை இன்னாது என ஒதுக்குதலும் இல்லை

என்ற உயர்பெரும் தத்துவத்தை உரைக்கின்றார். பேரியாற்று நீரிலே செல்லும் மரக்கட்டையைப்போல் நம் அரிய உயிரானது முறையாகச் சென்று கரைசேரும் என்பதனைத் துறவுடையோர் காட்சியினால் தெளிகின்றோம்.

எனவே, செல்வத்தால் பெரியோரை மதித்தலும், சிறியோரை இகழ்தலும் செய்யோம். அவரவர் நல்லுள்ளப் பான்மை ஒன்றையே யாம் எண்ணுவோம் என்று ஆசிரியர் கூறுவதிலிருந்து விருப்பு, வெறுப்பற்ற நிலையிலே உலகத்தையே உரிமையாக்கிக் கொள்ளவும், ஒற்றுமை உணர்வால் எவரையும் உறவாக்கிக் கொள்ள முடியும் என்றும் இவற்றை உண்மையாக்கிக் காட்ட உள்ளம்தான் வேண்டும் என்றும், இன்ப துன்பமும் ஏற்றத் தாழ்வும் எதிலும் எந்நிலையிலும் எவ்விடத்தும் அவரவர் நல்லுள்ளப்பான்மை ஒன்றையே காணும் குணமும் அமையப் பெற்றால் 'ஒன்றே உலகம்' என்பதை உண்மையாக்கிக் காட்டும் தமிழர்களின் உயரிய மனித நேயத்தை உணர்த்துகிறது.

நாட்டின் ஒற்றுமைக்கு விரோதமாக நாட்டைத் துண்டாட வேண்டும் என்று பேசுவதைக் காண்கிறோம். உலகமே ஒன்றுபட்டு வாழவேண்டும் என்னும் கருத்துள்ள இப்பாடலைப் போற்றுவோர் நாடு, இன, மொழி, மத வெறுப்பிலோ, வெறியிலோ தலையிட மாட்டார்கள். உலகம் ஒன்றுபடவே உழைப்பார்கள். இப்பாடல் கூறும் பொருள், உண்மையான சன்மார்க்க நெறியாகும். எல்லா மக்களும், எல்லா நாட்டு மக்களும் ஒன்றுபட்டு வாழ்வதுதான் சன்மார்க்கமாகும்.

இத்தகைய நெறியை அவர் காலத்தில் தமிழகத்திலிருந்த சூழ்நிலை, ஆசிரியரை இவ்வுண்மையைக் காணச் செய்தது என்பதில் ஐயமில்லை. சமயங்களின் சாரமாய், வாழ்வின் விளக்கமாய், உணர்வின் இமயமாய் உள்ள இந்நெறியினை இன்றைய உலகம் உணருமாயின் உயிர் வாழ்வு செழிக்கும் என்பது உறுதி. இப்பாட்டின் வழி புலவர் உலக சகோதரத்துவம் உணர்த்துவது நினைத்தற்குரியது. மேற்கூறிய பாடற் கருத்துக்கள் சமுதாய வாழ்வு முழுமைக்கும் ஏற்றனவாய் பொன் எழுத்துக்களில் பொறித்துப் போற்றத்தக்கனவாகும்.

இவ்வாறு நாகரிகமும், கலைச்சிறப்பும், பண்பாடும், குணநலனும் செறிந்து கிடக்கும் தமிழ் உள்ளம் ஓர் அழகிய கோயிலாக நமக்குக் காட்சியளிக்கிறது. பொறுமை, ஈகை, வீரம், உயர்வு என்பன அக்கோயிலைத் தாங்கும் தூண்களாகும்.

சங்கத்தமிழரின் மிகச் சிறந்த பண்பியல்புகள் இக்காலத்து மக்களுக்கும் தகும் எனும்படியாகத் தமிழ் உலகம் விழித்தெழுந்து பயின்று பயன்பெற வேண்டும்.

இதுகாறும் கூறியவற்றால் பண்டைத் தமிழர் தங்கள் கவி வளத்தாலும், கலை வளத்தாலும், உள வளத்தாலும் உலக நாகரிகம் ஓங்கி வளர்வதற்கு, எத்துணை அளவு உதவியுள்ளார்கள் என்பது நன்கு தெரியவரும். இத்தகைய சிறந்த உள்ளத்தைத் தாயகமாகப் பெற்றிருக்கும் தமிழ் மக்கள், இவ்வுலகில் சமுதாயத்தில் தலை நிமிர்ந்து வாழ்வதற்குத் தடையில்லை என்று அறுதியிட்டுக் கூறலாம்.

# குறிப்புகள்

## இயல் - நான்கு

1. புறம். 289:8-10.
2. புறம். 170:5-6.
3. புறம். 287:1-2.
4. புறம். 34:1.
5. புறம். 43:13-14.
6. புறம். 6:19-20.
7. புறம். 122:2-3.
8. புறம். 93:9-11.
9. பெரும்பாண். 297-299.
10. பட்டின.ı 206-212.
11. புறம். 207:4-5.
12. குறள்: 972.
13. பட்டின. 199-205.
14. குறள்: 133.
15. நாலடி. 133:3-4.
16. தொல். பொருள். கள. நூ.26:2.
17. புறம். 214:6.
18. பதிற்று. 89:11.
19. பரி. 2:24.
20. புறம். 31:1-2.
21. புறம். 367:10-11.
22. புறம். 187:3-4.
23. புறம். 50:14-15.
24. புறம். 182:1-3.
25. புறம். 312.
26. குறள்: 67.
27. புறம். 226:3-6.
28. புறம். 235:10-15.

29. புறம். 235:17.
30. குறள்: 785.
31. குறள்: 782.
32. சீவக. சிந். 253.
33. புறம். 215:7-9.
34. புறம். 216:12.
35. புறம். 217:3-11.
36. புறம். 222:3-6.
37. புறம். 223:3-6.
38. அகம். 339:11-12.
39. குறள்: 1122.
40. புறம். 232.
41. புறம். 12.
42. புறம். 95.
43. புறம். 107.
44. புறம். 167:1-7.
45. புறம். 394.
46. புறம். 141:12-15.
47. புறம். 148:5-7.
48. புறம். 197:15-18.
49. புறம். 127.
50. புறம். 266:10-13.
51. புறம். 47:4-5.
52. புறம். 163.
53. புறம். 196:13-15.
54. புறம். 210.
55. புறம். 72:15-16.
56. புறம். 168:18-22.
57. புறம். 132:1-3.
58. புறம். 163.
59. புறம். 54:1-4.

60. பதிற்று. 85:9-13.
61. அகம். 78:15-16.
62. புறம். 202:1-17.
63. புறம். 99:10-12.
64. புறம். 158:4-20.
65. புறம். 246.
66. புறம். 251:4-7.
67. புறம். 252:1-3.
68. கொ.வே. 18.
69. புறம். 157:1-3.
70. கலி. 133:8.
71. ஐங். 5:2.
72. ஐங். 6:2.
73. ஐங். 7:2.
74. ஐங். 8:2.
75. புறம். 334:5-11.
76. தொல். பொருள். கற்.நூ. 11:3-4.
77. புறம். 306:3-7.
78. புறம். 101:1-3.
79. புறம். 10:7-9.
80. புறம். 47.
81. புறம். 46:5-8.
82. புறம். 320:6-11.
83. பெருமபாண். 154-165.
84. குறள்: 969.
85. புறம். 74.
86. புறம். 65:10-12.
87. புறம். 205:1-2.
88. புறம். 197:15-18.
89. புறம். 68:3.
90. புறம். 72:13.

91. புறம். 360:2.

92. பட்டின. 169-170.

93. தொல். பொருள். மெய்ப். நூ.9

94. ஆ.சூ.29.

95. புறம். 206:13.

96. புறம். 207:7.

97. புறம். 191:6-7.

98. புறம். 183:1-2.

99. புறம். 183:8-10.

100. பொருந. 100.

101. முல்லை. 36.

102. மதுரை. 420.

103. புறம். 170:3.

104. புறம். 28:1-6.

105. புறம். 47:10-11.

106. புறம். 50:8-10.

107. புறம். 346:3.

108. புறம். 183:7.

109. தொல். பொருள். புறத். நூ.23.

110. புறம். 165:1-2.

111. புறம். 27:11-14.

112. புறம். 29:22-24.

113. புறம். 194.

114. புறம். 356.

115. புறம். 357.

116. புறம். 51:9-11.

117. புறம். 192:9-10.

118. பட்டின. 227.

119. புறம். 192:2-3.

120. குறள்: 221:1.

121. குறள்: 231.

122. புறம். 27:7-9.
123. புறம். 110:4.
124. புறம். 106.
125. புறம். 142:5-6.
126. புறம். 141:7-9.
127. புறம். 122:4-7.
128. புறம். 123.
129. புறம். 153.
130. புறம். 130.
131. புறம். 134.
132. புறம். 149.
133. புறம். 150:20-24.
134. புறம். 101.
135. புறம். 315:1-3.
136. புறம். 208:7-9.
137. புறம். 390.
138. புறம். 392:13-21.
139. புறம். 385.
140. புறம். 383.
141. புறம். 394.
142. புறம். 398.
143. புறம். 388.
144. புறம். 395.
145. புறம். 377:16-20.
146. புறம். 378.
147. புறம். 372.
148. புறம். 371.
149. புறம். 11:9-18.
150. புறம். 34:8-16.
151. புறம். 32:1-6.
152. புறம். 362:12-15.

153. புறம். 140.

154. புறம். 389.

155. புறம். 171.

156. புறம். 165:10-13.

157. புறம். 205:1-2.

158. புறம். 206:11-13.

159. குறள்: 1061.

160. ஆ.கு. 8.

161. ஆ.கு. 9.

162. புறம். 204:1-4.

163. புறம். 218.

164. புறம். 199.

165. மதுரை. 749-752.

166. சிறுபாண். 236-245.

167. பெரும்பாண். 36-38.

168. பெரும்பாண். 39-41.

169. பெரும்பாண். 477-479.

170. மலைபடு. 558-560.

171. மலைபடு. 50-55.

172. மலைபடு. 64-66.

173. புறம். 195:6-7.

174. புறம். 214.

175. புறம். 29:11-12.

176. புறம். 174:19-23.

177. புறம். 358:3-7.

178. புறம். 139:5-6.

179. புறம். 182:8-9.

180. புறம். 192.

# இறையியல் கூறுகளில் மனிதநேயம்

உலகம் தோன்றிய போதே அதற்கு ஒரு நெறி உண்டு. உலக உயிர்கள் தோன்றியபோதே அறம் உண்டு. அறத்தின் உயிர் அன்பு. அன்பின் முதிர்ச்சி அருள். அருளின் பயனே இறைத்தன்மை. உலக உயிர்கள் இறைத் தன்மையை அடைவதே இறையியல் ஆகும். நாம் எல்லோரும் ஒரு குல மாந்தர். நம்மிடம் உள்ள ஆன்மா ஆன்மநேயம் பெற்று இறைத் தன்மைக்கு உயர்வதே இறையியல் நோக்கமாகும். இறையியல் என்பது ஒரே இறைவன், ஒரே உலகம், ஒரே மனித சமுதாயம் என்ற உணர்வுடன் ஒரே மேகமாகிய குடை நிழலில் அனைவரும் ஒருமை கொண்டு வாழ வேண்டும். இந்தச் சம உரிமையை நாட்டுவதே இறையியல்.

உலகத்தில் உள்ள மக்களைப் பல வகையாகக் காண்கிறோம். உலக உயிர்களில் எத்தனையோ வேறுபாடுகள் உண்டு. அதாவது பழத்தோட்டத்தில் உள்ள மா, பலா, வாழை, கொய்யா முதலான எல்லா மரங்களும் கனிகளை உலகோர் உண்ணத் தருகின்றன. இவ்வாறு உலகிற்கு உதவும் கருணையே இறையியல். விளக்கானது தன் எண்ணெயைத் திரியெல்லாம் தந்து சுடரை வளர்த்து ஒளி பரப்பும் தியாகச் செயலே இறை உணர்வு. மலை அருவி உயிர்களையும், பயிர்களையும் ஊட்டி வளர்க்கும் நல்லற வாழ்வே இறையியல். கதிரவன் உலகச் சிற்பியாகத் திகழ்ந்து கடலில் ஆவிமுகந்து மழை பொழிகின்ற அருட்செயலே இறையியலாகும்.

இயற்கைப் பொருள்களைத் தவிர, மனிதர்களுக்குள்ளும் இப்படிப்பட்ட பண்பாடுகள் உண்டு. ஆதிமுனிவர், தாம் அருளால் அறிந்ததை ஆன்ம கோடிகளுக்கு வேதாகம நூல்களாக வழங்கினர். அகத்தியர், விசுவாமித்திரர் முதலான முனிவர்கள் தவநெறியால் பெற்ற மந்திர வாக்குகளை உலகிற்குத் தந்தனர். வியாசர், வான்மீகி போன்றோர் மனித வாழ்வுக்கு அறநெறி காட்டினர். திருவள்ளுவர், திருமூலர், அப்பர், மாணிக்கவாசகர், தாயுமானவர், இராலிங்க அடிகளார் ஆகியோர் தமது பாசுரங்களால் மனிதர் புனிதத் தன்மையை அடையும் இறை உணர்ச்சியைத் தூண்டினர். இவையெல்லாம் இறையியல் தொண்டுகளாகும். இத்தகையோர் உலக நன்மை கருதிச் செய்யும் செயல்களே இறையியலாகும்.

எல்லா உயிர்களுக்கும் நன்மை புரிவதே இறையியல் இயற்கையின் சக்திகளை இயந்திரத்தில் ஊக்கி மனித வாழ்வு இனிதே நடைபெற ஆக்கவேலை செய்வதே அறநெறி. போர்க்கருவிகளாக்கிக் கொலை புரிவது அழிவுநெறி, உலகை அழிவு

நெறியினின்று ஆக்க நெறிக்குத் திருப்பும் அன்பருளே இறையியலாகும். அதேபோல ஒவ்வொருவர் உள்ளத்திலும் உள்ள ஆத்ம சக்தியைத் தூண்டி,மனித வாழ்வைப் புனிதமாக்கும் நெறியே இறையியல். நாம் எல்லோரும் எந்நாட்டைச் சார்ந்தவர்களாயினும் ஒரே மனித மரபைச் சார்ந்தவர்கள்.நம் அனைவருக்கும் காற்றையும், ஒளியையும், மழையையும் வானமே நல்குகின்றது. நம் எல்லோருக்கும் அன்பும், அறமும், ஆத்ம ஞானமும், அருளும் வேண்டும். பசிக்கு உணவு போல பண்பாட்டிற்கு இறையியலாகும்.

மனிதராகிய நமக்கெல்லாம் இனிய பண்பாட்டை மனித நேயத்தைத் தருவதே இறையியலாகும். இறையியல் கொள்கையில் அன்பு, உண்மை, இன்சொல், ஒப்புரவு போன்ற நல்லறங்கள் பொதுவாகும். நடை, உடை, பாவனை, ஒழுக்கம், பழக்க வழக்கங்கள் சிறப்பாக வேறுபடும். இறைத்தத்துவம் ஒன்று. வழிபாடுகள் பல. குரு, உரு, அரு என்று தெய்வ வணக்கங்கள் பல. சில சமயங்கள் குருமாரைச் சுற்றி வருவன. புத்தரைச் சுற்றிய பௌத்தம். கிறித்துவைச் சுற்றிய கிறித்துவம். சிவனைச் சுற்றி சைவமும், திருமாலைச் சுற்றி வைணவமும் கடவுளைச் சுற்றி அமைவன. வேதாந்தமும், சித்தாத்தமும் கொள்கைகளைப் பின்பற்றி அமைவன.

ஆசை, ஆணவம், சஞ்சலம், தன்னலம், கோபம், செருக்கு, கோள், பொறாமை, வஞ்சகம், மோகம், மதம், மாச்சரியம், வன்சொல், பழிதூற்றல், தீமை செய்தல், கொலை, கட்குடி, களவு, சூது, மடமை, சோம்பல், வறுமை, அடிமைத் தனம், பயம், அசுத்தம் முதலியன நமது மனத்தில் படியும் மாசுகளாகும். இவற்றை நீக்கி மனம், வாக்கு, உடல் பரிசுத்தம் பெறுதல் சன்மார்க்கத்தின் முதல் படியாகும்.

அன்பு, வாய்மை, இன்சொல், அடக்கம், பொறுமை, அருள், அமைதி, கருணை, பக்தி, மௌனம், தியானம், தூய உணவு, தூய உடை, தூய சுற்றம், தூய்மையான நல்லுறவு, தூய வாழ்க்கை, தூயர் நேயம், பெரியார் தொண்டு, அறநெறி ஒழுக்கம், ஆன்ம நேய ஒருமைப்பாடு, சமரசம், தைரியம், புலனடக்கம், மன வைராக்கியம், யோகப் பயிற்சி ஆகியவற்றால் மனத்தில் படிந்துள்ள மாசுகள் நீங்கலாம். இவற்றைப் பின்பற்றினால் நமது தூய்மைக்கும், வாய்மைக்கும், அன்பிற்கும் ஏற்றபடி நமக்குத் திருவருள் துணை புரியும். நல்ல நெறிகளில் நாம் செல்லச் செல்ல இறைவன் அருள் வழிகாட்டி நடத்துவான்.

பெற்றோர்கள் சிறுகதைகள், நல்ல காட்சிகள், பயனுள்ள விளையாட்டுகள்,

பாட்டுகள் ஆகிய இவற்றின் மூலம் குழந்தைகளுக்குச் சிறந்த நீதிகளைக் கற்றுக் கொடுக்க வேண்டும். கல்விப் பருவத்தில் நல்ல கல்வியையும், பிரமச்சரியத்தையும் காத்தல் வேண்டும். மாணவர்கள் நல்ல ஆசிரியரைச் சார்ந்து ஒழுக்கமுடன் பணிந்து, காலத்திற்கேற்ற அறிவும், கலையும், நடையும், தொழிலும், யோகப்பயிற்சியும் பெற வேண்டும். நல்லுடல், நன்மனம், நன்னடை, நல்லறிவு, நல்திறன், நற்கலை வீட்டிற்கும், நாட்டிற்கும் பெருமை தரக்கூடிய வகையில் சிறந்தனவாக உலகிற் புக வேண்டும். அதே போலப் பெண்களும் கற்க வேண்டும்.

ஓர் ஆணும், பெண்ணும், மனமுவந்து திருமணம் புரிந்து அன்பும், அறமும், காதலும் கற்பும், முயற்சியும், செல்வமும், கலையும், வளமும், புகழும், பக்தியும், சக்தியும் நிரம்பிய இல்லறம் காத்து, நன்மக்களைப் பெற்று வளர்த்து, உலகியல்பை அறிந்து குடும்பத்திலிருந்து யோகப் பயிற்சியில் ஈடுபட்டு, இதயத்தில் பக்தியும், புத்தியில் ஞானமும் கொண்டு வாழ்க்கையில் கர்ம யோகமும் செய்தல் வேண்டும். ஊர் தோறும் சன்மார்க்க நிலையங்கள் நிறுவி அதில் சமுதாயத் தேவைக்கும், இறைத் தொண்டிற்கும் திருத்தொண்டரைப் பயிற்ற வேண்டும்.

இத்தொண்டால் ஆங்காங்கு சன்மார்க்கப் பள்ளிகள், மருத்துவச் சாலைகள், கலைக் கூடங்கள், அறநிலையங்கள் நிறுவி பொதுமக்களுக்குப் புனிதமான இறைத்தொண்டு புரிந்து, நல்ல நெறியை அடைவதற்குப் பெருமையும், புகழும், ஆக்கமும், பெருக்கமும் தேட வேண்டும். இத்தகைய பணிகளில் யோகிகளும், ஞானிகளும், இல்லறத்திலிருந்து பொதுநலம் செய்யும் மனிதர்களும் ஈடுபட வேண்டும். இத்தகைய தியாகிகளால் தான் இறையியல் வளர்ந்து உலக மக்களிடையே மனித நேயமும் நிலவும் எனலாம்.

இறைவனை எண்ணி அவன் நாமத்தை உச்சரித்து வாழ்க்கையில் உயர்வும், உய்தியும் அடைவது மனித சமுதாயத்தின் குறிக்கோளாகும். உடலால், மனத்தால், உயிரால் வாழும் வாழ்க்கை அனைத்திற்கும், அடிப்படை உயிராகும். உயிர் இல்லையேல் உடலும், உள்ளமும் இல்லை. உடலை வளர்ப்பது உணவு. உள்ளத்தைச் செம்மைப்படுத்துவது கல்வி, பண்பாட்டால் பெறும் அறிவு, உயிரை வினைகளினின்றும் நீக்கி, ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்களினின்றும் விடுதலை பெறச் செய்வது இறைவழிபாடே ஆகும்.

சங்க காலத்தில் நிலத்தை ஐந்து பாகங்களாகப் பிரித்து, அதற்குரிய

தெய்வங்களையும் தொல்காப்பியம் தெரிவிக்கின்றது. முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என்பன நிலத்தின் பாகுபாடுகள். அவற்றுள் காடும், காட்டைச் சார்ந்த இடமும் முல்லை. அதற்குத் தெய்வம் திருமால். மலையும், மலையைச் சார்ந்த இடமும் குறிஞ்சி. அதற்குத் தெய்வம் முருகன். வயலும், வயலைச் சார்ந்த இடமும் மருதம். அதற்குத் தெய்வம் இந்திரன். கடலும், கடலைச் சார்ந்த இடமும் நெய்தல். அதற்குத் தெய்வம் வருணன். நீரும், நிழலுமற்ற இடம் பாலை. அது வேனிற் காலத்தில் குறிஞ்சி, முல்லை என்பவற்றில் ஒவ்வொரு பாகத்திலிருந்து தோன்றுவது.

> *"முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து*
> *நல்லியல்பு இழந்து நடுங்குதுயர் உறுத்துப்*
> *பாலை என்பதோர் படிவம் கொள்ளும்"*[1]

என்பது சிலப்பதிகாரம். அதற்குத் தெய்வம் காளி என்ற கொற்றவை.

> *"மாயோன் மேய காடுறை உலகமும்*
> *சேயோன் மேய மைவரை உலகமும்*
> *வேந்தன் மேய தீம்புனல் உலகமும்*
> *வருணன் மேய பெருமணல் உலகமும்"*[2]

என்பது தொல்காப்பியம். சங்கத் தமிழரிடையே அவர்களுக்கே உரிய சமயமிருந்தது. தனி மனிதனிடத்தில், சமுதாயத்திலும் அதன் செல்வாக்கு இருந்தது. சமயங்கட்கு அடிப்படையான, நுட்பமான சிந்தனைகள் அவர்களிடமிருந்தன. பழமையான நிலத் தெய்வ வழிபாட்டோடு வைதீகச் சமயச் செல்வாக்கினால் ஏற்பட்ட வழிபாட்டு முறையும் இருந்தது. ஆனால் இறையியல் என்பது வாழ்க்கை நெறியாக இருந்ததேயன்றி அஃது ஒரு கலையாக வளர்க்கப்படவில்லை எனலாம்.

பண்டைத் தமிழ் மக்கள் இவ்வுலக வாழ்வையே பெரிதும் மதித்து வந்தனர். இவ்வுலகத்தில் இன்புற்று வாழ்வதே வாழ்வின் குறிக்கோளாகக் கொண்டிருந்தனர். உலகிற் பிறந்த எல்லா மக்களும் இன்புற்று வாழ வேண்டும் என்பதே சங்க கால மக்களின் கொள்கையாகும். அறநெறியில் பொருளீட்டி இன்பம் பெற்று வாழ வேண்டும் என்பதே அவர்களின் கருத்தாகும். சங்க இலக்கியங்கள் அனைத்தும் அறம், பொருள், இன்பம் வீடு என்னும் நாற்பொருள்களைப் பற்றித்தான் மொழிகின்றன.

சங்க இலக்கியத்தில் கடவுட் கருத்துகளும், இறை உணர்வுகளும் ஆங்காங்கே காணப்படுகின்றன. எனினும் அக்காலத்து இலக்கிய முயற்சியை இறைச் சார்பற்ற ஒரு இலக்கிய முயற்சியாகக் கொள்ளலாம். மக்கள் வாழ்க்கையோடு இறையியல் பிணைந்து நின்ற பிணைப்பினைச் சங்க இலக்கியங்கள் நமக்குத் தெளிவாகவே அறிவிக்கிறது. சங்க நூல்கள் என்று நாம் கருதும் பத்துப் பாட்டும், எட்டுத் தொகையும் இறையியல் மூலம் மனித நேயத்தை மக்களிடையே வளர்த்தும், சமுதாயத்தில் மேம்பட்ட பண்பாட்டையும் நமக்குத் தெளிவாக உணர்த்துவதைக் காணலாம்.

இறை உணர்வின் அடிப்படையில் பல பாடல்கள் தோன்றாது போயினும், சங்க இலக்கியங்களைப் பயின்றால் அந்நாளைய தமிழர்கள் வாழ்க்கை சமய உணர்வோடு கலந்திருந்தது என்பது நன்கு புலப்படும். இவ்விறையுணர்வும் தமிழர்களுக்கென்று தனியே இருந்ததாகக் கூறப்படும் இறை உணர்வே என்று கூறிவிட முடியாது. அகம், புறம் பாகுபாட்டில் நின்று பாட விழைந்த புலவர்களும் அந்நாளைய இறையியல் சிந்தனைகளைத் தம் அகப் புறப்பாடல்களில் கலந்து பாடியுள்ளனர்.

## முருகன் வழிபாடு

முருகன், சங்க காலத் தமிழ் மக்களிடம் சக்தி வாய்ந்த தெய்வமாக வணங்கப்பட்டு வந்துள்ளார். நன்னன் என்பவன் முருகனை ஒத்த பேராற்றல் படைத்தவன் என்று மலைபடுகடாத்தில் கூறப்பட்டுள்ளது.

*"வெல்போர்ச் சேஎய்ப் பெருவிறல்"*[3]

என்னும் இத்தொடரில் நன்னனை முருகனோடு ஒப்பிட்டுள்ளமையால் அக்காலத்தில் முருக வழிபாடு உண்டு என்பது தெரிய வருகின்றது.

திருமுருகாற்றுப் படையில் முருகனின் பிறப்பு, சிறப்பு, வீரம், சிவனுக்கும், பார்வதிக்கும் மகனாக அவதரித்தது முதலியன எல்லாம் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. பல சிறப்புகளையுடைய முருகன் 'தேவர் படைக்குத் தலைவனாக'[4] இருந்து தேவர்களைக் கொடுமைப்படுத்திய அசுரர்களை அழித்துள்ளார். 'தோற்றுப் போன சூரபதுமன் பயந்து கடலில் ஓடிய ஒளியை விடாது சென்ற முருகன், கடலில் மறைந்திருந்த சூரபதுமனைக் கொன்று, தேவர்களைக் காப்பாற்றினான்'[5] இதிலிருந்து முருகன் தேவர்களிடத்துக் காட்டிய தெய்வநேயம் புலப்படுகிறது.



## முருகனின் திருவுருவச் சிறப்பு

தன்னைச் சேர்ந்த அன்பர்களின் தீவினைகளைப் போக்கி, வீட்டின்பத்தை நல்கும் திருவடிகளை உடையவன். 'எதிரிகளை அழிக்கும் அளவிற்கு வலிமையான கைகளை உடையவன். தெய்வயானையின் கணவனாவான்'[6] மார்பில் அழகிய மாலை உண்டு[7] இவனுக்குரிய அடையாளப் பூ செங்காந்தள் பூவாகும்[8] இவனுக்கு ஆறு முகங்களும், பன்னிரு கைகளும் உண்டு[9] தேவர்களுடைய படைக்குத் தலைமை வகிக்கும் அளவிற்கு வலிமை பொருந்தியவன்.[10] கல்லாலின் கீழிருந்த கடவுளின் மகன், பெருமையுடைய மலையரசன் மகளுடைய மகன். பகைவர்களுக்கு எமன் போன்றவன். வெற்றித் தெய்வமாகிய கொற்றவையின் மகன்[11] என்றும் திருமுருகாற்றுப்படை முருகனின் சிறப்பை எடுத்துரைக்கின்றது. இத்துணை அழகான முருகனின் மீது குறிஞ்சி நில மக்கள் நம்பிக்கையும், ஆழ்ந்த பக்தியும், இறைப்பற்றும், மனித நேயமும் கொண்டிருந்தார்கள்.

## குறிஞ்சிக் கடவுள்

குறிஞ்சிக் கடவுள் முருகன் என்பது 'சேயோன் மேய மைவரை உலகமும்' என்பதனால் விளங்கும். தமக்கு அவ்வப்போது நேரும் துயரங்களைப் போக்கிக் கொள்ள அக்கடவுளுடைய அருள் பெற வேண்டித் தம்முடைய பரிவாரங்களுடன் மலை நாட்டு மக்கள் குன்றக் குரவை ஆடுவர். அவரைப் பூசிப்பவன் வேலன் என்று அழைக்கப்படுவான். இக்காலத்தார் அவனைப் பூசாரி என்பர். அவன் ஆவேசம் கொண்டு குறிசொல்லுவான். வேடர்கள் முருகக் கடவுளுக்குப் பலி கொடுப்பது வழக்கம்.

திருமுருகாற்றுப் படையில் முருகன் எழுந்தருளியிருக்கும் இடங்கள் ஆறு சொல்லப்பட்டிருப்பதுடன், அவருடைய பெருமைகள் பல கூறப்பட்டுள்ளன. திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், பழநி, திருவேரகம், குன்றுதோராடல், பழமுதிர்ச்சோலை என்பனவாம். இன்று முருகன் வீற்றிருக்கும் மருதமலை ஏழாவது இடமாகக் கருதப்படுகிறது. அவற்றுள் திருச்செந்தூர் என்பது திருச்சீரலைவாய் என்றும் கூறப்படும்.

பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனைப் பலகாலம் வாழ்ந்திருக்க வேண்டும் என்று வாழ்த்தக் கருதிய புலவர், திருச்செந்தூரில் கடலி அலைகளால் மோதப்படுவதும், முருகக் கடவுளின் இருப்பிடமாகிய

திருக்கோயிலின் முன்னுள்ள துறையில் கடுங்காற்றால் திரட்டித் தொடுக்கப் பெற்ற மணலை விட பல காலம் நீ வாழ்வாயாக'[12] என வாழ்த்தியிருக்கின்றனர். இதனால் திருச்செந்தூரின் பழமை புலப்படுகின்றது.

திருவேரகம் என்பது கும்பகோணத்தில் உள்ள சுவாமி மலை ஆகும். பழமுதிர்ச் சோலையில் இப்பொழுதும் மதுரையில் முருகனுக்குக் கோயில் உண்டு. ஆனால் சரவணப் பொய்கை என்ற ஒரு தீர்த்தமிருத்தலால் அங்கே முன்னமே முருகக் கடவுளின் தலம் இருந்திருக்க வேண்டும் என்று தெரிகிறது. அதுவே மதுரையில் உள்ள திருப்பரங்குன்றமாகும். இந்த ஆறு தலங்களும் படை வீடு என்று வழங்கப்படும். பிற்காலத்தில் ஒவ்வொரு தலமும் படைவீடு ஆகிவிட வேண்டிய அவசியம் நேர்ந்ததுண்டு. மதுரைக் காஞ்சியிலும், பரிபாடலிலும் திருப்பரங்குன்றத் திருவிழா பலபடப் பாராட்டப்பட்டுள்ளது.

முருகக் கடவுள் ஆவேசம் வந்ததாக அபிநயித்துக் குறி சொல்லும் வேலனை நோக்கித் தோழி கூறியதாக நற்றிணையில்,

*''கடவுள் ஆயினும் ஆக*
*மடவை மன்ற வாழிய முருகே''*[13]

என்ற பாடலில் தலைவி காதலால்தான் வருந்துகின்றாள். 'நீ தெய்வமாக இருந்தாலும் இரு. இச்செய்தியை நீ தெரிந்து கொள்ளவில்லை. அதனால் அறியாமையை உடையை' என்பது இதன் பொருள். 'தெய்வமல்ல' என்று சொன்னதால் தெய்வ அபசாரம் ஏற்படுமோ என்றஞ்சி 'வாழிய முருகே' என்று சொல்லியிருக்கிறாள். ஐங்குறுநூற்றில் வெறிப்பத்து என்ற பகுதியில் 'தலைவியின் பொலிவற்ற நிலைக்கு முருகனே காரணம் என்று கருதி, நோயின் காரணத்தை அறிவதற்கு வேலன் முருகனைப் பேணுவான்'[14] எனக் கூறப்படுகிறது.

### எட்டுத் தொகையில் முருகன்பெறுமிடம்

குறுந்தொகையில் கடவுள் வாழ்த்தாக முருகனைப் பற்றிய பாடல் இடம் பெற்றுள்ளது.

*''தாமரை புரையும் காமர் சேவடிப்*
*பவழத் தன்ன மேனித் திகழொளிக்*
*குன்றி யேய்க்கும் உடுக்கைக் குன்றின்*

*நெஞ்சுபக எறிந்த செஞ்சுடர் நெடுவேல்*

*சேவலங் கொடியோன் காப்ப*

*ஏம வைகல் எய்தின்றால் உலகே''*[15]

என்ற இப்பாடல் மேனியழகும், வீரமும் வாய்ந்த முருகன் இவ்வுலகத்தைக் காத்து வருதலால், உயிர்கள் அனைத்தும் தமக்குரிய இன்பத்தை அடைந்து வருவதாகப் புலவர் குறிப்பிட்டுள்ளார்.

சங்க இலக்கிய எட்டுத் தொகை நூல்களில் கடவுளைப் பற்றிய குறிப்புகளும், வழிபாடு பற்றிய குறிப்புகளும் ஆங்காங்கு வந்தாலும் பரிபாடலைப் போல அவை அமையவில்லை எனலாம். முருகப் பெருமானுக்குத் தனக்கென நிறம், குணம், பிறப்பு என்பது இல்லை. எனினும் அன்பர்கள் வேண்டியாங்கு வந்து அருள் புரிவான். இவ்வுலகங்களுக்கு எல்லாம் அவனே தலைவன். அவன் ஆணையாலேயே எல்லா உயிர்களும் உயர்வும், இழிவுமாய பிறப்பினை எய்துகின்றன என்பதை,

*''பாயிரும் பனிக்கடல் .... வலத்தினிதே''*[16]

இச்சொல்லோவியத்தில் விளக்கியுள்ளார். இவ்வாறு வீரமும், ஈரமும் நிறைந்த உள்ளமுடைய முருகப் பெருமான் திருப்பரங்குன்றத்தில் தங்கியிருக்கின்றான்.

முருகப் பெருமானின் அருள் தீரத்தையும், வீரத்தையும், அவர்கள் இவ்வாறு போற்றுவதெல்லாம் இவ்வுலக இன்பங்களைப் பெற்றுப் போகத்திலும், செல்வத்திலும் வாழ்வதற்கல்ல. என்றும் அழியாப் பேரின்பம் பெறுவதற்காகவே எனலாம். 'கடப்பம் பூ மாலை யணிந்த முருகனே! நாங்கள் உன்னிடத்து இருந்து பெறக் கருதுபவை, அனுபவிக்கப்படும் பொருள்களும், அவற்றைப் பெறுவதற்குரிய பொன்னும், அவற்றால் பெறும் இன்பமும் அல்ல. வீடு பேற்றினைத் தருவதற்குரிய உன் அருளும், அதனை நாங்கள் பெறுவதற்குரிய உன் திருவடிக்கண் அன்பும், அறநெறியுமாகிய இம்மூன்றேயாகும் என்று அவர் முருகனிடம் வேண்டுவதால் இதனை நாம் அறியலாம்.

*''யாம் இரப்பவை*

*பொருளும் பொன்னும் போகமும் அல்ல; நின்பால்*

*அருளும் அன்பும் அறனும் மூன்றும்''*[17]

என்பது கடுவன் இளவெயினனார் என்னும் புலவரின் வேண்டுகோளாகும்.

இதிலிருந்து பொருட்களின் மீது பேராசை இல்லாத மனித நேயப் பண்பு நிறைந்த புலவரின் உள்ளத் தெளிவினை அறிந்து கொள்ள முடிகிறது. ''ஈவாரைக் கொண்டாடி ஏற்பாரைப் பார்த்து உவக்கும் சேய்மாடக் கூடலிலும், செவ்வேள் பரங்குன்றத்திலும் வாழ்வோர் தாம், உண்மையாக வாழ்வோர் ஆவர். மற்றையோர் துறக்க நாடு செல்லும் தூயோர் அல்லர் என இந்நூல் குறிக்கின்றது''[18] இதிலிருந்து சங்ககால மக்கள் உண்மையாக வாழ்வதற்குரிய நெறியினைத் தெரிந்து கொண்டனர் என்பதை அறிய முடிகிறது.

மகளிர் வேண்டும் வரம் இன்னின்னவை என்பதைப் பரிபாடலில் வரும் முருகனைக் குறித்து வணங்குகின்றனர். ''மகளிர் முருகனை வழிபடுவதற்கு வேண்டிய பொருட்களை எடுத்துக் கொண்டு பரங்குன்றத்தில் ஏறி, எம்மைப் பிரிந்த கணவர் கனவிலே வந்து எம்மைத் தொட்டதை நனவிற் போலவே எம்மை விட்டுப் பிரியாமல் இருக்க, குளிர்ந்த வையையில் வரும் நீரை அணிக என்று சிலர் வரம் கேட்கின்றனர். எம் வயிற்றிலே கரு உண்டாக வேண்டும் என்று சிலர் பொருட்களை வைத்துப் படைக்கின்றனர். பொருள் தேடச் சென்றிருக்கும் என் தலைவனுக்கு நல்ல செல்வம் கைகூட வேண்டும் என்று சிலர் வேண்டினர். போரில் எம் காதலர் பகைவரைக் கொன்று வெற்றி பெறுக என்று சிலர் வணங்கினர் என்று கூறப்படுகின்றனர்.

*''அருவரைச் சேரா..... அருச்சிப் போரும்''*[19]

என்ற பரிபாடல் மேற்குறித்த கருத்துகளை விளக்குவதாக அமைந்துள்ளது. இவ்வுலக இன்பத்தை வேண்டியே மக்கள் கடவுளரை வழிபட்டனர் என்ற உண்மையை உணர்த்துகிறது.

### முருகனை வழிபடுதலால் அடையும் பேறு

முருகனை வழிபட்டால் வாழ்வில் எந்தத் துன்பமும் என்றைக்குமே இல்லை. 'தெய்வத்தன்மை பொருந்திய வலிமையான உருவத்தையுடைய முருகன் விண்ணைத் தீண்டும் அளவிற்கு வளர்ச்சி பெற்றுள்ளான்'[20] 'தன்னை நினைத்துத் தன் மீது அன்பும், பக்தியும் காட்டிவரும் பக்தர்களுக்கு முன்பாகத் தானே வலியச் சென்று காட்சியளித்து அவர்களைப் பாராட்டி அஞ்சாமல் இருக்கும்படி அருள் வார்த்தையால் உபசரித்து, வீடுபேறு நல்கும் வல்லமை பெற்றவர் முருகன்'[21] என்று மக்கள் நம்பிக்கை கொண்டனர். எல்லாக் கடவுளர்களையும் விட முருகனின் வழிபாடு

தமிழகத்துத் தலைசிறந்து விளங்கியது.

## குறவர்கள் வழிபாடு

குறிஞ்சிக் குறவர்கள் வீட்டு முற்றத்திலுள்ள மாங்கனியினையும், பலாச்சுளையினையும், தேனையும் பிசைந்து எடுத்து மூங்கில் குழாயில் அடைத்து வைத்து அந்த முதிர்ந்த கள்ளை முருகனுக்குப் படைத்து வணங்குகின்றனர்.

*''முன்றில் தேன்தேர் ... தோப்பி'*[22]

என்று கூறுவதால் குறவர்கள் முருகனை வழிபட்ட முறைமை தெரிகிறது.

குறவர்கள் வழிபாட்டிற்கென ஒருவன் இருப்பான். அவன் முருகனது வேற்படையைக் கையிலேந்தித் தன்னை இன்னான் எனத் தோற்றுவிக்கும் வகையில் இருப்பான். அவனைக் குறவர்கள் வேலன் என்றே அழைப்பர். பச்சிலைக் கொடியில், சாதிக்காயும், தக்கோலக் காயும் இடையிடையே விரவ, காட்டு மல்லிகையும், வெண் கூதாளியுமாகிய பூக்களைக் கலந்து மாலை தொடுத்துச் சென்னியில் சூடுவான். மார்பின்கண் நறிய சந்தனம் பூசிக் கொள்வான்.

இவ்வேலன் முருகனை வழிபட ஓரிடம் கண்டு, தூய்மைசெய்து பச்சிலைப் பந்தரமைத்துக் கொடுப்பர். குறவர்கள் முருகனைப் பரவுமிடத்தே செவ்வலரிப் பூக்களை மாலையாகக் கட்டி வழிபடும் இடத்தை ஒப்பனை செய்து தாம் எண்ணிய செயல் இனிதே முடிய வழிபாடு செய்கின்றனர். ''குறிஞ்சி நிலத்தில் கடம்ப மரத்தில் முருகன் உறைவதாகக் கருதி மலை நாட்டு மக்களாகிய குறவர்கள் அதற்கு விழா எடுத்துப் பூசிப்பர். அச்சமயம் குரவைக் கூத்தும் நடைபெறும். இனிய இசைக் கருவிகள் முழங்க முருகனை முன்னிலையாக்கிக் குறிஞ்சிப் பூவைக் கடப்ப மரத்தின்-கண்ணே சூடி, முருகனைக் கூடிப் பரவி வழிபடுதலால் மகளிர் தழுவிக் கைகோர்த்து மன்றங்கள் தோறும் நின்று ஆடும் குரவைத் கூத்து நடைபெற்றதை''[23] மதுரைக் காஞ்சி குறிப்பிடுகிறது.

*''மான்றோற் சிறுபறை கறங்கக் கல்லென*
*வான்றோய் மீமிசை அயரும் குரவை*
*நல்லெழி னெடுந்தேர் இயவுவந் தன்ன'*[24]

என்ற மேற்கூறிய செய்தி மலைபடுகடாம் என்ற நூலிலும் இடம் பெற்றுள்ளதைக் காணலாம்.

பலி கொடுத்தல்

சங்க நூல்களில் முருகனுக்கு வழிபாடு செய்த முறைதான் விரிவாகக் கூறப்படுகின்றது. உயிர்ப்பலி இல்லாமல் முருக வழிபாடு நடந்ததில்லை என்றே சொல்லலாம். இதனை,

*''முருகு அயர்ந்து வந்த முதுவாய் வேல!*
*சினவல் ஓம்புமதி, வினவுவது உடையேன்*
*பல்வேறு உருவின் சில்லவிழ் மடையொடு*
*சிறுமறி கொன்றுஇவள் நறுநுதல் நீவி*
*வணங்கினை கொடுத்தி'*[25]

என்ற இப்பாடல் முருகனுக்கு ஆடு பலியிடும் வழக்கமுண்டு என்பதைக் குறிக்கிறது.

*''வெறிஎன உணர்ந்த உள்ளமொடு மறியறுத்து*
*அன்னை அயரும் முருகு'*[26]

ஆட்டை அறுத்து வெறியாட்டு அயர்ந்தால் உன் நோய் தீரும் என்று எண்ணி உன் அன்னையால் வணங்கப்படும் முருகன் என்ற பொருளைத் தருகிறது. 'வெறியாடும் களத்தினை நன்கு அமைத்து, வேலிற்கு மாலை சூட்டி, கோயிலில் ஒலியுண்டாகப் பலிகொடுத்து சிவந்த தினையை குருதியுடன் கலந்து தூவி முருகனை நடு இரவில் வேலன் வரவழைப்பான்'[27] என்ற செய்தி அக நானூற்றிலும் இடம் பெற்றுள்ளது.

சங்க கால மக்கள் ஆடு, கோழிகளைப் பலியிட்டும், மது, மாமிசங்களைப் படைத்தும் வழிபாடு செய்தனர். மகள் காதல்நோயால் வருந்தியதைக் கண்ட தாய் உண்மையை உணராமல், ஏதோ தெய்வக் கோளாறினால் தான், தன் மகளுக்கு நோய் வந்தது என்று நினைத்தாள். அதனால் தெய்வங்களுக்குப் பூசை போட்டு மகளின் நோயைத் தணிக்கும்படி வேண்டிக் கொள்வதென்று முடிவு செய்தாள். தெய்வங்களை வாழ்த்தி, என் மகளாகிய இவள் பேயால் பீடிக்கப்பட்டாள் என்று உன் அன்னை தெய்வத்தின் மேல் பழிசுமத்துல் வருந்தத் தக்கது என்று தோழி, தன் தலைவியிடம் தெரிவிக்கின்றாள்.

*''மறிக்குரல் அறுத்து... நோதக் கன்றே தோழி'*[28]

என்ற இப்பாடல் மேற்கூறிய கருத்தை எடுத்துரைக்கின்றது. இதிலிருந்து பழந்தமிழ் மக்கள் பல தெய்வங்களுக்கும் உயிர்ப்பலியிட்டு வழிபாடாற்றினர் என்ற உண்மையை

அறிய முடிகிறது.

புறநூனூற்றிலும் கடவுளர்க்குப் புலால் உணவு வைத்துப் பூசை செய்வது தான் சிறந்தது என்ற கருத்து காணப்படுகிறது.

*''வாடாப் பூவின் இமையா நாட்டத்து*
*நாற்ற வுணவி னோரும்''*[29]

என்ற பாடல் அக்காலத் தமிழர் தெய்வங்களுக்குப் புலால் உணவு படைத்து வணங்கி வாழ்த்தினர் என்பதை உணர்த்துகிறது. இவ்வாறு சங்க கால மக்கள் சிலர் புலால் உணவினராய் இருத்தலால் தான் உயிர்ப்பலியிடும் வேள்விகளைச் செய்து அவைகளின் வாயிலாகக் கடவுளை வழிபட்டனர் என்பதையும், தங்கள் பழக்க வழக்கங்களை ஒட்டியே கடவுளரை வணங்கினர் என்பதையும், அக்காலத் தாயர்க்கு மகள் மீது கொண்ட மனிதநேயப் பண்பாகிய அன்பையும் இப்பாடல்கள் புலப்படுத்துகின்றன.

பெரிய மாட மாளிகைகளில் விழாக்கள் நடைபெறும் பொழுது செம்மறிக் கடாக்களைப் பலியிடுகின்றனர் என்பதை,

*''வாயின் மாடந்தொறு மைவிடை வீழ்ப்ப*
*நீயாங்குக் கொண்ட விழவினும் பலவே''*[30]

புறநானூறு பகர்கின்றது.

பலி செலுத்தும் கடனை நூல்களில் விதித்த முறைப்படி தவறாமல் செய்தல் வேண்டும். ஆதலின் மாற்றரும் மரபின் உயர்பலி என்று கூறப்பட்டது. அச்சந்தரும் தெய்வத்திற்கு உயிர்ப்பலி கொடுத்தலும் இருந்தது என்பதை,

*''பொறிவரி இனவண்டு ஊதல கழியும்*
*உயர்பலி பெறூஉம் உருகெழு தெய்வம்''*[31]

என்னும் வரிகள் விளக்குகின்றன.

போருக்குச் செல்லுமுன் முரசுறைக் கடவுளை வழிபடுவர். அச்சமயம் பேரொலியுடன் உச்சரிக்கப்படும் மந்திரத்தினால் அரிய வெற்றியைத் தரும் முரசுறைக் கடவுளை வணங்கும் பொருட்டு, அக் கடவுளை வழிபடுவோன் பெறுவதற்கரிய பிண்டத்தினைத் தன் கையில் ஏந்தி நின்றதைப் பார்த்து பேயும் நடுங்கினாள்.

அப்பிண்டம் போன்றே, இரத்தம் கலந்த நிறைந்த கள்ளினையுடைய பெரிய பலி கொடுத்தல் பற்றி,

*"கடுஞ்சினங் கடாஅய் முழங்கு மந்திரத்து*
*அருந்திறன் மரபிற் கடவுட் பேணியர்*
*உயர்ந்தோன் ஏந்திய அரும்பெறற் பிண்டம்*
*கருங்கட் பேய்மகள் கைபுடையூஉ நடுங்க*
*நெய்த்தோர் தூஉய நிறைமகிழ் இரும்பலி"*[32]

என்று பதிற்றுப்பத்து இச்செய்தியை அறிவுறுத்துகிறது.

*"பூப்பலி விட்ட கடவுளைக் கண்டாயோ?"*[33]

என்ற வரி, தெய்வத்திற்குப் பூப்பலியிட்டு வழிபட்ட செய்தியைக் கூறுகிறது.

*"கணம்கெழு கடவுட்கு உயர்பலி தூஉய்"*[34]

என்ற வரியும், கடவுளுக்குப் பலி கொடுத்தலைப் புலப்படுத்துகிறது.

திருக்கோயில் வாயிலிடத்தே பலரும் தொழும் தெய்வக் கொடிகளும், சோறு நிறைந்த உடைகளையும், தாழத் துணி விரித்துப் பரப்பிய பண்டங்களையும், அரிசிப் பலி தூவி தெய்வங்களுக்குப் படைத்ததை,

*"வால் அரிசிப் பலிசிதறி"*[35]

என்று பட்டினப்பாலை கூறுகின்றது. இதிலிருந்து கடவுளுக்குப் பலி கொடுப்பதன் வாயிலாக, சங்க கால மக்கள் தங்கள் ஆசைகளை நிறைவேற்றிக் கொண்டனர் என்பது தெரிகிறது.

உள்ளத்தில் முருகனை நினைத்தே வெறியாட்டு அயர்வர் என்று அறியப்படுதலால் இவ்வழக்கம் இறையியல் அடிப்படை கொண்டதாகும். மலைபடுகடாம் என்ற நூலில், வெறியாடும் களத்தின் தோற்றம் பற்றிக் கூறப்பட்டுள்ளது. அதாவது, 'தீயின் நிறம் போன்ற செங்காந்தள் அரும்புகளை, தசைத்துண்டங்கள் எனத் தவறாகக் கொண்டு அவற்றை எடுத்த பருந்து, பின்னர் ஏமாற்றமடைந்து அவற்றைக் கீழே உதிர்த்தது. அவ்வரும்புகள் பாறையின்மீது சிதறிக் கிடந்த காட்சி வெறியாடும் களம் போலத் தோன்றியது.

*"தீயின் அன்ன ஒண்செங் காந்தள்*
*தூவற் கலித்த புதுமுகை ஊன்செத்து*
*அறியா தெடுத்த புன்புறச் சேவல்*
*ஊஉ னன்மையி னுண்ணா துகுத்தென*
*நெருப்பின் அன்ன பல்லிதழ் தாஅய்*
*வெறிக்களம் கடுக்கும்'*[36]

இவற்றை உவமையாகக் கூறியுள்ளமையால் குருதியும், பிறவும் பலியாகச் சிதறி வெறியாட்டயரும் வழக்கம் உண்டு என்பது பெறப்படுகின்றது. இவ்வழக்கத்தினால் இறையியல் மூலம் மனிதநேயம் மக்களிடையே நிலவியது எனலாம்.

*"சிறுதினை மலரொடு விரைஇ மறியறுத்து*
*வாரணக் கொடியொடு வயிற்பட நிறீஇ*
*ஊரூர் கொண்ட சீர்கெழு விழவினும்'*[37]

இவ்வரிகளின் மூலம், சிறிய தினை அரிசியை மலரோடு கலந்து வைத்தும், ஆடு அறுத்தும், கோழிக் கொடியோடு, அவ்விடத்தே அவ்விறைப் பொருள் நிற்பதாக நினைத்து நிறுத்தி ஊர்கள் தோறும் முருகனுக்குச் சிறந்த விழாக்கள் கொண்டாடினர் என்பதை அறிய முடிகிறது. மேலும்,

*"மதவலி நிலைஇய மாத்தாட் கொழுவிடைக்*
*குருதியொடு விரைஇய தூவெள் ளரிசி*
*சில்பலிச் செய்து பல்பிரப்பு இரீஇ'*[38]

உயிர்ப்பலியிட்டு முருகனை வழிபட்ட முறையையும், முருகனுக்கு ஆடு வெட்டிப் பூசை செய்யும் வழக்கத்தையும், இறையியல் மூலம் வளர்த்த மனித நேயத்தையும் இப்பாடல் வரிகள் புலப்படுத்துகின்றன.

குறிஞ்சிநில மக்களின் வழிபாட்டு முறை

களவு ஒழுக்கத்தினால் தலைவியின் உடல் வேறுபட, அவ்வேறு பாட்டிற்கான உண்மை நிலையினை உணராத தாயர், அவளுக்கு உற்ற நோய் குறித்து, அறிந்தோரை வினவியும், கடவுளைத் தொழுதும், மலர் தூவி வழிபாடு செய்வர் என்பதனை,

*"விறல் இழை நெகிழ்த்த வீவருங் கடுநோய்*
*அகலுள் ஆங்கண் அறியுநர் வினாயும்*
*பரவியும் தொழுதும் விரவுமலர் தூயும்*
*வேறுபல் உருவிற் கடவுட் பேணி"* [39]

என்னும் தொடர்கள் புலப்படுத்தும். மேற்கூறிய வரிகளில் 'வேறுபல் உருவிற் கடவுட் பேணி' என்பதனால் அக்கால மக்கள் சமய சமரச மனப்போக்கு கொண்டவர்கள் என்பதையும், முழுமுதற் கடவுள் ஒருவரே என்பதையும், அக்கடவுளே அவ்வந் நிலங்களுக்கு ஏற்ப பல்வேறு உருவினைப் பெற்றுள்ளனர் என்பதையும் சங்க கால மக்கள் உணர்ந்திருந்தனர் என்பதை அறிய முடிகிறது.

## கடவுட் கொள்கை

குறிஞ்சி நிலத் தெய்வத்தினை 'வேல் போர்ச் சேஎய்' [40] என மலைபடு கடாமும், 'வேல்போர்க் கொற்றவைச் சிறுவ' [41] எனத் திருமுருகாற்றுப் படையும், 'கடம்பமர் நெடுவேள்' [42] எனப் பெரும்பாணாற்றுப் படையும், போற்றிப் புகழ்ந்துள்ளன. இக்குறிஞ்சி நிலத் தெய்வத்தினைக் கபிலரின் குறிஞ்சிப் பாட்டில் கூறியுள்ள முறையினைக் காண்போம்.

மலைமீது மழை பொழிகின்ற காட்சியினைக் கூற வந்த புலவர் முருகன் பகைவர்களை அழிப்பதற்காக வீசுகின்ற வேல் போன்று மின்னி மழைப் பொழிந்தது என்பர். இதனை,

*"... சுடர்பூட் சேஎய்*
*ஒன்னார்க் கேந்திய இலங்கிலை எஃகின்*
*மின் மயங்கு அருவிய கன்மிசைப் பொழிந்தென"* [43]

என்னும் தொடர்களால் அறியலாம். இந்நூலைக் குறிஞ்சி நில அடிப்படையில் கபிலர் பாடியுள்ளாராதலின் மின்னல் மின்னுவதை முருகனுடைய வேற்படையுடன் ஒப்பிட்டுக் காட்டுகிறார். அடுத்து, இயற்கைப் புணர்ச்சிக்குப் பின்னர் தலைவன் பிரியுங்கால், மலையுறை முருகனை வாழ்த்திக் கைதொழுது தலைவியிடம் வஞ்சினம் கூறுகிறான் என்பதனை,

*"மீமிசைக் கடவுள் வாழ்த்திக் கைதொழுது*
*ஏமுறு வஞ்சினம் வாய்மையில் தேற்றி"* [44]

என்னும் வரிகளால் உணரலாம். இதிலிருந்து குறிஞ்சி நில மக்கள் இயற்கையை வழிபட்டார்கள் என்பதும், அவ்வியற்கையே முருகன் என்று நம்பி வஞ்சினம் கூறி உறுதி செய்வர் என்ற கருத்தும் தெளிவாகிறது.

**வெறியாட்டு**

தலைவிக்குற்ற காதல் நோயினை உணராத தாயர், அது தெய்வத்தாலானது எனக் கொண்டு வெறியாட்டு எடுப்பர். அவ்வாறு எடுப்பதற்கு முன்னர் கட்டு விச்சியைக் கொண்டு தலைவியின் நோய்க்கான காரணத்தை அறிய முயல்வர். கட்டினும், கழங்கினும் குறிபார்த்தல் இன்றும் தமிழ் நாட்டில் காணப்படுகின்ற பழமையான வழக்கமாகும். குறிபார்க்கும் கட்டுவிச்சியைக் குறுந்தொகை 'அகவன் மகள்' [45] என்று குறிப்பிடுகிறது.

வெறியாட்டின் போது நிகழ்கின்ற வழிபாடுகளையும், முறைகளையும் சங்க நூல்கள் விரிவாகப் பகர்கின்றன. குறிஞ்சிப் பாட்டில் வேலன் வெறியாட்டு அயருங்காலை, அவ்விடத்தில் கடப்பமரம் நிற்கும். அதன் அடிப்பாகத்தில் ஒன்றின் மேல் ஒன்றாக மாலைகள் போடப்பட்டிருக்கும். இதனை,

*"…. நெடுவேள்*
*அணங்குறு மகளிர் ஆடுகளம் கடுப்பத்*
*திணி நிலைக் கடம்பின் திரளரை வளைஇய*
*துணையறை மாலையில் கைபிணி விடேஎம்"* [46]

என்ற அடிகள் தெளிவாக்கும். தலைவனின் அம்புபட்டு மையல் வேழத்தின் முகத்திலிருந்து குருதி பாய்தலை உவமையாகக் காட்டி விளக்கியுள்ளார்.

*"புண்ணுமிழ் குருதி முகம்பாய்ந்து இழிதரப்*
*புள்ளி வரிநுதல் சிதைய நில்லாது*
*அயர்ந்துபுறம் கொடுத்த பின்னர் நெடுவேள்*
*அணங்குறு மகளிர் ஆடுகளம் கடுப்ப"* [47]

எனவே வெறியாட்டின் போது ஆடு அறுத்து வழிபாடு செய்வர் என்பதும், மகள் மீது தாய்க்கு இருந்த அன்பாகிய மனித நேயத்தையும் இவ்வரிகள் புலப்படுத்துகின்றன.

பதிற்றுப் பத்தில் வெறியாடல் விரிவாகச் சொல்லப்படவில்லை. என்றாலும் உவமையின் மூலம் இவ்வெறியாடல் இருந்தது என்பதைத் தெரிவிக்கின்றது. இதனை,

*''இயலின் ளொல்கின ளாடு மடமகள்*
*வெறியுறு நுடக்கம் போலத் தோன்றிப்*
*பெருமலை வயின்வயின் விலங்கு மருமணி*
*அரவழங்கும் பெருந்தெய்வத்து''* [48]

என்றவிடத்தில் தெய்வம் ஏறியதனால் அசைந்து ஆடுகின்ற விறலியின் ஆடல், அரிய மணியை உடைய பாம்பினது ஆட்டத்தை ஒத்திருந்தது என்று புலவர்கூறியுள்ளார்.

இதைத்தவிரச் சங்க நூல்களில் பல இடங்களில் போருக்குச் செல்லும் சேரனுடைய சினம் முருகனின் சினத்திற்கு ஒப்பிடப்பட்டுள்ளது. இதனை,

*'முருகுடன்று கறுத்த''* [49]

*''முருகுறழ்ப் பகை''* [50]

''முருகன் சீற்றத் தருகெழு குரிசில்'' [51]

இப்பாடல்கள் தெரிவிக்கின்றன. இதிலிருந்து சங்க காலத்தில் முருகு என்ற சொல்லே முருகனைக் குறித்தது என்பதையும், வெறியாடல் என்னும் வழிபாடு முருக வழிபாடே என்பதையும் அறிய முடிகிறது. இதனால் பதிற்றுப்பத்து காலத்தில் முருக வழிபாடு என்னும் வெறியாடல் நடைமுறையில் இருந்த மிகப் பழமையானது என்பதும், சமுதாயக் கூட்டு வாழ்க்கையின் அடிப்படையில் தோன்றியது என்பதும் புலனாகின்றன.

பூசாரிகள், குருமார்கள் எவருமின்றி மக்கள் பலியிடல், வெறியாடல் முதலிய முறைகளினால் தாமே கூட்டாக வழிபட்டனர். அவ்வாறு வழிபடுவோர் இறைவன் தம்மிலே வந்து வெளிப்படுவான் என்னும் நம்பிக்கையுடன் கூத்தாடினர்.

*''வெண்போழ் .... பொற்ப''* [52]

*''களம் நன்கு .... நடு நாள்''* [53]

என்பது தெரிகிறது.

இதுகாறும் கூறியவற்றால், குறிஞ்சி நில மக்கள் முருகனை வழிபடு தெய்வமாகக் கொண்டனர் என்பதும், அவனைத் தொழுது வஞ்சினம் கூறும் பழக்கமுடையவர்கள் என்பதும், குறிபார்த்தல், வெறியாட்டு போன்ற இறையியல் கொள்கைகள் மூலம் மனித நேயத்தை உணர்ந்தனர் என்பதும், குறுகிய சமயப் பற்றினைச் சமயத்துறையில் பரந்த உள்ளமுடையவராகவே திகழ்ந்தனர் என்பதும் தெரிய வருகின்றன.

சிவ வழிபாடு

பத்துப்பாட்டு நூல்களுள் ஒன்றாகிய மலைபடுகடாத்தில் சிவன், முருகன், திருமகள் ஆகிய தெய்வங்கள் பற்றிச் சில குறிப்புகள் உள்ளன. சிவன் என்ற பெயர் பத்துப்பாட்டு நூல்களில் காணப்படவில்லை. ஆனால், சிவனைக் குறிக்கும் வேறுபெயர்கள் நான்கு இடங்களில் மட்டுமே உள்ளன. ஆனால் நவிரமலையில் 'காரியுண்டிக் கடவுள்' கோயில் கொண்ட செய்தி மலைபடுகடாத்தில் கூறப்பட்டுள்ளது. இதனை,

*''பேரிசை நவிர மேஎ யுறையும்*
*காரி உண்டிக் கடவுள்''* [54]

காரியுண்டிக் கடவுள் என்ற பெயர் 'நஞ்சை உணவாக உண்ட கடவுள் என்னும் பொருளில் சிவபெருமானைக் குறிக்கின்றது. நவிரமலையில் கோயில் கொண்ட சிவன்கோயில் மிகப் பழமையானது என்றும், இறையியல் மூலம் மனிதநேயத்தை மக்களிடையே பரப்பினர் என்றும் தெரிய வருகிறது. திருமுருகாற்றுப்படையில்,

*''......... வெள்ளேறு*
*வலவயி னுயரிய பலர்புகழ் திணிதோள்*
*உமையமர்ந்து விளங்கும் இமையா முக்கண்*
*மூவெயில் முருக்கிய முரண்மிகு செல்வனும்''* [55]

வெற்றிதரும் போர்க்களத்தில் உயர்ந்த இடபக் கொடியை ஏந்தியுள்ளான். அவன் ஒரு பாகத்தில் உமையம்மை வீற்றிருக்கிறாள். புகழக்கூடிய திரண்ட தோள்களை உடையவன். முக்கண்களை உடையவன். முப்புரத்தை அழித்தவன் என்று கூறப்படுகின்றான். மற்றோரிடத்தில்,

*''ஆல்கெழு கடவுள்''* [56]

ஆலமரத்தின் அடியில் வீற்றிருக்கிறான் எனவும் சிவனைப் பற்றிக் கூறுகிறது.

கோவில்களில் திருவிழாக்கள் நடத்தியபோது கட்டிய, பல கொடிகள் பறக்கின்றன. மதுரையில் இப்பொழுதும் சொக்கநாதர் கோயில் சிறப்பாக விளங்குகிறது. மதுரைக் காஞ்சி ஆசிரியர் காலத்திலும் சிவன் கோயில் சிறந்து விளங்கிற்று. மேலும் பல தெய்வங்களுக்கும் கோயில்கள் இருந்தன.

பஞ்ச பூதங்களால் இவ்வுலகைப் படைத்த, மழுப்படையை உடைய சிவபெருமானைத் தலைவனாகக் கொண்டவர்கள். குற்றமற்ற ஒளியையுடைய வாடாத மலர் மாலையும், இமையாத கண்களையும் உடையவர்கள். மது, மாமிசத்தைப் பலியாகக் கொள்ளும் அஞ்சத்தக்க பெரிய தெய்வங்கள். அவர்களுக்குத் தவறாமல் உயிர்ப்பலி கொடுப்பதற்காக மாலைக்கால விழாவுக்குரிய இன்னியங்கள் முழங்கின.

*"நீரு நிலனுந் தீயும் வளியும்*
*மாக விசும்போ டைந்துட னியற்றிய*
*மழுவா ணெடியோன் றலைவ னாக*
*மாசற விளங்கிய யாக்கையர் சூழ்சுடர்*
*வாடாப் பூவின் இமையா நாட்டத்து*
*நாற்ற உணவின் உருகெழு பெரியோர்க்கு*
*மாற்றரு மரபின் உயர்பலி கொடுமார்*
*அந்தி விழவிற் றூரியங் கறங்க"* [57]

மேற்கூறிய வரிகளால் மதுரையில் பல தெய்வங்களுக்குக் கோவில்களிருந்ததையும், அவர்களுக்கு அந்தி நேரத்தில் தவறாமல் பூசைகள் நடைபெற்று வந்ததனால், அக்காலத்து மக்கள் கோவில்களுக்குச் சென்று இறையருளைப் பெற்றனர் என்பதையும் அறிந்துகொள்ள முடிகிறது.

எட்டுத்தொகை நூல்களுள் அகநானூறு கடவுள் வாழ்த்தில் சிவபெருமானைப் போற்றியிருப்பது உணர்ந்து மகிழத்தக்கது. ஐங்குறுநூற்றில் சிவபெருமான் வணக்கம் கூறப்பட்டுள்ளது. நீல நிறமான திருமேனியையும், தூய அணிகலன்களையும் உடைய உமையைத் தன் கூறாகவுடைய ஒப்பற்ற சிவனுடைய திருவடி நிழல்கீழ் மூவகை உலகும் தோன்றி நிலவுகின்றன! எனவே, நாமும் அம் முதல்வனை வணங்கி அருள் பெறுவோம் என்று ஆசிரியர் சிவனைப் பணிகிறார்.

*"நீலமேனி......... முறையே"* [58]

மேலும் சிவபெருமான் நீலநிறம் பொருந்திய கழுத்தினை உடையவன் என்பதை,

*"ஏற்றுவல் னுயரிய எரிமருள் அவிர்சடை*

*மாற்றருங் கணிச்சி மணிமிடற் றோனும்"* [59]

இப்பாடல் மூலம் அறியமுடிகிறது. 'நீல மணி மிடற்று ஒருவன்' [60] என்று மற்றோரிடத்தில் குறிக்கப்படுகிறான்.

*"......... நீள் நிமிர் சடை*

*முது முதல்வன் வாய்போகா*

*தொன்று புரிந்த வீரிரண்டின்*

*ஆறுணர்ந்த வொருமுதுநூல்"* [61]

'முக்கட் செல்வர்' [62] 'பிறைநுதல் விளங்கும் ஒருகண்' [63] என்றெல்லாம் சிவனைப் பற்றிய குறிப்புகள் வருகின்றன.

மேரு மலையை வில்லாகவும், வாசுகி என்னும் பாம்பினை அம்பாகவும் கொண்டவன் என்பதை,

*"நாக நாணா மலை வில்லாக"* [64]

என்ற பரிபாடல் அடியால் அறியலாம். சலதாரி என்னும் காரணப்பெயரை உடைய சிவன், தாமரையில் வீற்றிருக்கும் பிரமனால் வீழ்த்தப்பட்ட ஆகாய கங்கையை விரிந்த சடையின்கண் தாங்கியுள்ளான். இதனை,

*"எரிமலர்த் தாமரை யிறைவீழ்த்த பெருவாரி*

*விரிசடைப் பொறையூழ்த்து விழுநிகர் மலரேய்ப்பத்*

*தணிவுறத் தாங்கிய தனிநிலைச் சலதாரி"* [65]

இப்பரிபாடல் வரிகளால் உணரலாம். இதிலிருந்து சிவபெருமானைச் சங்க கால மக்கள் போற்றி வணங்கிய தன்மை புலப்படுகிறது. தொல்காப்பியர் கூறியபடி, எட்டுத் தொகை நூல்களுள் முதலாவதாகிய நற்றிணைக்கு மாயோனையும், இரண்டாவதாகிய குறுந்தொகைக்கு சேயோனையும் வாழ்த்தி வேந்தன் முதலிய ஏனைத் திணை தெய்வங்களை உலகத்தோர் முழுமுதற் கடவுளாக வைத்து வழிபடும் வழக்கமின்மையின் எஞ்சிய வாழ்த்துக்களை தம் வழிபடு கடவுளாகிய சிவபெருமான் வாழ்த்தாகவே இயற்றியிருத்தல் போற்றுதற்குரியது.

## திருமால் வழிபாடு

### முல்லை நிலத் தெய்வம்

முல்லைப்பாட்டு ஆசிரியர் முதலில் மழை பெய்யும் மாலைக் காலத்தைக் குறிப்பிடுகின்றார். கடலிலிருந்து புறப்பட்டு, மலையிலே போய்த் தங்கி வானத்திலே தோன்றி மழை பெய்யும் மேகத்தைத் திருமாலுக்கு ஒப்பிட்டுக் கூறுகின்றார். அந்த மேகத்தை 'மாபலிச் சக்கரவர்த்தி தாரை வார்த்த தண்ணீர் கையில் பட்டவுடன் உயர்ந்த வளர்ந்த திருமாலைப் போன்ற மேகம்' என்று உவமானத்துடன் உரைக்கின்றார். அம்மேகங்கள் ஓசையமைந்த குளிர்ந்த கடல்நீரைப் பருகின. வெற்றியுடன் புறப்பட்டு, மலைகளை உறைவிடமாகக் கொண்டு தங்கி, பின்பு அந்த மேகங்கள் விரைவாக வானத்தின் வழியே சென்று பெரிய மழையைப் பொழிந்தன. இத்தகைய நிலையற்ற மாலைக்காலம். இதனை,

> *''நீர்செல நிமிர்ந்த மாஅல் போலப்*
> *பாடிமிழ் பனிக்கடல் பருகி வலனேர்பு*
> *கோடுகொண் டெழுந்த கொடுஞ்செல வெழிலி*
> *பெரும்பெயல் பொழிந்த சிறுபுன் மாலை''* [66]

இப்பாடல் வரிகள் கொண்டு அறியலாம். முல்லை நிலத்தின் தெய்வமாகிய திருமாலை இவ்வாறு உவமைப் பொருளில் வைத்துக் கூறியதிலிருந்து புலவருக்கிருந்த இறையியல் பற்று புலனாகின்றது.

நற்றிணையில் கடவுள் வாழ்த்துப் பாடிய பாரதம் பாடிய பெருந்தேவனார், இப்பாடலில் திருமாலின் நெடிய தோற்றம் போற்றப்படுகிறது. நெடிய தோற்றத்தோடு எல்லா உயிர்களிடத்தும் தான் பொருந்தியிருப்பதன்றி நிலம் முதல் எல்லாப் பொருள்களையும் அவன் தன்னுள் அடக்கியுள்ளான். இம்மாயோனையே முழுமுதற் கடவுளாக வேதங்களும் கூறும். இத்தகைய திருமாலைப் போற்றி வணங்குவதாக ஆசிரியர் கூறுகிறார்.

> *''மாநிலஞ் சேவடி யாகத் தூநீர்*
> *வளைநரல் பெளவம் உடுக்கை யாக*
> *விசும்புமெய் யாகத் திசைகை யாகப்*
> *பசுங்கதிர் மதியமொடு சுடர்கண்ணாக*

*இயன்ற வெல்லாம் பயின்று அகத்தடக்கிய*

*வேத முதல்வன் என்ப*

*தீதற விளங்கிய திகிரி யோனே''* [67]

அகநானூற்றுக் கடவுள் வாழ்த்தில் சிவபெருமானையும், குறுந்தொகை கடவுள் வாழ்த்தில் சேயோனையும் போற்றிய ஆசிரியர் நற்றிணையில் மாயோனைப் போற்றியிருப்பது உணர்ந்து மகிழத்தக்கது.

ஒன்றே பரம்பொருள். உலகம் அதனையே முதலாகக் கொண்டது. இந்தத் தத்துவத்தினை அறிந்து போற்றியவர்கள் தமிழ்ச் சான்றோர்கள். இதனால் தம்முள் ஒன்றாகியும், சமநிலை நோக்கோடும் திகழ்ந்து, தமிழகத்தின் ஆன்மீக தத்துவ வளர்ச்சியையும் பேணி வந்தனர். இவ்வகையில் கடவுட் பாடல்களுள் காலத்தால் பழமையும், கருத்து வளத்தால் செழுமையும் கொண்டு திகழ்வன பரிபாடற் கருத்துகளாகும்.

## தாள் நிழல் பரவுதும்

திருமாலை வழிபடும் கடவுளாகக் கொண்டு போற்றும் வழக்கம் மிகப் பழமையானது. 'முத்தொழிலும், மூன்று தலைவர்களின் பொறுப்பாக இயங்குபவன். மூன்று தொழிலுக்கும் முத்தேவர்கள் நாயகர்களாக குறிக்கப் பெறுகின்றனர். ஆனால், தொழிலின் தலைமை ஒருவனான இறைக்கே உரியது. அவனே படைப்பின் இறையாக விளங்கும்போது பிரமனாகவும், காத்தற்கடவுளாக அமையும்போது திருமாலாகவும், அழித்தற்கு உரியவனாக அமையும்போது சிவபெருமானாகவும் அமைகின்றான்' [68] இந்த ஒப்புயர்வற்ற உண்மையை உலகிற்கு உணர்த்தி இறையியல் வாயிலாக மக்களுக்கு மனிதநேயப் பண்பாட்டை உரைக்கின்றது எனலாம்.

## தலையுற வணங்கினேம்

திருமால் உலகிற்கு முதல்வன் என்ற கருத்தினை மேற்கொண்டு அவனைப் போற்றுகிறது கீரந்தையார் பாடல். காலம் கழிந்து போகும் இயல்பினது. காலம் என்ற ஓர் எல்லையை வரையறையாகக் கொண்ட பழமையும் கணக்கிடப்படுகிறது. எல்லாவற்றிற்கும் முதல்வனான இறைவனோ அந்தக் காலப் பழமையினையும் கடந்தவன். இந்த உண்மையை நம் முன்னோர்கள் நன்றாக உணர்ந்திருந்தனர். இறை வழிபாட்டில் காட்டும் ஆடம்பரங்களைக் காட்டிலும், திருவடிகளைத் தலையுற

வணங்கும் பக்தி ஞானமே சிறப்புடையது. இதனை அடியார் உளம் கொண்டு மேற்கொள்ள வேண்டும் என்பது பரிபாடல் இரண்டாவது பாடலால் அறியப்படுவதாகும்.

### நின்நேமி நிழல்

பரிபாடலின் மூன்றாவது பாடலில், திருமாலின் அனைத்துமாகி அகிலம் காக்கின்ற தன்மையினை மிகவும் திட்பமாகவும், தெளிவாகவும் எடுத்துக் கூறுகின்றது. மேலும் ஆட்சியானது, அருளே கொற்றக் குடையாகவும், அறநெறியே செங்கோன்மையாகவும் பெற்றிருத்தல் வேண்டும். இத்தகைய ஆட்சியே மக்கட்கு நலம் தரும் நல்லாட்சியாகும். இதனை உளங்கொண்டு உலகம் அனைத்திற்கும் இறையாக விளங்கும் திருமாலின் ஆட்சி அருள் குடையாகவும், அறம் கோலாகவும் நிலவுவது என்று கடுவன் இளவெயினனார் கூறுவதனை நாமும் நம் கருத்திற் கொண்டு நாளும் போற்றுதல் வேண்டும்.

### வேறு வேறு பெயரோய்

ஆறுகள் பலவாயினும் அவை சென்று சேர்வது கடலேயாகும். அதுபோல நெறிகள் பலவாயினும், அவை சென்று சேரும் முடிவிடம் ஒன்றேயாகும். நம் முன்னோர்கள் இந்த உணர்வுடன்தான் தெய்வ வழிபாட்டைப் பேணி வந்துள்ளார்கள். தத்தம் உள்ளத்துக் கொண்டு போற்றும் தெய்வ வழிபாடுகள் அனைத்தும் ஒன்றாகிய ஒரே பரம்பொருளையே சென்றடைந்து, தமக்கு நற்கதி தந்து கடைத்தேற்றும் எனத் தெளிவுற உணர்ந்தவர்கள் நம் ஆன்றோர்கள். ஐம்பொறிகளும், வெவ்வேறு தொழிற் பாடுகளை உடையனவானாலும் ஒன்றாகிய மனிதனின் பகுதிகளே அவை. அவற்றின் செயல் அந்த மனிதனின் செயலே. அதுபோலவே, பரம்பொருளும், பல்வேறு பெயரோடு கடமைகளைச் செய்து பல்வேறு பெயருடன் விளங்குகின்றான். ஆராய்ந்து பார்த்தால் அனைத்தும் அவனே. இந்த நெறியினை பரிபாடல் நான்காவது பாடல் விளக்கும்.

### நின்னடி தொழுதனெம்

சங்கச் சான்றோர்கள் பரந்த உள்ளம் கொண்டவர்கள். குறுகிய எண்ணங்கள் அவர்களிடம் தோன்றுவதில்லை. நம் தமிழ் நாட்டில் இறை வழிபாட்டில் இந்த நல்ல சிந்தனையாளர்கள் பலர் இருந்திருக்கின்றனர். அக்காலத்தில் தெய்வ

வழிபாட்டு சமநோக்கம் நிலவியது. திருமாலின்மீது கொண்ட அளவு கடந்த பக்தியினால் பிறவிகள் பலவற்றை எடுத்து, பிறவிதோறும் அவனைப் பணிந்து போற்றும் அந்தத் தன்மையினைத் தந்தருளுமாறு கேட்பதும், பக்தர்களின் இயல்பாக இருக்கின்றது. 'மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே' என்று அப்பர் சுவாமிகள் பின்னர் வேண்டுமாறே, பரிபாடல் பதிமூன்றாவது பாடல் ஆசிரியரும், 'இன்னும் இன்னும் என்காமம் இதுவே' என்கின்றார். மனித்தப் பிறவி எடுப்பதே இறைவனை வணங்குவதற்குத்தான் என்ற கருத்தினை உணர்த்துகிறது.

**துன்பம் களைவோன்**

நாம் இறந்த பிறகு நம்முடைய உயிரானது பிறவாத நெறியினைப் பெற்றுத் துறக்கத்தை அடைதல் வேண்டும் என்பதே மனித வாழ்வின் நோக்கமாகும். இறைவனைப் போற்றும்படி மக்களுக்கு அறிவுறுத்துகிறது பதினைந்தாவது பரிபாடல்.

**நல்லடி பரவுதும்**

திருவடி ஞானப் பேற்றை நாடி திருமாலை வழிபடும் சிறந்த நெறியினைக் கூறும் சீரிய பாடலாகும். திருமாலைப் போற்றும் புலவர் அவன் அடியவனான ஆதிசேடனை வணங்கி அவன் மூலமாக இறைவனடி சார்தலை முயல்கின்றனர். இறைவனின் அடியவர்களைப் போற்றுதல் இறைவனைப் போற்றுதலே ஆகும். இப்பரிபாடல் இத்தகைய சிறந்த தத்துவக் கருத்தை உள்ளடக்கியது.

பரிபாடலில் திருமால் பல பாடல்களில் பாடற்பொருளாகக் காட்சி தருகின்றான். சமயப் பூசல்களில் அதிகம் கவனம் செலுத்தாமல், எந்தப் பெயரால் எவ்வுருவத்தை எவ்வாறு வழிபாட்டாலும் அந்தப் பெயரும், அவ்வுருவமும், அவ்வழிபாடும் ஒருவனாக உலகளந்த பெருமாளையே சாரும் என்ற மெய்யுணர்வுடன் இறைவனுக்கு அன்று அவர்கள் வழிபாடு செய்ததைப் பரிபாடல் சுட்டுகிறது.

புராணக் கதைகளும், வேதங்களின் கருத்துக்களும் இந்நூலில் அதிகம் இடம் பெற்றாலும் இறைத்தத்துவத்தின் உண்மையை அவர்கள் உள்ளபடி உணர்ந்திருந்ததை, பரிபாடல் இன்று சிறப்பாக உணர்த்தி நிற்கின்றது. இவ்வகையில் பண்ணோடு பாடுவதில் மட்டுமல்லாமல் பக்தி நெறியைப் புகட்டுவதிலும், தேவாரத், திருவாசக, நாலாயிரத் திவ்வியப் பிரபந்தங்களுக்குப் பரிபாடல் முன்னோடியாகத் திகழ்கின்றது எனலாம்.

நான்மறைப் பொருளாக எங்கும் பரந்து நிற்பவனை நாம் உணர்வதென்பது அரிதான செயல். அவனுடைய வரலாற்றை அறிதல் என்பது ஞானியராலும் இயலாத ஒன்று. எனினும் அவனிடம் நாம் கொண்டுள்ள அன்பு மிகப் பெரிது. அந்த அன்பினாலேயே அவனைப் பணிகின்றோம் என்பதைத் திருமாலைப் பற்றிய பரிபாடல்கள் யாவும் அழகாக உணர்த்துகின்றன. திருமாலின் அருள் தன்மை இவ்வுலகின் எல்லாப் பொருள்களிலும் நிறைந்திருப்பதைச் சுட்டிக்காட்டுகிறார். திருமாலின் வெம்மையும், ஒளியும் ஞாயிற்றினிடத்தும் தண்மையும், மென்மையும் திங்களிடத்தும், சுரத்தலும், வண்மையும் மாரியினிடத்தும், தாங்கும் திறனும், பொறுமையும் பூமியினிடத்தும், மணமும், ஒட்பமும் காயாம்பூவிவினிடத்தும், தோற்றமும், பெருமையும் நீரினிடத்தும், உருவமும், ஒலியும் விண்ணிடத்தும், வருகையும், ஒடுக்கமும் காற்றினிடத்தும் காணப்படுவதாக புலவர்,

*''நின் வெம்மையும்... எல்லாம்''* [69]

இப்பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

### திருமாலின் அருளாற்றல்

''ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்'' [70] என்ற திருமூலரின் கருத்து பரிபாடலில் ஒரு முன்னோடிக் கருத்தாகப் பல நிலைகளில் நிலைபேறு எய்துவதைக் காண்கிறோம். மாயோனின் கரிய நிறமும், வெண் சங்கும் ஏறு தழுவும் தொழுவத்துக் காரி ஏறு பாடியிருக்கும் சிறப்பும் நயமுடைத்தாகும். காரி ஏறுகளின் கரிய நிறத்தை,

*''திருமறு மார்பன்போல் திறல்சான்ற காரி''* [71]

எனவும், காரி ஏறுகள் சங்குபோன்ற நெற்றிச்சுட்டி பெற்றமையை,

*''வள் உருள் நேமியான் வாய்வைத்த வளைபோலத்*
*தெள்ளிதின் விளங்கும் சுரிநெற்றிக் காரி''* [72]

எனவும் கூறுமாற்றால் தெள்ளிதின் புலனாகும்.

எல்லாம் திருமாலின் செயலே என்று மக்கள் போற்றி வாழ்ந்தமையை ஏறுதழுவல் காட்சி ஒன்று உறுதிப்படுத்துகிறது. பொதுவனின் தலையில் சூடிய முல்லை, ஆயமகளின் கூந்தலில் விழ அதனை அவ்வாய மகள் போற்றிச் சூடவும், அச்செய்தி அறிந்த பெற்றோர்,

*''தெய்வமால் காட்டிற்று இவட்கு'* [73]

என அப்பொதுவனுக்கே மணம் செய்வித்து மகிழ்ந்தார்கள் எனின் அவர்தம் திருமால் பக்தி புலப்படுகின்றது. மாயோனின் சிறந்த வீரச் செயல்களில் பாம்பால் விழுங்கப்பட்ட மதியை விடுவித்ததும், கம்சனின் ஏவலால் குதிரை வடிவில் தோன்றிய கேசி என்னும் அரக்கனை அழித்தலும் குறிப்பிடத்தக்கனவாகும். இவற்றை,

*''பால்மதி சேர்ந்த அரவினைக் கோள்விடுக்கும்*
*நீலநிற வண்ணனும்''* [74]

*''மேவார் விடுத்தந்த கூந்தற் குதிரையை*
*வாய்பகுத்து இட்டு புடைத்தஞான்று இன்னன்கொல்*
*மாயோன்''* [75]

எனவரும் அடிகள் திருமாலின் திறத்தை வெளிப்படுத்துவதன் மூலம் மக்கள் இறையியல் மீது கொண்ட பற்றுப் புலனாகிறது.

பெண்கள் தம் கணவரோடும், குழந்தைகளோடும் சென்று, காக்கும் கடவுளாகிய திருமாலைப் பூவால் அர்ச்சனை செய்து வழிபடுகின்றனர். தூபப்புகை இடுகின்றனர்.

*''கணங்கொள் அவுணர்க் கடந்த பொலந்தார்*
*மாயோன் மேய ஓண நன்னாள்''* [76]

இதிலிருந்து திருமால் அரக்கர் கூட்டத்தை வென்றவன். பொன்மாலை அணிந்தவன். இவனுக்கு ஓணநாளில் ஊர்மக்கள் திருவிழா எடுத்து வழிபாடு செய்தனர் என்பதும் தெரிகிறது.

'பிறர்க்குத் துன்பம் செய்யும் அரக்கர் கூட்டத்தினர் தேவர்களுடன் சண்டையிட்டார்கள். அவ்வரக்கர்கள் சண்டையிடுவதற்கு வசதியாக பகலையும் இரவுபோல ஆக்கக் கருதினார்கள். அதற்காகச் சூரியனை மறைத்து விட்டார்கள். அப்போது இருட்டானது, உலகத்தார் கண்களை மறைத்தது. மக்களுக்கு ஏற்பட்ட இத்துன்பத்தை நீக்குவதற்காக கார்வண்ணனாகிய திருமால் அவ்விருட்டைப் போக்குவதற்காக, அரக்கர்கள் மறைத்த சூரியனைக் கொண்டு வந்து, ஆகாயத்தில் நிறுத்தினான்' [77] என்று புறநானூறு கூறுகிறது.

முல்லை நில மக்கள் திருமாலை குலதெய்வமாகக் கொண்டு வழிபட்டதனை,

*"வண்புனற் றொழுநை வார்மணல் அகன்துறை*
*அண்டர் மகளிர் தண்தழை உடீஇயர்*
*மரம்செல மதித்த மாஅல் போல"* [78]

என்று அகநானூறு கூறுகின்றது. திருமால் நீலமணி போன்ற நிறமுடையவன். [79] தன்னுடைய கைகளிலே சங்கையும், சக்கரத்தையும் வைத்திருப்பவன். [80] மார்பிலே திருமகளை அணைத்திருப்பவன். [81] ஆயர் மகளிர்க்காக குருந்த மரத்தை வளைத்தவன். [82] பாம்பாகிய அணையிலே படுத்திருப்பவன். [83] நூறாயிரம் கைகளையும், எண்ணற்ற உடலினையும் உடையவன். [84] என்று சங்ககால மக்கள் திருமாலின் தோற்றத்தையும், செயல்களையும் நம்பினர்.

எனவே, திருமால் வழிபாடு தமிழர்களின் தொன்மை வழிபாடாகும் என்பது தெளிவு. இவ்வழிபாடு ஆரியர்களின் வருகைக்குப்பின் வேதங்களில் குறிக்கப்படும் விஷ்ணுவுடனும், புராணங்களில் குறிக்கப்படும் மும்மூர்த்திகளோடும் தொடர்புபடுத்தப் பட்டது. புராணங்களில் சொல்லப்படும் கதைகளையும், மந்திரம், நோன்பு மேற்கொண்டு தெய்வத்தை வணங்குதல் போன்ற வழிபாட்டு முறைகளையும் பதிற்றுப்பத்து தெரிவிக்கின்றது.

*"உண்ணாப் பைஞ்ஞிலம் பனித்துறை மண்ணி*
*வண்டூது பொலிதார்த் திருஞெம ரகலத்துக்*
*கண்பொரு திகிரிக் கமழ்குரற் றுழாஅய்*
*அலங்கற் செல்வன் சேவடி பரவி"* [85]

வண்டுகள் ஆரவாரிக்கும் மாலையணிந்த திருமகளைத் தாங்கியிருக்கும் மார்பிலே கண்களைக் கவரும் சக்கரப் படையையும், துளசி மாலையையும் அணிந்த திருமாலின் திருவடிகளைக் கோயிலினுள் வரம் வேண்டி உண்ணாது கிடந்து மக்கள் புகழ்ந்து வணங்கினர். ஈண்டு திருமால் வழிபாடு புராணச் செய்திகளுடன் தொடர்புபடுத்தப்பட்டு விட்டன என்பதும், இறையியல் பற்று மூலம் அக்கால மக்கள் மனித நேயத்தை வளர்த்துக் கொண்டனர் என்பதும் தெரிகிறது.

## திருமகள் வழிபாடு

நன்னன் 'திருமகள் உறையும் மார்பினன்' என்று மலைபடுகடாத்தில் சிறப்பிக்கப்பட்டுள்ளான். இதனை,

*"செருமிக்குப் புகலுந் திருவார் மார்பன்"* [86]

என்ற வரியால் அறியலாம். புராணக் கதைகளில் திருமகள் செல்வத்திற்குரிய தெய்வமாவாள் என்று கூறப்பட்டுள்ளமை கொண்டே இங்கு நன்னன் 'திருவார் மார்பன்' எனக் குறிப்பிடப்பட்டுள்ளான். எனவே, திருமகள் செல்வத்திற்குரிய தெய்வம் எனச் சங்ககால முதலே மக்கள் நம்பி வந்தமை பெறப்படுகின்றது. அக்கால மக்கள் திருமகளை அன்போடும், அருளோடும் துதித்து வழிபட்டு அதன்மூலம் செல்வமாகிய அருளைப் பெற்று வாழ்க்கையில் மேன்மை அடைந்தனர் என்பது பெறப்படுகிறது.

### கொற்றவை வழிபாடு

சங்ககால மக்களிடையே திருமால், முருகன், இந்திரன், வருணன் ஆகிய பல தெய்வ வணக்கங்கள் இருந்தன என்பதைக் காணலாம். கொற்றவை என்னும் பெண் தெய்வத்தை வணங்கிய செய்தியும் தொல்காப்பியத்தில் காணப்படுகின்றது. கொற்றவையைக் காளி, துர்க்கை என்று பல பெயர்களால் கூறுவர்.

*"மறம்கடை கூட்டிய துடிநிலை சிறந்த*
*கொற்றவை நிலையும் அத்திணைப் புறனே"* [87]

வீரத்தினால் அடைந்த வெற்றியைக் கொண்டாடுவதற்குத் 'துடிநிலை' என்று பெயர். அவ்வெற்றிக்கு உதவிய தெய்வம் கொற்றவை. அத்தெய்வத்தைப் புகழ்ந்து வணங்கும் விழாவிற்கு 'கொற்றவை நிலை' என்று பெயர்.

பண்டைத் தமிழர்களின் வெற்றித் தெய்வமாக இலங்கியது கொற்றவையாகும். போருக்குப் புறப்படும் முன்னரும், வெற்றி பெற்ற பின்னரும் கொற்றவைக்கு முன்னின்று, இன்னியங்கள் முழங்க ஆடிப்பாடி வழிபடுவர் என்பதை,

*"நிறம்படு குருதி புறம்படி னல்லது*
*மடையெதிர் கொள்ளா அஞ்சுவரு மரபிற்*
*கடவு ளயிரையி னிலைஇக்*
*கேடில வாக பெருமநின் புகழே"* [88]

இப்பாடல் கூறுவதைக் காணலாம். சேரமன்னன் தொன்றுதொட்டு அயிரைமலையில் உள்ள கொற்றவையைத் தன் முன்னோர்கள் போலவே இரத்தப் பலியிட்டுச் செய்துவரும் வழிபாடு கெடாமல் தானும் அவ்வாறே வழிபட்டான் என்று,

*''உருகெழு மரபின் அயிரை பரவியும்''* [89]

இப்பாடலடி விளக்குகின்றது. காளி, கூளி முதலியன காடுறை தெய்வமாகும். அவற்றிற்குப் பலியீந்து வாழ்த்திப் பாடுவர்.

*''காடுமுறை கடவுள் கடன் கழிப்பிய''* [90]

என்ற வரியின் மூலம் அக்கால மக்கள் காடுறை தெய்வத்திற்குக் கடன்கழித்த செயலை ஆற்றி நற்பலனை எய்தினர் என்பது தெரிகிறது. அத்தெய்வம் மனம் மகிழும்படி அவற்றிற்குச் செய்யும் சடங்குகளை முறையே செய்தலையும் விளக்குகின்றன.

நெடுநல் வாடையில், போருக்குத் தலைவனைச் செலவு விடுத்த தலைவியின் தோழிமார், தலைவன் வெற்றியுடன் மீள வேண்டுமென்று வெற்றித் தெய்வத்தை வணங்குகிறார்கள். வணக்கத்தைப் பெறும் அத்தெய்வம் கொற்றவையாகும். இதனை,

*''இன்னா அரும்படர் தீர விறல்தந்து*
*இன்னே முடிகதில் அம்ம''* [91]

இப்பாடல் வரிகள் மூலம் அறியலாம். குகைகளையும், பிளவுகளையும் உடைய மலைப் பக்கத்தில் உள்ள வெற்றி பொருந்திய கொற்றவைக்குப் பலிக்கடன் கழித்தலைப் பற்றி,

*''விடர்முகை அடுக்கத்து விறல்கெழு சூலிக்குக்*
*கடனும் பூணாம் கைந்நூல் யாவாம்''* [92]

குறுந்தொகை கூறுகின்றது. பிரிந்த தலைவன் மீண்டு வந்து சேர்ந்து பின் பிரியாது உறைய வேண்டுமென்று சூலத்தையுடைய கொற்றவையை வழிபடுதல் இப்பாட்டில் குறிக்கப்படுவதிலிருந்து இறையியல் மூலம் தலைவி, தலைவன் மீது கொண்ட அன்பாகிய மனிதநேயப் பண்பை வெளிப்படுத்துகிறாள்.

## பிற தெய்வ வழிபாடு

### இந்திரன்

மருதநிலக் கடவுள் இந்திரன். தமக்குத் துன்பம் நேர்ந்தபோது அதற்குப் பரிகாரமாக இந்திரனை வழிபட்டுத் திருவிழா நடத்துவர் மருதநிலத்தார். புறநானூற்றில் ஆய் என்பவன் இறந்து போனதைப்பற்றி முடமோசியார் பிரிவாற்றாமல் வருந்திப் பாடிய பாடலில், ஆயை எதிர்கொள்ள வானத்தில் இந்திரன் கோயிலில் முரசு முழக்கினான் என்று இந்திரன் பற்றிய செய்தியை,

*''வச்சிரத் தடக்கை நெடியோன் கோயிலுள்*
*போர்ப்புறு முரசங் கறங்க*
*ஆர்ப்பெழுந் தன்றால் விசும்பி னானே''* [93]

இதிலிருந்து சங்ககால மக்கள் மன்னனைத் தெய்வமாகக் கருதி எதிர்கொண்டு வரவேற்றனர் என்பதும், மன்னன் மீது புலவர் கொண்ட அன்பாகிய பண்பும் தெரிகிறது.

மருதநிலத்து உழவர்கள், மலர்தலை உலகிற்கு உயிரெனச் சிறந்த வேந்தனைத் தெய்வமென மதிக்கும் பேரன்புடையவராய், மழை பெய்து விளையுள் பெருக மழைவளம் சுரத்தல் வேண்டி, வானோர் தலைவனாகிய இந்திரனை மலர்தூவி வழிபட்டு இந்திர விழாவை நிகழ்த்தினார்கள். இச்செய்தி,

*''இந்திர விழாவிற் பூவின் அன்ன''* [94]

எனவரும் அடியால் உய்த்துணரப்படும். இதிலிருந்து குடிமக்கட்கு இறைவன்மீது கொண்ட நம்பிக்கையும், குடிமக்கட்கு அரசன்மீதிருந்த பேரன்பும் புலப்படுகிறது.

### வருணன்

நெய்தல் நிலத்திற்குரிய தெய்வம் வருணன். கருக்கொண்ட சுறா மீனின் கொம்பை நட்டு நெய்தல் நிலத்தவர் அந்நிலத் தெய்வமாகிய வருணனை பரவிக் கடன் கொடுத்து வழிபாடு செய்தனர் என்பதை,

*''சினைச் சுறவின் கோடுநட்டு*
*மனைச் சேர்த்திய வல்லணங்கினால்''* [95]

பட்டினப்பாலை வருணனை வழிபட்ட செய்தியை விளக்குகின்றது.

**பிரமன்**

ஒரு வீட்டில் துக்கமும், ஒரு வீட்டில் மகிழ்ச்சியும் நிகழ்ந்ததைப் பற்றித் தெரிவிக்கும் புறப்பாடல் ஒன்றில் 'படைப்புக் கடவுள் பிரமன் ஏன் இவ்வாறு செய்கிறார்' என்று கூறியிருப்பதால் சங்ககால மக்கள் பிரமனை வழிபடு தெய்வமாகக் கொண்டனர் என்பதும், மக்கள் இறையியல் மூலம் பிரமன் மீது கொண்ட நேயமும் புலப்படுகிறது. இதனை,

*"ஓரில் நெய்தல் கறங்க ஓரில்*
*ஈர்ந்தண் முழவின் பாணி ததும்பப்*
*புணர்ந்தோர் பூவணியணியப் பிரிந்தோர்*
*பைதல் உண்கண் பனிவார் புறைப்பப்*
*படைத்தோன் மன்றவப் பண்பி லாளன்*
*இன்னா தம்மவிவ் வுலகம்*
*இனிய காண்கிதன் இயல்புணர்ந் தோரே"* [96]

என்ற புறப்பாடல் இக்கருத்தினை வலியுறுத்துகிறது.

இன்பமும், துன்பமும் விரவிய இந்த உலகத்தைப் படைப்புக் கடவுள் படைத்து விட்டான் என்று கூறுவதிலிருந்து இன்ப துன்பம், இரவு பகல் போல மானிடப் பிறவியில் மாறி மாறி வரும் என்பது புலனாகிறது. மோட்சம் என்னும் வீடுபேறு தரத்தக்கதாக நல்ல செயல்களையே நாம் ஒவ்வொருவரும் உணர்ந்து செயல்பட வேண்டும் என்றும், வீடு பேற்றின் மீது மக்கள் கொண்ட நம்பிக்கையும் வீடு பேற்றை அடைவதுதான் மானிட வாழ்வின் நோக்கமாகும் என்றும், அந்நோக்கத்தை நிறைவேற்றுவதற்கு நல்ல செயல்களையே செய்ய வேண்டும் என்றும் இப்பாடல் நமக்கு அறிவுறுத்துவதைக் காணலாம்.

**அறக்கடவுள்**

அனைத்துக் கடவுள்களும் அறத்தின் காவலர்களாகவே படைக்கப்பட்டுள்ளனர் என்றாலும், 'அறக்கடவுள்' என்ற ஒன்று தனியே பேசப்படுகின்றது. அறத்தின்மீது மக்கள் கொண்ட அன்பினால் அதனைக் கடவுளாகவே உருவகித்துக் கூறியுள்ளனர். அவ்வறக் கடவுள் நல்வினை செய்தவருக்கு நன்மையையும், தீவினை செய்தவருக்குத்

தீமையையும் அளிக்கும் என்று நம்பினர். ஆலத்தூர் கிழார் என்ற புலவர் அறக்கடவுளைப் போன்று கிள்ளி வளவனை நீதி வழங்குமாறு கூறுகின்றார் என்பதை,

*"அறம்புரிந் தன்ன செங்கோ னாட்டத்து*
*முறைவேண்டு பொழுதிற்"* [97]

இப்பாடல் மூலம் அறிய முடிகிறது. தன் மனைவி வறுமையால் வாடினாலும், தன் துன்பத்திற்குக் காரணம் அறக்கடவுளே என்று கருதி அவனைப் பழிப்பாள் என்று பெருஞ்சித்திரனார் கூறுகின்றார்.

*"... ... பெரிதழிந்து*
*குப்பைக் கீரை கொய்கண் ணகைத்த*
*முற்ற இளந்தளிர் கொய்துகொண் டுப்பின்று*
*நீருலை யாக வேற்றி மோரின்*
*றவிழ்ப்பத மறந்து பாசடகு மிசைந்து*
*மாசொடு குறைந்த வுடுக்கையள் அறம்பழியா"* [98]

என்று இவ்வாறு கூறப்பட்டுள்ள அறக்கடவுள் வைதீக சமயத் தெய்வங்களுள் ஒன்றான தருமதேவதையிலிருந்து வேறுபட்டது என்பது சிந்திக்கத்தக்கது. சங்ககால மன்னர்கள் அறக்கடவுளைப் போன்று நேர்மையாளனாகவும், அறக்கடவுளை உரிமையோடு பழிக்கின்ற செயல் புலவர்களிடமும் இருந்தது என்பதை நம்மால் அறிய முடிகிறது.

## பாம்பு வழிபாடு

அக்கால மக்கள் பாம்பை வழிபட்டு வந்தனர் என்பதை மலைபடு கடாத்தால் அறியலாம். பரிசில் பெற்ற கூத்தன், பரிசில் பெறாத கூத்தர் சுற்றத்தை நன்னனிடம் ஆற்றுப்படுத்தும்போது, 'நீவிர் செல்லும் வழிகளில் நிலவெடிப்புகளுக்கு இடையே உள்ள குழிகளில் பாம்புகள் மறைந்து கிடத்தல் கூடும். ஆதலின் நீவிர் மரங்களில் ஏறிக் கைகளால் கொட்டிப் பாம்புகள் பதுங்கிக் கிடத்தலை உணர்ந்து அவற்றைத் தொழுது அவ்விடங்களினின்று விலகிச் செல்வீராக என்பதை,

*"முரம்புகண் உடைந்த பரலவற் போழ்வில்*
*கரந்து பாம்பு ஒடுங்கும் பயம்புமா ருளவே*
*குறிக்கொண்டு மரங்கொட்டி நோக்கிச்*

*செறிதொடி விறலியர் கைதொழூஉப் பழிச்சி*

*வறிதுநெறி ஒரீஇ வலஞ்செயாக் கழிமின்''* [99]

என்ற தொடர்களின் மூலம் அக்கால மக்கள் பாம்பினை வழிபடு தெய்வமாக்கி வழிபாடு செய்து, அஃறிணை உயிர்களின் மூலம் இறையியல் கூறுகளில் மனிதநேயத்தைக் காட்டினர் என்பதை அறிய முடிகிறது.

கூத்தனின் மேற்கண்ட கூற்றிலிருந்து பாம்புகள் உறையும் இடங்களிலிருந்து மக்கள் விலகிச் செல்வது, அவற்றால் தீங்கு நேராமைப் பொருட்டேயாகும். கூத்தன் பாம்புகளை வணங்கி அவை இருக்கும் இடங்களை விட்டு விலகிச் செல்லுக என்று கூறியுள்ளமையால் பாம்பு வழிபாடு என்பது அச்சத்தின் விளைவே எனலாம்.

**கூற்றுவன்**

மலைபடு கடாம் என்னும் நூலில் கூற்றுவன் இயல்பு கூறப்பட்டுள்ளது. நன்னனின் மலைநாட்டில் தினைப்புனத்தை அழிக்க வரும் யானைகளை விரட்டுவதற்காகக் குறவர்கள் வீசியெறியும் கவண்கல் உயிருண்ணும் கூற்றுவன் போல் விரைவாகச் செல்லும்.

*''புலந்து புனிறு போகிய புனஞ்சூழ் குறவர்*

*உயர்நிலை இதணம் ஏறிக் கைபுடையூஉ*

*அகன்மலை யிறும்பில் துவன்றிய யானைப்*

*பகனிலை தளர்க்கும் கவணுமிழ் கடுங்கல்*

*இருவெதிர் ஈர்ங்கழை தத்திக் கல்லெனக்*

*கருவிரல் ஊகம் பார்ப்போடு இரிய*

*உயிர்செகு மரபிற் கூற்றத் தன்ன*

*வரும்விசை தவிராது மரமறையாக் கழிமின்''* [100]

எனக் கூறப்பட்டுள்ளது. இதிலிருந்து உலகில் உயிர்களின் சாவிற்குக் கூற்றுவனே காரணம் என அக்கால மக்கள் நம்பினர் எனத் தெரிய வருகின்றது. இக்காலத்தும் மக்களிடையே இந்நம்பிக்கை நிலவுகின்றது. அக்கால முதல் இக்காலம்வரை தர்மக் கடவுளாகிய கூற்றுவன் உயிர்களைக் கவர்கின்ற தன் தொழிலில் நீதி தவறாமல் கடமையைச் செம்மையாகச் செய்து வருகிறான். அதனால் மக்கள் கூற்றுவன் அழைக்கும் வரை பழிபாவங்கள் செய்வதற்கு அஞ்சி மனிதநேயத்துடன்

வாழவேண்டும் என்பதை உணர்ந்தனர்.

**மலையுறை தெய்வம்**

அக்காலத்தில் மலைப்பக்கங்களில் தெய்வம் உறைவதாக மக்கள் நம்பி வந்தனர். மலைபடுகடாத்தில், பரிசில்பெற்று மீண்ட கூத்தன் வறிய சுற்றத்தை நன்னனிடம் ஆற்றுப்படுத்துங்கால் பின்வருமாறு கூறுகின்றான்.

கூத்தரே! இனிய யாழையுடைய நுந்தம் விறலியர் குறிஞ்சிப்பண்ணைப் பாட நீவிர் மலைப்பக்கங்களில் உறையும் தெய்வங்களைக் கைகளால் தொழுது வாழ்த்திச் செல்வீராக என்பதை,

> *''இறும்பூது கஞலிய இன்குரல் விறலியர்*
> *நறுங்கார் அடுக்கத்துக் குறிஞ்சி பாடிக்*
> *கைதொழூஉப் பரவிப் பழிச்சினிர் கழிமின்''* [101]

என்னும் தொடர்களால் அறியலாம். பரிசில் பெற்று மீண்ட கூத்தனின் கூற்றாக வைத்துப் புலவர் கூறியுள்ள மேற்கண்ட கூற்று வாயிலாக, மலைப்பக்கங்களில் தெய்வங்கள் உறைவதாக அக்கால மக்கள் நம்பினர் என்றும், மலையுறை தெய்வத்தை மக்கள் வணங்கினர் என்றும், இறையியல் மூலம் மனிதநேயத்தைப் பரப்பினர் என்றும் தெரிய வருகிறது.

**நீர்த்துறைக் கடவுள்**

குறிஞ்சி மறவர் வேலனுக்கு வெறியாட்டு அயர்தலைப்போல, மருதநிலத்தாரும் நீர்த்துறைக்கண் உள்ள தெய்வத்திற்குப் பலியிட்டுப் போற்றுகின்றனர். தன் மகள் பொய்கை ஆடியதால் வந்த நீர்த்தெய்வக் குற்றம் போலும் எனக் கலங்குகின்றாள் தாய். அத்தெய்வத்திற்குப் பலியிட்டு வழிபட்டும் தன் மகளின் நோய் தணியாதது கண்டு வருந்துகின்றாள் தாய். நீர்த்துறைக்கண் நிலைபெற்று இருக்கின்ற கடவுளின் தெய்வக் குற்றம் எனக் கருதி வெள்ளாட்டுக் கிடாயைக் கையுறையாகத் தெய்வத்திற்குப் படைத்துப் பலியிடுகின்றாள். இவ்வாறு நீர்த்துறைக் கடவுளை வழிபாடு செய்த குறிப்பை,

> *''கள்ளும் கண்ணியும் கையுறை யாக*
> *நிலைக்கோட்டு வெள்ளை நால்செவிக் கிடாஅய்*
> *நிலைத்துறைக் கடவுட்கு உளப்பட ஓச்சி*
> *தணிமருங்கு அறியாள்''* [102]

என்று அகநானூறு குறிக்கின்றது. குளிர்ந்த நீர்த்துறையில் அந்தத் தெய்வத்தைக் கைகுவித்து வணங்கிப் போற்றி அதற்குச் சிறப்பும் செய்த குறிப்பை,

*"... .... ....அந்தில்*
*அணங்குடைப் பனித்துறை கைதொழுது ஏத்தி*
*யாயும் ஆயமோடு அயரும்"* [103]

என்ற அகநானூற்றுப் பாடல் விளக்குவது கொண்டு இதனை உணரலாம்.

**பாவை வழிபாடு**

தைத்திங்களில் திருமணமாகா மங்கையர் நீர்த்துறையில் பாவையை வைத்து வழிபாடு செய்கின்றனர். இதனை,

*"வண்டற் பாவை உண்துறைத் தரீஇ*
*திருநுதல் மகளிர் குரவை அயரும்"* [104]

என்ற வரிகள் இதற்குச் சான்றாகின்றன. திருமணம் விரைவில் கைகூடி வரவேண்டும் என்று இல்லுறை தெய்வத்திற்குப் பலிக்கடன் செலுத்தி, மெல்லிய விரல்களைக் குவித்து வணங்குகின்றனர். இந்த நாளிலும், கிராமத்து மக்கள் திருமண நாளுக்கு முன்பாகத் தத்தம் வீட்டிலுள்ள தெய்வங்களுக்குப் படைப்புப் படைத்து வழிபாடு செய்வதைக் காணலாம்.

*"வல்லே வருக வரைந்த நாள்! என*
*நல்இறை மெல்விரல் கூப்பி*
*இல்உறை கடவுட்கு ஆக்குதும் பலியே"* [105]

என்ற வகையில் அகநானூற்றுக் கன்னியர் வணங்குகின்றனர். நற்றிணையிலும் வண்டல் பாவை பற்றிக் குறிப்பு உள்ளது.

*"நேரிழை மகளிர் வார்மணல் இழைத்த*
*வண்டல் பாவை வனமுலை முற்றத்து*
*ஒண்பொறிச் சுணங்கின்"* [106]

என்ற நிலையில் இப்பாடல் வரிகள் இதுபற்றிப் பேசுகின்றன.

**சுவர்ப்பாவை வழிபாடு**

சங்க இலக்கியங்களில் சுவர்ப்பாவை பற்றிய குறிப்பும் தெரிய வருகிறது. முத்துமாலை முதலியன புனைந்து இயற்றிய வலிய சுவரின்கண் விளங்கும் பாவை, இப்போது பலி எதுவும் பெறாமல் உள்ளது என்பதால் இதை அறிந்து கொள்ளலாம்.

*"காழ் புனைந்து இயற்றிய வனப்புஅமை நோன்சுவர்ப்*
*பாவையும் பலிஎனப் பெறாஅ"* [107]

என்று அகநானூறு சுவர்ப்பாவையை வழிபட்ட முறையைத் தெரிவிக்கின்றது.

**கடல் தெய்வ வழிபாடு**

நெய்தல் நிலத்துப் பரதவர்கள் கடல்த் தெய்வ வழிபாட்டை செய்கின்றார்கள். ஒளிபொருந்திய முத்துக்களுடன் வலம்புரிச் சங்கினையும் சொரிந்து குளிர்ந்த கடல் துறைக்கண் தெய்வத்தை வணங்குகின்றனர்.

*"அவிர்கதிர் முத்தமொடு வலம்புரி சொரிந்து*
*தழைஅணிப் பொலிந்த கோடுஏந்து அல்குல்*
*பழையர் மகளிர் பனித்துறைப் பரவ"* [108]

என்பன இக்கருத்தை உணர்த்தும் வரிகளாகும். நெய்தல் நில மகளிர் கடற்கன்னியை வணங்கினர். இதனை,

*"கடல்கெழு செல்வி கரைநின் றாங்கு"* [109]

என்ற வரியும் கடல் தெய்வ வழிபாட்டை உணர்த்துகின்றது.

**மாலை நேர வழிபாடு**

ஞாயிறு மேற்குத் திசையில் மறைகின்ற மாலை நேரத்தில் வளையணிந்த மகளிர் மனை விளக்குகளில் வெண்மையான திரியிட்டு ஏற்றி வணங்குகின்றனர்.

*"அகன் சுடர்கல் சேர்பு மறைய மனைவயின்*
*ஒண்தொடி மகளிர் வெண்திரிக் கொளாஅலின்"* [110]

*"…. …. வளமனைப்*
*பூந்தொடி மகளிர் சுடர்தலைக் கொளுவி"* [111]

என்ற பாடல்கள் மூலம் விளக்கு வழிபாடு பற்றிய குறிப்பு தெரிய வருகின்றது.

மேற்கூறிய முறையில் சங்ககால மக்கள் இறைவழிபாட்டு உணர்வில் நம்பிக்கை கொண்டிருந்தனர் என்பதும், அந்த வழிபாட்டை பலியிடும் வகையிலும் நடத்தினர் என்பதும், அவர்கள் வாழ்க்கையில் வேலன் வெறியாட்டு இருந்தது என்பதும், மாலை நேரத்தில் விளக்கு வழிபாடு இருந்தது என்பதும், வழிபாட்டுப் படையல் பொருட்களாக கள், நெல், மலர், புலால், உணவு ஆகியவை இருந்தன என்பதும், இறையியல் மூலம் மனித நேயத்தை உணர்ந்து கொண்டனர் என்பதும் ஈண்டு ஆராயப் பெற்றன.

**தேவர் உலகம்**

தேவர் என்ற சொல் பத்துப்பாட்டில் இடம்பெறவில்லை. மதுரைக் காஞ்சியில் 'புத்தேள்' என்ற சொல் தேவரைக் குறிப்பதாகும். விண், விசும்பு, வான், வானம் என்ற சொற்கள் தேவர் உலகத்தைச் சுட்டும். இன்பத்தின் இருப்பிடம் தேவர் உலகம் என்று கூறுவர். மதுரைக் காஞ்சியில் அதுபற்றிக் குறிக்கும் சொற்கள் இடம் பெற்றுள்ளன.

*''உயர்நிலை உலகம் இவணின் றெய்தும்''* [112]

*''புத்தேள் உலகம் கவனிக் காண்வர''* [113]

*''வானவ மகளிர் மாணக் கண்டோர்''* [114]

*''நீனிற விசும்பில் அமர்ந்தனர் ஆடும்''* [115]

எனவரும் அடிகளால் அறியலாம். தேவர்களைப் பற்றியும் இந்நூல் குறிப்பிட்டுள்ளது. தேவர்கள் அணியும் மாலை வாடுவதில்லை. கண் இமைத்தலும் இல்லை. அவர்கள் தீயிலிடப்படும் அவியின் மணத்தையே நுகர்ந்து கொள்ளும் தன்மையர் என்பதை,

*''வாடாப் பூவின் இமையா நாட்டத்து*
*நாற்ற உணவின் உருகெழு பெரியோர்க்கு''* [116]

இவ்வரிகள் புலப்படுத்துகின்றன. இதனால் தேவர் உலகம் என்று ஒன்று உண்டு என்றும், அது இன்பத்தின் இருப்பிடம் என்றும், அங்குத் தேவர்கள் வாழ்ந்தனர் என்றும் சங்ககால மக்கள் நம்பினர் என்பதை அறியலாம்.

### வானர மகளிர்

நன்னனின் நவிரமலையில் வானரமகளிர் உறைவதாக மலைபடுகடாத்தில் கூறப்பட்டுள்ளது. இப்பாடலில் பரிசில் பெற்ற கூத்தனின் கூற்றாக வைத்து இரண்டு இடங்களில் இடம் பெற்றுள்ளது. 'கூத்தரே! நவிரமலை மீது உறையும் வானர மகளிரின் நிலையை நீவிர் காணின், நுமது உயிர் நீங்குமாறு வெம்பி நடுங்குதலும் உரியீர். எனவே, ஆங்கு பல நாட்கள் தங்காது நிலநாடு செல்வீராக என்பதை,

*''வரையரை மகளிர் இருக்கை காணினும்*
*உயிர்செல வெம்பிப் பனித்தலும் உரியீர்*
*பலநா ணில்லாது நிலநாடு படர்மின்''* [117]

என்னும் தொடர்களும், வானர மகளிர் மலையருவியில் குடைந்து நீராடுங்கால் எழும் இன்னோசை கலைஞர்களின் இசைக்கருவிகளினின்று எழும் இன்னோசைபோல் ஒலிக்கும் என்பதை,

*''அருவி நுகரும் வானர மகளிர்*
*வருவிசை தவிராது வாங்குபு குடைதொறும்*
*தெரியிமிழ் கொண்ட நும் இயம்போ லின்னிசை''* [118]

என்னும் வரிகளும், நவிர மலையில் வானர மகளிர் உறைந்தனர் எனவும், அவர்கள் அருவியில் நீராடுவர் எனவும், அவர்களை வழிச்செல்வோர் காணின் நடுங்குவர் எனவும், இறையியல் தன்மையில் மக்கள் வழிபாடு செய்து மனிதநேய அருளைப் பெற்றனர் எனவும் அறிய முடிகிறது.

## இயற்கை வழிபாடு

### வழிபாட்டு முறை

கோயில்களை முதலில் அமைத்துப் பின்பு அவற்றில் திருவுருவங்களை எழுந்தருளச் செய்தல், திருவுருவங்கள் உள்ள இடங்களில் கோயில்கள் அமைத்தல் என்று திருக்கோயில்களில் இருவகை உண்டு. எத்தகைய இடங்கள் கடவுள் வழிபாட்டிற்கு உரியன என்பதைச் சங்கப்புலவர் நக்கீரனார் திருமுருகாற்றுப் படையில் தொகுத்துக் கூறியுள்ளார். காடுகள், பொழில்கள், ஆற்றின் நடுவேயுள்ள திட்டுகள், ஆற்றங்கரைகள், குளக்கரைகள், நாற்சந்திகள், அம்பலங்கள் போன்ற இடங்கள் வழிபாட்டிற்குரிய இடங்களாகும்.

*"காடும் காவுங் கவின்பெறு துருத்தியும்*
*யாறுங் குளனும் வேறுபல் வைப்பும்*
*சதுக்கமுஞ் சந்தியும் புதுப்பூங் கடம்பும்*
*மன்றலும் பொதியிலும்"* [119]

என்பதிலிருந்து மேற்கூறிய இயற்கையழகு நிறைந்த இடங்களே வழிபாட்டிற்குரிய இடங்கள் என்றும், இறையியலில் இயற்கையின் மீது மக்கள் கொண்டிருந்த ஆர்வமும் புலப்படுகிறது.

## ஐம்பூத வழிபாடு

தொல்காப்பியர் காலத்துத் தமிழர்கள் கதிரவன், நெருப்பு, சந்திரன் என்னும் இயற்கைப் பொருட்களையும் தெய்வங்களாக வணங்கி வந்தனர்.

*"கொடிநிலை கந்தழி வள்ளி என்ற*
*வடுநீங்கு சிறப்பின் மன்னிய மூன்றும்*
*கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே"* [120]

அதாவது கதிர், தீ, மதி இம்மூன்றை வாழ்த்துவதும், கடவுள் வாழ்த்துப் போலவே எண்ணப்பட்டு வரும் என்பதுதான் இதன் பொருள். கடவுள் என்ற சொல்லுக்கு எல்லாவற்றையும் கடந்து நிற்பது என்று இப்பொழுது பொருள் கொள்கின்றோம். சிந்தை, சொல், செயல்களுக்கு அப்பாற்பட்டதே கடவுள் என்று கருதுகின்றோம்.

முடிநாகராயர் என்னும் புலவர், உதியஞ்சேரலாதனைப் புகழுமுகத்தான், நிலம், ஆகாயம், காற்று, தீ, நீர் என்ற ஐம்பெரும்பூதங்களின் பண்புகளை உடையவன் என்பார். பூமியின் பொறுமையும், ஆகாயத்தின் விரிவுடைய ஆராய்ச்சித் திறனும், காற்றின் வலிமையும், தீயின் அழிக்கும் திறனும், நீரின் அருளும் அமைந்தவன் என்று உதியஞ்சேரலாதனை,

*"மண்டிணிந்த நிலனும்*
*நிலனேந்திய விசும்பும்*
*விசும்பு தைவரு வளியும்*
*வளித்தலையே தீயும்*
*தீமுரணிய நீரு மென்றாங்*
*கைம்பெரும் பூதத் தியற்கைபோல*

*போற்றார்ப் பொறுத்தலும் சூழ்ச்சியது அகலமும்*

*வலியும் தெறலும் அளியும் உடையோய்''* [121]

இப்பாடலில் அரசனின் பொறுமைக்கு நிலமும், சூழ்ச்சிக்கு விசும்பும், ஆற்றலுக்குக் காற்றும், தெறலுக்குத் தீயும், கருணைக்கு நீரும் என்று உவமித்துக் கூறியுள்ளார். பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதியை,

*''நீர்மிகிற் சிறையு மில்லை தீமிகின்*

*மன்னுயிர் நிழற்று நிழலு மில்லை*

*வளிமிகின் வலியு மில்லை''* [122]

என்று ஐயூர் முடவனார் என்ற புலவர் விளிப்பார். இதிலிருந்து அக்காலத்தில் அரசர்களைப் புலவர்கள் உயர்த்திக் கூறியதையும், ஐம்பூதங்களைத் தெய்வமாகக் கொண்டு, அரசன் ஐம்பூதங்களை ஒத்த உயர்ந்த பண்புடையவன் என்பதையும் அறிந்துகொள்ள முடிகிறது.

சூரியன், சந்திரன், மழை முதலான இயற்கை தெய்வங்களையும் அரசுக்கு ஒப்புமை காண்பார் மதுரை மருதனிள நாகனார்.

*''ஞாயிற் றன்ன வெந்திற லாண்மையும்*

*திங்க ளன்ன தண்பெருஞ் சாயலும்*

*வானத் தன்ன வண்மையும் மூன்றும்*

*உடையை யாகி யில்லோர் கையுற*

*நீநீடு வாழிய நெடுந்தகை''* [123]

என்று நன்மாறனை வாழ்த்துவார். இயற்கை தெய்வங்களுக்கு அக்கால அரசர்களைப் புலவர்கள் ஒப்பிட்டுக் கூறுவதிலிருந்து புலவர்கள் அரசனை தெய்வமாக மதித்த தன்மை புலப்படுகிறது.

## இயற்கையே தெய்வம்

பிரிந்து சென்ற தலைவியைத் தேடியும் காணாதபொழுது தலைவியின் நலன்கருதி இயற்கைத் தெய்வங்களை வணங்கி வாழ்த்திய தன்மையை நமக்கெல்லாம் அறிவிக்க வேண்டி அழகுபட விளக்குகின்றார் சங்கப் புலவர்.

*"ஞாயிறு காணாத மாண்நிழற் படீஇய*
*மலைமுதல் சிறுநெறி மணல்மிகத் தாஅய்*
*தண்மழை தலைய வாகுக - நம்நீத்துச்*
*சுடர்வாய் நெடுவேற் காளையொடு*
*மடமா அரிவை போகிய சுரனே"* [124]

முதன்முதல் உலகிற்கு ஒளியினைக் கொடுத்த தெய்வம் ஞாயிறு. மற்ற தெய்வங்கள் எல்லாம் காலப்போக்கில் தோன்றியனவேயாகும். தெய்வங்களுக்கெல்லாம் தெய்வமாக விளங்குவது தனித்தலைமைத் தெய்வம் ஒன்றேயாகும். அதுவே கதிரவன் என்ற பெயருடையது என்ற உண்மையை உணர்ந்த செவிலித்தாய் சூரியனை முதற்கண் வாழ்த்துகின்றாள். தன்மகள் சென்ற மணற்பரப்பெல்லாம் மரங்கள் தழைத்து வளரவேண்டும் என்று வாழ்த்துகிறாள். மழை இல்லையென்றால் உலகம் எவ்விதத்திலும் சிறக்காது என்ற உண்மையை உணர்ந்த செவிலித்தாய் தன்மகள் செல்லும் வழிநெடுக மழை மிகவும் பெய்வதாக என உள்ளங்குளிர வாழ்த்துகின்றாள்.

இப்பாடலின் மூலம் தலைவி, தலைவனுடன் உடன்போக்கில் சென்றதை அறிந்த செவிலித்தாய், இயற்கைத் தெய்வங்களைப் பரவி தன் மகளுக்குத் தன்னால் செய்யக்கூடிய பேருதவியையும், இறையியல் மூலம் மனிதநேயத்தை மகளிடம் காட்டிய திறத்தையும் அறிய முடிகிறது.

## மழைக்கு வேண்டுதல்

மழையில்லா விட்டால் தெய்வத்தை வேண்டி விழா எடுப்பர். மழை மிகுதியாகப் பெய்தாலும், அது நிற்கும்படி தெய்வத்தை வேண்டிக் கொள்வர். இவ்வழக்கம் சங்ககால மக்களிடமும் இருந்தது.

*"மலைவான் கொள்கென வுயர்பலி தூஉய்*
*மாரி யான்று மழைமேக் குயர்கெனக்*
*கடவுட் பேணிய குறவர் மாக்கள்*
*பெயல்கண் மாறிய உவகையர்"* [125]

அதாவது மலையிலே மேகங்கள் சூழ்ந்து மழை பொழிக என்று பலிகொடுத்து வணங்குவர். அதனால் மிகுந்த மழை பொழியும். அந்த மழை நிற்க வேண்டும். மேகங்கள் மேலே போய்விட வேண்டும் என்று தெய்வத்தை வேண்டுவர். அதனால் மழை பொழிவது நின்றுவிடும். இதுகண்டு குறவர் மக்கள் மிகுந்த மகிழ்ச்சியடைவர்.

இதனால் மழை பெய்யவும், மழை நிற்கவும் அக்கால மக்கள் தெய்வத்தை வேண்டி நின்றதும், அக்கால மக்களுக்கு இறைவன் மீதிருந்த ஈடுபாடும், அதன்மூலம் அவர்களுடைய இறையியல் பண்பாடும் தெரிகிறது.

**தல விருட்சங்கள்**

இன்று நம் நாட்டில் உள்ள திருக்கோயில்கள் சங்ககாலத்தில் இருந்ததில்லை. இயற்கையின் சூழ்நிலையே வழிபாட்டிற்குரிய இடங்களாயின. வேள்வித் தீயின் மூலம் வழிபாடு பெரிதும் நிகழ்ந்து வந்தது. நதிக்கரையிலும், மலைச் சோலையிலும் தெய்வ வழிபாடு நிகழ்ந்து வந்தது. பரிபாடலில்,

> *''ஆலமும் கடம்பும் நல்யாற்று நடுவுக்*
> *கால்வழக் கறுநிலைக் குன்றமும் பிறவும்*
> *அவ்வவை மேய வேறுவேறு பெயரோய்*
> *எவ்வயி னோயும் நீயே''* [126]

என்பதில் திருமால் ஆலம், கடம்பு, ஆற்றிடைக்குறை, குன்றம் முதலிய இடங்களில் வேறுவேறு பெயரை உடையவராக எழுந்தருளியிருப்பதாகக் கூறப்பெற்றிருத்தல் இக்கருத்திற்கு அரணாக அமைகின்றது. நாளடைவில் இத்தகைய மரங்கள் தல விருட்சங்களாயின என்பதை அறிகிறோம்.

ஆலமரத்தில் கடவுள் உறையும் என்ற கருத்தைச் சங்கப் பாடல் மூலம் அறிகிறோம். பெரிய கிளை முழுவதும் பூத்துக், காய்த்துப் பழுத்துக் கிடத்தல் ஆலமரத்தின் பயனாகும். தன் இனத்தைப் பெருக்குவதற்கும், தன் பழத்தைப் பறவைகள் உண்டு வாழ வேண்டும் என்ற நல்ல நோக்கத்துடனும் மரமானது தன்னிடம் பழங்களைத் தோற்றுவிக்கின்றது. இத்தகைய பெருங்குணத்தைப் படைத்த ஆலமரத்தின் பழங்களை நாடிப் பறவைக் கூட்டங்கள் நாள்தோறும் வருவது இயல்பாகும். பறவைகள் உண்டு வாழப் பழங்களைத் தந்து உதவும் மரங்களைப் படைத்திருப்பது படைப்புக் கடவுளின் பெருங்குணமாகும் என்பதனை,

> *''கடவுள் ஆலத்துத் தடவுச்சினைப் பல்பழம்*
> *நெருநல் உண்டனம் என்னாது பின்னும்*
> *செலவா னாவே களிகொள் புள்ளினம்''* [127]

இப்பாடல் உணர்த்தும். இறையியல் மூலம் கொண்ட மனித நேயத்தினால், அஃறிணை உயிர்களாகிய பறவைகள், இப்பயனை நுகர்கின்றன என்பதை அறிய முடிகிறது.

### நடுகல் வழிபாடு

இறந்தோரை தெய்வங்களாக வணங்கும் வழக்கம் தமிழர்களிடம் இருந்தது. இது தமிழர்களின் வழிவழியாக வந்த வழக்கமாகும். போரிலே மாண்ட வீரர்களுக்கு கல்நட்டு வணங்கும் பழக்கம் தமிழர் பண்பாடு என்பதை தொல்காப்பியத்தில் காணலாம்.

> *''காட்சி கால்கோள் நீர்ப்படை நடுதல்*
> *சீர்த்தகு மரபில் பெரும்படை வாழ்த்தல்''* [128]

என்று வீரர்க்கு கல்நாட்டும் முறையைக் கூறுகிறது. முதலில் நல்ல உறுதியான கல்லைக் காணுதல், அக்கல்லை எடுத்து வருதல், நீராட்டுதல், அதனைக் குறித்த இடத்தில் நடுதல், அக்கல்லில் வீரனுடைய பெயரும், பீடும் குறித்தல், பிறகு அதனைத் தெய்வமாக அமைத்து விழாக் கொண்டாடி வாழ்த்தி வணங்குதல் என்று ஆறு வகையாகக் கூறப்படுகின்றது.

### கல்நட்டு வணங்குதல்

அக்காலத்தில் போரில் விழுப்புண் பட்டு மாய்ந்த வீரர்களுக்கு நடுகல் நாட்டும் வழக்கம் இருந்தமை பற்றி மலைபடுகடாம் கூறுகின்றது. நடு கற்களில் 'மறத்தெய்வம்' உறைவதாகக் கொண்டு அக்கற்களை மக்கள் வழிபட்டு வந்தனர் என்பதையும் இந்நூலின் மூலம் அறியலாம்.

> *''ஒன்னாத் தெவ்வர் உலைவிடத் தார்த்தென*
> *நல்வழிக் கொடுத்த நாணுடை மறவர்*
> *செல்லா நல்லிசைப் பெயரொடு நட்ட*
> *கல்லேசு கவலை எண்ணுமிகப் பலவே*
> *இன்புறு முரற்கைநும் பாட்டுவிருப் பாகத்*
> *தொன்றொழுகு மரபினும் மருப்பிருத்துத் துணைமின்''* [129]

போர் நிகழ்ச்சியை ஒட்டி எழுந்த 'நடுகல் வழக்கம்' பின்பு இறையியல் அடிப்படை கொண்டு நடுகல் வழிபாடாக மாறிவிட்டது. இதுகுறித்து டாக்டர்.கைலாசபதி கூறியுள்ள கருத்து இவண் கருதத்தக்கது. அவரது கருத்துப் பின்வருமாறு:

> *''இறந்தவர்களுக்கும் தமக்கும் தொடர்பு அறவில்லை என்று உயிருடன் இருந்தோர் நம்பினர். அந்நம்பிக்கையினால் இறந்தோர்க்கு, முன்னர்*

*உவப்பாக இருந்தனவற்றை அன்னோர் அடக்கம் செய்யப்பட்ட இடங்களில் வைத்துப் படைக்கலாயினர். இவ்வடிப்படையிலேயே நடுகல் வழிபாடும் பிறந்தது.''* [130] *''போரிலே வீழ்ந்து பட்டவரை வணங்கும் வழக்கம் கால கதியில் சிறு தெய்வ வணக்கமாக மாறியது.''* [131]

### சிறு தெய்வ வழிபாடு

போர்க்களத்தில் வீரமரணம் எய்திய வீரர்கள் நினைவாக நினைவுக் கற்கள் நிறுத்தப்பட்டன. இக்கற்களுக்கு அருகில் கேடயங்கள், ஈட்டிகள் ஆகியவை வைக்கப்பட்டுள்ளன. இந்நடுகற்களைத் தெய்வங்களாக எண்ணி வணங்கி வந்தார்கள். இவ்வாறு நடுகல்லை நடுவதற்கு ஏற்ற கல்லைத் தேர்ந்தெடுத்து அக்கல்லில் வீரனின் உருவம் செதுக்கப்படும். பின் அக்கல்லுக்கு நல்ல நிமித்தம் பார்ப்பார்கள். அக்கல்லை நீராட்டி தகுந்த இடத்தில் நடுவார்கள். 'தாம் வசித்த கற்களை விட்டுத் தெய்வங்கள் நீங்கி விட்டமையால் அம்பலங்கள் பாழடைந்து கிடக்கின்றன' என்று,

*''நெருநல் யாணரின் ஒரீஇ இனியே*
*கலிகெழு கடவுள் கந்தங் கைவிடப்*
*பலிகண் மாறிய பாழ்படு பொதியில்''* [132]

புறநானூறு கூறுகிறது. மேலும் 'தெய்வம் நீங்கிச் சென்றுவிட்ட தூண்களையுடைய மண்டபங்கள், புதர்கள் மண்டிப் பாழடைந்துவிட்டன'' [133] என்று அகநானூறு கூறுகின்றது. இத்தகைய நடுகற்களே பிற்காலத்தில் மதுரைவீரன், கறுப்பன், சுடலைமாடன், இருளன், அய்யனார் என்று சிறு தெய்வங்களாகப் போற்றப் பட்டிருக்கலாம் என்று கருதப்படுகிறது.

### வீரவணக்கம்

பழந்தமிழர் வழிபாட்டு முறைகளுள் வீர வணக்கமும் ஒன்று. போரில் விழுப்புண் பட்டு வீழ்ந்து இறந்த வீரரைத் தெய்வமாகப் போற்றினர். அவர்களைக் கல்லில் சமைத்து வழிபட்டனர். நடுகல் வழிபாடு யார் யாருக்கு ஏற்பட்டது என்பதை அகநானூற்றுப் பாடல் வழியே உணரலாம். போரில் இறந்த வீரரைக் கல்லில் அமைத்து வழிபடும் வழக்கமும் இக்காலப் பகுதியில் இருந்திருக்கின்றது. வீரரின்

பெயரினையும், சிறப்பினையும் பொறித்து, வழிதோறும் மயில்தோகை அணிந்து விளங்கும் நடுகற்களைப் பற்றி அகநானூறு குறிப்பிடுகின்றது.

*"அரம்போழ் .... .... ஊன்று பலகை"* [134]

என்று விளக்கம் தருகின்றது. இங்கே நிரை மீட்க நடந்தபோரும், அதிலே தமது உயிரை இழந்தவருடைய குறிப்பும் கூறப்பட்டிருப்பதைக் காணலாம்.

போர்க்காலத்தில் வீரத்தில் முன்னிற்றலைப் போலவே தன் தலைவன் வெற்றி பெறுவதற்காகத் தன்னையே பலி கொடுத்துக் கொள்வது பெருமறம் எனப் போற்றப்பட்டு, இவர்கட்கும், நடுகல் நட்டு இவர்தம் பெருமைகளைப் பேசும் செய்திகளும் தமிழ்நாட்டின் கல்வெட்டுச் சான்றுகளால் அறியக் கிடக்கின்றது. இதனுடைய பழங்கால வடிவமாக 'அயிரைமலை கொற்றவைக்குக் குருதிப் பலியிடும் வழக்கம் இருந்திருக்கலாம் என்று கருதலாம்' [135]

நடுகல் முறையில் அரசனின் படையெடுப்பு வெற்றி பெறவேண்டும் என்று வெற்றித் தெய்வத்திற்குத் தன்னையே பலிகொடுக்கும் பழக்கமும், அவர்களுடைய பீடும், பெருமையும் நடுகல்லில் எழுதப்பட்டதையும் இக்கற்கள் தெய்வ வழிபாட்டுக்குரியதாகக் கருதப்பட்டதையும் பதிற்றுப்பத்தின் அகச்சான்றுகள் தெரிவிக்கின்றன. பதிற்றுப்பத்தில் நேரிடையாக நடுகல் வழிபாடு இருந்தது என்பதை அறியச் சான்று இல்லை என்றே கூறலாம். ஆயினும் இந்நடுகல் வழிபாட்டிற்கான அடிப்படைக் கூறுகள் இருந்திருக்கின்றன என்பதைப் பதிற்றுப்பத்து பகர்கின்றது.

### நடுகல் வழிபாட்டு முறை

நடுகல் வழிபாட்டு முறை எவ்விதம் நடந்தது என்பதை,

*"நுழைநுதி நெடுவேல் .... ... அருஞ்சுரம்"* [136]

இப்பாடலில் குறிக்கப்பட்டிருத்தலைக் காணலாம். இந்த நடுகற்கள் இறந்தவரின் உறவினராலோ, நெருங்கிய நண்பராலோ ஏற்படுத்தப்பட்டன என்று கருத இடம் உண்டு. மலரும், மதுவும், ஊனும், சோறும், நடுகற்களுக்குப் படைக்கப்பட்டதை நோக்குமிடத்து, இக்காலத்தில் படையல் போட்டு சிறு தெய்வங்களை வழிபடுவதை நினைவிற்குக் கொண்டு வரலாம்.

அகநானூற்றில் வீரர்கள் வழிபாடு செய்கின்றனர். நீண்ட கற்களில் அவற்றின்

அகன்ற இடத்தில் செதுக்கப்பட்ட பெயர்களைக் கழுவிச் சுத்தம் செய்தனர். ஈரமான புற்றில் வாசனை மிகுந்த மஞ்சைளப் பூசினர். ஆத்திப்பட்டை நாரிலே கரந்தைப் பூவைத் தொடுத்து அதைச் சூட்டினர்.

*“நட்டபோலும்... .... ஆர்ப்பச் சூட்டி”* [137]

என்ற பாடல் வரிகள் வீரர்கள் மரியாதை செலுத்துவதை விளக்கும். இதிலிருந்து இறந்துபோன வீரர்கள் மீது அக்கால மக்கள் செலுத்திய மனித நேயம் புலனாகிறது.

நடு கற்களில் பெயரும், பீடும் எழுதி, மயில் தோகைகளைச் சூட்டி, துடியடித்து, நெல்லால் ஆக்கிய கள்ளோடு, செம்மறியாட்டுக் குட்டியை பலி கொடுப்பதை அகநானூறு அறிவிக்கின்றது. இத்தகைய வழிபாட்டு முறைகள் இன்று தாழ்ந்த சாதியினர் என்று கருதப்படுபவர்களிடம் சிறிதும் மாறுபடாது இருந்து வருகின்றது என்பது எண்ணிப் பார்க்கத்தக்கது.

**நடுகற் கட்டடங்கள்**

சங்ககாலத் தமிழகத்தில் அதியமான், கோப்பெருஞ்சோழன் போன்ற மன்னர்கள் மடிந்தபின் நடுகற் கட்டடங்கள் எழுப்பப்பட்டன. மறவர்களுக்கும், மன்னர்களுக்கும் எழுப்பப்பட்ட நடுகற்களையும், அவற்றை மக்கள் வழிபட்ட செய்திகளையும் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. [138] தொல்காப்பியர் காலத்திற்கு முன்தோன்றிப் பிற்காலம் வரைவரும் நடுகல் மரபு தமிழக மக்களின் பண்பாட்டுத் தொடர்ச்சியைக் கட்டிக் காத்து வந்திருக்கின்றது.

தமிழ்நாட்டிலிருந்த முன்னோர் வழிபாடு, பூசைமுறை, மரணச் சடங்கு, பிணங்களைப் புதைக்கும் விதம், நினைவுச் சின்னம் எழுப்பும் ஆர்வம் ஆகியவற்றிற்கெல்லாம் அழியாச் சான்றாக நின்று இலங்குவது நடுகல்லாகும். இலக்கியம், சிற்பம் ஆகிய இரண்டின் வாயிலாக வீரக்கொள்கையைப் பரப்பும் வீரப் பிரச்சாரக் கருவியாக நடுகல் நன்கு பயன்பட்டது.

வீரர்கள் எப்போதும் நிலையாமை எண்ணத்துடன் இருந்தனர். இதனால்தான் பதிற்றுப்பத்து வீரர்களைக் “காஞ்சி சான்ற வயவர்” [139] என்று அழைக்கிறது. நிலையாத உலகத்தில் தம்மை நிலை நிறுத்த விரும்பிய வீரர்கள் தம் வாழ்நாளின் பின், புகழ் நிலைத்து நிற்கும் என்பதை மனத்திற்கொண்டு புகழ் உடம்பிற்காகப் பூதவுடம்பையும், உயிரையும் போரில் இழக்க முன்வந்தனர்.

*"மன்னா வுலகத்து மன்னுதல் குறித்தோர்*

*தம்புகழ் நிறீஇத் தாமாய்ந் தனரே"* [140]

தாம் கருதியவாறே அழியாப் புகழும் பெற்றனர். நில்லா உலகத்து நிலைபெற, இசையை நட்டு இறக்கத் துணிவர் என்பதை அறிய முடிகிறது.

**நடுகல் அமைப்பு**

காவிரிப்பூம்பட்டினத்துக் கடற்கரையில் கயிறுகளோடு கூடிய நெடுந்தூண்டிற்கழிகள் சார்த்தி வைக்கப்பெற்ற தாழ்ந்த கூரைகளையுடைய குடிசைகளைப் பார்க்கும்போது,

*"கிடுகுநிரைத் தெஃகூன்றி*

*நடுகல்லின் அரண்போல"* [141]

இத்தகு காட்சியளிப்பதாக ஆசிரியருக்குத் தோன்றுகிறது. நடுக்கல்லை நடுவில் வைத்துச் சுற்றி எழுப்பப்பட்ட கருவறையாக நடுகற்கோவில் தோன்றத் தொடங்கிய ஆரம்ப நிலையை இது சுட்டுகிறது எனலாம். நடுகல்லைச் சுற்றி வேல்களும், கேடகங்களும நாட்டப்பட்டிருந்ததாகச் சங்கப் பாடல்கள் குறிப்பது, அந்நடுகல்லிற்குரிய வீரர்கள் பயன்படுத்திய போர்க்கருவிகளாகவே இருக்கும் எனக் கருத இடமுண்டு.

தெய்வத்திற்கு அத்தெய்வம் பயன்படுத்துகின்ற பொருட்களைச் செய்து வழிபடுபவர்கள் நேர்த்திக் கடனாக அளிப்பர். கொற்றவைக்கு அவள் விளையாட்டிற்குப் பயன்படுகின்ற பந்தும், கழங்கும் கொடுத்து மக்கள் வழிபட்டதாக சிலம்பு கூறுகிறது.

*"பாவையும் கிளியும் தூவி அம்சிறைக்*

*கானக் கோழியும் நீனிற மஞ்ஞையும்*

*பந்தும் கழங்கும் தந்தனர் பரசி"* [142]

அதுபோன்று நடுகல்லை வழிபடுவோர், வீரர்கள் போரில் பயன்படுத்தும் படைக்கலங்களை வைத்து வழிபடும் வழக்கம் இருந்தது. வீரர்களுக்கு எடுத்த நடுகற்களில் அவர்களுக்குரிய பெயரும், புகழுக்குரிய செயலும் பொறிக்கப்பட்டிருந்தன என்பதை,

*''மறவர் பெயரும் பீடும் எழுதி''* [143]

*''.... .... .... மறவர்*

*செல்லா நல்லிசைப் பெயரொடு நட்ட''* [144]

இப்பாடல் வரிகள் சுட்டிக்காட்டுகின்றன. 'இறந்துபட்ட கோப்பெருஞ்சோழனுக்கு அழியாச் சின்னமாக எடுக்கப்பட்ட நடுகல்லை 'நிலைபெறு நடுகல்' என்றும், அழியாப் புகழைச் சேர்த்தவருக்கும், புரக்கப்பட்டோர் வருந்த உயிர் நீத்தவருக்குமே நடுகல் எடுக்கப்பட்டது' [145] கோப்பெருஞ்சோழனின் நடுகல்லைக் கண்டபோது பொத்தியாருக்கு எழுந்த சிந்தனைகளைப் புறநானூறு எடுத்தியம்புகிறது. பாடுநர், ஆடுநர், சான்றோர், அந்தணர் ஆகியோரிடம் அவன் கொண்ட பேரன்பு, அவன் செலுத்திய செங்கோலாட்சி, மகளிர்பால் காட்டிய மென்மை, பகைவரிடத்துக் காட்டிய வன்மை ஆகியவற்றை எண்ணி எண்ணி வருந்துகிறார்.

இவ்வாறு எல்லாப் பண்புகளும் நிறைந்த கோப்பெருஞ்சோழனின் தகுதியைச் சிறிதும் எண்ணிப் பார்க்காமல் அவன் உயிரைக் கவர்ந்து சென்ற கூற்றுவனை வைவதற்காகப் புலவர் கூட்டத்தைச் சுற்றத்தோடு அழைக்கிறார் பொத்தியார். [146] செத்தும் கொடை கொடுத்த சீதக்காதிபோல, நடுகல்லான பிறகும் தன் பக்கத்தே அமர்ந்து வடக்கிருந்து உயிர்விட இடம் கொடுத்த கோப்பெருஞ்சோழனின் 'உடம்பொடு உயிரிடை' போன்ற நட்பு உணர்வினை எண்ணிப் பார்க்கிறார் பொத்தியார். இப்பாடலில் இறையியல் மூலம் மனிதநேயத்தை உணர்த்துகிறார் புலவர்.

'போரில் வீழ்ந்துபட்ட மறவர், வீரசுவர்க்கம் அடைந்து அங்குள்ள மகளிரை மணந்து இன்பம் துய்ப்பர் என்று சங்க இலக்கியம் கூறுகிறது.' [147] வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து வானுலகத் தெய்வத்துள் வைக்கப்பட்ட இத்தகைய மறவர்களை நிலவுலகில் உள்ளவர்கள் நடுகல் தெய்வமாக்கி வழிபட்டனர். 'வையத்துள் வாழ்வாங்கு வாழ்வோர் தெய்வமாகின்றனர்' [148] என்று சொன்ன வள்ளுவரே, 'உலகத்தைப் படைத்த தெய்வம் ஒன்று தனியாக உண்டு' [149] என்பதையும் ஏற்றுக் கொள்கிறார். போருக்குப் போகுமுன் கொற்றவையை வீரர் வணங்கிப் போகின்றனர்.

இதிலிருந்து போரில் மடிந்துபட்ட வீரர்களின் நடுகல் வழிபாடும், கொற்றவை வழிபாடும் சமகாலத்தில் நடைமுறையிலிருந்த இருவேறு வழிபாட்டு முறைகள் என்பது தெளிவு. இவற்றால் மறவர்கள் கொற்றவையைப் பெருந்தெய்வமாகவும்,

நடுகற்களைக் குலதெய்வங்களாகவும், சிறு தெய்வங்களாகவும் வணங்கினர் எனக் கருத வேண்டும். நடுகற்களைக் கண்ட மட்டில் மக்கள் நெஞ்சில் ஒரு தெய்வீக அச்சம் ஏற்பட்டது. 'பேஎமுதிர் நடுகல்' [150] என்ற தொடர் இதனைச் சுட்டுகிறது. நடுகல் வீரர்களைக் கடவுள் என்ற பெயரால் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன என்பதை,

*"கல்லெறிந் தெழுதிய நல்லரை மராஅத்த*
*கடவுள் ஓங்கிய காடேசு கவலை"* [151]

மலைபடுகடாம் உணர்த்துகிறது.

**நடுகற்களைப் பாதுகாத்த தன்மை**

'நடுகற்களுக்கு விடியற்காலையில் பூசைப் பொருள்கள் கொண்டு வழிபாடாற்றுவர்' [152] 'கோவில்களில் இறைவனுக்கு அபிடேகம், அருச்சனை, நைவேத்தியம், தீபம், தூபம் அமைத்து வழிபடல்போல் நடுகல்லையும் வழிபட்டனர். [153] 'நடுகல் வீரனை நீராட்டினர். நெய்யூட்டி விளக்கேற்றினர். நறுமணப்புகை போட்டனர்' [154] நடுகல்லிற்கு புடவையால் பந்தர் அமைத்தனர். [155] நடுகல்லைக் கைகூப்பிக் கும்பிட்டனர். [156] வேந்தன் போரில் வெற்றி பெறவேண்டும் என்றும், தலைவன் வெற்றியோடு வந்து வீட்டில் விருந்து படைக்க வேண்டும் என்றும், நடுகல் வீரரிடம் வரம் வேண்டி வழிபட்டனர். [157] நடுகல்லைத் தொழுதால் மழை பொழியும் என்று நம்பினர். [158] இதிலிருந்து நடுகல் வீரர்கள் மீது அக்கால மக்கள் கொண்டிருந்த அன்பும், பக்தியும், பற்றும், மனிதநேயமும் புலப்படுகின்றன.

ஏனைய மக்களைப்போல நெல்லைச் சொரிந்து வழிபடும் கடவுள் வணக்கம், தங்கள் மரபினரிடம் இல்லை என்றும், நடுகல்லை மட்டுமே வழிபடுவது தங்கள் குடி ஒழுக்கம் என்றும் கூறுகிறாள் முல்லைநில மறக்குடி மகள். [159] மறக்குடி மகளிர் நடுகல் வழிபாட்டில் எழுப்பிய நறும்புகை மேகம்போல் ஊர்த்தெருவெங்கும் பரந்து கமழ்ந்தது. [160] இதிலிருந்து மறக்குடி மகளிர் நடுகல் வழிபாட்டு முறையினை மேற்கொண்டனர் என்ற செய்தியை அறியலாம்.

வெட்சி மறவர்களை வென்று, ஆனிரைகளை மீட்டுவந்த கரத்தை மறவர்கள் தம்மிடத்திற்கு வந்தவுடன் நடுகற் கடவுளுக்கு வழிபாடு செய்யும் முறையைத் தெரிவிக்கிறது. போருக்குப்போகும் முன் வெற்றி வேண்டிச் செல்லுதலும், வெற்றி

பெற்று மீண்டு வந்து, தான் முன்பு வருவதாகச் சொன்ன வழிபாட்டுக் கடனைச் செலுத்துதலும் மறவர்குடி வழக்கமாகும் என்பதை,

*''அணிமுடி அமரர்தம் அரசொடு பணிதரு*
*மணிஉரு வினை! நின்மலரடி தொழுதேம்*
*கணநிரை பெறுவிறல் எயின்இடு கடன்இது*
*நிணன்உகு குருதிகொள் நிகரடு விலையே''* [161]

சிலப்பதிகாரம் கொண்டு அறிகிறோம். 'கரந்தைப் போரில் வெற்றி பெற்று எஞ்சியிருந்த மறவர்கள், போரில் மடிந்துபட்ட வீரர்களின் உருவங்களை மலையிலே சிற்பங்களாகச் செய்து வழிபட்டுத் தத்தம் ஊர்போய்ச் சேர்கின்றனர். [162] என்று அகநானூறு தெரிவிக்கிறது. இதிலிருந்து வீரமறவர்கள் நடுகல்லிற்கு அளித்த மதிப்பும், பெருமையும் வெளிப்படுகின்றன.

இறைவன் உருவம் பொறித்து நாட்டிய கந்துகள் சங்க காலத்தில் வழிபடப்பட்டன.

*''வம்பலர் சேக்கும் கந்துடைப் பொதியில்''* [163]

*''கலிகெழு கடவுள் கந்தங் கைவிடப்*
*பலிகண் மாறிய பாழ்படு பொதியில்''* [164]

மேற்கண்டவாறு கடவுளர்க்குத் திருவுரு அமைத்து வழிபட்டதைப் பின்பற்றி தெய்வமாக்கப்பட்ட நடுகல் வீரர்க்கும் உருவம் அமைத்து வழிபட்டனர். [165] இறைவன் வழிபாட்டிடங்கள் கோட்டம், கோயில் என்றெல்லாம் அழைக்கப்பட்டன. [166] பண்டைக்காலத்தில் இறைவனைப் பாடி வழிபாடு செய்வது மரபு. அதுபோல் 'நடுகல் வீரரையும் பாடி வழிபட்டனர்' [167] என்பதை, மலைபடுகடாம் எனும் நூல் உணர்த்துகிறது. இம்மரபு இன்றும் காணப்படுகிறது.

பல்லவர்கால நடுகற்கள் பல இன்றும் மக்களால் வழிபடப் படுகின்றன. இன்றைய வழிபாட்டு நிலையில், நடுகல் வீரர்க்கு ஆண்டுக்கு ஒருமுறை விழா எடுப்பர். பொங்கல் செய்து கோயிலுக்கு வெளியே வைத்துப் படைப்பர். உயிர்ப்பலியாக ஆடு, கோழி அறுப்பர். மழை பெய்யாதபோது நடுகல் தெய்வங்களுக்கு விழா எடுப்பர். தங்கள் வேண்டுதலின்படி மழை பெய்து வளம் கொழித்ததாகவும் கூறுகின்றனர். நடுகல் கோயில்களின் முன், வீரர் ஊர்தியாகப் பெரிய சுடுமண்

குதிரைகளை நிறுத்தி வைத்தும், அவர்கள் படைக்கலங்களாக இரும்பு வேல்களை நாட்டி, எண்ணெய் பூசி, மாலை சூட்டியும் வழிபடுவர்.

நடுகற்கள் அருகே பெண்கள் செல்லக்கூடாது என்ற நம்பிக்கை இன்று நிலவுகின்றது. நடுகற்களுக்கு உயிர்ப்பலி கொடுப்பதும், மழை வேண்டி நடுகற்களை வழிபடுவதும் பழங்காலத்திலிருந்து நிகழ்ந்து வருவன. படைக்கல வழிபாடும் முன்னோர் செய்த ஒன்றாகும் என்பதை,

*''இவ்வே, பீலியணிந்து மாலை சூட்டிக்*
*கண்டிர ணோன்காழ் திருத்திநெய் யணிந்து*
*கடியுரை வியனகர்''* [168]

என்ற வரிகள் மூலம் அறியலாம். 'பூப்புக் காலம் தவிர ஏனைய காலங்களில் பெண்களுக்குத் தெய்வங்களின் அருகில் செல்ல தடை இருந்ததில்லை'. [169] 'நடுகற்களை வழிபடும் உரிமை பழங்கால மகளிர்க்கு இருந்தது' [170] என்பதை இப்புறப்பாடல் எடுத்துரைக்கின்றது.

சங்ககால வீரர்கள் போரிடை வீழ்தலையே நன்மரணமாக மதித்தார்கள். அம்மரணம் பெறாதவிடத்தே, பெறாதவனைத் தருப்பையிற் கிடத்தி, வாளால் இருகூறுபடுத்தி வீரமரணம் பெறும்படிச் செய்தனர்.

*''.... .... நல்லமர் வீழ்ந்த*
*நீள்கழன் மறவர் செல்வுழிச் செல்கென*
*வாள்போழ்ந் தடக்கலு முய்ந்தனர்''* [171]

போரில் முதுகுகாட்ட நேரிட்டால் உண்ணாவிரதமாய் வடதிசை நோக்கியிருந்து உயிர் துறந்தார்கள் என்பதை,

*''தன்போல் வேந்தன் முன்புகுறித் தெறிந்த*
*புறப்புண் ணாணி மறத்தகை மன்னன்*
*வாள்வடக் கிருந்தனன்''* [172]

*''கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை*
*மிகப்புக ழுலக மெய்திப்*
*புறப்புண் ணாணி வடக்கிருந் தோனே''* [173]

என்ற புறநானூற்றுப் பாடல்கள் உணர்த்துகின்றன.

*"வேந்துடைத் தானை .... வண்மையோனே"* [174]

இவ்வகை வீரனின் புகழ் உடம்பைத் தமிழ் மக்கள் தெய்வமாக்கி, நடுகல் அமைத்து வணங்கி வந்தனர். இவ்வாறு நடுகல் அமைத்து வீரனைத் தெய்வமாகக் கருதி வழிபட்டார்கள் என்பதிலிருந்து, பிறரால் வழிபடுகின்ற மனிதநேயப் பெருமையும் தெரிய வருகின்றது.

**தெய்வ நம்பிக்கை**

தெய்வ வழிபாடு தொன்மை வாய்ந்த வரலாற்றுச் சிறப்புடையது. மக்கள் தெய்வத்திற்குப் படிமம் வைத்தமை, நன்றிக்கடன் பல செலுத்தியமை, தெய்வம் காக்கும் எனக் கருதி வழிபட்டமை, இன்ன பிறயாவும் அவர்தம் தெய்வ வழிபாட்டுச் சிறப்பை நன்கு எடுத்துக்காட்டும். இச்சிறப்புகளை,

*"மேவிய சிறப்பின் ஏனோர் படிமைய"* [175]

*"கிழவோர் சுட்டிய தெய்வக் கடத்தினும்"* [176]

*"வழிபடு தெய்வம் நிற்புறங் காப்ப"* [177]

எனவரும் தொல்காப்பிய நூற்பாக்கள் நன்கு புலப்படுத்துகின்றன.

பண்டைத் தமிழ் மக்கள் கடவுள் நம்பிக்கை உடையவர்களாய் வாழ்ந்தனர். பிறர் தெறுதற்கரிய ஆற்றல் படைத்தவர் கடவுள் என அவர்கள் நம்பினர்.

*"தெறலறு மரபிற் கடவுள்"* [178]

*"தெறலருங் கடவுள்"* [179]

*"அருந்தெறல் மரபின் கடவுள்"* [180]

என்பன இந்த நம்பிக்கையைக் காட்டும். 'மலையில் தெய்வம் தங்கியிருப்பதாகக் குறவர்கள் நம்பினர். அதனால் மலைக்குக் கள்ளைப் படைத்துப் பிறகு பருகினர்'. [181] மலையில் தங்கியிருக்கும் கொல்லிப் பாவையை தெய்வத் தன்மை நிறைந்ததாக நம்பிப் போற்றினர். [182] தெய்வம் செல்வத்தைக் காக்கிறது என நம்பினர். [183]

**குழந்தை பெற விழைந்தமை**

சங்கப் பாடல்கள் மக்கட் செல்வத்தைப் பற்றிப் பேசும் போது புதல்வனைப் பற்றியே பேசுகின்றன என்பதை,

*"சிறுவர்ப் பயந்து* [184]

*"புதல்வன் தாயே"* [185]

பல பாடல்கள் புதல்வனைப் பற்றிக் குறிப்பிடுகின்றன. ஐங்குறுநூற்றுப் பாடலில்,

*"மகளிர்ப் பயந்த மனைகெழு பெண்டிர்"* [186]

எனக் குறிக்கப்பட்டுள்ளது. அன்றைய சமுதாயத்தில் மன்னர்களுக்கிடையில் அடிக்கடி போர் நடந்தமையாலும், அவ்வாறு போரிடத் திடமான ஆடவர் தேவையாய் இருந்தமையாலும் அக்காலத் தமிழர் புதல்வரைப் பெறுதலை விரும்பினர்.

ஆண்மக்களைப் பெற்ற தாயரே, மக்கட்பேறு பற்றிக் கூறும்போது குறிப்பிடப்பட்டிருப்பினும், பெண் மக்களைப் பெறுவதை அவர்கள் வெறுத்ததில்லை. பெண் குழந்தை வேண்டிப் பெற்றதை,

*"குன்றக் குறவன் கடவுட் பேணி*
*இரந்தனன் பெற்ற எல்வளைக் குறுமகள்"* [187]

என்ற பாடல் ஒரு குன்றக் குறவன் தனக்கொரு பெண்மகள் வேண்டி, கடவுளை வழிபட்டு அவன் அருளால் ஒரு மகளைப் பெற்றதைக் கூறுகிறது. இதிலிருந்து அக்காலத் தலைவி கடவுள் மீது கொண்ட நம்பிக்கையினால் தன் விருப்பத்தை நிறைவேற்றிக் கொள்கிறாள் என்பது தெரிகிறது.

**ஆயர்களின் நம்பிக்கை**

ஏறு தழுவிச் செல்லும் வீரர்கள் ஏறு தழுவுவதற்கு முன் நீர்த் துறையிலும், ஆலமரத்தின் கீழும், மாமரத்தின்கீழும் உறையும் தெய்வங்கட்குச் செய்யும் முறைகளைப் பரவித் தொழுவிலே பாய்வர். இதனை,

*"துறையும் ஆலமும் தொல்வலி மராஅமும்*
*முறையுளி பராஅய் பாய்ந்தனர் தொழூஉ"* [188]

என்ற வரிகளால் அறியலாம். இவ்வாறு தெய்வத்தைப் பரவி, ஏறுதழுவி வென்றபின்

வெற்றி பெற்ற வீரனைப் புகழ்ந்தும், தெய்வத்தை வாழ்த்தியும், மன்னனை வாழ்த்தியும் பாடிக் குரவைக் கூத்தாடுவது இவர்களின் வழக்கம் என்பதை,

*''பாடுகம், வம்மின் - பொதுவன் கொலை ஏற்றுக்*
*கோடு குறிசெய்த மார்பு''* [189]

*''குரவை தழீஇ, யாம், மரபுளி பாடி''* [190]

*''பண்அமை இன்சீர்க் குரவையுள், தெண்கண்ணி*
*திண்தோள் திறல்ஒளி மாயப்போர் மாமேனி*
*அம்துவர் ஆடைப் பொதுவனோடு ஆய்ந்த*
*முறுவலாள் மென்தோள் பாராட்டி, சிறுகுடி*
*மன்றம் பரந்தது உரை''* [191]

இவ்வரிகள் மூலம் மன்னனை வாழ்த்தும் மரபும், தெய்வத்தைப் பரவும் மரபும் இருந்துள்ளமையைக் காட்டுகின்றன. இவர்கள் கடவுள்மீது நம்பிக்கை உடையவர்களாய் இருந்துள்ளனர் என்பது ஆயர்மகன் ஏறு தழுவியபோது, அவ்வேறு ஆயர்மகன் சூடிய மாலையைக் கோட்டால் எடுத்து வீசியபோது அது ஆயர் மகளின் கூந்தலின்மீது வீழ்ந்ததை, நினக்கு இவனே தலைவன் என்பதைத் தெய்வம் காட்டிற்று என்று குறிப்பிடும். இதனை,

*''மண்ணி மாசுஅற்ற நின்கூழையுள் ஏற அவன்*
*கண்ணி தந்திட்டது எனக்கேட்டு, திண்ணிதா*
*தெய்வமால் காட்டிற்றுஇவட்கு என நின்னைஅப்*
*பொய்யில் பொதுவர்க்கு அடை சூழ்ந்தார் - தந்தையோடு*
*ஐயன்மார் எல்லாம் ஒருங்கு''* [192]

என்ற வரிகளால் அறியலாம். மனிதர்கள் கொண்ட நேயத்தினால் அவ்வாயர் தலைவனின் இறைப்பற்று தெரிகிறது.

### வழிபடு தெய்வம்

சங்ககால மக்கள் தனித்தனியே அவரவர் விரும்பிய தெய்வங்களை வணங்கி வந்தனர். அத்தெய்வத்தை வழிபடு தெய்வம் என்று அழைத்தனர்.

*"அழிவுஇல முயலும் ஆர்வ மாக்கள்*
*வழிபடு தெய்வம் கட்கண் டாஅங்கு"* [193]

அழியாத செயலைச் செய்ய முயல்கின்ற ஆர்வமுள்ள மக்கள் தாங்கள் வழிபடும் தெய்வம் தமக்கு உதவுவதற்காகத் தம்கண் முன்னே வந்ததைக் கண்டதுபோல என்பதிலிருந்து, அக்கால மக்கள் தங்கள் முயற்சிக்குத் துணைவேண்டிய தெய்வத்தை வழிபட்டனர் என்ற கருத்தைக் காணலாம்.

**பலனை எதிர்பார்க்கும் சடங்கு**

பலனை எதிர்நோக்கிச் செய்யும் சடங்குபற்றி சங்க இலக்கியத்தில் கூறப்பட்டுள்ளது. மக்கள் தாம் மேற்கொண்ட முயற்சியில் வெற்றி கிடைத்த பின்னர் அத்தெய்வத்திற்கு நன்றிக் கடனாகப் பலியிட்டுப் பகுத்துண்டு மகிழ்ச்சியைக் கொண்டாடினர். இத்னையே 'உண்டாட்டு' என்றனர். மறவர் பகை நிலத்தைக் கைப்பற்றி, வாளால் வெட்டியும், அம்பால் எய்தும் பகைவரை விரட்டி, அவர்களுடைய பசுக்களைக் கவர்ந்து வந்தனர்.

அஞ்சா நெஞ்சம் படைத்த அவ்வீரர்கள் அம்பை தூரத்தே வைத்தனர். தெய்வம் உறைகின்ற வேப்பமரத்தின்கீழ் நிணத்தை அளித்தனர். இரத்தம் தூவி பலியிட்டுப் பலவகைப்பட்ட இறைச்சியினை வேகவைத்து உண்டனர். மறவர் தமக்குக் கிடைத்த கொள்ளைக்கு நன்றி செலுத்தும் வகையில் வேப்பமரத்தை வழிபட்டனர். அம்மரத்தில் தெய்வம் உள்ளது எனும் நம்பிக்கையே இதற்குக் காரணமாகக் கொள்ளப்பட்டது.

*"வயவாள் எறிந்து ... அகலறை"* [194]

என்று அகநானூறு இதைப்பற்றி விளக்கி நிற்கின்றது. ஒரு செயலுக்கு ஒரு தெய்வம் காரணம் என நம்புகின்ற முறையும், இறையியல் கருத்தையும் இப்பாடல் உணர்த்துகின்றது.

இறையியல் நெறிநின்று இறைவனை வழிபட்ட அவர்கள் இவ்வுலக வாழ்க்கையின் இன்ப துன்பங்களை உணர்ந்து அவற்றினூடே ஒரு நிறைவான வாழ்க்கையை வாழ முனைந்தனர். இன்பமும், துன்பமும், கூடலும், பிரிவும் இரவு பகல் போல மாறிவரும் தன்மை வாய்ந்தவை என்பதை அவர்கள் நன்கு உணர்ந்திருந்தனர்.

*"இன்பமும் இடும்பையும் புணர்வும் பிரிவும்*
*நன்பகல் அமையமும் இரவும் போல*
*வேறுவேறு இயலஆகி மாறு எதிர்ந்து*
*உள"* [195]

எனப் புலவர் கூறுகிறார்.

**பிரார்த்தனையும் சகுனமும்**

தங்களுக்கு நேர்ந்த துன்பத்தைத் தவிர்க்கும்படி வழிபடு தெய்வத்தை வணங்கி வேண்டிக் கொள்ளும் வழக்கம் சங்கத் தமிழரிடம் இருந்தது. நெல்லையும், மலரையும் தெய்வத்தின் முன்னே சொரிந்து நின்று வணங்கி வரம் கேட்பார்கள். இப்பொழுதும் நாம் ஒரு செயலைப் பற்றி உரையாடிக் கொண்டிருக்கும்போது மணியோசை கேட்டால் - பல்லி சொன்னால் - கழுதை கத்தினால் நல்ல சகுனம் என்று நம்புகிறோம்.

தெருவில் எவரேனும் வெற்றி என்று சொல்லிக் கொண்டு போனால் அதைத் தெய்வ வாக்காகக் கருதுகின்றோம். நாம் பேசிக் கொண்டிருக்கும் அல்லது நினைத்துக் கொண்டிருக்கும் காரியத்தில் வெற்றி கிடைக்கும் என்று நம்புகின்றோம். இதுபோன்ற வணக்கத்திலும், சகுனத்திலும் பழந்தமிழர்களுக்கு நம்பிக்கை இருந்தது. இதை முல்லைப்பாட்டு கொண்டு அறியலாம்.

கார்காலம் வந்தும் தலைவனைக் காணவில்லை. மனம் வெதும்பி இருக்கிறாள் தலைவி. அதைக்கண்ட செவிலித்தாய், நற்றாய் முதலியோர் ஊருக்குப் புறத்தேயுள்ள திருமாலின் கோயிலுக்குப் போனார்கள். நாழியில் கொண்டுபோன நெல்லையும், முல்லை மலரையும் கலந்து தூவி, திருமாலிடம் நல்வாக்குக் கேட்டு நின்றனர். இச்சமயத்தில் சிறிய தாம்பில் பிணித்திருக்கும் இளங்கன்றுகள் தங்கள் தாய்ப் பசுக்களைக் காணாமல் வருந்துகின்றன.

அக்கன்றுகளின் துயரைக் கண்ட ஆயர்மகள், பிடரியில் கைகளை வைத்துக் கொண்டு அக்கன்றுகளுக்கு ஆறுதல் கூறினாள். 'கோல்பிடித்த கோவலர்கள் பின்னே வர இப்பொழுதே உங்கள் தாய்மார்கள் வந்து விடுவார்கள்' என்று கூறினாள். இச்சொற்களைத் திருமாலை வணங்கி நின்ற தாய்மார்கள் கேட்டவுடன் திரும்பி வந்து 'நாங்கள் நன்மொழி கேட்டு வந்தோம். போருக்குப்போன உன் காதலன் வெற்றியுடன் விரைந்து வருவான். பகைவர்களிடம் திறைபெற்றுத் திரும்பி வருவான்.

நீ வருந்தாமல் இருப்பாயாக' என்று கூறினர்.

*''அருங்கடி மூதூர்... ... எவ்வம் களைமா யோய்''* [196]

என்ற இவ்வரிகளில் மேற்கூறிய நிகழ்ச்சியைக் காணலாம். இதிலிருந்து இறையியல் மூலம், சகுனம் பார்த்து நல்லதை நாடுகின்ற மனித உள்ளம் புலப்படுகிறது.

**முருகனிடம் கொண்ட நம்பிக்கை**

பண்டைத் தமிழரில் பெரும்பாலோர் இறை நம்பிக்கை உடையவர்கள். அறிவு நிரம்பிய புலவர்களும், பெரியோர்களும் தெய்வங்களை வணங்கி வந்தனர். பொது மக்களும் இறைவனைப் போற்றி வணங்கி வந்தனர். இறைவழிபாட்டால் நினைத்த காரியங்களிலே, எளிதில் வெற்றி பெறலாம் என்று நம்பினர். விரும்புவார் விரும்பியவற்றை அளிக்கும் ஆற்றல் இறைவனுக்கு உண்டு என்று உறுதியாக எண்ணினர். துன்புற்றவர்களின் துன்பத்தைப் போக்கும். அவர்களை இன்புற்று வாழச் செய்யும். இத்தகைய ஆற்றலும், அருளும் உடையது இறை என்று நம்பினர். இந்நம்பிக்கைப் பண்டைத் தமிழரிடம் இயற்கையாகவே குடி புகுந்தது. இவ்வுண்மையைத் திருமுருகாற்றுப் படையில் காணலாம்.

வானத்தை முட்டிய உயர்ந்த மலைகள் அமைந்த குறிஞ்சிநிலத் தலைவனே! பலரும் புகழ்வதற்குரிய சிறந்த மொழிகளைக் கூறும் புலவர்களின் தலைவனே! மிகச் சிறந்த பெருமையும், உயர்ந்த பெயரையும் உடைய முருகனே! விரும்புவோர்க்கு வேண்டியவற்றை அளிக்கும் புகழும், பெயரும் உடையவனே! வருந்துவோர்க்கு வேண்டுவன கொடுக்கும் பொன் அணிகலன்களைப் பூண்ட செந்நிறமுடையவனே! இதனை,

*''விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ*
*பலர்புகழ் நன்மொழிப் புலவர் ஏறே*
*அரும்பெறன் மரபிற் பெரும்பெயர் முருக*
*நசையுநர்க் கார்த்தும் இசைபே ராள.*
*அலர்ந்தோர்க்கு அளிக்கும் பொலம்பூண் சேஎய்''* [197]

இவ்வரிகள் மூலம் தமிழர்கள் மனிதநேயத்தால் கொண்டிருந்த தெய்வ நம்பிக்கையைக் காணலாம்.

சில சமயத் தொடர்பான நம்பிக்கைகளில் குறிபார்த்தல், வெறியாட்டு அயர்தல்

போன்றன குறிப்பிடத்தகுந்தன. பருவம் வந்த பெண்களுக்கு முருகக் கடவுளால் நோய்வரும் எனவும், வெறியாட்டு எடுப்பதால் அவை நீங்கும் எனவும் நம்பினர். மயில் மீது தெய்வம் ஏறி நிற்றலுண்டு எனவும், அது காரணமாக மயில் நடுங்கும் எனவும் நம்பினர்.

*"சூருறு மஞ்ஞையின் நடுங்க வார்கோல்"* [198]

வஞ்சினம் கூறி உறுதி செய்கின்றபோது கடவுளைத் தொழுது பின்நீரைக் குடித்தல் வேண்டும் எனவும், குறிஞ்சிநில மக்கள் நம்பினர் என்பதை,

*"மீமிசைக் கடவுள் வாழ்த்திக் கைதொழுது*
*ஏமுறு வஞ்சினம் வாய்மையிற் றேற்றி*
*அந்தீந் தெண்ணீர் குடித்தலின்"* [199]

என்னும் தொடர்கள் தெளிவாக்கும்.

*"..... ... ஏழ்ஊர்பு இறைஞ்சிப்*
*பல்கதிர் மண்டிலம் கல்சேர்பு மறைய"* [200]

என்னும் வரிகள்மூலம் சங்ககால மக்கள் ஞாயிறு ஏழு குதிரைகள் பூட்டிய தேரில் வருவதாக நம்பினர் என்பது புலனாகும். மேலும் இரவுக் காலத்தில் பாம்பு, மணியினை உமிழ்ந்து வைத்து, அவ்வொளியில் இரை தேடுவதாக நம்பினர்.

*"உருமும் சூரும் இரைதேர் அரவமும்"* [201]

என்னும் தொடரின் மூலம் அறியலாம். இதிலிருந்து இறை நம்பிக்கையின் மூலம் அக்கால மக்கள் சில மனிதநேயக் கருத்துகளைப் பின்பற்றி நடந்தனர் என்பது தெரிகிறது.

### மறுபிறப்பில் நம்பிக்கை

சங்ககால மக்களுக்கு இருந்து வந்த நம்பிக்கைகளில் மறுபிறப்புக் கொள்கை குறிப்பிடத்தகுந்த ஒன்றாகும். இது குறித்து மிகுதியான சான்றுகள் சங்கப் பாடல்களில் காணப்படுகின்றன. சங்ககாலத் தலைவி ஒருத்தியின் கூற்றாக,

*"இம்மை மாறி மறுமை ஆயினும்*
*நீயாகியர் என் கணவனை*
*யான்ஆ கியர்நின் நெஞ்சு நேர்பவளே"* [202]

என்னும் இப்பாடலும், பாரி இறந்த பின்னர் அவன் மகளிரைப் பார்ப்பார்ப்படுத்து வடக்கிருந்த கபிலர் பாடியதாக,

*"இம்மை போலக் காட்டி யும்மை*
*இடையில் காட்சி நின்னோ*
*டுடனுறை வாக்குக வுயர்ந்த பாலே"* [203]

என்னும் புறத்தொடர்களும், தமிழ்நாட்டு வணிகர்களின் பண்பினை விளக்குமுகமாக,

*"இம்மை செய்தது மறுமைக் காமெனும்*
*அறவிலை வணிக னாயலன்"* [204]

என்னும் இவ்வரிகளும், குறுந்தொகையில் தலைவன் கூற்றாக அமைந்துள்ள,

*"இற்றை யன்ன நட்பின் இந்நோய்*
*இறுமுறை எனஒன் றின்றி*
*மறுமை உலகத்து மன்னுதல் பெறினே"* [205]

பரணர் பாடலும் சங்ககால மக்களுக்கு மறுபிறப்பில் இருந்து வந்த நம்பிக்கையினை உணர்த்தும் சான்றுகளாக விளங்குகின்றன. இத்தகைய நம்பிக்கை குறிஞ்சிநில மக்களிடம் இருந்து வந்தது என்பதற்கான சான்றினைக் குறிஞ்சிப் பாட்டில் காணலாம். தலைவி தன்னுடைய நிலையினைத் தோழியிடம் எடுத்துரைக்கும் போது, 'இப்பிறப்பில் தலைவனுடன் கூடப் பெறவில்லையாயினும் மறுபிறப்பிலாவது அந்த வாய்ப்புக் கிட்டும் எனக் கூறுவதாக அமைந்த பகுதியினைச் சான்றாகக் கூறலாம்.

*"ஆற்றின் வாரார் ஆயினும் ஆற்ற*
*ஏனை உலகத்தும் இயைவதால் நமக்கென"* [206]

என்னும் குறிஞ்சிப் பாட்டுத் தொடர்களால் அறியலாம். இவ்வாறு சங்ககால மக்களிடம் மறுபிறப்பு நம்பிக்கை இருந்து வந்துள்ளன என்பதனை உணரலாம்.



## இல்லறமும் ஆன்மீகமும்

இல்லறத்தான் ஆற்ற வேண்டிய கடன்கள் மூன்று. அவை முனிவர்க்கும், தேவர்கட்கும், தென்புலத்தார்க்கும் ஆகும். இம்மூன்று கடன்களையும் செல்வக் கடுங்கோ வாழியாதன் தீர்த்தான் என்பதை,

*''வேள்வியிற் கடவு ளருத்தினை கேள்வி*
*உயர்நிலை உலகத் தையலின் புறுத்தினை*
*வணங்கிய சாயல் வணங்கா வாண்மை*
*இளந்துணைப் புதல்வரின் முதியர்ப் பேணித்*
*தொல்கடன் இறுத்த''* [207]

என்று பதிற்றுப்பத்து கூறுகிறது. இறந்தோர்க்குப் பிண்டமும், நீரும் அளிப்பதற்கு ஆண்மகவு வேண்டுமென்று பெருஞ்சேரல் இரும்பொறை, யாகம் செய்வதை வர்ணித்து வேள்வி செய்ததால், பெருமைமிகுந்த புதல்வனைப் பெற்றான் என்பதை,

*''காவற்கமைந்த அரசுதுறை போகிய*
*வீறுசால் புதல்வற் பெற்றனை யிவணர்க்*
*கருங்கட னிறுத்த''* [208]

அரிசில்கிழார் கூறியுள்ளார். இச்சேரன் பித்ருக் கடன் தீர்க்க புதல்வனைப் பெற்றான் என்பதோடு, கேள்வி கேட்டு முனிவரையும், வேள்வி வேட்டுத் தேவரையும் இன்புறுத்தினான் என்றும் மொழிவர். இம்மூன்று கடன்களும் தொன்றுதொட்டு வழிமுறையாக வருவன என்பதால் கபிலர் 'தொல்கடன்' என்று குறிப்பிட்டுள்ளார். அக்கால மக்கள் மனித நேயத்தை மேற்கொண்டதால்தான் இம்மூன்று கடன்களையும் ஆற்றி வந்தனர் என்பது தெரிகிறது.

சங்கரர், விவேகானந்தர், போன்ற சில ஞானிகள் இளமையிலேயே துறவிகளாயினர். ஆனால், சங்க காலத்தில், மனைவியோடு இல்லறத்தில் இன்புற்ற ஒருவன் காடு புகுந்து துறவியாகி, அருவி நீரில் நீராடியும், யானை கொணர்ந்து தரும் விறகால் செந்தீப் பேணியும் வாழ்வதை,

*''கழைக்கண் நெடுவரை அருவியாடிக்*
*கன யானை தந்த விறகின்*
*கடுந்திறல் செந்தீ வேட்டுப்*
*புறம்தாழ் புரிசடை புலர்த்து வோனே''* [209]

இப்பாடலில் மாரிப்பித்தியார் சித்தரித்துக் கூறியுள்ளார். உலகியல் வாழ்வில் எக்குடியில் பிறந்தவராயினும் அவர் உலகப் பற்றை நீக்கித் துறவியான பின்னர் அவரை இறை உணர்வு பெற்றவராகப் போற்றுவது இந்தியப் பண்பாடு என்பது தெரிய வருகிறது.

கலைகளின் தேவதையாகக் கலைமகள் என்னும் சரஸ்வதியையும், பொருட் செல்வம் முதலான நலன்களுக்கு இறையாகத் திருமகள் என்னும் இலக்குமியையும், வெற்றித் தெய்வமாகக் கொற்றவை என்னும் துர்க்கையையும் வழிபட்டுப் பெண்மையைப் போற்றிவருகிறது பாரதம். உலகமும் பூமிதேவி என்றே பகரப்படும். ‘மாநில மடந்தை' என்பார் சங்கச் சான்றோர்.

## சமயப் பள்ளிகள்

இச்சொல் சமண முனிவர்கள், புத்த சந்நியாசிகள் வாழும் இடங்களையே குறிக்கும். அவர்கள் தாங்கள் வாழும் இடங்களில் இருந்துகொண்டு தங்களைக் காண வருவோர்க்கு அறிவுரைகளைப் போதித்து வந்தனர். மதுரையில் சமயப் பள்ளிகள் பல இருந்தன. அந்தணர் பள்ளி, பௌத்தப்பள்ளி, அமண் பள்ளி என்ற மூன்று பள்ளிகள் மதுரை மாநகரில் செயல்பட்டது.

### அந்தணர் பள்ளி

அந்தணர்கள் வழிபடுவதற்குரிய காலமறிந்து, முப்புரிநூலையும், புலராத ஆடையையும் அணிந்துகொண்டு, தலைக்குமேல் கைகளைக் குவித்துக் கொண்டு, முருகனைப் புகழ்ந்து, ஆறெழுத்தடக்கிய கேட்க முடியாத மந்திரத்தை ஓதி, மலர்களைத் தூவி வாழ்த்துக் கூறி வணங்கினர் [210] என்பதைத் திருமுருகாற்றுப் படையால் அறியலாம்.

அந்தணர்பள்ளி மலையை உள்ளொளியாக வாங்கியது போன்ற அமைப்புடையது. ஓங்கி உயர்ந்து உட்புறம் அகன்றிருந்தது. வேத நெறியினின்று பிறழாத அந்தண முனிவர்கள் அப்பள்ளியில் தங்கியிருந்தனர். சிறந்த வேதங்களைப் பொருள் புரியும்படிப் பாடுவார்கள். மக்கள் பின்பற்றும்படி சிறந்த ஒழுக்க நெறிகளை மேற்கொண்டனர். உயர்ந்த உலகமாகிய தேவர் உலகத்தை இங்கிருந்தே பெறக்கூடிய வகையில் ஒழுகினர். எல்லா உயிர்களிடத்தும் இரக்கம் கொண்டு விளங்கினர். சமணர்கள் துறவுபூண்டு பொதுப்பணி புரிந்ததைப் போல, அந்தணர்களும் துறவு

மேற்கொண்டு பொதுப்பணி ஆற்றினர் என்பது மதுரைக் காஞ்சியால் அறியலாகும் புதிய செய்தியாகும்.

சங்ககாலச் சமுதாயத்தில் சிறப்பிடம் பெற்ற அந்தணரின் வடபுலத் தொடர்பை அவர்தம் தோத்திரப் பெயர்களே புலப்படுத்துகின்றன. எல்லாக் கோத்திரங்களுக்கும் முதல்வர் இருவர் என்பது சங்ககால மரபாகும் என்பதை,

*''இருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி''* [211]

என்ற நக்கீரரின் வாக்கினால் அறியலாம். வேத வேள்வி இயற்றிய பூஞ்சாற்றூர்ப் பார்ப்பானைப் பாடும்போது,

*''நன்றாய்ந்த நீணிமிர்சடை*
*முதுமுதல்வன் வாய்போகாது*
*ஒன்றுபுரிந்த ஈரிரண்டின்*
*ஆறுணர்ந்த ஒருமுதுநூல்''* [212]

என்று ஆவூர் மூலங்கிழார் வேதத்தைக் குறிப்பிடுவார். இதே கருத்தை,

*''ஞாலம் நாறும்... முக்கண் செல்வன்''* [213]

என்று பரணரும் குறிப்பிட்டுள்ளார்.

சங்க இலக்கியத்தைப் படைப்பதில் அந்தணர்கள் மிகுதியாக இடம் பெற்றுள்ளனர். வேந்தர், வணிகர், வேளாளர், அந்தணர், இடையர் என்றெல்லாம் இனம் காணப் பெறினும் புலவர்களிடையிலும், அந்தணர் சிறப்பிடம் பெறுவர். சங்கப் புலவரான கபிலர்,

*''புலன் அழுக்கற்ற அந்தணாளன்''* [214]

என்று பாராட்டப் பெறுவர். 'பாரிக்கு ஆசானாகவும், அமைச்சனாகவும் தோழனாகவும் திகழ்ந்த அந்தணக் கபிலர், தமிழ்ப் புலவர் பெரிதும் போற்றிய கபிலர், பரணரோடு வைத்து எண்ணத்தக்க நக்கீரரும், சங்கறுக்கும் தொழிலைச் செய்த வேளாள அந்தணர் ஆவார். [215] இவர்களைத் தவிர மாமூலனார், முடமோசியார், குமட்டூர் கண்ணனார், பாலைக் கௌதமனார், கடியலூர் உருத்திரங் கண்ணனார், பெருங் கௌசிகனார் ஆகியோர் அந்தணர் மரபைச் சார்ந்தவர்கள் ஆவார். வேதம் ஓதுதல், வேள்வி செய்தல், பிறர்க்கு வேதம் ஓதுவித்தலும், வேள்வி செய்வித்தலும், ஈதல், ஏற்றல் என்ற

தொழில்களை அந்தணர்கள் இடையறாது ஆற்றி இறையியலை வளர்த்து அதன்மூலம் சங்ககால மக்களுக்கு மனிதநேயத்தைப் பரப்பினர்.

அதிகாலையில் ஆலவாய் அந்தணர் அருமறை இசைப்பர் என்ற மொழியும் மதுரைக்காஞ்சி,

*"போதுபிணி விட்ட கமழ்நறும் பொய்கைத்*
*தாதுண் தும்பி போதுமுரன் றாங்கு*
*ஓதல் அந்தணர் வேதம் பாட"* [216]

வேத ஒலியாலேயே மதுரை மக்கள் இன்துயில் எழுவர். கோழி கூவலால் அல்ல, என்று பகரும் பரிபாடல் [217] வேதம் ஓதலால் மாமழை பொழிந்து விளைபொருள் பெருகி இல்லறம் சிறக்கும் என்றே சங்காலத் தாய்மார்கள் 'பார்ப்பார் ஓதுக' [218] என்று விருப்பம் கொண்டனர். சோழநாட்டுப் பூஞ்சாற்றூரில் வாழ்ந்த விண்ணந்தாயன் என்னும் கௌணிய கோத்திரப் பார்ப்பான், நான்கு வேதங்களையும், வேதத்தின் அங்கங்கள் ஆறையும் கற்றுத் தேர்ந்தும், இருபத்தொரு வேள்விகளையும் குறையின்றிச் செய்தும் புகழமைந்த மரபுக்குரியவன் என்று கூறி அவன் வேள்விப் பணியையும், வள்ளல் தன்மையையும் ஆவூர் மூலங்கிழார் பாராட்டிக் கூறியுள்ளார்.

வேதம் ஓதல் அந்தணர்களுக்கே உரிய செயலாகும். அந்தணர்கள் நான்மறைக் காப்பாளராக விளங்கினர். மதுரைக் காஞ்சி குறிப்பிடும் அந்தணர் பற்றிய செய்திகளைப் பார்க்கும்போது, சங்ககாலத்தில் அந்தணர் சமயம் நல்ல செல்வாக்கோடு இருந்தது என்பது புலப்படும்.

**யாகம் செய்தல்**

அரசர்கள் யாகம் செய்வதற்கு அந்தணர்கள் உற்ற துணையாக இருந்தனர். வெற்றி வேந்தன் இயற்றும் இராசசூய யாகத்தைச் செய்த காரணத்தால் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி என்று ஒரு சோழன் பெயர் பெற்றான். முதுகுடுமிப் பெருவழுதி பல யாகசாலைகளை அமைத்து வேள்வி இயற்றியதை நெட்டிமையார் என்ற புலவர் போற்றிக் கூறியுள்ளதால் அவன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி என்று பெயர் பெற்றான். தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் வேள்வி செய்து விழுப்பம் எய்தியதை,

*"ஆன்ற வேள்வி அடங்கிய கொள்கை*
*நான்மறை முதல்வர் சுற்றமாக*
*மன்ன ரேவல் செய்ய மன்னிய*
*வேள்வி முற்றிய வாய்வாள் வேந்தே"* [219]

என்று மாங்குடி கிழாரின் பாடலால் இதனை உணரலாம்.

*"அமரர்ப் பேணியும் ஆவுதி அருந்தியும்"* [220]

புகழ் எய்திய குலத்தில் பிறந்தவன் என்று அதிகமானைப் பாடுவார் ஔவையார்.

*"ஆவுதி மண்ணி அவிர்துகில் முடித்து*
*மாவிசும்பு வழங்கும் பெரியோர் போல"* [221]

என்ற வரிகள் வேள்வி செய்து சுவர்க்கம் புகலாம் என்ற நம்பிக்கை அக்காலத்திலேயே நிலவியதற்குச் சான்றாகும். இதனால் ஆவின் நெய்யையும், அரிசியையும் தீயிலிட்டு வேள்வி செய்யும் வழக்கம் அக்காலத்தே இருந்தது என்பதையறியலாம். வேள்வி புரிதலால் நன்னிலை பெறக்கூடும் என்ற நம்பிக்கை மன்னரிடையே நிலவியது. அந்தணர்களைக் கொண்டு வேள்வி புரிவதற்காகவே வேள்விச் சாலைகள் பல அமைத்தவன் பாண்டியன் என்பதை,

*"பல்சாலை முதுகுடுமியின்*
*நல்வேள்வித் துறைபோகிய"* [222]

மதுரைக்காஞ்சி குறிப்பிடுவதால் அக்காலத்தில் வேள்விச் செயல்புரிவது இன்றியமையாத ஒன்றாகவும், மன்னர்கள் வேள்விச் செயல் நடைபெறப் பெரிதும் துணைபுரிந்தனர் என்பதும் தெரியவருகிறது. அது ஒரு சிறந்த சடங்காகவே மன்னர்களால் போற்றப்பட்டது என்பது தெளிவாகின்றது. இம்மைக்கும், மறுமைக்கும் ஏற்றதாய் வேதவேள்வி நெறியை பண்டைத் தமிழகம் விரும்பித் தழுவியது என்பது வெள்ளிடை மலை.

அந்தணர்களின் முருகவழிபாட்டைத் திருமுருகாற்றுப் படையில் [223] வர்ணித்துக் கூறியுள்ளார் நக்கீரர். அந்தணர்களைத் துன்புறுத்துவதைப் பெரும் பாவமாகக் கருதினர் சங்கச் சான்றோர்.

*''பார்ப்பார்த் தப்பிய கொடுமையோர்''* [224]

என்பது ஆலத்தூர் கிழாரின் வாக்கு.

*''பேணுதகு சிறப்பிற் பார்ப்பான்''* [225]

என்ற தொல்காப்பியக் கூற்றுப்படி, பொன்னும், பொருளும் வழங்கிப் பார்ப்பனரைப் பேணுவதைச் சான்றோர் புகழ்ந்தனர். எனவே, ஒருங்கிருந்த மூவேந்தருக்கு நல்வினையின் மேன்மையை ஓதிய ஔவையார், இரவலர்க்கு வரையாது வழங்க வேண்டுமென்று பொதுவாகப் புகன்றதோடு நில்லாது,

*''ஏற்ற பார்ப்பார்க்கு ஈர்ங்கை நிறையப்*
*பூவும் பொன்னும் புனல்படச் சொரிந்து''* [226]

வாழ்வீராக என்று கூறுவதிலிருந்து சங்கப் புலவர்கள் அந்தணர்பால் கொண்ட மனிதநேயம் புலப்படுகிறது. மலையமான் திருமுடிக்காரி பார்ப்பனர் பலருக்கு நிலங்களைத் தானமாகக் கொடுத்ததால் 'உன்நாடு முத்தீ ஓம்பும் மறையோர்க்கு உரியது' என்று

*''கடல்கொளப் படாஅ துடலுநர் ஊக்கார்*
*கழல்புனை திருந்தடிக் காரிநின் னாடே*
*அழல்புறந் தரூஉம் அந்தணர் அதுவே''* [227]

கபிலர் புகழ்ந்து கூறியுள்ளார்.

''பந்தற்கால்களில் பசுவின் கன்றுகள் கட்டப்பட்டிருக்கும். சாணத்தால் மெழுகிய தூய இல்லங்களில் வழிபடும் தெய்வப் படிவங்கள் இருக்கும். நாயும், கோழியும் அங்குப் புகாது. அந்தணர்கள் ஓதும் வேதத்தைக் கிளிகளும், கேட்டும் படிக்கும். வேத ஒழுக்கத்தைப் பாதுகாக்கும் தொழிலைச் செய்யும் அந்தணர்கள் உறைகின்ற ஊரிடத்தே தங்குவீராயின், அருந்ததியை ஒத்த அந்தண மகளிர் கருடன்சம்பா நெல்சோற்றையும், கொம்மட்டி மாதுளங்காயை, அன்று கடைந்தெடுத்த பசுவெண்ணெயில் வேகவைத்து, மிளகின்பொடி தூவிக் கறிவேப்பிலையைக் கூட்டிப் பொரியல் செய்து வழிப்போக்கருக்குச் சோறும், பொரியலும், மாங்காய் ஊறுகாயும் வழங்கி மகிழ்வர்.' [228]

இதிலிருந்து, அந்தணர்கள் வழிப்போக்கரிடத்துக் கொண்ட மனித நேயத்தையும்,

அந்தணர்கள் எவ்வுயிரிடத்தும் கொண்ட இரக்கப் பண்பும், அந்தணர் ஒழுக்கமான செந்தண்மை பூண்டொழுகும் தன்மையினையும், ஓதலினும் ஒழுக்கத்தையே சிறந்ததாகச் சான்றோர் மேற்கொண்டனர் என்பதையும், அந்தணர் இல்லத்தின் உணவு முறையினையும், விருந்தோம்பல் பண்பினையும் பெரும்பாணாற்றுப் படை கொண்டு நம்மால் அறிந்துகொள்ள முடிகிறது. ஆங்காங்கே வேள்விச் சாலைகளும் மலிந்துள்ளன என்பதை,

> *''கேள்வி அந்தணர் அருங்கடன் இறுத்த*
> *வேள்வி தூணத் தசைஇ''* [229]

என்ற வரிகள் புலப்படுத்துகின்றன. சங்ககால அந்தணர்கள் இறையியல் கொள்கைகளைப் பின்பற்றியதால், அவர்களைப் பின்பற்றி அக்கால மக்களும் இறையியல் மூலம் மனித நேயத்தை வளர்த்தனர் என்பது தெரிகிறது.

இவ்வாறு வேதம் ஓதியும், ஓதுவித்தும், வேள்வி செய்தும், செய்வித்தும், பொருளைப் பெற்றும், கொடுத்தும் வாழ்ந்த அந்தணர், அரசர் பால் தூதும் சென்றனர். ''வாடிய இடையும், வருந்திய நடையுமுடைய பார்ப்பன இளைஞன் தூது சென்று, பகையரசன் மனத்தை மாற்றிப் போரைத் தவிர்த்தான்'' என்று மதுரை வேளாசான் என்ற புலவர் குறிப்பிட்டதிலிருந்து, பார்ப்பனர்கள் அரசர்களிடத்துக் கொண்ட மனிதநேயம் புலப்படுகிறது. [230]

**மூவேந்தர் கொண்ட அன்பு**

> *''ஆர்புனை தெரியனின் முன்னோர் எல்லாம்*
> *பார்ப்பார் நோவன செய்யலர்''* [231]

என்று சோழனை நோக்கியும்,

> *''இறைஞ்சுக பெருமநின் சென்னி சிறந்த*
> *நான்மறை முனிய ரேந்துகை எதிரே''* [232]

என்று பாண்டியனை நோக்கியும்,

> *''பார்ப்பார்க் கல்லது பணிபறி யலையே''* [233]

என்று சேரனை நோக்கியும் முறையே தாமறபல் கண்ணனார், காரிகிழார், கபிலர் ஆகியோர் பாடுவதால், மூவேந்தரும் அந்தணரை உயர்ந்தோராகப் போற்றியதையும்

அவர்களிடத்துக் கொண்ட அன்பும், பாசமும் புலப்படுகிறது.

### பௌத்தப் பள்ளி

மதுரையில் பௌத்தப் பிக்குகளும், சமணத் துறவிகளும், அந்தணத் துறவிகளும் தங்கியிருந்து அவர்கள் தத்தம் மதத் தர்மங்களைப் போதித்து வந்தனர். கடவுள் பள்ளி என வழங்கப்படும் பௌத்தப்பள்ளி இருந்தது. அப்பள்ளிக்கு முதுபெண்டிர் தம் குழந்தைகளை அழைத்துக் கொண்டு சென்று தெய்வ வழிபாடு நடத்தினர் என்பதை,

*''திண்கதிர் மதாணி ஒண்குறு மாக்களை*
*ஓம்பினர்த் தழீஇத் தாம்புணர்ந்து முயங்கித்*
*தாதணி தாமரைப் போதுபிடித் தாங்குத்*
*தாமு மவரும் ஓராங்கு விளங்கக்*
*காமர் கவினிய பேரிளம் பெண்டிர்*
*பூவினர் புகையினர் தொழுவனர் பழிச்சி''* [234]

இப்பாடல் வரிகள் விளக்குகின்றன.

### அமண் பள்ளி

நிறைந்த புகழுடைய கடலில் அருகக் கோயிலின் திருக்கோயிலிடத்து அமண் பள்ளி அமைந்திருந்தது. அதன் சுவர்கள் செம்பால் செய்யப்பட்டவை போல் உறுதி பெற்றிருந்தன. அப்பள்ளியில் சமண முனிவர்கள் தங்கியிருந்து தம்முடைய சமய நெறிகளைப் போதித்தனர். அவர்கள் சாவக நோன்பிகளாக விளங்கினர். பூவும், புகையும் ஏந்தி அருகக் கடவுளை வழிபட்டனர். இறந்த காலத்தையும், எதிர் காலத்தையும் அறிந்து நிகழ்காலத்தோடு கூட்டியுரைக்கும் திறம் படைத்தவர்கள். விரதங்கள் மேற்கொள்வதில் உறுதியானவர்கள். தாம் மேற்கொள்ளும் விரதங்களுக்கு இளைக்காத உடலையும் உடையவர்கள். கல்வியால் நிறைந்து ஆன்றவிந்தடங்கிய சான்றோர்களாகத் திகழ்ந்து விளங்கினர்.

*''வண்டுபடப் பழுநிய .... பொலிவண தோன்ற''* [235]

என்று மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது.

**பாணர்களின் இறை உணர்வு**

பாணர்கள், தம் வயிற்றை நிரப்பும் யாழினைத் தெய்வமாகக் கருதினர். 'செய்யும் தொழிலே தெய்வம்' என்பதற்கு ஏற்ப யாழினைத் தெய்வமாக நினைத்து வணங்கினர். கையால் தொழுது நாவால் புகழ்ந்து யாழினை மீட்டினர்.

*''இடனுடைப் பேரியாழ் முறையுளிக் கழிப்பிக்*
*கடனுடை மரபிற் கைதொழூஉப் பழிச்சி''* [236]

எனவரும் வரிகளால் பாணர்கள் யாழினை வணங்கினர் என்பதிலிருந்து இறையியல் மூலம் யாழின்மீது நேயம் கொண்டு தம் வயிற்றை நிரப்புதலாகிய தொழிலை நிறைவேற்றிக் கொண்டனர் என்பது தெரிகிறது.

*''அணங்கு மெய்ந் நின்ற அமைவரு காட்சி''* [237]

எனப் பொருநராற்றுப் படையும், யாழிலே தெய்வம் உறைந்திருப்பதை ஏற்கிறது. பாணர்கள் தாம் செல்லும் வழிகளில் தீது ஏதும் ஏற்படாமல் இருக்க, இறைவனை வணங்கினர்.

*''கைவல் இளையர் கடவுட் பழிச்சி''* [238]

எனும் பாடற்கருத்து அதனை எடுத்துக் காட்டுகிறது.

பாம்புப் படுக்கையில் துயில் கொள்ளும் அரிய கடவுளாகிய திருமாலினை வணங்கினர். [239] காரியுண்டிக் கடவுள் என்னும் சிவபெருமானைத் தொழுதனர். [240] ''விரித்த கூந்தலுடன் ஒருத்தி தம் முன்னால்வரின், வெளியே புறப்படும் பாணர்கள், அதனை தீ நிமித்தமாகக் கருதித் தீங்கினை விலக்க வேண்டி 'கள்ளி நீழல் கடவுளை வணங்கினர்''. [241] பாணர்கள் பல்வேறு கடவுளருடன் இசைக் கருவிகளையும் வணங்கினர் என்பது தெளிவாகிறது.

பாணன் ஒருவன் வள்ளலைக் காணப் புறப்படுகின்றபோது எதிரில் ஒரு பெண் தன் கூந்தலை வாரிக் கொண்டிருக்கிறாள். அதனால், தான் வள்ளலைப் பார்க்க முடியாதோ எனக் கலங்குகிறான். தீய நிமித்தம் கண்டபோதும் பசி அவனை வாட்டுவதால் கடவுளைப் பணிந்து வணங்கிப் புறப்படுகிறான்.

*''வளரத் தொடினும்... பாண''* [242]

எனவரும் பாடலில் பாணர்களுக்குச் சகுனம் பார்ப்பதில் நம்பிக்கை இருந்தும் அவனுக்கு இறைவன் மீதிருந்த நேயமும் புலனாகின்றது. உள்ளத்தில் இருக்கின்ற இறை உணர்வை அருவப்பொருளாக, எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் இறை உணர்வை வழிபாட்டுத் தன்மையால் வெளிக் கொணரலாம். சங்ககாலப் பாணர்களும் இறை உணர்வில் ஏற்றம் கொண்டு வாழ்த்தியும், வணங்கியும், வழிபட்ட நிலையை ஆற்றுப்படைப் பாடல்கள் கொண்டு உணரலாம்.

**வணிகர்களின் இறை உணர்வு**

அறச்செயல்களைப் போற்றி வளர்க்கின்ற வணிகரின் வாழ்வை, பட்டினப்பாலை சித்தரித்துக் கூறியதை,

*"அமரர்ப் பேணியும் .... இருக்கை"* [243]

வேள்வி செய்தும், அந்தணர்களைப் போற்றியும், ஆநிரைகளைக் காத்தும், நான்மறையோர் புகழ் பரப்பியும், அன்னதானம் செய்தும் அருள்வாழ்வு கண்ட வணிகர்கள் தெய்வம் போற்றியும், தெய்வங்கட்கு அவியுணவு ஈந்தனர் என்றும், திருக்கோயில்களில் தெய்வங்கட்குச் சிறப்பும், பூசனையும் செய்தனர் என்றும், இதனால் இறையியல் மூலம் மனித நேயத்தை வளர்த்தனர் என்பதும் புலப்படுகின்றது.

**கொடிகள்**

சங்க காலத்தில் மலரணிந்த, கோயில் வாசலிலே பலரும் தொழும்படி, தெய்வத்தை ஆவாகனம் செய்து கொடியேற்றப் பட்டிருக்கின்றது.

*"மையறு சிறப்பின் தெய்வம் சேர்த்திய*
*மலரணி வாயிற் பலர்தொழு கொடியும்"* [244]

இது எப்பொழுதும் கோயிலில் கட்டப்பட்டுப் பறந்து கொண்டிருக்கும் கொடியாகும். திருவிழாக்களைத் தெரிவிப்பதற்காக அரிசிப் பலியிட்டு வணங்கி, நீண்ட மரச் சட்டங்களில் கொடியைக் கட்டி உயரத்திலே பறக்கும்படி நாட்டியிருக்கின்றனர். அவை வெள்ளைத் துணியாலான கொடிகள் கரும்பு பூத்தது போலக் காணப்படுகின்றன. நெருக்கமாகவும் பறந்து கொண்டிருக்கின்றன.

*"வருபுனல் தந்த வெண்மணற் கான்யாற்று*
*உருகெழு கரும்பின் ஒண்பூப் போலக்*
*கூழுடைக் கொழுமஞ்சிகைத்*
*தாழுடைத் தண்பணியத்து*
*வாலரிசில் பலிசிதறிப்*
*பாகுகுத்த பசுமெழுக்கிற்*
*காழூன்றிய கவிகிடுகின்*
*மேலூன்றிய துகிற்கொடியும்"* [245]

இவை திருவிழாவிற்கு ஏற்றப்பட்டிருக்கும் கொடிகளாகும்.

காவிரிப்பூம்பட்டினத்தில் சோம குண்டம், சூரியகுண்டம் என்ற ஏரிகள் இருந்தன. அவைகளில் மூழ்கிக் காமனை வணங்கும் பெண்கள் தங்கள் கணவருடன் இம்மையிலும், மறுமையிலும் இன்புறுவர். இதனை, "இருகாமத்து இணையேரி" [246] என்ற குறிப்பால் காணலாம்.

## திருவிழாக்கள் கொண்டாடுதல்

இளவேனிற் காலத்து மன்மதனுக்கு விழா கொண்டாடப் பெற்றது. அதனை 'வில்லவன் விழா' [247] எனக் குறிப்பிடுகின்றது. 'உறையூருக்கு அருகில் காவிரியாற்றங்கரையின் சோலையில் பங்குனி விழா நடைபெற்றதாக' [248] அகநானூறு கூறுகிறது. திருக்கார்த்திகை திருவிழா நாளில் இரவில் தெருக்களில் விளக்கு வைத்து மாலைகளைத் தொங்கவிட்டுப் பலருடன் சேர்ந்து விழாவாகக் கொண்டாடப்பட்டது என்பதை,

*"அறுமீன் சேரும் அகல்இருள் நடுநாள்*
*மறுகு விளக்குறுத்து, மாலை தூக்கி"* [249]

இவ்வரிகள் நமக்கு உணர்த்துகின்றன.

கொங்கு நாட்டில் மணி, வைரம் முதலியவற்றைக் கயிற்றில் கோர்த்து இடுப்பில் கட்டிக் கொண்டு தேரின் முன்னால் தெருவில் ஆடிக்கொண்டு வருவார்கள். இந்நிகழ்ச்சி உள்ளிவிழாவின்போது நடைபெறும். இதனை,

*"..... ..... கொங்கர்*

*மணியரை யாத்து மறுகின் ஆடும்*

*உள்ளி விழவின் அன்ன"* [250]

நல்ல நாட்களில் திருவிழாக்கள் நடைபெற்றன என்பது தெரிகிறது. 'மனம் ஒத்த காதலரை மருவுதல் வேண்டும் எனப் பரங்குன்றத்தில் மகளிர் விழாக் கொண்டாடினர்' [251]

இவ்வாறு நாட்டில் திருவிழா நடைபெறுவதைச் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. சேரலாதன், நாட்டின் பல்வேறு சிறப்புகளையும் கூறுங்கால்,

*"விழவுஅறுபு அறியா முழவிமிழ் மூதூர்"* [252]

என்று அவன் நாட்டிலே விழாக்கள் சிறந்திருந்தன என்பதைக் காட்டுகிறார்.

*"முழவிமிழ் மூதூர் விழவுக் காணூஉப் பெயரும்*

*செழும்பல் வைப்பிற் பழனப் பாலும்"* [253]

என்னும் வரிகள் மக்கள் கூட்டம் மூதூர்க்கண் நிகழும் திருவிழாவிற்குச் சென்று அதனைக் கண்டு திரும்புங்கால் மூதூர்க் காட்சியும், திருவிழாச் சிறப்பும் பேசிக் கொண்டு ஆரவாரத்தோடு செல்கின்றனர் என்பதைக் குறிக்கிறது. இத்திருவிழாக்கள் நடைபெறுவதை மக்கள் அறியும் பொருட்டு தெருக்கள் தோறும் சென்று ஊர் மக்களுக்குக் குயவர் அறிவிப்பர் என்பதை,

*"சாறுஎன நுவலும் முதுவாய்க் குயவ"* [254]

*"சாறுகொண்ட களம்போல*
*வேறுவேறு பொலிபு தோன்ற"* [255]

இவ்வரிகள் உறுதிப்படுத்துகின்றன. பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியின் பெருமையினை சிறப்பிக்கப் புகுந்த புலவர் அப்பாண்டியனின் முன்னோன் ஒருவன் கடல் தெய்வத்திற்கு முந்நீர் விழா ஒன்று ஆற்றி பஃறுளியாற்றினை ஏற்படுத்தினான் என்பதை,

*"..... ..... குடுமி தங்கோச்*
*செந்நீர்ப் பசும்பொன் வயிரியக் கீத்த*
*முந்நீர் விழவின் நெடியோன்*
*நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே"* [256]

என்னும் வரிகளில் விளக்குகின்றார். திருமாலின் அவதார நாள் திருவோணம் என்றும், ஓணநாளில் சங்க காலத் தமிழர் விழா எடுத்தனர் என்றும் மதுரைக் காஞ்சி கூறுகிறது.

*''கணங்கொள் அவுணர்க் கடந்த பொலந்தார்*
*மாயோன் மேய நன்னாள்''* [257]

பண்டு தொட்டு இதுவரை இருந்துவரும் ஓண விழாவிற்குரிய சடங்குகளாகக் கூறச் சான்றுகள் இல்லை. இவ்வாறு திருவிழாக்களைக் கொண்டாடுவதன் மூலம் சங்ககால மக்கள் இறைவழி செய்து உள்நாட்டு மக்கள் தங்களுக்குள் அன்பையும், பாசத்தையும், பரிமாறிக் கொண்ட மனிதநேயப் பண்பாடு தெரிய வருகிறது.

### சங்க காலத்தில் இருந்து வந்த நம்பிக்கைகள்

சங்ககால மக்கள் பலவித நம்பிக்கைகளை மேற்கொண்டனர். பெரும்பாலும் தெய்வத்தை அடிப்படையாகக் கொண்டு விளங்கி வந்தன. பொதுவாக மனிதரிடத்தும், பொருள்மீதும் நம்பிக்கை வைப்பது ஏமாற்றத்தை அளிக்கும். தெய்வத்திடம் நம்பிக்கை வைப்பது நாம் எண்ணிய எண்ணம் நிறைவேறுவதற்கு மிகச்சிறந்த வழியாகும். மனம் நன்முறையில் திருந்தி அமைவதற்கும் இறைநம்பிக்கை உறுதுணை புரிகிறது. இறைவன் இருக்கிறார் என்ற முடிவுக்கு வருவதும், வழிபாடு செய்வதும் நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டதேயாகும். நம்பிக்கையைத் தவிர, இதற்கு வேறு வழி இல்லை. இத்தெய்வ நம்பிக்கையின் பயனாக உள்ளத்தில் உறுதி ஏற்படுகிறது. இதன் காரணமாக அஞ்சாமையும், சங்கால மக்களை அமைதியாகவும், மகிழ்வுடனும் வாழ வைத்தன எனலாம்.

முருகன் என்பவன் இளமையும், அழகும் உடையவன். மக்கள் இளமைப் பருவத்தில் கடவுளை நினைக்காமல், முதுமை வந்த பிறகே இறைவனை நினைக்கிறார்கள். இது தவறு. இளமையிலேயே இறைவனை வணங்குதல் வேண்டும் என்று கருதி 'முருகனை' அழகும், இளமையும் உடைய தெய்வமாக நம்பி வழிபாடு செய்தனர்.

உள்ளத்தில் நம் ஒவ்வொருவர்க்கும் நல்ல எண்ணங்களும், தீய எண்ணங்களும் இருக்கின்றன. நல்லெண்ணங்கள் உள்ளத்தில் பாதுகாக்கப்பட வேண்டும். ஆதலால் காக்கும் கடவுளாகிய 'திருமாலை' அக்கால மக்கள் வழிபட்டனர். சங்கு, சக்கரம், வில், வாள், கதை முதலான திருமாலின் படைக்கருவிகளைப் பொன்னால் செய்து,

குழந்தையைக் காக்க வேண்டும் என்ற எண்ணத்தில், கழுத்தில் அணிவதால் திருமால் நம் குழந்தையைக் காப்பாற்றுவார் என்ற நம்பிக்கை இருந்து வந்தது.

தீய எண்ணங்களை மக்கள் மனத்திலிருந்து அழிக்க வேண்டும் என்பதால் கடவுளாகிய 'சிவபெருமானை' சங்க காலத்தில் வழிபட்டனர். உடல்வலிமை ஒழுங்கிற்கு அடிப்படையாக அமைகிறது. நல்ல உடல்வலிமை உடையவர்கள் நல்ல ஒழுக்கத்திற்குக் கட்டுப்பட்டவர்கள் ஆவார்கள். நல்லொழுக்கம், உடல் வலிமை வாய்க்க வேண்டும் என்பதற்காக 'கொற்றவையை' வழிபட்டனர் அக்காலத் தமிழர்.

புண்ணியம், பாவம் ஆகியவற்றில் அக்கால மக்கள் நம்பிக்கை வைத்தனர். புண்ணியத்தைச் சேர்த்து பாவத்தைப் போக்கவேண்டும் என்பது அவர்களுடைய வாழ்க்கையின் நோக்கமாக இருந்தது. பாவத்தைப் போக்குவதற்காகப் புண்ணிய தீர்த்தங்களில் நீராடி வந்தார்கள். ஆறு, குளம், கிணறு, கடல் முதலியவற்றை புண்ணிய தீர்த்தங்களாகக் கருதுகிறோம். தீர்த்தக் கட்டங்களைப் பெண்ணாகப் பாவித்து அவற்றில் நீராடினால் பாவங்கள் ஒழியும் என்று நம்பினர் பண்டைத் தமிழர்.

பௌர்ணமி நாளை அக்காலத்தில் புனித நாளாகக் கருதினர். ''சென்ற பௌர்ணமி தினத்தில் எங்கள் தந்தையர் உயிருடன் இருந்தார். எங்கள் நாடு பகைவரிடம் அகப்படாமல் எங்கள் வசமிருந்தது. இந்தப் பௌர்ணமி நாளில் எங்கள் தந்தை இறந்துபோன காரணத்தால், எங்கள் நாட்டையும் பகைவர் வசப்படுத்திக் கொண்டனர். [258] என்று பௌர்ணமி தினத்திற்கு முக்கியத்துவம் கொடுத்துப் பாரிமகளிர் பாடியுள்ளனர். இதிலிருந்து இயற்கை தெய்வத்தின்மீது கொண்ட இறைப்பற்று புலப்படுகிறது.

மாலை நேரத்தில் கைக்குழந்தைகளை வெளியே கொண்டுவரக் கூடாது என்ற வழக்கம் பழங்காலத்திலும் இருந்து வந்தது. சூரியன் மறைந்து இருள் பரவும் நேரத்தில் கைக்குழந்தைகளை வீட்டிற்கு வெளியே கொண்டு வருவதில்லை. அப்படிக் கொண்டு வந்தால் 'ஐயவி' என்ற வெண்சிறு கடுகைப் பொடி செய்து குழந்தையின் தலையிலே அப்பினால் பேய், தீண்டி வருத்தும் தெய்வம் முதலியன தீண்டாது என்ற நம்பிக்கை இருந்து வந்தது.

இறந்து போனவர்களைத் தெய்வமாக வணங்கும் வழக்கம் சங்க காலத்தில் இருந்தது. இறந்தவர்களைத் 'தென் புலத்தார்' எனக் கூறினர். இறந்துபோன உறவினர்கள் தெய்வமாக நின்று நம்மையும், நம் குடும்பத்தாரையும்

காப்பாற்றுவார்கள் என்ற நம்பிக்கை சங்க காலத்தில் இருந்தது. இறக்கின்ற வரையிலும் நேரடியாகத் தொடர்பு கொண்டவர்கள் இறந்தபிறகு, அவர்களைக் குறித்துச் செய்யும் நீத்தார் கடன் முதலிய செயல்களினால் அவர்களை உள்ளத்தால் நினைத்து எண்ணத்தின் மூலம் தொடர்பு கொண்டனர். இறையியலில் கொண்ட மனித நேயமே இவ்வழிபாட்டிற்குக் காரணமாகும்.

போரில் இறந்துவிட்ட நடுகல் வீரனை வணங்கினால் நம் குடும்பத்தில் நினைத்த காரியம் ஈடேறும் என்ற நம்பிக்கை சங்ககால மக்களிடத்து இருந்து வந்தது. இறந்த வீரர்களின் நினைவாக நடப்பட்ட இந்தக் கல் காலப்போக்கில் மாறி சமாதியாகவும், சாமிப் பீடங்களாகவும் மாறியது. கிராமங்களில் சாமிப் படங்களை இன்றும் காணலாம். இதிலிருந்து குடும்பத்தார் அவ்வீரனிடத்துக் கொண்ட பாசமும், அன்பும், பற்றும் வெளிப்படுகிறது.

‘வடக்கிருத்தல்’ என்ற வழக்கம் சங்க காலத்தில் இருந்தது. வடதிசை எமன் இருக்கும் திசையாதலால் ஏதாவது தவறு செய்து விட்டால் வடக்கிருந்து உயிர்நீத்து விடுவார்கள். வடக்கிருத்தல் என்பது குறிப்பிட்ட ஒரு சாரார், அதாவது மானத்தை இழந்தபின் உயிர்வாழ நினைக்காதவர்கள் மேற்கொள்வதாகும். இவ்வாறு வடக்கிருந்து உயிரை விடுவது மானத்தை இழந்ததற்கும், தவறு செய்ததற்கும் உடன்பாடாகும் என நம்பினார்கள். இதிலிருந்து உள்ளத்தை வெளிச் சிந்தனையில் செல்லவிடாமல் உள்நோக்கித் திருப்பி இறைவனைத் தியானம் செய்தனர் என்பது தெரிகிறது.

இன்று நடைமுறையிலும் பழந்தமிழ்ப் பண்பாடுதான் மக்களிடம் மிகுதியாகக் காணப்படுகின்றது. எனது பாவம் ஒழியவேண்டும். இவ்வுலக வாழ்வை நான் விரும்பவில்லை. பிறவா நெறியை எனக்குக் கொடுத்து அருள்தல் வேண்டும் என்று கடவுளை வேண்டுவோர் சிறுபான்மையினர்தாம். பெரும்பாலான மக்கள், எங்கள் பாவத்தைப் போக்க வேண்டும். இவ்வுலகில் இனிய வாழ்வை அருளவேண்டும் என்று தான், தெய்வங்களை வேண்டிக் கொள்கின்றனர். தங்கள் பிணி தீரவேண்டி தல யாத்திரை, தீர்த்த யாத்திரை செய்கின்றனர். இவ்வாறு தன்னலம் கருதி தெய்வங்களை வழிபடும் வழக்கம் தான் இன்றும் மலிந்திருக்கிறது. அதனால் தற்போது இறையியல் மூலம் மனிதநேயம் மக்களிடம் குறைந்துகொண்டே வருவதை நம்மால் உணர முடிகின்றது.

தமிழகத்தில் இக்கருத்துகளை மிகுதியாகப் பரவச் செய்தவர்கள் இராமலிங்க அடிகளும், பாரதியாரும் ஆவார்கள்.

*''ஆயிரம் தெய்வங்கள் உண்டென்று தேடி*
*அலையும் அறிவிலிகாள்! - பல*
*ஆயிரம் வேதம் அறிவு ஒன்றே தெய்வமுண்டு*
*ஆமெனல் கேளீரோ''* [259]

என்று பாரதியார் கூறியுள்ளார். புராணங்களில் கூறப்படும் சிவலோகம், வைகுண்டம் முதலியன இவ்வுலகில் தான் இருக்கின்றன. அவ்வுலகில் அடையும் இன்பங்களை இவ்வுலகிலேயே எய்தலாம். இறந்த பிறகுதான், இவ்வுலகங்களை எய்த முடியும் என்று நினைப்பவர்கள் பித்துப் பிடித்தவர்கள். அவர்கள் காட்டும் சாத்திரங்களும் பேய்மொழிகள் என்று பாடியுள்ளார் பாரதியார்.

*''செத்தபிறகு சிவலோகம் வைகுந்தம்*
*சேர்ந்திடலாம் என்றே எண்ணி இருப்பவர்*
*பித்த மனிதர்! அவர் சொல்லும் சாத்திரம்*
*பேயுரையாம் என்றிங்கு ஊதேடா சங்கம்''* [260]

என்று சங்கநாதம் செய்கிறார். மக்களிடம் மூடத்தனத்தில் முளைத்தெழுந்த தெய்வ நம்பிக்கை இவ்வாறு வரவர வளர்ந்து, சீர்திருத்தமடைந்து வந்திருப்பதைக் காண்கிறோம். இதனால் ஒவ்வொரு துறையிலும் வளர்ச்சியடைவதே மக்கள் இயற்கை என்பதைக் காணலாம். இவ்வாறு உலகில் ஒவ்வொருவரும் இறையியல் மூலம் மனித நேயத்தில் சிறந்து விளங்க வேண்டும்.

உண்ணுவதற்குப் பக்குவமில்லாத உணவினை, உண்பதற்கு ஏற்ற வகையில் பக்குவம் செய்வதைச் சமைத்தல் என்கிறோம். அதுபோலப் பக்குவம் அடையாத உள்ளத்தைப் பக்குவம் அடையச் செய்வதற்குப் பயன்படுவது இறையியலாகும். தாங்கள் எவ்வாறு உடம்பு பெற்று வந்தோம் என்ற எண்ணமோ, தங்கள் உடம்பிற்குள் இருக்கும் உயிரைப் பற்றியோ, பரந்த இவ்வுலகத்தைப் பற்றியோ, காரண காரிய இயைபு பற்றி உலகப் பொருட்கள் எல்லாம் படைப்பதற்கு முதல்வன் ஒருவன் எனச் சிந்திக்கும் ஆற்றலோ மனிதனைத் தவிர, பிற உயிர்களுக்கு இல்லை. மனத்தை உடைய மனிதன் நல்லனவற்றை நினைத்து நல்லனவற்றையே தினந்தோறும் செய்தல் வேண்டும். இதிலிருந்து மனித மனத்தைப் பக்குவம் அடையச் செய்வதற்கு மிகவும்

ஏற்றதாக சங்ககால மக்கள் இறையியலை அமைத்தனர்.

எனவே, மனித மனத்தை இனிதே செம்மைப்படுத்துவதற்கு ஏற்ற கருவி இறையியலைத் தவிர வேறில்லை என்ற உண்மையினைச் சங்க கால மக்கள் கண்டறிந்து, முடிந்த முடிபாகக் கூறியுள்ளனர். இதனால் இறையியல் கருத்துகள் இப்பிறவியில், மக்களின் வாழ்வு மேன்மை அடைவதற்கும், மறு பிறவியில் ஆன்மா நற்கதி அடைவதற்கும் பெரிதும் உதவுகின்றன எனலாம். இறையியல் உணர்வு மக்களுக்கு என்று தோன்றியதோ, அன்றிலிருந்து மக்கள் வாழ்வோடு, இரண்டறக் கலந்துவிட்டன. மக்களின் உள்ளத்தைச் செம்மைப்படுத்தி தவறு செய்யக் கூடாது என்ற எண்ணத்தை உருவாக்கி, வாழ்வு ஓங்கி உயர்ந்து சிறக்கவும், வாழ்வில் அனைவரும் அமைதி பெறவும் வழி வகுத்தன இறையியல் உணர்வுதான், என்று கூறினால் மிகையாகாது.

# குறிப்புகள்

## இயல் - ஐந்து

1. சிலம்பு. காடு. கா. 11:64-66.
2. தொல். பொருள். அகத். நூ.5
3. மலைபடு. 493.
4. திருமுரு. 260.
5. திருமுரு. 45-46.
6. திருமுரு. 4-6.
7. திருமுரு. 11.
8. திருமுரு. 43.
9. திருமுரு. 91-117.
10. திருமுரு. 260.
11. திருமுரு. 256-259.
12. புறம். 55:17-21.
13. நற். 34:10-11.
14. ஐங். 243:1-2.
15. குறு. கட. வாழ்த்து.
16. பரி. 5:1-21.
17. பரி. 5:78-80.
18. தமிழ் இலக்கிய வரலாறு, எம்.ஆர்.அடைக்கலசாமி, பக்.58.
19. பரி. 8:102-108.
20. திருமுரு. 287-288.
21. திருமுரு. 291.
22. அகம். 348:1-7.
23. மதுரை. 611-615.
24. மலைபடு. 321-323.
25. குறு. 362:1-5.
26. நற். 47:9-10.
27. அகம். 22:8-11.
28. குறு. 263:1-6.

29. புறம். 62:16-17.

30. புறம். 33:21-22.

31. அகம். 166:6-7.

32. பதிற்று. 30:33-37.

33. கலி. 93:24.

34. நற். 398:6.

35. பட்டின. 165.

36. மலைபடு. 145-150.

37. திருமுரு. 218-220.

38. திருமுரு. 232-234.

39. குறிஞ்சி. 3-6.

40. மலைபடு. 493.

41. திருமுரு. 258.

42. பெரும்பாண். 75.

43. குறிஞ்சி. 51-53.

44. குறிஞ்சி. 209-210.

45. குறு. 23:1.

46. குறிஞ்சி. 174-177.

47. குறிஞ்சி. 172-175.

48. பதிற்று. 51:10-13.

49. பதிற்று. 26:12.

50. மதுரை. 18.

51. பொருந. 131.

52. அகம். 98:16-19.

53. அகம். 22:8-11.

54. மலைபடு. 82-83.

55. திருமுரு. 151-154.

56. திருமுரு. 256.

57. மதுரை. 453-460.

58. ஐங். கட. வாழ்த்து.

59. புறம். 56:1-2.

60. புறம். 91:6.

61. புறம். 166:1-4.

62. புறம். 6:18.

63. புறம். 55:5.

64. பரி. 5:24.

65. பரி. 9:4-6.

66. முல்லை. 3-6.

67. நற். கட. வாழ்த்து.

68. பரி. 1.

69. பரி. 4:25-35.

70. திரு. தந்.7 அதி. 38 பா. 3:1.

71. கலி. 104:10.

72. கலி. 105:9-10.

73. கலி. 107:33.

74. கலி. 104:37-38.

75. கலி. 103:53-55.

76. மதுரை. 590-591.

77. புறம். 174:1-5.

78. அகம். 59:4-6.

79. புறம். 56:5.

80. முல்லை. 1-3.

81. பரி. 4:58.

82. அகம். 51:3-6.

83. பெரும்பாண். 373.

84. பரி. 3:43-45.

85. பதிற்று. 31:6-9.

86. மலைபடு. 356.

87. தொல்.பொருள். புறத். நூ. 4.

88. பதிற்று. 79:16-19.

89. பதிற்று. 90:19.

90. பொருந. 52.

91. நெடுநல். 167-168.
92. குறு. 218:1-2.
93. புறம். 241:3-5.
94. ஐங். 62:1.
95. பட்டினா. 86-87.
96. புறம். 194.
97. புறம். 35:14-15.
98. புறம். 159:8-13.
99. மலைபடு. 198-202.
100. மலைபடு. 203-210.
101. மலைபடு. 358-360.
102. அகம். 156:13-16.
103. அகம். 240:7-9.
104. அகம். 269:19-20.
105. அகம். 282:16-18.
106. நற். 191:2-4.
107. அகம். 369:7-8.
108. அகம். 201:5-7.
109. அகம். 370:12.
110. அகம். 47:9-10.
111. குறிஞ்சி. 223-224.
112. மதுரை. 471.
113. மதுரை. 698.
114. மதுரை. 582.
115. மதுரை. 581.
116. மதுரை. 457-458.
117. மலைபடு. 190-192.
118. மலைபடு. 294-296.
119. திருமுரு. 223-226.
120. தொல். பொருள். புறத். நூ.33.
121. புறம். 2:1-8.

122. புறம். 51:1-3.

123. புறம். 55:13-17.

124. குறு. 378.

125. புறம். 143:1-4.

126. பரி. 4:67-70.

127. புறம். 199:1-3.

128. தொல். பொருள். புறத். நூ.5:19-20.

129. மலைபடு. 386-391.

130. பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும் - டாக்டர் க. கைலாசபதி, பக்.46.

131. பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும் - டாக்டர் க. கைலாசபதி, பக்.59.

132. புறம். 52:11-13.

133. அகம். 307:11-13.

134. அகம். 67:5-11.

135. பதிற்று. 79:16-19.

136. அகம். 35:4-10.

137. அகம். 269:7-12.

138. புறம். 223, 232, 265.

139. பதிற்று. 65:4.

140. புறம். 165:1-2.

141. பட்டின. 78-79.

142. சிலம்பு. வேட்டுவ வரி. 12:33-35.

143. அகம். 67:8-9.

144. மலைபடு. 387-389.

145. புறம். 221:11-13.

146. புறம். 221.

147. புறம். 287:16-21.

148. குறள்: 50.

149. குறள்: 1062.

150. அகம். 297:7.

151. மலைபடு. 395-396.

152. அகம். 289:2-3.

153. புறம். 329:2-4.
154. அகம். 269:8.
155. புறம். 260:8.
156. புறம். 306:4.
157. புறம். 305:3-7.
158. புறம். 263.
159. புறம். 335: 9-12.
160. புறம். 335:3-5.
161. சிலம்பு. 12:18-21.
162. அகம். 269:3-13.
163. பட்டின. 249.
164. புறம். 52:12-13.
165. அகம். 365:4.
166. புறம். 299:6.
167. மலைபடு. 386-391.
168. புறம். 95:1-3.
169. புறம். 299:7.
170. புறம். 306:4.
171. புறம். 93:9-11.
172. புறம். 65:9-11.
173. புறம். 66:6-8.
174. புறம். 330.
175. தொல். பொருள். அகத். நூ.28:1.
176. தொல். பொருள். செய்யு. நூ.28:1.
177. தொல். பொருள். செய்யு. நூ.110:1.
178. அகம். 13:3.
179. அகம். 396:7.
180. அகம். 372:1.
181. அகம். 348:7-8.
182. அகம். 62:13-16.
183. அகம். 209:15-17.

184. நற். 330:9.

185. அகம். 6:13.

186. ஐங். 382:4-5.

187. ஐங். 257.

188. கலி. 101:13-14.

189. கலி. 104:63-64.

190. கலி. 103:75-79.

191. கலி. 102:35-39.

192. கலி. 107:30-34.

193. நற். 9:1-2.

194. அகம். 309:1-6.

195. முல்லை. 7-21.

197. திருமுரு. 267-271.

198. குறிஞ்சி. 169.

199. குறிஞ்சி. 209-211.

200. குறிஞ்சி. 215-216.

201. குறிஞ்சி. 255.

202. குறு. 49:3-5.

203. புறம். 236:10-12.

204. புறம். 134:1-2.

205. குறு. 199:6-8.

206. குறிஞ்சி. 23-24.

207. பதிற்று. 70:18-22.

208. பதிற்று. 74:20-22.

209. புறம். 251:4-7.

210. திருமுரு. 182-188.

211. திருமுரு. 178.

212. புறம். 166:1-4.

213. அகம். 181.

214. புறம். 126:11.

215. அகம். 24:1-2.

216. மதுரை. 654-656.

217. பரி. 27.

218. ஐங். 4:2.

219. புறம். 26:12-15.

220. புறம். 99:1.

221. மதுரை. 494-495.

222. மதுரை. 759-760.

223. திருமுரு. 183-189.

224. புறம். 34:3.

225. தொல். பொருள். செய்யு. நூ.190:3.

226. புறம். 367:4-5.

227. புறம். 122:1-3.

228. பெரும்பாண். 297-301.

229. பெரும்பாண். 315-316.

230. புறம். 305.

231. புறம். 43:13-14.

232. புறம். 6:19-20.

233. பதிற்று. 63:1.

234. மதுரை. 461-466.

235. மதுரை. 475-488.

236. பெரும்பாண். 462-463.

237. பொருந. 20.

238. பதிற்று. 41:6.

239. பெரும்பாண். 373-390.

240. மலைபடு. 82-83.

241. புறம். 260:3-5.

242. புறம். 260:1-8.

243. பட்டின. 200-212.

244. பட்டின. 159-160.

245. பட்டின. 161-168.

246. பட்டின. 39.

247. கலி. 35:14.

248. அகம். 137:6-9.

249. அகம். 141:8-9.

250. அகம். 368:16-18.

251. பரி. 17:42-46.

252. பதிற்று. 15:18.

253. பதிற்று. 30:20-21.

254. நற். 200:4.

255. புறம். 22:16-17.

256. புறம். 9:8-11.

257. மதுரை. 590-591.

258. புறம். 112.

259. பா.கவி.ஞா.பா. அறிவே தெய்வம் : 1.

260. பா.கவி. ஞா.பா.சங்கு :1.

# நிறைவுரை

இலக்கியமின்றி வாழ்வு இல்லை என்றும், வாழ்வை அடித்தளமாகக் கொள்ளாமல் இலக்கியம் இல்லை என்றும் கூறுவது முற்றிலும் பொருத்தமானதொரு கூற்றாகும். ஊடும், பாவும் போல் வாழ்வும் , இலக்கியமும் பின்னிப் பிணைந்திருக்கிறது. வாழ்க்கையில் மக்கள் அற்பமான செயல்களில் ஆழ்ந்து அதிலேயே உழன்று கொண்டிருக்கிறார்கள். மனிதப்பண்பை மனிதனுக்குச் சொல்லி மனிதனை மனிதனாக்கும் இலக்கியமே இலக்கியம். மக்களின் வாழ்க்கையிலே தியாகம், உழைப்பு, நல்லெண்ணம், பிறருக்குத் தீங்கு செய்யாமை முதலிய நல்ல குணச் சித்திரங்கள் இருக்கின்றன. இத்தகைய நல்வாழ்க்கைக்குரிய இலக்கியங்களாக சங்க இலக்கியங்கள் திகழ்வதைக் காணலாம்.

பத்துப் பாட்டும், எட்டுத் தொகையும் நல்வாழ்க்கைக்குரிய இலக்கணங்களைத் தருவதாலும், ஆர்வத்தோடு இவ்விலக்கியங்களைப் பயின்றதாலும், 'சங்க இலக்கியங்களில் மனித நேயம்' என்பது ஆய்வுக்குரிய தலைப்பாக எடுத்துக் கொள்ளப்பட்டது. நிலையான உணர்ச்சிகளை அடிநாதமாகக் கொண்ட சங்க இலக்கியங்கள் மனித சமுதாயம் உள்ளளவும் நீடிக்கும் என்பதற்கோர் ஐயமில்லை. உணவு அருந்தாமல் மனிதன் எப்படி வாழ முடியாதோ அதேபோல, இலக்கியமின்றியும் மனிதன் வாழ முடியாது. இலக்கியச் சுவைக்கு மனநிறைவு தந்தாலும், உள்ளத்தைப் பண்படுத்தி, மனிதனை உயர்த்தவே இலக்கியம் வேண்டற்பாலது.

மனித தத்துவத்திற்கு நாம் பல சொற்களைக் கையாளுகிறோம். மனிதாபிமானம் என்றும், மானுடம் என்றும் இப்போது மனிதம், மனிதநேயம் என்றும் சொல்லி ஏதோ ஒன்றைச் சுட்டிக் காட்ட விரும்புகிறோம். இப்போது மனித நேயம் என்ற சொல்லே சிறப்பானதாகத் தோன்றுகிறது. இத்தலைப்பை மேமெலழுந்த வாரியாகப் பார்த்தால் மனிதனுக்குத் தானே இலக்கியம். அப்படியென்றால் இலக்கியத்தில் மனிதனைப் பற்றி இல்லாமல் வேறு எதைப்பற்றி இருக்கும் என்று தோன்றும். ஆனால் அதை இன்னும் ஆழமாகப் பார்த்தால் புலப்படாத பல செய்திகள் புலப்படும்.

வயிற்றுப் பசியின் போது நல்ல சத்துள்ள உணவை உட்கொண்டால், அது உடலை வலுவாக்கும். அது போலவே இலக்கியப் பசி உள்ளவர்களுக்கு சத்துள்ள உணவு, இலக்கியத்தில் மனித நேயமாகும். நெல்லுக்குள் அரிசி என்பது பொதுவான உண்மை. அரிசியில்லாத நெல்லைப் பதர் என்கிறோம். இலக்கியத்திலும் மனித

நேயம் இல்லாத பாடல்களும் உண்டு. நெல்லில் உள்ள பதர்களை நீக்கக் கற்றுக் கொண்டுள்ள நாம் இலக்கியத்திலும், மனித நேயம் இல்லாத பாடல்களை ஒதுக்கி வைக்கக் கற்றுக்கொள்ள வேண்டும். சங்க இலக்கியங்களில் உள்ள மனிதநேயம் மட்டும் இவ்வாய்வேட்டில் விளக்கப்பட்டுள்ளது.

மனித நேயம் - ஒரு விளக்கம் என்பது இவ்வாய்வின் முதல் இயலாகும். நாம் மனித நேயம் மனித நேயம் என்று சொல்லும் போது அது வெறும் மனிதாபிமானம் மட்டுமல்ல. அதாவது வேறொரு மனிதனுக்காக நாம் காட்டுகின்ற கருணை உள்ளமாகும். அனுதாபம் என்று மனிதனுக்குக் காட்டுகின்ற அபிமானத்தை நாம் மனிதநேயம் என்று சொல்லவில்லை.

மனிதனுடைய எல்லையில்லாத, எல்லையின் அளவைக் கோடிட்டுக் காட்ட இயலாத முழுமையான ஆற்றலையும், அதாவது மனித அறிவாற்றலும், ஆன்மீகச் செல்வமும் இதுவரை திரட்டப்பட்டிருக்கின்ற, இனிமேல் திரட்டப் போகின்ற எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு, அவற்றுடன் மனிதனின் பண்புகளும், முழுமையான ஆற்றலும் சேர்ந்தது தான் மனித நேயம் என்பது புலப்படுகிறது.

மாட்சிமை மிக்க மனிதப் பண்புகள், ஆற்றல்கள் அனைத்தும் நமக்கு உண்டு என்பதை இலக்கியங்கள் நினைவூட்டுகின்றன. அது மட்டுமல்லாமல் அந்தப் பண்புகளை நாம் வளர்த்துக் கொள்ள அவை சிறந்த கருவியாகப் பயன்படுகின்றன. மனிதனைக் குறிப்பிடும் போது ஆறறிவு படைத்தவன் ஆதலால் அவனை உயர்ந்தவன் என்கிறார்கள்.

ஒரு மனிதனுக்குத் தன் தாயையே வெறுக்கக் கூடிய சுதந்திரமிருந்தும் அவன் தாயை நேசிக்கிறான் என்பது தான் மனிதப் பண்பின் சிறப்பாகும். எனக்குப் பிற உயிர்களுக்குத் தீங்கு செய்யக் கூடிய திறனிருந்தும், சுதந்திரமிருந்தும், அறிவு இருந்தும் பிறர்க்குத் தீங்கு செய்யமாட்டேன் என்று சொல்லும்போது தான் அந்த மனிதநேயப்பண்பு, அந்த நன்றியுணர்வு, அந்த அன்பு உண்மையான மனிதப் பண்பாகிறது. குற்றம் செய்ய முடியும் என்பவன் குற்றம் செய்யாமல் இருப்பதுதான் அந்தச் சிறப்பு. ஆகவே மனிதனைப் பொறுத்த வரையில் அவனே அவனுக்கு ஒரு பெரிய வழிகாட்டி என்ற உண்மையை உணர்த்துகிறது.

'அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது' என்று கூறிய ஔவைப் பாட்டியின் மரபிலே வந்தவன் பாரதி. இவன் 'கம்பன் என்ற ஒரு மானுடன்' என்று அழைக்கிறான். மானுடன் என்ற புகழைவிடப் பெரும் புகழ் வேறில்லை என்று எண்ணுகிறான்

பாரதி. மானுடம் என்று குறிப்பிடும்பொழுது உயர்ந்த மனிதன், பண்பட்ட மனிதன், மானுடம் கைவந்த மனிதன், வாழ்வாங்கு வாழும் மனிதன், அமரநிலை எய்தும் மனிதன் பற்றியே குறிப்பிடுகிறான். இந்த மானுடத்தில் அடங்கிய மனிதநேயம் என்பது எவ்வளவு ஆழமான, விரிவான கருத்தடங்கிய ஒரு சொல் என்பதை நாம் அறியமுடிகிறது.

மனித வாழ்விற்கு அடிப்படையாக அமைந்து மனிதனை இயக்கிக் கொண்டிருப்பது மனமாகும். மனத்தை மனிதன் பெற்றிருப்பதாலேயே அவனால் மன்னுதலாகிய நிலைபேறுடைய செயல்களைச் செய்ய முடிகின்றது. ஏனைய உயிரினங்களைக் காட்டிலும் உயர்ந்து நிற்க முடிகிறது. எனவேதான் தொல்காப்பியரும் 'ஆறறி வதுவே அவற்றொடு மனனே' என மனத்திற்குச் சிறப்பளித்துச் செல்கின்றார். உலகில் தோன்றும் உயிரினங்களில் மேன்மையடையும் தகுதி மனித உயிர்க்கு மட்டுமே உண்டு. அதனை அவன் மனத்தின் மாண்பினாலேயே பெறுகிறான் என்பது தெரிகிறது.

மனிதனின் தோற்றம் ஏதேனும் ஒன்றிலிருந்தே தோன்றியிருத்தல் வேண்டும் என்றும், அருளறம் சிறந்து விளங்குவதற்குக் காரணமாக இருப்பது மனிதப் பிறவி என்றும், மனிதப் பிறவி விழுமியது என்பது போன்ற கருத்துகளை அறிய முடிகிறது. உயிர்களின் கூட்டம் ஆறு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளதைத் தொல்காப்பியத்தின் மூலம் அறிகிறோம். மனிதம் என்ற சொல் விளக்கமும், அகராதிகள் கூறுகின்ற பல்வகை விளக்கமும், மனிதப் பண்புகளையும், மனித உரிமைகளையும் போற்றிக் காக்கின்ற ஒருநெறி என்று சான்றோர்கள் கூறும் விளக்கம் கூறப்பட்டுள்ளதைப் போல, மனித நேயம் என்பதற்கு இன்றும் பலர் பல்வேறு வகையான விளக்கங்களைக் கொடுத்துள்ளனர்.

தியாகம், அன்பின் ஒற்றுமை, உயிர்களைச் சார்ந்திருத்தல், மனத்தூய்மை, பொறுமை, வாய்மை, ஆன்மசக்தி, அடக்கம், தீங்கு செய்யாமை, மெய்வழி நிற்றல் முதலான மனித நேயப் பண்புகள் மக்கள் மனத்தைப் பல வழியிலும் பண்படுத்தும் என்பதையும், மார்க்கண்டேயர், அரிச்சந்திரன், காந்தியடிகள், சீதை, மணிமேகலை போன்ற சத்தியாக்கிரகிகள் இல்லையேல் உலகில் அன்பும், அறமும் நிலைத்து நிற்காது என்பதையும், தன்னைப் போல பிறரைக் கருதுதலே மனிதனின் இயல்பு என்பதையும் அறிந்து கொள்ள முடிகிறது. மனிதன் பிறர் நலம் கருதும் அருளாளனாய் வாழ்தல் வேண்டும் என்னும் உண்மையைச் சங்க இலக்கியங்கள் நமக்கு அறிவுறுத்துகின்றன.

இவ்வாய்வின் இரண்டாவது இயல் வாழ்வியற் கூறுகளில் மனித நேயம் என்பதாகும். அக்காலத்தில் அகப் பொருள் மரபுப் படி இயற்பெயரைக் கூறாத பண்பு, இன்றும் சில கிராமங்களில் பெண்கள் தங்கள் கணவரின் பெயரைக் கூறாத மரபு இருப்பதைக் காணலாம். இக்கட்டுப்பாட்டினை விதித்து அக இலக்கியத்தைத் தனிப்பட்ட ஒருவருக்கு உரிமையாக்காமல் பொதுநிலையில் அக இலக்கியங்களைப் படைத்திருக்கும் தமிழர் தம் எல்லார்க்கும் எல்லாம் என்னும் பொதுவுடைமைப் பண்பு நெடுநல்வாடையில் போற்றப்பட்டுள்ளது. இன்று பெண்களின் முன்னேற்றம் பல்வேறு துறையிலும் சிறந்து நிற்றலைப் போல அக்காலத்திலும் பெண்கள் போர்க்களம் புகுந்து சுதந்திர வாழ்வு நடத்திய பான்மையினை முல்லைப் பாட்டால் அறிய முடிகிறது.

அக்காலத்தில் தலைவன், தலைவியரிடையே நிகழும் களவு வாழ்க்கையைத் தோழி அறிந்து கொண்டு தன்னுடைய சொல்வன்மை, அறிவாற்றலைப் பயன்படுத்தி அறத்தொடு நின்று இருபக்கமும் தவறு நேராதபடி செவிலித்தாயிடம் எடுத்துக்கூறித் திருமணத்தை நல்ல முறையில் நிகழ்த்திய தன்மையை அறத்தொடு நிற்றல் துறையில் அமைந்த பாடல்கள் கொண்டு அறியலாம். ஆனால் இன்று காதல் வாழ்வு பெரும்பாலும் முரண்பாடு நிறைந்த வகையில் நடந்து வருவதைக் காணலாம். காதல் என்பது வாழ்வு முழுவதும் பரவி இருக்கக் கூடிய, இருக்க வேண்டிய மனநிலை என்ற சங்ககாலக் கருத்து இக்காலத்திற்கும் பொருந்தியிருப்பதைக் காணலாம்.

சங்க காலத்தில் பொருள், வாழ்விற்குத் தேவை என்றாலும் கூடப் பொருளைக் காட்டிலும் அருளே போற்றப்பட்டது. ஆனால் இன்று அருட்பண்பு மக்களிடையே குறைந்திருப்பதையும், பொருளே வாழ்க்கையின் அறிகுறியாகவும் பயன்படுத்துவதைக் காண்கின்றோம். இதனால் மக்களிடையே மனித நேயப் பண்பு குறைந்திருப்பதைக் காண முடிகிறது. அன்பே உயிர் வாழ்க்கைக்கு அடிப்படை என்றும், அவ்வன்பின் முதிர்ந்த நிலையே அருள் என்றும், அருள் இல்லார்க்கு வாழ்வு இல்லை என்றும், பொருளினும் அருளே பல்லாற்றானும் மேம்பாடு உடையது என்றும், அவ்வருட் பண்பினை அடைய முயல வேண்டும் என்றும் நாம் இலக்கியங்கள் வழி அறிகின்றோம்.

இரண்டு உள்ளங்கள் ஒருமைப்படுவதற்குக் கருவியாய் விளங்குவது அன்பு என்ற மனிதநேயப் பண்பே எனலாம். இல்வாழ்க்கையின் அடிப்படை அன்பாகும். முடிவு அறமாகும். அன்பே இல்வாழ்கையின் தனிப்பயன் என்ற கருத்தை சங்க அக இலக்கியங்கள் நமக்கு உணர்த்துகின்றன. உண்மை அன்பினால் வன்மை மிக்க

ஆடவரையும், மென்மை மிக்க மகளிர் பிணித்து விட்டனர் என்ற பண்பை குறுந்தொகை விளக்குகிறது. இதே பண்பு இக்காலத்து மகளிரிடம் இருப்பதையும் காண்கிறோம்.

மகிழ்ச்சி, அன்பு, இரக்கம் போன்றவை மிகச் சிறந்த நடத்தையைத் தோற்றுவிக்கின்றன. சினம், வெறுப்பு, பொறாமை போன்றவை இழிவான நடத்தையை உருவாக்குகின்றன என்பது அன்றாட மனித வாழ்விலும் நிகழ்வதைக் காண முடிகிறது. சங்க காலத்தில் பொருள் ஈட்டுதற்கோ, வேறு அலுவல் காரணமாகவோ தலைவன், தலைவியைப் பிரிந்து செல்வதுபோல, இக்காலத்திலும் சில ஆடவர்கள் தம் மனைவியைப் பிரிந்து வெளி நாட்டிற்குச் சென்று மிகுதியான பொருளீட்டி வருவதைக் காண்கிறோம். பிரிவால் ஆற்றியிருக்கும் பண்பு அக்கால மகளிரைப் போல இக்கால மகளிரிடத்தும் காணப்படுகிறது.

இன்பத்திற்கு இடையூறு நேராவண்ணம் பிற உயிர்களின் துன்பம் நீக்கி அருள் செய்து இரக்கம் காட்டும் மனிதநேயப் பண்பினை, வாழ்வியல் நெறியாகப் பண்டைத் தமிழர் மேற்கொண்டனர். தினைப்புனத்தில் கிளி கடிந்த அவர்களே மனையகத்தில் கிளி, மைனா, முதலான பறவைகள் மீது பரிவுகாட்டி வளர்த்தனர். இன்றும் சில இல்லங்களில் பொழுது போக்கிற்காக பறவைகள் வளர்க்கும் செயலைப் பார்க்கிறோம்.

சங்க காலத்தில் மனையுறை மகளிர் உயிரென விளங்கிய தம் கணவரைப் பேணியும், தம் திண்ணிய கற்பினைக் காத்தும், மக்களை மாண்புற வளர்த்தும், விருந்தினரை ஓம்பியும், இடும்பை எனக் கருதாது குடும்பச் சுற்றத்தாரைத் தழுவியும், கடவுளை வணங்கியும், கவின்கலை வளர்த்தும், வாழ்க்கையில் துன்பம் துடைத்து இன்பம் பெருக்கியதை சங்க அக இலக்கியங்கள் உணர்த்துகின்றன. இக்கால மகளிர் இன்று பெரும்பாலும் வேலைக்குச் செல்வதால் இப்பண்புகளில் சிறிது குறைந்து நிற்றலைக் காண்கிறோம். அக்காலத்தில் தம் குழந்தைகளுக்கு இனிய முறையில் அவர்களுடைய மனநிலைக்கு ஏற்பத் தாய்மார்கள் இனிமையாகப் பேசி உண்ணச் செய்வர். அப்பழக்கத்தை இன்றைய தாய்மார்களிடத்தும் காணலாம்.

மகளைப் பிரிந்து பெருந்துன்பம் அடைந்த தாய்மார்களைப் போல இன்றும் சில தாய்மார்களின் மனம் வருந்தும் நிலையைப் பார்க்கிறோம். பண்டைத் தமிழ்ச் சமுதாயத்தில் பரத்தை ஒழுக்கம் ஒருவகைக் குடும்ப ஒழுக்கம் போலப் பரவிக் கிடந்தது. மனைவி பரத்தமையை வெறுத்தாலும் அவளிடம் சென்று வந்த தலைவனை வெறுத்து ஒதுக்கவிலலை. இக்காலத்தில் இத்தகைய ஒழுக்கம் சமுதாயத்தில்

இழிவாகக் கருதப்படுகிறது. கணவனைத் தெய்வமாகப் பேணும் மனித நேயப்பண்பு அக்காலத்தில் இருப்பதைப் போல இன்று இப்பண்பு சற்றுக் குறைந்திருத்தலைக் காண்கிறோம்.

தம் வாழ்வியல் அறங்களுள் இன்றியமையாத ஒன்றாகவும், கணவன், மனைவியின் ஊடல் தீர்க்கும் வாயிலாகவும் அக்காலத்தில் விருந்தோம்பல் பண்பு போற்றப்பட்டது.தெரிந்தவர், தெரியாதவர், அறிந்தவர், அறியாதவர் என்ற பாகுபாடில்லாமல், தம்மை நாடி வந்தவர் அனைவரையும் இன்முகத்துடன் வரவேற்று விருந்து போற்றி உபசரித்த நிலையைச் சங்கப் பாடல்கள் சிறப்பித்துக் கூறுகின்றன. இரவிலே தெருக்கதவைத் தாளிட முற்படும்முன், யாரேனும் விருந்தினர் வந்துள்ளனரா என்று பார்த்துக் கதவடைக்கும் பழக்கம் பண்டை நாளில் இருந்தது.

கணவனும், மனைவியும் கருத்தொருமித்து இல்லறம் நடத்தினர். அதனால் பெண்டிர் 'மனைக்கு விளக்கு' என்று குறிப்பிடப் பெற்றனர். இணைந்து வாழ்வதே இல்லறத்தில் ஒப்பற்ற பண்பாக இக்காலத்திலும் திகழ்வதைக் காணலாம். சங்க காலத்தில் தலைவியின் காதல் வெளிப்பட்ட பின்னர், பெற்றோர்கள் தம் குடும்பத்தின் பெருமை குன்றிவிடுமோ என்று இற்செறிக்கும் நிலையைப் போல் இக்காலப் பெற்றோர்களிடத்தும் நாம் காண்கிறோம். கற்பின் திண்மை மனைவாழ்வின் இன்பத்திற்கு அடிப்படையாய் இருப்பதைப் போல இன்றும் வாழ்வியலில் இப்பண்பு போற்றப்பட்டு வருகிறது.

பண்டைத் தமிழர் பிறர்மனம் புண்படாது நடந்துகொள்ள வேண்டும் என்ற உயர்ந்த பண்பையும், நட்பு தோய்ந்த உள்ளத்தின் மாண்பையும், நன்கு அறிந்தவர்கள் என்பதை சங்க நூல்கள் வாயிலாகத் தெரிய வருகின்றன. இல்வாழ்க்கைக்குத் தேவையான பொருளை அறத்தின் வழியே ஈட்டுதல் வேண்டும் என்றும், முன்னோர் ஈட்டிய செல்வத்தில் வசதியாக வாழ்ந்தாலும், முயற்சியின்றி சோம்பியிருந்தாலும் அறமன்று என்றும், தீயவழியில் வரும் செல்வம் ஒவ்வாது அழியும் என்றும், வாழ்க்கையில் அறம்பல புரிவதற்கும், பிறர் கடைவாயிலில் சென்று நிற்காத நிலைமைக்கும் பொருள் இன்றியமையாதது என்றும், இன்னும் இவை போன்ற தன்னலமற்ற தூய்மைப் பண்பை நன்கு உணர்ந்தவர்கள் அக்காலத் தமிழர். இன்று இச்செயல்கள் எல்லாம் நேர்மாறாக தம் வாழ்க்கையில் நடந்து கொள்வதைக் கண்கூடாகப் பார்க்கிறோம். வாழ்வியற் கூறுகளில் மனிதநேயம் குறைந்திருப்பதே இதற்குக் காரணமாகும்.

ஒரு பெண் திருமணம் செய்து கணவன் வீட்டிற்கு வந்த போது வறுமையாக இருந்த குடும்பம், இப்பெண் அடியெடுத்து வைத்தபின் விழாக்கள் ஓயாது நடக்கும் இல்லமாகப் பொலிந்தது என்று சங்கப் புலவர் மங்கல மனை மாண்பினைப் போற்றிக் கூறியிருப்பதுபோல, இன்றும் பெரும்பாலோர் குடும்பத்திலும் நல்லது, கெட்டது நடந்தால், எல்லாம் இப்பெண் வந்த வேளைதான் என்று கூறுகின்ற வழக்கமிருப்பதைக் காண்கிறோம். அக்காலத் திருமணத்தில் சிலம்பு கழித்தல் என்ற சடங்கு நடைபெற்றதாகத் தெரிகிறது.

ஏறுதழுவுதல் என்ற வழக்கம் அன்று இருந்தது போல இன்றும் பொங்கல் விழாவின்போது மதுரைக்கு அருகே உள்ள அலங்கா நல்லூரில் நடைபெற்றுவருகிறது. இதனை 'மஞ்சு விரட்டு' என்று அழைப்பர். கிராமங்களில் சித்திரைத் திங்கள் முதல் நாளன்று மாட்டின் கொம்பிற்கு வண்ணம் தீட்டி 'நாள்ஏறு' என்ற பெயரில் ஏறு தழுவும் நிகழ்ச்சி நடைபெறுகிறது. அக்காலத்தில் ஏறுதழுவி வென்ற வீரனையே தலைவி மணப்பாள். இன்று இதில் மட்டும் சிறிது மாற்றம் ஏற்பட்டுள்ளது. தலைவியின் காதல் திருமணத்திற்கு அவன் பெற்றோர்கள் ஒப்புதல் அளிக்கா விட்டாலும், தலைவனின் பெற்றோர்கள் அவளை ஏற்றுத் தன் வீட்டில் மண நிகழ்ச்சியை நடத்தியமையைச் சங்கப்பாடல்கள் நமக்கு உணர்த்துகின்றன.

இல்வாழ்க்கை புகுந்த தலைவனும், தலைவியும் அன்பு, அறிவு, அருள், இரக்கம், என்ற மனிதநேயப் பண்புகளைப் பெற்றவர்களாக இருத்தல் வேண்டும். அவர்களின் உள்ளத்தில் அன்பு தவழ வேண்டும். அறிவு நிறைய வேண்டும். அருள் சுரக்கவேண்டும். இரக்கம் குழைய வேண்டும். இம் முறைகளில் அவர்களுடைய உள்ளம் அமையுமேயானால் பிறர் பழிப்பினுக்கு எட்டுணையும் இடமிராது. இதனை நோக்குங்கால் பழியற்ற பெரு நிலையே இல்லற வாழ்க்கையில் செழுமையான நிலை என்பதை உணர்கின்றோம்.

தமிழகப் பெண்களும், ஆண்களும், இளமைப் பருவத்தில் பெற்றோர்களால் பல்வகை நற்பழக்கங்களில் பயிற்றுவிக்கப் பெறுவர். சிலர் தாமே, பெற்றோரைப் பார்த்துக் கற்றுக் கொள்வர். எந்த அளவிற்குக் கற்றாலும் பெற்றோரைப் போன்றே இளமையில் ஒழுகுவோர் மிகமிகச் சிலரே. அச்சிலருடைய செயல்கள் இல்லறத்தின் இன்பக் காட்சிகளாக அமைவதைச் சங்க இலக்கியங்களில் காண்கிறோம்.

அக்காலத்தில் காக்கை கரைந்தால் விருந்தினர் வருவர் என்ற நம்பிக்கை இருந்ததைப் போல் இன்றும் இந்நம்பிக்கையை வாழ்வியலில் கடைப்பிடிக்கிறோம்.

சங்ககாலத்தில் காக்கைக்குப் பலியுணவை வைத்தார்கள். இன்று இந்நிலையில் சிறிது மாற்றம் ஏற்பட்டுப் பெரும்பாலும் அந்தணர்கள் தூய்மையாகச் சமைத்த உணவு இடுவதை வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர். மேலும் சனீஸ்வரனுக்குரிய வாகனமாகக் காக்கை திகழ்வதால், தனக்கு நன்மை கிட்டும் பொருட்டும் உணவு இடுகிறார்கள்.

இல்லற வாழ்க்கையில் இருவர் மூவராகும்போது இதுநாள் வரையிலும் இருவரிடையேயும் இருந்து ஆட்சிசெலுத்தி வந்த தன்னலப் பிடிப்பு அறவே அகன்று, இருவரின் எண்ணமும், செயலும், சற்று இளகிக் காணப்படுகின்றன. இளகிய நிலையிலே விளைவது தியாகம். இத்தியாகச் சிந்தை ஏற்பட, தேவை இயல்பாகவே குறைகின்றது. இன்றேல் குறைக்கப்படுகின்றது. தன் தேவையைக் குறைத்துப் பிறர் தேவையை நிறைசெய்கின்ற நிலை எய்துவது மனித வாழ்விலே மணம் பெற்றபோதும் கூட காணப்படுவதில்லை. மக்கட் பேற்றைப் பெறும் போது தான் உண்மையான உயர்ந்த நிறைவு பெற்ற மனித நிலையை ஒவ்வொருவரும் எய்துகின்றனர். குழந்தைப் பேறில்லாத மக்களை இன்றும் சமுதாயத்தில் பெரும்பாலும் ஒதுக்கி வைக்கின்ற நிலையினைப் பரவலாகப் பார்க்கின்றோம்.

மனிதத் தன்மையில்லாத கயமைப் பண்புடைய மக்களின் மனித நேயத்தைப் பற்றியும் சங்கப் பாடல்கள் பகர்கின்றன. மனிதர்கள் அற்பத்தன்மை இல்லாமல், அறிவற்ற தன்மை இல்லாமல், பெருந்தன்மையுடன் வாழ வேண்டும் என்பதையும், பண்டைத் தமிழர் புகழையும் விரும்பாத உயர்ந்த பண்பினர் என்பதையும் வற்புறுத்திக் கூறுகின்றன. ஒருவன் மற்றொருவனிடம் கடனாகப் பொருளைப் பெறும்போது அவனுடைய முகம் மலர்ச்சி அடைந்தும், அக்கடனைத் திருப்பிக் கொடுக்கும்போது அவன்முகம் மலர்ச்சியின்றி வேறுபட்டிருத்தல் முற்காலத்தும், இக்காலத்தும் இவ்வுலகத்தார் இயல்பு என்ற அரிய வாழ்வியல் மனிதநேயப் பண்பாட்டினைச் சங்கப் பாடல் வழி அறிந்து கொள்ள முடிகிறது. சங்கத் தமிழர் விலங்கினங்கள் அன்பைப் பார்த்து அதன்மூலம் மனித நேயத்தை உணர்ந்து தம் வாழ்க்கையில் மேற்கொணடு ஒழுகியமையைக் காண்கிறோம்.

இவ்வாறு பழந்தமிழரின் அன்பான இல்லற வாழ்க்கை, பண்பும், பயனும் சான்ற பண்பாட்டு வாழ்க்கையாக விளங்கியது. பெண்ணின் பெரும்பண்புகள், அவள் இல்லறக் கடமைகளை இனிதுற ஆற்றுகின்ற பொழுது திறனுடன் விளங்கின. பெண் இன்றேல் ஆணில்லை, ஆண் இன்றேல் பெண் இல்லை என்றபடி அவர்களின் அன்பான இல்லறம் தலைவியின் பொறுமைப் பண்பாலும், விருந்தோம்பல்

சிறப்பாலும் சிறப்புறத் தலைவனின் பொருள் தேடும் முயற்சியால் இல்லறம் இனிதுறப் பொலிந்தது என்பதனை நம் தமிழ் மொழியின் கண் எழுந்துள்ள சங்க இலக்கியங்கள் வகையுற எடுத்துக் மொழிகின்றன.

'அரசியல் கூறுகளில் மனிதநேயம்' என்பது இவ்வாய்வின் மூன்றாவது இயலாகும். அரசு என்ற அமைப்பை இயக்குபவரே அரசர். அவனுக்கு உதவியாக இருந்து வேண்டும் தக்க அறிவுரைகளைக் கூறுபவரே அமைச்சர். நாட்டில் தன் பணிகளை நிறைவேற்ற அரசனுக்கு உதவியாக இருப்பவரே அரசாங்க அலுவலர். இம்மூவரும் நாட்டையும், குடி மக்கள் நலன்களையும் பாதுகாப்பதில் கண்ணும், கருத்துமாய் இருந்து சங்ககால அரசியலை நடத்தி வந்தனர். ஆனால் இக்காலத்தில் அரசர், அமைச்சர் என்ற பாகுபாடில்லாமல் ஜனநாயக அரசியலை நடத்தி வருகின்றனர்.

பெரும்பாலான அரசர்கள் மனிதாபிமான உணர்வுடன் குடிமக்கள் நலன் ஒன்று கருதியே செயல்பட்டனர். அரசன் இல்லத்தை இறைவன் வீற்றிருக்கும் கோயிலாக அக்காலத்தில் மதிக்கப்பட்டமை தெரிகிறது. நாட்டின் நலனுக்காகச் சிறப்பாக உழைத்தவர்கட்கும், பட்டங்களும், பரிசுகளும் அளித்து மகிழ்ந்து வந்தனர். அமைச்சர்களின் உயர்வையும், ஒழுக்கத்தையும், மனிதத்தன்மையும் பொறுத்தே ஒரு நாட்டின் ஆட்சி அமைந்திருக்கும். அந்நாட்டின் நீதிமுறையும் நடைபெறும் என்ற உண்மையை நம்மால் அறிந்து கொள்ள முடிகிறது. பிறரால் பாராட்ட வாழ்வதும், மற்றவர்களைப் பாராட்டி வாழ்வதும் பண்புநலம் சான்ற சீரிய வாழ்க்கையாகும் என்பதை அக்கால அரசர்கள் உணர்ந்திருந்தனர்.

பசித்துன்பம் நாட்டில் தோன்றாதபடிக் காத்தல் அரசியலின் முதல் கடமையாக மேற்கொள்ளப்பட்டது. சங்கத் தமிழர் வாழ்வு கூட்டமைப்பு முறையினால் நாகரிக முறையில் நலம் பெற்று வளர்வதாயிற்று. உலகினை ஆளும் வேந்தனுக்குத் தேவை உண்பது, உடுப்பது என்ற இரண்டு மட்டுமல்லாமல், செல்வத்துப் பயன் பிறர்க்கு ஈந்து மகிழ்தலே, என்பதையும் வாழ்க்கையில் தாம் பெறும் பேரின்பமாகக் கருதினர். அதுபோல, தற்காலத்தில் உள்ள ஜனநாயக அரசாங்கமானது பல்வேறு ஐந்தாண்டுத் திட்டங்களை இயற்றி அதன் மூலம் நாட்டு மக்களுக்கு இன்றியமையாத உணவு, உடை, இருப்பிடம் அளித்திட பாடுபட்டு வருகிறது.

ஒவ்வொருவரும் அரசனைத் தத்தம் உயிரினும் மேலாகக் கருதினர். சமுதாயத்தில் தனக்கு ஏற்ற ஒரு தொழிலை மேற்கொண்டு வாழ முற்படுகின்ற ஒருவனுக்கு வசதிமிக்க நல்வாழ்வைக் கொடுக்க வேண்டியது மன்னனின் கடமை என்றும், நாட்டில் தொழில் புரிந்து வாழும் மனிதர்களுக்குத் தேவையான வாழ்க்கை வசதிகளை வகுத்துக் கொடுத்தல், பகை நாட்டவரால் உண்டாகும் அச்சத்தைப் போக்கி நல்வாழ்வு வாழச் செய்தல் அரசாங்கத்தின் கடமை என்றும் புறநானூற்றின் மூலம் தெரியவருகிறது.

அக்கால அரசர்கள் உயிர்க்கு நன்மை பயக்கும் அறச் செயல்களை மேற்கொண்டு ஒழுகினர். நேர்மையான வழியில் ஆட்சி செலுத்தி, நீதியால் விளையும் அறப்பயனை அடைந்தனர். இத்தகைய பண்புகள் படைத்தவனாய் அரசன் விளங்கியமையால் மக்கள் அரசனுடைய இன்றியமையாமையை உணர்ந்தனர். அரசர் 'யாம்' என்ற தலைவீக்கமும், குடிகள் 'பிறர்' என்ற இழிநோக்கமும் சங்க காலத்தில் தலை காட்டவில்லை. அரச உரிமை தலைமுறை, தலைமுறையாக வாரிசு உரிமைப்படி ஆட்சி புரிந்த தன்மையும், பொய் சொல்லாமை, இழி செயல் செய்யாமை, தன்னலம் கருதாமை போன்ற சான்றாண்மைப் பண்புகள் நிறைந்தவர்களாகவும் விளங்கினர் என்பது தெரிய வருகிறது.

ஊராட்சி நிலைகளில் தேர்ந்தெடுக்கப்படுவோர் இக்காலத்தில் குடிமக்களைக் கொண்டு தேர்ந்தெடுப்பது போல, பண்டைத் தமிழர் குடவோலைத் தேர்தல் மூலம் தேர்ந்தெடுக்கப்பட்ட செய்தியும், பெட்டியில் போட்ட ஓட்டுச் சீட்டுகளின் எண்ணிக்கையை வைத்து இப்போது தேர்ந்தெடுப்பதைப் போல, அக்காலத்தில் பெயர்களை ஓலையில் எழுதிக் குடத்திலிட்டு அதனைச் சிறுவர்களைக் கொண்டு எடுத்துத் தேர்வு செய்தார்கள் என்ற செய்தியும் அகநானூற்றுப் பாடல் மூலம் தெரிய வருகிறது.

இன்று கோடைக்காலத்தில் குடிநீர்ப் பற்றாக்குறை இருப்பது போல நீர்வளம் பற்றிய கவலை முற்காலத்தும் இருந்தது என்று அறிய முடிகிறது. அரசர்கள் புலவர்கள் சொற்படி கழனியாக்கத்திற்கு உதவும் நீர்நிலைகளைப் பயனுள்ள முறையில் பாதுகாத்துத் தம் குடிமக்களின் நலனைக் காக்கும் மனிதநேய மிகு உணர்வைக் கொண்டிருந்தனர். தற்காலத்திலும் தண்ணீர்ப் பற்றாக் குறையைப் போக்க ஆந்திராவில் உள்ள உபரித் தண்ணீரை தெலுங்கு கங்கை என்ற திட்டத்தின் மூலம்

சென்னைக்குக் கொண்டு வரத் திட்டங்கள் தீட்டி முடிவடையும் தறுவாயில் உள்ளது. இத்திட்டம் முடிவடைந்தவுடன் சென்னையில் தற்போது கோடைக் காலத்தில் ஏற்படும் தண்ணீர்த் தட்டுப்பாடு நீங்கும் என எதிர்பார்க்கலாம். மனித நேய உணர்வினால் தான் இத்திட்டம் நிறைவேறும் என்று கூறினால் அது மிகையாகாது.

அக்காலத்தில் வீணாகப் பாய்ந்தோடும் நீரை ஏரிகளில் தேக்கி வைத்துப் பாதுகாத்தது போல, தற்காலத்தில் நவீன திட்டங்களின் மூலம் அணைக்கட்டுகள் கட்டப்பட்டு நீரைத் தேக்கி வைத்து அதிலிருந்து மின்சாரத்தையும் உற்பத்தி செய்கிறார்கள். மேலும் இந்நீரை நீர்ப்பாசனத் திட்டத்திற்கும் பயன்படுத்தி கிராமங்களில் விவசாயத்தைப் பெருக்க வழிவகை செய்து வருகின்றனர்.

முற்காலத்தில் தவறு செய்த ஒருவனை ஊர் மன்றத்தினர் மரத்தில் கட்டி, அவன் தலையில் சுண்ணாம்பு நீற்றைப் பெய்து அவமானப்படுத்தியலிருந்து சிற்றூர்களில் கூட நல்லாட்சி நிலவிய தன்மையைப் போல, தற்காலத்தில் தவறு செய்கின்றவர்கள் நீதிமன்றங்கள் மூலம் தண்டனை பெறுகிறார்கள். இதனால் நாட்டில் ஒருமைப்பாட்டு உணர்வு பெருகி வருகின்றது. அன்று ஊர்க்காவலர், நகர்க்காவலர், தெருக்காவலர் இருந்து நாட்டை நல்ல முறையில் பாதுகாத்தது போல, தற்காலத்தில் இராணுவம், ஊர்க்காவல் படை, எல்லைப் பாதுகாப்புப் படை ஆகியவற்றைப் பயன்பத்தி நாட்டை நல்ல முறையில் காத்து வருகின்றனர். கைம்மை நோன்பின் துயரம் சங்ககாலத்தில் மிகுந்திருந்தது. இன்று விதவைகள் மறுவாழ்வுத் திட்டம் அமைத்து மனிதநேயத்தினால் அவர்களுடைய வாழ்க்கை மேன்மை அடைய வழி செய்கிறது.

இனத்துக்குள்ளே நடக்கும் போர் வெளியில் தெரிந்தால் வெட்கக் கேடு என்று உடன்பிறந்தார்க்கிடையே நடைபெற இருந்த போர் அக்காலத்தில் மனித நேய உணர்வினால் புலவர்களால் தடுக்கப்பட்டது. இக்காலத்தில் ஆங்காங்கே தலைதூக்கும் சில தீய சக்திகளால் ஏற்படும் சமுதாயப் போராட்டத்தைத் தடுப்பதற்குச் சில மனிதாபிமானிகள் முயன்றாலும் அப்போராட்டம் முற்றிலும் தடுக்கப்படவில்லை. இதற்குக் காரணம் சமுதாயத்தில் ஒற்றுமை குறைந்து வருவதே ஆகும்.

அறிவும், அறமும் ஓங்காதவாறு பெருந்தடை செய்யும் வயிற்றுக் கவலையைக் கொன்று ஒழிக்கப் பழந்தமிழகத்தில் உணர்வு மிக்க உரவோர் பலர் முயன்றுள்ளனர். குழந்தைகள் மீது அக்கால மன்னர்கள் கொண்ட மனிதநேயத்தைப் போல, தற்காலத்திலும் பள்ளிக் குழந்தைகளுக்காக இலவசச் சத்துணவுத் திட்டம் அமைத்து

அதன் மூலம் வயிற்றுக் கவலையைப் போக்குவதோடு மட்டுமல்லாமல், குழந்தைகள் கல்விகற்கும் ஆர்வத்தைத் தூண்டுவதாகவும் அமைகிறது. மனித நேயத்தின் அடிப்படையில் தான் இத்திட்டம் சிறந்த முறையில் நடைபெற்று வருகிறது என்பதில் ஐயமில்லை.

அவரவர் மனம் மகிழ ஆங்காங்கு சென்று அவரவரைப் புகழ்ந்து, பெறுவன பெற்றுக்கு கொண்டு வாழ விழையும் தன்னலப்பண்பு அக்காலச் சான்றோர்களிடம் எட்டுணையும் இல்லை. இக்காலத்தில் எல்லாத் துறையிலும் தன்னலப் பண்பே தலைவிரித்தாடுவதைக் காண்கிறோம். உயர்ந்த நோக்கம் கொண்டு விழுமிய வாழ்வு வாழ்ந்த சான்றோரை அக்கால அரசியல் உலகம் மதித்தது. அன்று போர் நடைபெறும் காலத்திலும் அறநெறி தவறாமல் போர் செய்தவர்களைப் புலவர்கள் தடுத்து நிறுத்திச் சமாதானத்தை உண்டாக்கியது போல, இன்றும் போர் நடைபெறாமல் இருக்க உலக நாடுகளிடையே சமாதானத்தை நிலை நாட்ட ஐக்கிய நாடுகள் சபை பெரிதும் பாடுபட்டு வருகிறது. மேலும் அக்காலத்தைப் போல் அல்லாமல், இன்று நவீன அணு ஆயுதங்களைப் பயன்படுத்தினால் உலகமே அழிந்து விடக் கூடிய அபாயத்திலிருந்து காக்க இச்சபை பெரிதும் உதவுகிறது.

இவ்வாய்வின் நான்காவது இயல் ‘சமூகவியல்’ கூறுகளில் மனிதநேயம் என்பதாகும். சங்க காலத்தில் பொது மொழியும், பொதுப் பண்பாடும் கொண்ட எண்ணிறந்த இனமக்கள் பல்வேறு நிலவியல் பகுதிகளில் வாழ்ந்தனர். நில இயல்புக்கு ஏற்ப மக்கட் பாகுபாடு அக்காலத்தில் இருந்தமை தெரிகிறது. தொழிலால் மட்டுமே பிரித்துக் காட்டப்பெற்ற பிரிவினர் இருந்தனர். இன்று இப்பாகுபாடில்லாமல் யாரும் எந்தத் தொழிலையும் செய்கின்ற வாய்ப்பும், வழியும், உள்ளது. அன்று துடியும், பறையும் கொண்டு ஒரு செய்தியை அனைவருக்கும் பரப்புகின்ற செயலானது இன்றும் சில கிராமங்களில் இருந்துவருகிறது. சமூகத்தில் உயர்ந்த நிலையில் இருந்தோர் பார்ப்பனராவார். தற்காலத்தில் சாதியற்ற சமுதாயம் உருவாக வேண்டும் என்று பலரும் கருதுகின்றனர்.

பண்டைத் தமிழ் மக்களின் மனவளமும், இன்றைய தமிழ் மக்களின் மனவளமும் மலைக்கும், மடுவுக்கும் உள்ள வேறுபாடாய் உள்ளன. தமிழனே தமிழனை அழிக்க நினைப்பதும், முயல்வதும், தமிழனே தமிழனின் வாழ்வையும், வளர்ச்சியையும் தீய்ப்பதும், மாய்ப்பதும் அன்றாடக் காட்சிகளாய் விட்டன. அரசர்கள்

கலைஞர்களிடத்துப் பெருமதிப்பு வைத்து அரசர்கள் எல்லாம் அவர்களைப் போற்றி அளவில்லாத பரிசில்களை வழங்கியும், கலைஞர்கள் செல்வ வாழ்வு வாழவில்லை என்பது சிந்தனைக்குரியது. கலை ஆக்கத்திற்கு அடிப்படையான உள்ளம் வானம்பாடி போன்றது. பொருளோடு தன்னைப் பிணித்துக் கொள்ள அது என்றைக்குமே விரும்புவதில்லை. அதனால் கலைஞர்கள் தங்கள் கலையில் மேலும் மெருகேற்றிக் கொள்வதே அவர்களின் வாழ்க்கை நோக்கமாக அமைகிறது. இந்த உண்மைகளைச் சிந்தித்து உணர்ந்து வாழ்ந்த சங்கால மக்கள் சமுதாய நலச் சிந்தனை வளத்தினர் என்பது தெளிவு. இந்த வளம்தான் சமுதாயத்திற்கு என்றைக்கும் தேவை.

சங்ககால மக்கள் தாம் வாழும் குடும்பத்தையும், சமுதாயத்தையும்,நாட்டையும், உலகையும் தம் வாழ்வுக்குத் தேவையான பிறவற்றையும் அறியவும், அறிந்து நல்வழியில் நடக்கும் கல்வி இன்றியமையாதது என்பதை உணர்ந்திருந்தனர். இக்காலத்தில் கல்வி கற்காதவர்களுக்கும், பெரியோர்களுக்கும் கல்வியைப் புகட்டுவதற்காக இலவசக் கல்வித் திட்டமும், முதியோர் கவ்வித் திட்டமும் சமுதாயத்தில் உருவாக்கப்பட்டுள்ளது. அக்காலத்தில் கல்விகற்றோர் குடி, செல்வம், வயது ஆகிய வேறுபாடு ஏதும் பாராட்டப் பெறாது சமுதாயத்தில் உயர்நிலையில் ஏற்கப் பெற்றனர். அறிவு, கொடைத் தன்மை மிகுந்த தமிழர் சமுதாயத்தில் கலைவளமும் தழைத்தோங்கியது. மான உணர்வும், நன்றியறிவும் தமிழர் போற்றிய தலை சிறந்த மனிதப் பண்புகளாகும். தீண்டாமை, தீமையில்லாச் சமுதாயம், தமிழ்ச் சமுதாயம் என்ற கருத்தினைக் கொண்டு பரந்த நோக்குடன் தமிழர் சங்க காலத்தில் வாழ்க்கைத் தேரைச் செலுத்தினர்.

இன்றைய சமுதாயத்தினரைப் போல், அன்றைய சமுதாயத்தினர் ஆண் குழந்தைகளை மட்டும் போற்றுபவராக அமையாமல், பெண் குழந்தைகளையும் போற்றும் பண்புடையவாராகத் திகழந்தனர் என்பது தெரியவருகிறது. புலவர்கள் வாழ்க்கை அக்காலத்தில் வறுமை வாழ்க்கையாகவே காணப்படுகின்றது. மக்களில் சிலர் செல்வ வாழ்க்யையும் மேற்கொள்ளாமல், வறுமையிலும் துன்பப்படாமல் இடைப்பட்ட வாழ்வு வாழ்ந்தமை எடுத்துக்காட்டப் பெற்றுள்ளது.

மனிதன் ஆவதும், அழிவதும், தன்னாலேதான் என்னும் விழுமிய கருத்தை அழுத்தமாக உணர்ந்து நடந்தனர் அக்காலத் தமிழர். கட்டடக்கலை, இசை, கூத்து முதலான நுண்கலைகளிலும், உண்மை, ஒழுக்கம், அன்பு, அருள், நட்பு முதலிய

நற்பண்புகளைப் பெற்றும், நலமுற வாழ்ந்ததனால் வையகத்தில் வாழ்வாங்கு வாழ்ந்தனர் எனலாம். இவ்வாறு நினைந்து, நினைந்து உவக்கும் அவர்தம் நேயம் - மனித நேயம் உயிர்ப் பயிர் செழிக்க உதவுதல் திண்ணம். அக்காலத்தில் அறிவுள்ளவனைத் தான் செல்வமுள்ளவனாகக் கருதினர். அத்தகையவனால் தான் உலகம் செழிக்கும் என முழுக்க, முழுக்க நம்பினர். இன்றைக்கு அந்த நம்பிக்கை வெறும் நட்சத்திரமாகி விட்டது. நெடுந்தொலைவில் நின்று மின்னிக் கொண்டிருக்கிறது.

பெரியவர்களைப் பேணிக் காப்போம் என்னும் நோக்கு எங்கு இருக்கிறதென்றே தெரியவில்லை. தற்போது ஆங்காங்கே திறக்கப்பட்டுள்ள முதியோர் இல்லங்களும், அனாதை ஆசிரமங்களும் இதற்குச் சான்று பகர்கின்றன. இன்று பணத்திற்கும், பதவிக்கும் வழங்கப்பட்டுள்ள முக்கியத்துவத்தைப் பண்புக்கும், தூய அன்புக்கும் ஒன்றுபட்டு வாழ வேண்டும் என்ற உயர்ந்த குறிக்கோளுக்கும் அளிக்கப்பட்டிருக்குமானால் நன்றாக இருந்திருக்கும். நமக்கு முன்னே வாழ்ந்தவர் வாழ்வை நினைத்துப் பார்க்கும் எண்ணம் அரும்புவிட்டால்தான், பசுமையான பயிரோடு இன்று கலந்து வளர்ந்திருக்கும் களையைப் பிடுங்கி எறியும் மனம் வரும்.

மக்களாகப் பிறந்தவர்களுக்குள்ளே அவர்கள் செய்கின்ற தொழிலால் சிறப்புடையவர்களாகப் போற்றப்படுவது பொருந்தாது. அவர்களிடையே காணப்படும் ஏற்றத் தாழ்வுகள் செயற்கையானவை. புறச்சார்பு உடையன. அப்புறப் போர்வையைக் கழற்றி எறிவோமானால் உள்ளே ஒருமைப்பாட்டைக் காணலாம் என்பதே நம்முடைய முன்னோர்கள் கண்ட உண்மையாகும். எனவே வேற்றுமைகளுக்கிடையே ஒற்றுமை காணுமாறு தூண்டுவதும், மனிதனை மனிதாக வாழுமாறு தூண்டுவதும், எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பதுவுமாகிய மனித இனநலக் கோட்பாட்டின் கூறுகள் சங்க நூல்களில் மிளிர்வதைக் காணலாம். பண்டைத் தமிழ் மக்கள் மக்களினத்தின், நல்வாழ்வில் ஆர்வம் காட்டி வந்தமைக்கு இப்பாடல்கள் சிறந்த சான்றாக அமைகிறது.

மனித இனத்தின் தீராச் சிக்கலாக இருந்து வருவது வயிற்றுப் பசியாகும். மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவனும் வளமாகவும், நலமாகவும், வாழப் பிறந்தவன். அப்படி வாழ வேண்டியவர்களுள் பலர் அன்றாட வயிற்றுப் பிழைப்பிற்குத் துன்பப்பட வேண்டியிருக்கிறது. போதிய அளவிற்கு உணவினைப் பெற முடியாமல் பட்டினி கிடந்து இறப்பவர்கள் மனித சமுதாயத்தில் அன்றும் இருந்தனர். இன்றும்

இருக்கின்றனர். அவர்களுடைய வயிற்றுக் கவலையை நீக்குவதற்குரிய வழிவகைகளைப் பற்றி அன்றைய சான்றோர்கள் பலர் சிந்தித்து செயல்பட்டுள்ளனர். இன்று இப்பொறுப்பை அரசு ஏற்றுக் கொண்டுள்ளது. ஆனால் அன்று அப்பொறுப்பை சமுதாயத் தலைவர்களே ஏற்றுக் கொண்டிருந்தனர். எனவே வளமாகவும், நலமாகவும், சீருடனும், சிறப்புடனும் வாழ்கின்றவர்களைக் காணும் பொழுது அறச்செயல்கள் செய்யுமாறு அச்சான்றோர்கள் அறிவுறுத்தியுள்ளமை தெரியவருகிறது.

வீரமும், ஈரமும் மனிதவாழ்வின் இரண்டு அடிப்படை அம்சங்களாகும். இவை இல்லாமல் மனிதகுல வாழ்வு இருந்ததில்லை சென்று போன உலகம் ஒவ்வொருவரைச் சுற்றி இயங்கியது. இன்றைய உலகம் பிரிவுகள் குறைந்து சிற்சிலரைச் சுற்றி இயங்குகிறது. நாளைய உலகமோ பிரிவுகள் மாய்ந்து எல்லோரையும் சுற்றி இயங்கப் போகிறது. அதுதான் நமது குறிக்கோள் உலகமாகும்.

ஒரு நாடு ஒருவனைச் சுற்றியே ஒரு அரசனின் குடை நிழலிலேயே இயங்கிய காலத்தில் வீரமும், ஈரமும் தனித்து உயர்ந்து நின்றன. ஒருவன் ஆட்சி, சமுதாய அமைப்பில் இவ்விரண்டிற்கும் முதன்மையிடம் இருந்து வந்தது. எவனால் கொல்லவும், வெல்லவும் முடிந்ததோ அவன் வீரனாவான். எவனால் கொடுக்கவும், பிறருடைய மனத்தைக் குளிர்விக்கவும் முடிந்ததோ அவன் வள்ளல் ஆவான். இந்த இரண்டின் தேவையை மிகுவிப்பதாகவே அக்காலச் சமுதாயம் அமைந்திருந்தது. ஈகைக் குணமும் சமுதாய வாழ்வில் தனக்கு இருந்து வந்த சிறப்பிடத்தைச் சிறுகச் சிறுக இழந்து வருகிறது. ஆட்சி இயல்களும், தொழில் துறைகளும், விரிந்து பரவாத பழங்காலத்தில் வறுமையைப் போக்க ஈகைப் பண்பு தேவையாக இருந்தது. இப்போதோ செல்வர்களாக இருப்பது சிலருக்குள்ள உரிமை என்ற பழம் போக்கு மாறிவிட்டது.

தொழில்கள் ஒரு சிலரின் வருவாயைப் பெருக்குவது பழைய நிலை. இன்று எந்தத் தொழிலும் பெரும்பாலோரின் வாழ்விற்கு வளம் தருவதாக அமைய வேண்டும். தொழிலின் பயன் ஒரு சிலரிடமே ஒதுங்கக் கூடாது என்னும் போக்கில் சமுதாயச் சிந்தனை உருவாகிவிட்டது. இந்த அடிப்படை நோக்கில் தொழில்கள் பெருகும்போது வருமானத்தில் ஏற்றத்தாழ்வு இருந்தாலும் இரந்துதான் வாழ வேண்டும் என்னும் இழிவான நிலை யாருக்குமே இராது. உழைத்து ஊதியம் பெறமுடியாதவர்களை அரசாங்கம் பராமரிக்க வேண்டும் என்ற திட்டம், இரத்தலையும், அதன் மேல்

வளர்கின்ற ஈகையையும் ஒழித்துவிடுகிறது.

கொடிய வறுமை இல்லை என்றால், வறுமை வயப்பட்டவர்க்குத் துணையாக வரும் வள்ளல் தன்மைக்கும் தேவையில்லை. அதை மிக உயர்ந்த பண்பாகப் போற்றிப் பாராட்டுவோரும் இருக்க மாட்டார்கள். இன்றைக்கு நாம் இந்த நிலையை அடைந்திராவிட்டாலும், நமது வாழ்க்கை இந்த உயர் சம ஒருமை நிலையை நோக்கியே இயங்குகிறது. சமுதாயத்தை அலசி, அதனை இயக்கும் பல்வேறு கலைகளிலும் இந்தப் போக்கு எழுந்து காண்பதைப் பார்க்கிறோம். தெய்வக் கொள்கை முதல், தினசரிக் கடமைகள் வரை எல்லாவற்றிலும் சண்டையில்லாச் சமுதாயமாகவும், வறுமையில்லா மக்கள் கூட்டமாகவும் வாழ்வதற்கான போக்குகளையே கடைப்பிடிக்க முயன்று வருகிறோம். இப்போதும் ஒவ்வொரு நாட்டிலும் அரசியல் கட்சிச் சண்டை இருக்கிறது.

சாதி, சமயக் கட்சி சண்டைகள் மனிதக் கூட்டங்களைத் தனித்தனியே பிரித்து வைத்தன. அரசியல் கட்சிச் சண்டையில் அப்படிப் பிரிந்து போக வாய்ப்பில்லை. சண்டை போட்டவர்களே ஒன்றாகக் கூடி அமர வேண்டிய கட்டாயத்தை அரசியல் ஏற்படுத்துகிறது. சமய, சமுதாயத் துறைகளிலும், வெவ்வேறு கருத்துகளும், போக்குகளும் உள்ளவர்கள் தனித்தனியே தான் வாழ வேண்டும் என்றிருந்த நிலை மாறிவிட்டது. எதிலும் சமாதான சகவாழ்வு வற்புறுத்தப்படுகிறது.

மனிதனின் பொது அறிவுப் பரப்பு விரிய, விரிய சமய பந்தங்கள் எல்லாம் மாற்ற முடியாத யான், எனது என்னும் தன்மூப்பு உணர்ச்சி மங்கி மடிந்து விடுகிறது. உயிர்களுக்கு அச்சம் காட்டிப் பிறரைப் பயமுறுத்துவது அநாகரிகம் என்ற எண்ணம் எழுந்துள்ளது. பிறன் ஒருவன் தன்கையை எதிர்ப்பார்த்து நிற்க வேண்டும் என்ற நிலை மாறி, பெரிய சாலையில் எல்லா வண்டிகளும் ஒருமித்துச் செல்வது போல அவரவர் வாழ்வை அவரவர் ஏற்று நடத்திச் செல்ல வேண்டும்.

உணவு, உடை, இருப்பிடம் முதலான அடிப்படைத் தேவைகளுக்கு ஒருவரை ஒருவர் நம்பியிருக்கக் கூடாது என்னும் மனவேட்கை எழுந்துவருகிறது. இந்த வகையில் இன்று நாம் காண்பது விடிவெள்ளியின் மங்கிய ஒளியே என்பது உண்மை. ஆனால் அதே விடிவெளிச்சம் பகல் வெளிச்சமாக மலரவேண்டும் என்பதே அனைவரின் ஆசையாகும். சமுதாய வாழ்வின் பல அம்சங்களிலும் அதற்கான அறிகுறிகளைப் பார்க்கிறோம். இந்த உலகம் 'எல்லார்க்கும் எல்லாம்' என்று

இருப்பதான இடம் நோக்கி நடக்கின்றது என்னும் குரல் அக்காலத்தின் கனவுக்குரல் அல்ல. விரைவில் உருவாகப் போகும் நனவை முன் உணர்ந்து, எழுந்த அறிவிப்புக் குரலாகும். உலகம் இன்று முதல் சங்கத் தமிழன் சொன்ன அந்த வழியில் நடப்பது என்று முடிவெடுத்து அதன்படியே மனித நேயத்தோடு வாழுமானால் இன்னும் சமுதாயம் சிறந்த வாழ்வு பெறும் என்பது திண்ணம்.

'இறையியல் கூறுகளில் மனிதநேயம்' என்பது இவ்வாய்வின் ஐந்தாவது இயலாகும். பழங்கால நாகரிகம் படைத்த எந்த நாட்டிலும் இறை வணக்கம் உண்டு. இறை நம்பிக்கையும் உண்டு. சங்ககால மக்களை அறநெறியிலே நடப்பதற்கு வழிகாட்டியது இறைவணக்கம் தான். அறிவும், கல்வியும் குறைந்திருந்த அநாகரிக காலத்தில் மக்கள் தெய்வத்திற்கு அஞ்சி வாழ்ந்ததால் தான் அவர்கள் அறநெறி தவறாமல் நடந்து வந்தனர். விலங்குகள் போல் வாழ்ந்த மக்கள், மனிதப் பண்புடன் வாழ்வதற்கு வழிகாட்டியது இறையியல் கொள்கையாகும். தெய்வ நம்பிக்கை இல்லாமல் மக்கள் வாழ்ந்த காலம் ஒன்று உண்டு. அது நாகரிகமற்ற காலம். மனிதர்களையே அடித்துத் தின்று காட்டுமிராண்டித்தனமாக வாழ்ந்தகாலம். வரலாற்றுக்கு எட்டாத காலம்.

இறையியல் நம்பிக்கைக்கு அடிப்படை அச்சம்தான் என்று கூறலாம். ஆனால் தெய்வம் உண்டு. அதற்கு நம்மைவிட மிகுந்த ஆற்றலுண்டு. அதனால் எதையும் செய்ய முடியும் என்ற எண்ணம் பிறந்த பிறகுதான் மனிதன் நன்மை, தீமைகளைப் பகுத்தறியத் தொடங்கினான். கட்டுப்பாட்டுடன் நடக்கத் தொடங்கினான். மக்களிடையே நல்ல குடும்ப வாழ்வு, அரசியல் அமைப்பு, சமுதாயக் கட்டுப்பாடு ஆகிய இவை இறைநம்பிக்கைக்குப் பிறகுதான் உண்டாயின. ஆயினும் கொடுமைக்கும், கொள்ளைக்கும் கூட தெய்வ நம்பிக்கை பயன்பட்டது என்ற இவ்வுண்மையை நாம் மறுக்க இலயாது.

சங்க கால மக்கள் ஐவகை நிலங்களில் வாழ்ந்தனர் என்பது, அவ்வந் நிலங்களின் இயல்புக்கு ஏற்ப தெய்வங்களை வழிபட்டனர் என்பது தெரிய வருகிறது. தமிழ் நாட்டில் வணங்கப்பட்டு வந்த தெய்வங்கள் இவை என்பதையும், தெய்வங்களைப் பற்றிய வரலாறுகளையும், அவ்வரலாறு கூறும் இலக்கியங்களையும், தமிழ் மக்கள் அறிந்திருந்தனர். அந்தணர் முதலிய பல வகுப்பினர் இருந்தனர். தெய்வங்களுக்குப் பலியிட்டும், திருவிழாக்கள் செய்தும் வணங்கினர். வேதங்கள் ஓதப்பட்டு,

வேள்விகள், நடைபெற்றன. உருவ வணக்கம், அருவ வணக்கம் என்று மக்கள் பல தெய்வங்களை வணங்கினாலும் அவர்கள் ஒருவரை ஒருவர் வெறுக்கவில்லை. இறைவணக்கம் காரணமாக அவர்களிடையே பிரிவினைகள் ஏற்படவில்லை. இச் செய்திகளைப் பத்துப் பாட்டுள் ஒன்றாகிய திருமுருகாற்றுப் படையால் அறிய முடிகிறது.

அக்காலத்தில் முருகனைப் பார்த்தவுடன், அல்லது பார்க்கும் சமயம் கிடைத்தால் வாயால் புகழ்ந்து பாடி, மனத்தால் வாழ்த்திக், கையைத் தலை மேலே குவித்துப் பணிந்து திருவடிகளில் வீழ்ந்து வணங்குவது முறையாக இருந்தது. அது போலத்தான் இன்றும் நாம் இறைவனை வழிபட்டு வருகின்றோம். முருகக் கடவுள் சீற்றம் மிக்கவர் என்பதை அக்கால அரசனின் சீற்றம் முருகனின் கோபத்திற்கு 'முருகுறழ்ப் பகை' என்று மதுரைக் காஞ்சி கூறுகின்றது. தலைவியின் நோயைக் கண்டு தெய்வக் குற்றத்தால் நேர்வது என்று தாய் அஞ்சுவதும், அதற்காக வெறியாடல் எடுப்பதும் அக்கால வழக்கமாக இருந்து வந்திருக்கின்றது.

பல்வேறு இனிப்புப் பொருட்களில் இருக்கின்ற சுவை இனிப்பு என்ற ஒன்றுதான். அதுபோல மனிதகுலம் பலவாறு பிரிந்திருந்தாலும் அவர்களிடையே உள்ள மனிதநேயம் ஒன்றுதான் என்பதையும் இறைவனைப் பல்வேறு உருவத்தில் வழிபட்டாலும், அவன் எல்லோரிடமும் பொழியக்கூடிய அருள் ஒன்றுதான் என்பதையும் சங்ககால மக்கள் அறிந்திருந்தனர். திருமகள் செல்வத்திற்குரிய தெய்வம் எனச் சங்ககால முதல் மக்கள் நம்பி வந்தமை தெரிகிறது. முருகன், திருமால், சிவபெருமான், கொற்றவை, திருமகள் போன்ற தெய்வங்களை வழிபட்டதோடு அமையாமல் இந்திரன், வருணண், பிரமன், அறக்கடவுள் போன்ற பிறதெய்வங்களை வழிபட்டு பயன் பெற்ற நிகழ்ச்சியையும் சங்கப்பாடல்கள் தெரிவிக்கின்றன.

அக்காலம் முதல் இக்காலம் வரை தர்மக் கடவுளாகிய கூற்றுவனுக்கு மக்கள் அஞ்சியிருந்தமை புலப்படுகிறது. மலைப்பக்கங்களில் தெய்வங்கள் உறைவதாக அக்கால மக்கள் நம்பினர். மலைப்பகுதியில் வானர மகளிர் இருப்பர் என்பதும், அவர்கள் செல்கின்றவர்களுக்குத் துன்பத்தைத் தருவர் என்றும், அவர்களைக் கண்டு வழிச் செல்வோர் அஞ்சுவர் என்பதும் பெறப்படுகிறது. நாக வழிபாடு அக்காலத்திலேயே இருந்தது என்பதும், கைகளைக் கொட்டி குழியிலிருக்கும் பாம்பை வெளியே வரவழைப்பர் என்ற செய்தியும் மலைபடுகடாத்தால் அறிந்து கொள்ள

முடிகிறது.

திருமணமாகாத பெண்கள் நீர்த்துறையில் பாவையை வைத்து வழிபடும் வழக்கம் அக்காலத்தில் இருந்திருக்கிறது. இன்றும் கிராமத்து மக்கள் திருமண நாளுக்கு முன்பாக தத்தம் வீட்டிலுள்ள தெய்வங்களுக்குப் படையலிட்டு வழிபடுவதைக் காணலாம். சுவர்ப்பாவை வழிபாடு, கடல் தெய்வ வழிபாடு, போன்றவையும் அக்காலத்தில் வழக்கில் இருந்தது. இன்று பெண்கள் மாலை நேரத்தில் விளக்கேற்றி இறைவனை வழிபடுதலைப் போல அன்றும் பெண்கள் வழிபட்டு வந்தனர். வேப்ப மரத்தைத் தெய்வமாக வணங்கும் வழக்கம் இன்று இருப்பதைப் போல அன்றும் இருந்தது என்பதை அகநானூறு உணர்த்துகிறது.

அக்காலத்தில் பெண்கள் கூந்தலை விரித்திருப்பது தீய சகுனமாகக் கருதப்பட்டது. இன்றும் மக்களிடையே இவ்வழக்கம் இருந்துவருகிறது. பெண் குழந்தைகளை அரசு தொட்டிலில் போடுகின்ற இக்கால நிலை அக்காலத்தில் இல்லை. பொதுவாக ஆண் குழந்தைகளை ஈன்றெடுத்த பாடல்கள் பல இருப்பினும் சிறப்பாக ஒரு பாடல் பெண் குழந்தையை வேண்டிப் பெற்ற நிகழ்ச்சியைக் குறிப்பிடுகிறது. அக்காலத்தில் குழந்தையைத் திருமால் காக்கவேண்டும் என்பதற்காக சங்கு, சக்கரம், வில், வாள், கதை என்ற ஐம்படைத் தாலியை அணிவித்து வணங்குவர். இந்த முறை காலப்போக்கில் மாறி நாய், தாயத்து, திறவுகோல் எனப் பொன், வெள்ளி, முதலான உலோகத்தால் செய்து குழந்தைகளின் அரைஞாண் கயிற்றில் கோர்த்துத் தற்காலத்தில் அணிகின்றனர்.

இக்காலத்தில் 'தூவி' என்று வழங்குகின்ற சொல்லை அக்கால மக்கள் பலி என்று பயன்படுத்தியுள்ளனர். சான்றாக, பூப்பலி, அரிசிப் பலி போன்ற சொற்கள் சங்கப் பாடல்களில் இடம் பெற்றிருத்லைக் காண முடிகிறது. இன்று விழாக்களின் போது கோயில்களில் கொடியேற்றுவதுபோல அன்றும் வெண்மையான துணியினால் ஆன கொடியேற்றியமை தெரிய வருகிறது.

திருமாலை வணங்கிச் செய்யும் திருவோண விழாவும், கார்த்திகை விளக்கீடும், பிறவாயாக்கைப் பெரியோனாகிய சிவபெருமானை வழிபடும் திருவாதிரை விழாவும் போன்ற விழாக்கள் எடுத்து சங்ககால மக்கள் இறைவழிபாடு செய்து, உள்நாட்டு மக்கள் தங்களுக்குள் அன்பையும், பாசத்தையும் பரிமாறிக் கொண்டனர் என்று தெரிகிறது. அக்காலத்தில் பெரிய மாடமாளிகைகளில் செம்மறிக் கடாக்களைப் பலி

கொடுப்பது போல தற்காலத்திலும் கிராமங்களில் விழாக்கள் நடைபெறும் பொழுது சிலர் நேர்த்திக் கடனாக இச்செயலைச் செய்து வருகின்றனர்.

போரிலே வீரமரணம் அடைந்த வீரர்களுக்கு நடுகல் வைத்து வணங்கியுள்ளனர். அந்த நடுகல்லிற்கு மயில் தோகையைச் சூட்டியுள்ளனர் என்பது தெரிகிறது. இவ்வழிபாடே பிற்காலத்தில் சிறு தெய்வ வணக்கமாகத் தோன்றியிருக்கலாம். மதுரைவீரன், சுடலை மாடன், இருளன், கறுப்பன் போன்ற சிறு தெய்வவழிபாடு நடுகல் வழிபாட்டிலிருந்து தோன்றியது என்று கருதுவதற்கு இடமுண்டு. தமிழகத்தின் செங்கல்பட்டு, தர்மபுரி மாவட்டங்களில் தனி நடுகற்களும், கல்வீடு அமைப்பில் உள்ள நடுகற்களும் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. பண்டைய நடுகற்களுள் பல, இன்றைய மக்களால் வழிபடப்படுகின்றன.

இன்று போலவே அன்றும் இறந்தோர்க்குப் பிண்டமும், நீரும் அளிப்பதற்கு ஆண்மகன் வேண்டும் என்ற நம்பிக்கை அக்கால மக்களிடையே இருந்தது என்பது தெரிய வருகிறது. இல்லறத்தில் இன்புற்று வாழ்ந்த பின்னரே இறுதியில் துறவை மேற்கொள்ள வேண்டும் என்ற கர்மயோக தத்துவத்தைச் சங்கப்பாடல் சுட்டுகிறது. இறந்த போனவர்களைத் தெய்வமாக வணங்கும் வழக்கம் அக்காலத்தில் இருந்தது. இவ்வழிபாடு தற்காலத்தில் திதி, திவசம், கன்னிபூசை, சேலை வைத்துப் பூசித்தல் என்று நடைபெறுகிறது. ஆண்டு தோறும் குறிப்பிட்ட நாளில் வீடுகளில் இந்நிகழ்ச்சி கொண்டாடப்பெறும்.

இன்று இறந்தவர்களுக்கு ஆண்டுக்கு ஒரு முறை இறந்த நாளன்றும், நல்ல காரியங்கள் நடைபெறும் போதும் அவர்களை வேண்டி அவர்கள் விரும்பிய பொருட்களைப் படையலிட்டு வழிபடுவதைப் போல அன்றும் நடுகல் வீரனுக்குப் போருக்கு புறப்படுவதற்கு முன்னும் வெற்றி பெற்றுத் திரும்பிய பின்னும் அவன் விரும்பிய பொருட்களைப் படையலிட்டு வழிபட்டமை அறிந்து கொள்ள முடிகிறது. கடவுளர்க்குத் திருவுரு அமைத்து வழிபட்டதைப் போல நடுகல் வீரர்க்கும் உருவம் அமைத்து வழிபட்டுள்ளனர். இன்றும் சிலர் அன்பு மிகுதியால் இறந்து போன தாய், தந்தையர்க்கு உருவம் அமைத்துக் கோயில் கட்டி வழிபடுகின்ற முறை இருந்துவருகிறது.

இன்று நாம் கோயில்களை அமைத்து வழிபடுவதுபோல, அன்று பல்வேறு சமயத்தைச் சார்ந்தவர்கள் பள்ளிகள் அமைத்தும் இறைவனை வழிபட்டனர். பௌத்தப்

பள்ளிக்கு முதுபெண்டிர் தம் குழந்தைகளை அழைத்துச் சென்று தெய்வ வழிபாடு நடத்தினர். சமணர்களின் பள்ளி அமண் பள்ளி என்று வழங்கப்பட்டது. சாவக நோன்பிகளாகிய சமணர்கள் அருகக் கடவுளை பூவும் புகையும் ஏந்தி வழிபட்டனர் என்பது தெரிகிறது.

அந்தணர் வழிபாடு செய்த இடம் அந்தணர் பள்ளி என்று வழங்கப்பட்டது. அந்தணர்கள் துறவு மேற்கொண்டு பொதுப்பணி ஆற்றினர். வேதம் ஓதுகின்ற உயர்ந்த செயலை இவர்கள் மேற்கொண்டனர். அதனால் மாமழை பொழிந்து, விளைபொருள் பெருகி இல்லறம் சிறக்கும் என்று சங்கத்தமிழர் நம்பினர். நாட்டு மக்கள், நாட்டு நலன் கருதி அரசன் பல வேள்விகள் நடத்திய செய்தியும், அவ்வேள்வியை நடத்துவதற்கு அந்தணரை நியமித்த செய்தியும் சங்கப்பாடல்கள் மூலம் தெரிய வருகிறது. அந்தணர்களைத் துன்புறுத்துவது பாவம் என்ற நம்பிக்கையும், அவர்கட்குப் பொன்னும், பொருளும் கொடுத்துப் பேண வேண்டும் என்ற உயர்ந்த மனிதநேயம் அக்கால மக்களிடையே நிலவியது. இவர்கள் வழிப்போக்கரின் பசியைத் தணித்து வழிநடத்திய செய்தியால் அவர்களின் மனிதநேயப் பண்பு புலப்படுகிறது.

அரச நீதியில் இறைமைப் பண்புகளைக் காண்பதிலும், நல்லற வேந்தனை மனித தெய்வமாகப் போற்றுவதிலும், அறம் தழுவா அரசன் அழிவான் என்று எச்சரிப்பதிலும், இயற்கை தெய்வங்களின் வழி மனிதநேயம் வளர்ந்த தன்மையும், செங்கோல், வேதம், தவம், கற்பு, வான் சிறப்பு இவை இறைமையின் உறுப்புகளே என்றும், அவை ஒன்றையொன்று சார்ந்தவை என்றும், முழுமையான மனித நேயத் தத்துவத்தை வழங்குவது சங்கத் தமிழ் நல்லுரை என்றும் தெரிய வருகிறது.

இவ்வாறு சங்ககாலத்திற்குப் பிறகு தோன்றிய பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் நீதி இலக்கியங்களில் மனித நேயம், அக இலக்கியங்களில் மனிதநேயம், ஐம்பெருங்காப்பியங்களில் மனித நேயம், கம்பராமாயணத்தில் மனித நேயம், இடைக்காலத்தில் தோன்றிய இலக்கியங்களுள் பக்தி இலக்கியங்களில் மனித நேயம், சிற்றிலக்கியங்களில் மனித நேயம் போன்ற பல்வேறு தலைப்புகளில் ஆய்ந்து அவற்றுள் பொதிந்து கிடக்கும் மனித நேயக் கருத்துகளை தமிழ்கூறும் நல்லுலகத்திற்கு அளித்தல் இனிவரும் ஆய்வாளர்களின் தலையாய கடனாகும்.

மேலும் தற்கால இலக்கியங்களுள் சிறுகதைகளில் மனிதநேயம், புதினங்களில் மனிதநேயம், நாடகங்களில் மனிதநேயம், கவிதைகளில் மனிதநேயம்,

பத்திரிகைகளில் மனிதநேயம், மனிதநேயத்தின் இன்றியமையாமை, காலந்தோறும் மனிதநேயத்தில் ஏற்பட்டு வரும் மாற்றங்கள், பொது மக்களிடத்து நிலவும் மனிதநேயம் முதலான தலைப்புகளில் ஆய்வு செய்ய இன்னும் வாய்ப்புகள் உள்ளன.

# துணைநூற் பட்டியல்

## முதன்மை நூல்கள்:

1. அகநானூறு - சோமசுந்தரனார் விளக்கவுரை, கழக வெளியீடு, சென்னை, 1970.

2. ஐங்குறுநூறு - திரு.ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள், அண்ணாமலைப் பல்கலைக் கழகம், சி.எம்.வி.பிரஸ், மதுரை, 1957.

3. கலித்தொகை - வெளியிடுவோர், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், இரண்டாம் பதிப்பு, 1981.

4. குறிஞ்சிப்பாட்டு - பத்துப்பாட்டு வரிசை - 8, பெருமழைப் புலவர், திரு.பொ.வே. சோமசுந்தரனார் அவர்கள், கழக வெளியீடு, மறுபதிப்பு: அக்டோபர், 1978.

5. குறுந்தொகை - பதிப்பாசிரியர், பேராசிரியர் மு. சண்முகம் பிள்ளை, தமிழ்ப் பல்கலைக் கழக வெளியீடு, முதற்பதிப்பு: செப்டம்பர், 1985.

6. சிறுபாணாற்றுப்படை - பத்துப்பாட்டு வரிசை - 3, பெருமழைப் புலவர், திரு.பொ.வே. சோமசுந்தரனார் அவர்கள், கழக வெளியீடு, மறுபதிப்பு: ஆகஸ்டு, 1972.

7. திருமுருகாற்றுப்படை - பத்துப்பாட்டு வரிசை - 1, பெருமழைப் புலவர், திரு.பொ.வே. சோமசுந்தரனார் அவர்கள், கழக வெளியீடு, மறுபதிப்பு: ஜூலை, 1969.

8. நற்றிணை - பதிப்பாசிரியர், வித்துவான் H. வேங்கடராமன், வெளியீடு எண், 103, மாருதி பிரஸ், சென்னை-14, முதற்பதிப்பு: 1989.

9. நெடுநல்வாடை - பத்துப்பாட்டு வரிசை - 7, பெருமழைப் புலவர், திரு.பொ.வே. சோமசுந்தரனார் அவர்கள், கழக வெளியீடு, மறுபதிப்பு: ஜூன், 1975.

10. பட்டினப்பாலை - பத்துப்பாட்டு வரிசை - 9, பெருமழைப் புலவர், திரு.பொ.வே. சோமசுந்தரனார் அவர்கள், கழக வெளியீடு, மறுபதிப்பு: ஜூன், 1975.

11. பதிற்றுப்பத்து - திரு.ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை அவர்கள், கழக வெளியீடு, மறுபதிப்பு: ஏப்ரல், 1968.

12. பரிபாடல் - பெருமழைப் புலவர், திரு.பொ.வே. சோமசுந்தரனார், கழக வெளியீடு, மறுபதிப்பு: ஏப்ரல், 1969.

13. புறநானூறு - தொகுப்பாசிரியர், டாக்டர் உ.வே. சாமிநாதையரவர்கள், தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், ஆறாம் பதிப்பு: 1963.

14. பெரும்பாணாற்றுப்படை - பத்துப்பாட்டு வரிசை - 4, பெருமழைப் புலவர், திரு.பொ.வே. சோமசுந்தரனார் அவர்கள், கழக வெளியீடு, மறுபதிப்பு: நவம்பர், 1967.

15. பொருநராற்றுப்படை - பத்துப்பாட்டு வரிசை - 2, பெருமழைப் புலவர், திரு.பொ.வே. சோமசுந்தரனார் அவர்கள், கழக வெளியீடு, மறுபதிப்பு: பிப்ரவரி, 1970.

16. மதுரைக் காஞ்சி - பத்துப்பாட்டு வரிசை - 6, பெருமழைப் புலவர், திரு.பொ.வே. சோமசுந்தரனார் அவர்கள், கழக வெளியீடு, மறுபதிப்பு: பிப்ரவரி, 1977.

17. மலைபடுகடாம் - பத்துப்பாட்டு வரிசை - 10, பெருமழைப் புலவர், திரு.பொ.வே. சோமசுந்தரனார் அவர்கள், கழக வெளியீடு, மறுபதிப்பு: திசம்பர், 1976.

18. முல்லைப்பாட்டு - பத்துப்பாட்டு வரிசை - 5, பெருமழைப்புலவர் திரு.பொ.வே. சோமசுந்தரனார் அவர்கள், கழக வெளியீடு, மறுபதிப்பு: சனவரி, 1970.


### துணைநூல்கள்


19. ஆத்திசூடி - ஔவையார், கழக வெளியீடு, மறுபதிப்பு: மே, 1982.

20. ஆங்கிலத் தமிழ் கையகராதி - கா. அப்பாதுரை, சென்னைப் பல்கலைக் கழகம், மறுபதிப்பு: ஜூன், 1974.

21. குறளும் கீதையும் - கெம்பு ஆறுமுகம், மல்லிகை பதிப்பகம், முதற்பதிப்பு: ஏப்ரல், 1969.

22. கொன்றைவேந்தன் - ஔவையார், கழக வெளியீடு, மறுபதிப்பு: மே, 1985.

23. சிலப்பதிகாரம் - சோமசுந்தரனார் விளக்கவுரை, கழக வெளியீடு, சென்னை, மறுபதிப்பு: 1972.

24. சீவக சிந்தாமணி - முதல் பாகம் - பெருமழைப்புவர், திரு.பொ.வே. சோமசுந்தரனார் அவர்கள், கழக வெளியீடு, மறுபதிப்பு: அக்டோபர், 1967.

25. சீவக சிந்தாமணி - இரண்டாம் பாகம், பெருமழைப் புலவர், திரு.பொ.வே. சோமசுந்தரனார் அவர்கள், கழக வெளியீடு, 1968.

26. தமிழ் ஆங்கில அகராதி - ஏ. சிதம்பரநாத செட்டியார், சென்னைப் பல்கலைக் கழகம், இரத்னம் பிரஸ், சென்னை-1, 1965.

27. தமிழ் இலக்கிய வரலாறு - எம்.ஆர். அடைக்கலசாமி, கழக வெளியீடு, அப்பர் அச்சகம், சென்னை-1, மறுபதிப்பு: ஆகஸ்ட், 1978.

28. தமிழ்நிலவு - டாக்டர் க.த. திருநாவுக்கரசு, மணியக வெளியீடு, நற்செய்தி அச்சகம், சென்னை-60, முதற்பதிப்பு: அக்டோபர், 1981.

29. தனிப்பாடல் திரட்டு - பு.அ. மாணிக்கம், முதற்பகுதி, பூம்புகார் பிரசுரம் பிரஸ், இரண்டாம் பதிப்பு: ஏப்ரல், 1984.

30. திருக்குறள் - பரிமேலழகர் உரை, கழக வெளியீடு, மறுபதிப்பு: ஆகஸ்ட், 1979.

31. திருமந்திரம் - திருமூலநாயனார், பழனியப்பா பிரதர்ஸ், இரண்டாம் பதிப்பு: 1993.

32. தேவாரம் - திருநாவுக்கரசு சுவாமிகள், (திருமுறை 4,5,6) சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், திருந்திய முதற்பதிப்பு: பிப்ரவரி, 1988.

33. தொல்காப்பியம் - பொருளதிகாரம் (அகத்திணையியல், புறத்திணையியல்) நச்சினார்க்கினியர் உரை, பதிப்பாசிரியர், டாக்டர். கு. சுந்தரமூர்த்தி, அண்ணாமலைப் பல்கலைக் கழகம், திருப்பனந்தாள் அறக்கட்டளை வெளியீடு, முதற்பதிப்பு: 1986.

34. தொல்காப்பியம் - பொருளதிகாரம் (தொகுதி 2) களவியல் - கற்பியல் - பொருளியல், நச்சினார்க்கினியர் உரை, பதிப்பாசிரியர், டாக்டர் கு. சுந்தரமூர்த்தி, அண்ணாமலைப் பல்கலைக் கழகம், திருப்பனந்தாள் காசித் திருமட நிதிய வெளியீடு, முதற்பதிப்பு: 1986.



35. தொல்காப்பியம் - பொருளதிகாரம், பிற்பகுதி, (மெய்ப்பாட்டியல் - உவமவியல் - செய்யுளியல் - மரபியல்) பேராசிரியர் உரை, பதிப்பாசிரியர், டாக்டர் கு. சுந்தரமூர்த்தி, அண்ணாமலைப் பல்கலைக் கழகம், திருப்பனந்தாள் அறக்கட்டளை வெளியீடு, முதற்பதிப்பு: 1985.

36. நாலடியார் - சமண முனிவர்கள், பாரி நிலையம், சென்னை, மூன்றாம் பதிப்பு: டிசம்பர். 1986

37. பகவத் கீதை - கோவிந்பவன் கரியாலா, கீத்தா அச்சகம், கோரக்பூர், கையடக்கப் பதிப்பு, 29-வது பதிப்பு: 1992.

38. பண்டைத் தமிழர் வாழ்வும் வழிபாடும் - டாக்டர் க. கைலாசபதி, பாரி நிலையம், சென்னை, முதற்பதிப்பு: டிசம்பர், 1966.

39. பாரதியார் கவிதைகள் - வானவில் பதிப்பாசிரியர் குழு, வானவில் பிரசுரம், மறுபதிப்பு: 1986.

40. மணற்கேணி - டாக்டர் நா. செயப்பிரகாசு, மூவேந்தர் அச்சகம், சென்னை-14, முதற்பதிப்பு: 15.4.94.

## ஆங்கில நூல்கள்

41. Encyclopaedia Americana - Volume 14, Americana Corporation, International Head Quarters, 575, Lexington Avenue, New York, First Published in 1829.

42. The concept of man in Tagore - Augustae T.Dhanthae

43. The Rhetorical world of Augustae Humanism - Paul Fussell.



# சங்க இலக்கியங்களில் மனிதநேயம்

முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காகச்
சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பெற்ற ஆய்வேடு

ஆர். சுப்புலட்சுமி எம்.ஏ., எம்.ஃபில்.,
ஆய்வாளர்

தமிழ்த் துறை,
அண்ணா ஆதர்சு மகளிர் கல்லூரி,
சென்னை - 600 040.




ஏப்ரல், 1995

# நிறைவுரை

இலக்கியமின்றி வாழ்வு இல்லை என்றும், வாழ்வை அடித்தளமாகக் கொள்ளாமல் இலக்கியம் இல்லை என்றும் கூறுவது முற்றிலும் பொருத்தமானதொரு கூற்றாகும். ஊடும், பாவும் போல் வாழ்வும் , இலக்கியமும் பின்னிப் பிணைந்திருக்கிறது. வாழ்க்கையில் மக்கள் அற்பமான செயல்களில் ஆழ்ந்து அதிலேயே உழன்று கொண்டிருக்கிறார்கள். மனிதப்பண்பை மனிதனுக்குச் சொல்லி மனிதனை மனிதனாக்கும் இலக்கியமே இலக்கியம். மக்களின் வாழ்க்கையிலே தியாகம், உழைப்பு, நல்லெண்ணம், பிறருக்குத் தீங்கு செய்யாமை முதலிய நல்ல குணச் சித்திரங்கள் இருக்கின்றன. இத்தகைய நல்வாழ்க்கைக்குரிய இலக்கியங்களாக சங்க இலக்கியங்கள் திகழ்வதைக் காணலாம்.

பத்துப் பாட்டும், எட்டுத் தொகையும் நல்வாழ்க்கைக்குரிய இலக்கணங்களைத் தருவதாலும், ஆர்வத்தோடு இவ்விலக்கியங்களைப் பயின்றதாலும், 'சங்க இலக்கியங்களில் மனித நேயம்' என்பது ஆய்வுக்குரிய தலைப்பாக எடுத்துக் கொள்ளப்பட்டது. நிலையான உணர்ச்சிகளை அடிநாதமாகக் கொண்ட சங்க இலக்கியங்கள் மனித சமுதாயம் உள்ளளவும் நீடிக்கும் என்பதற்கோர் ஐயமில்லை. உணவு அருந்தாமல் மனிதன் எப்படி வாழ முடியாதோ அதேபோல, இலக்கியமின்றியும் மனிதன் வாழ முடியாது. இலக்கியச் சுவைக்கு மனநிறைவு தந்தாலும், உள்ளத்தைப் பண்படுத்தி, மனிதனை உயர்த்தவே இலக்கியம் வேண்டற்பாலது.

மனித தத்துவத்திற்கு நாம் பல சொற்களைக் கையாளுகிறோம். மனிதாபிமானம் என்றும், மானுடம் என்றும் இப்போது மனிதம், மனிதநேயம் என்றும் சொல்லி ஏதோ ஒன்றைச் சுட்டிக் காட்ட விரும்புகிறோம். இப்போது மனித நேயம் என்ற சொல்லே சிறப்பானதாகத் தோன்றுகிறது. இத்தலைப்பை மேமெலழுந்த வாரியாகப் பார்த்தால் மனிதனுக்குத் தானே இலக்கியம். அப்படியென்றால் இலக்கியத்தில் மனிதனைப் பற்றி இல்லாமல் வேறு எதைப்பற்றி இருக்கும் என்று தோன்றும். ஆனால் அதை இன்னும் ஆழமாகப் பார்த்தால் புலப்படாத பல செய்திகள் புலப்படும்.

வயிற்றுப் பசியின் போது நல்ல சத்துள்ள உணவை உட்கொண்டால், அது உடலை வலுவாக்கும். அது போலவே இலக்கியப் பசி உள்ளவர்களுக்கு சத்துள்ள உணவு, இலக்கியத்தில் மனித நேயமாகும். நெல்லுக்குள் அரிசி என்பது பொதுவான உண்மை. அரிசியில்லாத நெல்லைப் பதர் என்கிறோம். இலக்கியத்திலும் மனித

நேயம் இல்லாத பாடல்களும் உண்டு. நெல்லில் உள்ள பதர்களை நீக்கக் கற்றுக் கொண்டுள்ள நாம் இலக்கியத்திலும், மனித நேயம் இல்லாத பாடல்களை ஒதுக்கி வைக்கக் கற்றுக்கொள்ள வேண்டும். சங்க இலக்கியங்களில் உள்ள மனிதநேயம் மட்டும் இவ்வாய்வேட்டில் விளக்கப்பட்டுள்ளது.

மனித நேயம் - ஒரு விளக்கம் என்பது இவ்வாய்வின் முதல் இயலாகும். நாம் மனித நேயம் மனித நேயம் என்று சொல்லும் போது அது வெறும் மனிதாபிமானம் மட்டுமல்ல. அதாவது வேறொரு மனிதனுக்காக நாம் காட்டுகின்ற கருணை உள்ளமாகும். அனுதாபம் என்று மனிதனுக்குக் காட்டுகின்ற அபிமானத்தை நாம் மனிதநேயம் என்று சொல்லவில்லை.

மனிதனுடைய எல்லையில்லாத, எல்லையின் அளவைக் கோடிட்டுக் காட்ட இயலாத முழுமையான ஆற்றலையும், அதாவது மனித அறிவாற்றலும், ஆன்மீகச் செல்வமும் இதுவரை திரட்டப்பட்டிருக்கின்ற, இனிமேல் திரட்டப் போகின்ற எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு, அவற்றுடன் மனிதனின் பண்புகளும், முழுமையான ஆற்றலும் சேர்ந்தது தான் மனித நேயம் என்பது புலப்படுகிறது.

மாட்சிமை மிக்க மனிதப் பண்புகள், ஆற்றல்கள் அனைத்தும் நமக்கு உண்டு என்பதை இலக்கியங்கள் நினைவூட்டுகின்றன. அது மட்டுமல்லாமல் அந்தப் பண்புகளை நாம் வளர்த்துக் கொள்ள அவை சிறந்த கருவியாகப் பயன்படுகின்றன. மனிதனைக் குறிப்பிடும் போது ஆறறிவு படைத்தவன் ஆதலால் அவனை உயர்ந்தவன் என்கிறார்கள்.

ஒரு மனிதனுக்குத் தன் தாயையே வெறுக்கக் கூடிய சுதந்திரமிருந்தும் அவன் தாயை நேசிக்கிறான் என்பது தான் மனிதப் பண்பின் சிறப்பாகும். எனக்குப் பிற உயிர்களுக்குத் தீங்கு செய்யக் கூடிய திறனிருந்தும், சுதந்திரமிருந்தும், அறிவு இருந்தும் பிறர்க்குத் தீங்கு செய்யமாட்டேன் என்று சொல்லும்போது தான் அந்த மனிதநேயப்பண்பு, அந்த நன்றியுணர்வு, அந்த அன்பு உண்மையான மனிதப் பண்பாகிறது. குற்றம் செய்ய முடியும் என்பவன் குற்றம் செய்யாமல் இருப்பதுதான் அந்தச் சிறப்பு. ஆகவே மனிதனைப் பொறுத்த வரையில் அவனே அவனுக்கு ஒரு பெரிய வழிகாட்டி என்ற உண்மையை உணர்த்துகிறது.

'அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது' என்று கூறிய ஔவைப் பாட்டியின் மரபிலே வந்தவன் பாரதி. இவன் 'கம்பன் என்ற ஒரு மானுடன்' என்று அழைக்கிறான். மானுடன் என்ற புகழைவிடப் பெரும் புகழ் வேறில்லை என்று எண்ணுகிறான்

பாரதி. மானுடம் என்று குறிப்பிடும்பொழுது உயர்ந்த மனிதன், பண்பட்ட மனிதன், மானுடம் கைவந்த மனிதன், வாழ்வாங்கு வாழும் மனிதன், அமரநிலை எய்தும் மனிதன் பற்றியே குறிப்பிடுகிறான். இந்த மானுடத்தில் அடங்கிய மனிதநேயம் என்பது எவ்வளவு ஆழமான, விரிவான கருத்தடங்கிய ஒரு சொல் என்பதை நாம் அறியமுடிகிறது.

மனித வாழ்விற்கு அடிப்படையாக அமைந்து மனிதனை இயக்கிக் கொண்டிருப்பது மனமாகும். மனத்தை மனிதன் பெற்றிருப்பதாலேயே அவனால் மன்னுதலாகிய நிலைபேறுடைய செயல்களைச் செய்ய முடிகின்றது. ஏனைய உயிரினங்களைக் காட்டிலும் உயர்ந்து நிற்க முடிகிறது. எனவேதான் தொல்காப்பியரும் 'ஆறறி வதுவே அவற்றொடு மனனே' என மனத்திற்குச் சிறப்பளித்துச் செல்கின்றார். உலகில் தோன்றும் உயிரினங்களில் மேன்மையடையும் தகுதி மனித உயிர்க்கு மட்டுமே உண்டு. அதனை அவன் மனத்தின் மாண்பினாலேயே பெறுகிறான் என்பது தெரிகிறது.

மனிதனின் தோற்றம் ஏதேனும் ஒன்றிலிருந்தே தோன்றியிருத்தல் வேண்டும் என்றும், அருளறம் சிறந்து விளங்குவதற்குக் காரணமாக இருப்பது மனிதப் பிறவி என்றும், மனிதப் பிறவி விழுமியது என்பது போன்ற கருத்துகளை அறிய முடிகிறது. உயிர்களின் கூட்டம் ஆறு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளதைத் தொல்காப்பியத்தின் மூலம் அறிகிறோம். மனிதம் என்ற சொல் விளக்கமும், அகராதிகள் கூறுகின்ற பல்வகை விளக்கமும், மனிதப் பண்புகளையும், மனித உரிமைகளையும் போற்றிக் காக்கின்ற ஒருநெறி என்று சான்றோர்கள் கூறும் விளக்கம் கூறப்பட்டுள்ளதைப் போல, மனித நேயம் என்பதற்கு இன்றும் பலர் பல்வேறு வகையான விளக்கங்களைக் கொடுத்துள்ளனர்.

தியாகம், அன்பின் ஒற்றுமை, உயிர்களைச் சார்ந்திருத்தல், மனத்தூய்மை, பொறுமை, வாய்மை, ஆன்மசக்தி, அடக்கம், தீங்கு செய்யாமை, மெய்வழி நிற்றல் முதலான மனித நேயப் பண்புகள் மக்கள் மனத்தைப் பல வழியிலும் பண்படுத்தும் என்பதையும், மார்க்கண்டேயர், அரிச்சந்திரன், காந்தியடிகள், சீதை, மணிமேகலை போன்ற சத்தியாக்கிரகிகள் இல்லையேல் உலகில் அன்பும், அறமும் நிலைத்து நிற்காது என்பதையும், தன்னைப் போல பிறரைக் கருதுதலே மனிதனின் இயல்பு என்பதையும் அறிந்து கொள்ள முடிகிறது. மனிதன் பிறர் நலம் கருதும் அருளாளனாய் வாழ்தல் வேண்டும் என்னும் உண்மையைச் சங்க இலக்கியங்கள் நமக்கு அறிவுறுத்துகின்றன.

இவ்வாய்வின் இரண்டாவது இயல் வாழ்வியற் கூறுகளில் மனித நேயம் என்பதாகும். அக்காலத்தில் அகப் பொருள் மரபுப் படி இயற்பெயரைக் கூறாத பண்பு, இன்றும் சில கிராமங்களில் பெண்கள் தங்கள் கணவரின் பெயரைக் கூறாத மரபு இருப்பதைக் காணலாம். இக்கட்டுப்பாட்டினை விதித்து அக இலக்கியத்தைத் தனிப்பட்ட ஒருவருக்கு உரிமையாக்காமல் பொதுநிலையில் அக இலக்கியங்களைப் படைத்திருக்கும் தமிழர் தம் எல்லார்க்கும் எல்லாம் என்னும் பொதுவுடைமைப் பண்பு நெடுநல்வாடையில் போற்றப்பட்டுள்ளது. இன்று பெண்களின் முன்னேற்றம் பல்வேறு துறையிலும் சிறந்து நிற்றலைப் போல அக்காலத்திலும் பெண்கள் போர்க்களம் புகுந்து சுதந்திர வாழ்வு நடத்திய பான்மையினை முல்லைப் பாட்டால் அறிய முடிகிறது.

அக்காலத்தில் தலைவன், தலைவியரிடையே நிகழும் களவு வாழ்க்கையைத் தோழி அறிந்து கொண்டு தன்னுடைய சொல்வன்மை, அறிவாற்றலைப் பயன்படுத்தி அறத்தொடு நின்று இருபக்கமும் தவறு நேராதபடி செவிலித்தாயிடம் எடுத்துக்கூறித் திருமணத்தை நல்ல முறையில் நிகழ்த்திய தன்மையை அறத்தொடு நிற்றல் துறையில் அமைந்த பாடல்கள் கொண்டு அறியலாம். ஆனால் இன்று காதல் வாழ்வு பெரும்பாலும் முரண்பாடு நிறைந்த வகையில் நடந்து வருவதைக் காணலாம். காதல் என்பது வாழ்வு முழுவதும் பரவி இருக்கக் கூடிய, இருக்க வேண்டிய மனநிலை என்ற சங்ககாலக் கருத்து இக்காலத்திற்கும் பொருந்தியிருப்பதைக் காணலாம்.

சங்க காலத்தில் பொருள், வாழ்விற்குத் தேவை என்றாலும் கூடப் பொருளைக் காட்டிலும் அருளே போற்றப்பட்டது. ஆனால் இன்று அருட்பண்பு மக்களிடையே குறைந்திருப்பதையும், பொருளே வாழ்க்கையின் அறிகுறியாகவும் பயன்படுத்துவதைக் காண்கின்றோம். இதனால் மக்களிடையே மனித நேயப் பண்பு குறைந்திருப்பதைக் காண முடிகிறது. அன்பே உயிர் வாழ்க்கைக்கு அடிப்படை என்றும், அவ்வன்பின் முதிர்ந்த நிலையே அருள் என்றும், அருள் இல்லார்க்கு வாழ்வு இல்லை என்றும், பொருளினும் அருளே பல்லாற்றானும் மேம்பாடு உடையது என்றும், அவ்வருட் பண்பினை அடைய முயல வேண்டும் என்றும் நாம் இலக்கியங்கள் வழி அறிகின்றோம்.

இரண்டு உள்ளங்கள் ஒருமைப்படுவதற்குக் கருவியாய் விளங்குவது அன்பு என்ற மனிதநேயப் பண்பே எனலாம். இல்வாழ்க்கையின் அடிப்படை அன்பாகும். முடிவு அறமாகும். அன்பே இல்வாழ்கையின் தனிப்பயன் என்ற கருத்தை சங்க அக இலக்கியங்கள் நமக்கு உணர்த்துகின்றன. உண்மை அன்பினால் வன்மை மிக்க

ஆடவரையும், மென்மை மிக்க மகளிர் பிணித்து விட்டனர் என்ற பண்பை குறுந்தொகை விளக்குகிறது. இதே பண்பு இக்காலத்து மகளிரிடம் இருப்பதையும் காண்கிறோம்.

மகிழ்ச்சி, அன்பு, இரக்கம் போன்றவை மிகச் சிறந்த நடத்தையைத் தோற்றுவிக்கின்றன. சினம், வெறுப்பு, பொறாமை போன்றவை இழிவான நடத்தையை உருவாக்குகின்றன என்பது அன்றாட மனித வாழ்விலும் நிகழ்வதைக் காண முடிகிறது. சங்க காலத்தில் பொருள் ஈட்டுதற்கோ, வேறு அலுவல் காரணமாகவோ தலைவன், தலைவியைப் பிரிந்து செல்வதுபோல, இக்காலத்திலும் சில ஆடவர்கள் தம் மனைவியைப் பிரிந்து வெளி நாட்டிற்குச் சென்று மிகுதியான பொருளீட்டி வருவதைக் காண்கிறோம். பிரிவால் ஆற்றியிருக்கும் பண்பு அக்கால மகளிரைப் போல இக்கால மகளிரிடத்தும் காணப்படுகிறது.

இன்பத்திற்கு இடையூறு நேராவண்ணம் பிற உயிர்களின் துன்பம் நீக்கி அருள் செய்து இரக்கம் காட்டும் மனிதநேயப் பண்பினை, வாழ்வியல் நெறியாகப் பண்டைத் தமிழர் மேற்கொண்டனர். தினைப்புனத்தில் கிளி கடிந்த அவர்களே மனையகத்தில் கிளி, மைனா, முதலான பறவைகள் மீது பரிவுகாட்டி வளர்த்தனர். இன்றும் சில இல்லங்களில் பொழுது போக்கிற்காக பறவைகள் வளர்க்கும் செயலைப் பார்க்கிறோம்.

சங்க காலத்தில் மனையுறை மகளிர் உயிரென விளங்கிய தம் கணவரைப் பேணியும், தம் திண்ணிய கற்பினைக் காத்தும், மக்களை மாண்புற வளர்த்தும், விருந்தினரை ஓம்பியும், இடும்பை எனக் கருதாது குடும்பச் சுற்றத்தாரைத் தழுவியும், கடவுளை வணங்கியும், கவின்கலை வளர்த்தும், வாழ்க்கையில் துன்பம் துடைத்து இன்பம் பெருக்கியதை சங்க அக இலக்கியங்கள் உணர்த்துகின்றன. இக்கால மகளிர் இன்று பெரும்பாலும் வேலைக்குச் செல்வதால் இப்பண்புகளில் சிறிது குறைந்து நிற்றலைக் காண்கிறோம். அக்காலத்தில் தம் குழந்தைகளுக்கு இனிய முறையில் அவர்களுடைய மனநிலைக்கு ஏற்பத் தாய்மார்கள் இனிமையாகப் பேசி உண்ணச் செய்வர். அப்பழக்கத்தை இன்றைய தாய்மார்களிடத்தும் காணலாம்.

மகளைப் பிரிந்து பெருந்துன்பம் அடைந்த தாய்மார்களைப் போல இன்றும் சில தாய்மார்களின் மனம் வருந்தும் நிலையைப் பார்க்கிறோம். பண்டைத் தமிழ்ச் சமுதாயத்தில் பரத்தை ஒழுக்கம் ஒருவகைக் குடும்ப ஒழுக்கம் போலப் பரவிக் கிடந்தது. மனைவி பரத்தமையை வெறுத்தாலும் அவளிடம் சென்று வந்த தலைவனை வெறுத்து ஒதுக்கவிலலை. இக்காலத்தில் இத்தகைய ஒழுக்கம் சமுதாயத்தில்

இழிவாகக் கருதப்படுகிறது. கணவனைத் தெய்வமாகப் பேணும் மனித நேயப்பண்பு அக்காலத்தில் இருப்பதைப் போல இன்று இப்பண்பு சற்றுக் குறைந்திருத்தலைக் காண்கிறோம்.

தம் வாழ்வியல் அறங்களுள் இன்றியமையாத ஒன்றாகவும், கணவன், மனைவியின் ஊடல் தீர்க்கும் வாயிலாகவும் அக்காலத்தில் விருந்தோம்பல் பண்பு போற்றப்பட்டது.தெரிந்தவர், தெரியாதவர், அறிந்தவர், அறியாதவர் என்ற பாகுபாடில்லாமல், தம்மை நாடி வந்தவர் அனைவரையும் இன்முகத்துடன் வரவேற்று விருந்து போற்றி உபசரித்த நிலையைச் சங்கப் பாடல்கள் சிறப்பித்துக் கூறுகின்றன. இரவிலே தெருக்கதவைத் தாளிட முற்படும்முன், யாரேனும் விருந்தினர் வந்துள்ளனரா என்று பார்த்துக் கதவடைக்கும் பழக்கம் பண்டை நாளில் இருந்தது.

கணவனும், மனைவியும் கருத்தொருமித்து இல்லறம் நடத்தினர். அதனால் பெண்டிர் 'மனைக்கு விளக்கு' என்று குறிப்பிடப் பெற்றனர். இணைந்து வாழ்வதே இல்லறத்தில் ஒப்பற்ற பண்பாக இக்காலத்திலும் திகழ்வதைக் காணலாம். சங்க காலத்தில் தலைவியின் காதல் வெளிப்பட்ட பின்னர், பெற்றோர்கள் தம் குடும்பத்தின் பெருமை குன்றிவிடுமோ என்று இற்செறிக்கும் நிலையைப் போல் இக்காலப் பெற்றோர்களிடத்தும் நாம் காண்கிறோம். கற்பின் திண்மை மனைவாழ்வின் இன்பத்திற்கு அடிப்படையாய் இருப்பதைப் போல இன்றும் வாழ்வியலில் இப்பண்பு போற்றப்பட்டு வருகிறது.

பண்டைத் தமிழர் பிறர்மனம் புண்படாது நடந்துகொள்ள வேண்டும் என்ற உயர்ந்த பண்பையும், நட்பு தோய்ந்த உள்ளத்தின் மாண்பையும், நன்கு அறிந்தவர்கள் என்பதை சங்க நூல்கள் வாயிலாகத் தெரிய வருகின்றன. இல்வாழ்க்கைக்குத் தேவையான பொருளை அறத்தின் வழியே ஈட்டுதல் வேண்டும் என்றும், முன்னோர் ஈட்டிய செல்வத்தில் வசதியாக வாழ்ந்தாலும், முயற்சியின்றி சோம்பியிருந்தாலும் அறமன்று என்றும், தீயவழியில் வரும் செல்வம் ஒவ்வாது அழியும் என்றும், வாழ்க்கையில் அறம்பல புரிவதற்கும், பிறர் கடைவாயிலில் சென்று நிற்காத நிலைமைக்கும் பொருள் இன்றியமையாதது என்றும், இன்னும் இவை போன்ற தன்னலமற்ற தூய்மைப் பண்பை நன்கு உணர்ந்தவர்கள் அக்காலத் தமிழர். இன்று இச்செயல்கள் எல்லாம் நேர்மாறாக தம் வாழ்க்கையில் நடந்து கொள்வதைக் கண்கூடாகப் பார்க்கிறோம். வாழ்வியற் கூறுகளில் மனிதநேயம் குறைந்திருப்பதே இதற்குக் காரணமாகும்.

ஒரு பெண் திருமணம் செய்து கணவன் வீட்டிற்கு வந்த போது வறுமையாக இருந்த குடும்பம், இப்பெண் அடியெடுத்து வைத்தபின் விழாக்கள் ஓயாது நடக்கும் இல்லமாகப் பொலிந்தது என்று சங்கப் புலவர் மங்கல மனை மாண்பினைப் போற்றிக் கூறியிருப்பதுபோல, இன்றும் பெரும்பாலோர் குடும்பத்திலும் நல்லது, கெட்டது நடந்தால், எல்லாம் இப்பெண் வந்த வேளைதான் என்று கூறுகின்ற வழக்கமிருப்பதைக் காண்கிறோம். அக்காலத் திருமணத்தில் சிலம்பு கழித்தல் என்ற சடங்கு நடைபெற்றதாகத் தெரிகிறது.

ஏறுதழுவுதல் என்ற வழக்கம் அன்று இருந்தது போல இன்றும் பொங்கல் விழாவின்போது மதுரைக்கு அருகே உள்ள அலங்கா நல்லூரில் நடைபெற்றுவருகிறது. இதனை 'மஞ்சு விரட்டு' என்று அழைப்பர். கிராமங்களில் சித்திரைத் திங்கள் முதல் நாளன்று மாட்டின் கொம்பிற்கு வண்ணம் தீட்டி 'நாள்ஏறு' என்ற பெயரில் ஏறு தழுவும் நிகழ்ச்சி நடைபெறுகிறது. அக்காலத்தில் ஏறுதழுவி வென்ற வீரனையே தலைவி மணப்பாள். இன்று இதில் மட்டும் சிறிது மாற்றம் ஏற்பட்டுள்ளது. தலைவியின் காதல் திருமணத்திற்கு அவன் பெற்றோர்கள் ஒப்புதல் அளிக்கா விட்டாலும், தலைவனின் பெற்றோர்கள் அவளை ஏற்றுத் தன் வீட்டில் மண நிகழ்ச்சியை நடத்தியமையைச் சங்கப்பாடல்கள் நமக்கு உணர்த்துகின்றன.

இல்வாழ்க்கை புகுந்த தலைவனும், தலைவியும் அன்பு, அறிவு, அருள், இரக்கம், என்ற மனிதநேயப் பண்புகளைப் பெற்றவர்களாக இருத்தல் வேண்டும். அவர்களின் உள்ளத்தில் அன்பு தவழ வேண்டும். அறிவு நிறைய வேண்டும். அருள் சுரக்கவேண்டும். இரக்கம் குழைய வேண்டும். இம் முறைகளில் அவர்களுடைய உள்ளம் அமையுமேயானால் பிறர் பழிப்பினுக்கு எட்டுணையும் இடமிராது. இதனை நோக்குங்கால் பழியற்ற பெரு நிலையே இல்லற வாழ்க்கையில் செழுமையான நிலை என்பதை உணர்கின்றோம்.

தமிழகப் பெண்களும், ஆண்களும், இளமைப் பருவத்தில் பெற்றோர்களால் பல்வகை நற்பழக்கங்களில் பயிற்றுவிக்கப் பெறுவர். சிலர் தாமே, பெற்றோரைப் பார்த்துக் கற்றுக் கொள்வர். எந்த அளவிற்குக் கற்றாலும் பெற்றோரைப் போன்றே இளமையில் ஒழுகுவோர் மிகமிகச் சிலரே. அச்சிலருடைய செயல்கள் இல்லறத்தின் இன்பக் காட்சிகளாக அமைவதைச் சங்க இலக்கியங்களில் காண்கிறோம்.

அக்காலத்தில் காக்கை கரைந்தால் விருந்தினர் வருவர் என்ற நம்பிக்கை இருந்ததைப் போல் இன்றும் இந்நம்பிக்கையை வாழ்வியலில் கடைப்பிடிக்கிறோம்.

சங்ககாலத்தில் காக்கைக்குப் பலியுணவை வைத்தார்கள். இன்று இந்நிலையில் சிறிது மாற்றம் ஏற்பட்டுப் பெரும்பாலும் அந்தணர்கள் தூய்மையாகச் சமைத்த உணவு இடுவதை வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர். மேலும் சனீஸ்வரனுக்குரிய வாகனமாகக் காக்கை திகழ்வதால், தனக்கு நன்மை கிட்டும் பொருட்டும் உணவு இடுகிறார்கள்.

இல்லற வாழ்க்கையில் இருவர் மூவராகும்போது இதுநாள் வரையிலும் இருவரிடையேயும் இருந்து ஆட்சிசெலுத்தி வந்த தன்னலப் பிடிப்பு அறவே அகன்று, இருவரின் எண்ணமும், செயலும், சற்று இளகிக் காணப்படுகின்றன. இளகிய நிலையிலே விளைவது தியாகம். இத்தியாகச் சிந்தை ஏற்பட, தேவை இயல்பாகவே குறைகின்றது. இன்றேல் குறைக்கப்படுகின்றது. தன் தேவையைக் குறைத்துப் பிறர் தேவையை நிறைசெய்கின்ற நிலை எய்துவது மனித வாழ்விலே மணம் பெற்றபோதும் கூட காணப்படுவதில்லை. மக்கட் பேற்றைப் பெறும் போது தான் உண்மையான உயர்ந்த நிறைவு பெற்ற மனித நிலையை ஒவ்வொருவரும் எய்துகின்றனர். குழந்தைப் பேறில்லாத மக்களை இன்றும் சமுதாயத்தில் பெரும்பாலும் ஒதுக்கி வைக்கின்ற நிலையினைப் பரவலாகப் பார்க்கின்றோம்.

மனிதத் தன்மையில்லாத கயமைப் பண்புடைய மக்களின் மனித நேயத்தைப் பற்றியும் சங்கப் பாடல்கள் பகர்கின்றன. மனிதர்கள் அற்பத்தன்மை இல்லாமல், அறிவற்ற தன்மை இல்லாமல், பெருந்தன்மையுடன் வாழ வேண்டும் என்பதையும், பண்டைத் தமிழர் புகழையும் விரும்பாத உயர்ந்த பண்பினர் என்பதையும் வற்புறுத்திக் கூறுகின்றன. ஒருவன் மற்றொருவனிடம் கடனாகப் பொருளைப் பெறும்போது அவனுடைய முகம் மலர்ச்சி அடைந்தும், அக்கடனைத் திருப்பிக் கொடுக்கும்போது அவன்முகம் மலர்ச்சியின்றி வேறுபட்டிருத்தல் முற்காலத்தும், இக்காலத்தும் இவ்வுலகத்தார் இயல்பு என்ற அரிய வாழ்வியல் மனிதநேயப் பண்பாட்டினைச் சங்கப் பாடல் வழி அறிந்து கொள்ள முடிகிறது. சங்கத் தமிழர் விலங்கினங்கள் அன்பைப் பார்த்து அதன்மூலம் மனித நேயத்தை உணர்ந்து தம் வாழ்க்கையில் மேற்கொணடு ஒழுகியமையைக் காண்கிறோம்.

இவ்வாறு பழந்தமிழரின் அன்பான இல்லற வாழ்க்கை, பண்பும், பயனும் சான்ற பண்பாட்டு வாழ்க்கையாக விளங்கியது. பெண்ணின் பெரும்பண்புகள், அவள் இல்லறக் கடமைகளை இனிதுற ஆற்றுகின்ற பொழுது திறனுடன் விளங்கின. பெண் இன்றேல் ஆணில்லை, ஆண் இன்றேல் பெண் இல்லை என்றபடி அவர்களின் அன்பான இல்லறம் தலைவியின் பொறுமைப் பண்பாலும், விருந்தோம்பல்

சிறப்பாலும் சிறப்புறத் தலைவனின் பொருள் தேடும் முயற்சியால் இல்லறம் இனிதுறப் பொலிந்தது என்பதனை நம் தமிழ் மொழியின் கண் எழுந்துள்ள சங்க இலக்கியங்கள் வகையுற எடுத்துக் மொழிகின்றன.

'அரசியல் கூறுகளில் மனிதநேயம்' என்பது இவ்வாய்வின் மூன்றாவது இயலாகும். அரசு என்ற அமைப்பை இயக்குபவரே அரசர். அவனுக்கு உதவியாக இருந்து வேண்டும் தக்க அறிவுரைகளைக் கூறுபவரே அமைச்சர். நாட்டில் தன் பணிகளை நிறைவேற்ற அரசனுக்கு உதவியாக இருப்பவரே அரசாங்க அலுவலர். இம்மூவரும் நாட்டையும், குடி மக்கள் நலன்களையும் பாதுகாப்பதில் கண்ணும், கருத்துமாய் இருந்து சங்ககால அரசியலை நடத்தி வந்தனர். ஆனால் இக்காலத்தில் அரசர், அமைச்சர் என்ற பாகுபாடில்லாமல் ஜனநாயக அரசியலை நடத்தி வருகின்றனர்.

பெரும்பாலான அரசர்கள் மனிதாபிமான உணர்வுடன் குடிமக்கள் நலன் ஒன்று கருதியே செயல்பட்டனர். அரசன் இல்லத்தை இறைவன் வீற்றிருக்கும் கோயிலாக அக்காலத்தில் மதிக்கப்பட்டமை தெரிகிறது. நாட்டின் நலனுக்காகச் சிறப்பாக உழைத்தவர்கட்கும், பட்டங்களும், பரிசுகளும் அளித்து மகிழ்ந்து வந்தனர். அமைச்சர்களின் உயர்வையும், ஒழுக்கத்தையும், மனிதத்தன்மையும் பொறுத்தே ஒரு நாட்டின் ஆட்சி அமைந்திருக்கும். அந்நாட்டின் நீதிமுறையும் நடைபெறும் என்ற உண்மையை நம்மால் அறிந்து கொள்ள முடிகிறது. பிறரால் பாராட்ட வாழ்வதும், மற்றவர்களைப் பாராட்டி வாழ்வதும் பண்புநலம் சான்ற சீரிய வாழ்க்கையாகும் என்பதை அக்கால அரசர்கள் உணர்ந்திருந்தனர்.

பசித்துன்பம் நாட்டில் தோன்றாதபடிக் காத்தல் அரசியலின் முதல் கடமையாக மேற்கொள்ளப்பட்டது. சங்கத் தமிழர் வாழ்வு கூட்டமைப்பு முறையினால் நாகரிக முறையில் நலம் பெற்று வளர்வதாயிற்று. உலகினை ஆளும் வேந்தனுக்குத் தேவை உண்பது, உடுப்பது என்ற இரண்டு மட்டுமல்லாமல், செல்வத்துப் பயன் பிறர்க்கு ஈந்து மகிழ்தலே, என்பதையும் வாழ்க்கையில் தாம் பெறும் பேரின்பமாகக் கருதினர். அதுபோல, தற்காலத்தில் உள்ள ஜனநாயக அரசாங்கமானது பல்வேறு ஐந்தாண்டுத் திட்டங்களை இயற்றி அதன் மூலம் நாட்டு மக்களுக்கு இன்றியமையாத உணவு, உடை, இருப்பிடம் அளித்திட பாடுபட்டு வருகிறது.

ஒவ்வொருவரும் அரசனைத் தத்தம் உயிரினும் மேலாகக் கருதினர். சமுதாயத்தில் தனக்கு ஏற்ற ஒரு தொழிலை மேற்கொண்டு வாழ முற்படுகின்ற ஒருவனுக்கு வசதிமிக்க நல்வாழ்வைக் கொடுக்க வேண்டியது மன்னனின் கடமை என்றும், நாட்டில் தொழில் புரிந்து வாழும் மனிதர்களுக்குத் தேவையான வாழ்க்கை வசதிகளை வகுத்துக் கொடுத்தல், பகை நாட்டவரால் உண்டாகும் அச்சத்தைப் போக்கி நல்வாழ்வு வாழச் செய்தல் அரசாங்கத்தின் கடமை என்றும் புறநானூற்றின் மூலம் தெரியவருகிறது.

அக்கால அரசர்கள் உயிர்க்கு நன்மை பயக்கும் அறச் செயல்களை மேற்கொண்டு ஒழுகினர். நேர்மையான வழியில் ஆட்சி செலுத்தி, நீதியால் விளையும் அறப்பயனை அடைந்தனர். இத்தகைய பண்புகள் படைத்தவனாய் அரசன் விளங்கியமையால் மக்கள் அரசனுடைய இன்றியமையாமையை உணர்ந்தனர். அரசர் 'யாம்' என்ற தலைவீக்கமும், குடிகள் 'பிறர்' என்ற இழிநோக்கமும் சங்க காலத்தில் தலை காட்டவில்லை. அரச உரிமை தலைமுறை, தலைமுறையாக வாரிசு உரிமைப்படி ஆட்சி புரிந்த தன்மையும், பொய் சொல்லாமை, இழி செயல் செய்யாமை, தன்னலம் கருதாமை போன்ற சான்றாண்மைப் பண்புகள் நிறைந்தவர்களாகவும் விளங்கினர் என்பது தெரிய வருகிறது.

ஊராட்சி நிலைகளில் தேர்ந்தெடுக்கப்படுவோர் இக்காலத்தில் குடிமக்களைக் கொண்டு தேர்ந்தெடுப்பது போல, பண்டைத் தமிழர் குடவோலைத் தேர்தல் மூலம் தேர்ந்தெடுக்கப்பட்ட செய்தியும், பெட்டியில் போட்ட ஓட்டுச் சீட்டுகளின் எண்ணிக்கையை வைத்து இப்போது தேர்ந்தெடுப்பதைப் போல, அக்காலத்தில் பெயர்களை ஓலையில் எழுதிக் குடத்திலிட்டு அதனைச் சிறுவர்களைக் கொண்டு எடுத்துத் தேர்வு செய்தார்கள் என்ற செய்தியும் அகநானூற்றுப் பாடல் மூலம் தெரிய வருகிறது.

இன்று கோடைக்காலத்தில் குடிநீர்ப் பற்றாக்குறை இருப்பது போல நீர்வளம் பற்றிய கவலை முற்காலத்தும் இருந்தது என்று அறிய முடிகிறது. அரசர்கள் புலவர்கள் சொற்படி கழனியாக்கத்திற்கு உதவும் நீர்நிலைகளைப் பயனுள்ள முறையில் பாதுகாத்துத் தம் குடிமக்களின் நலனைக் காக்கும் மனிதநேய மிகு உணர்வைக் கொண்டிருந்தனர். தற்காலத்திலும் தண்ணீர்ப் பற்றாக் குறையைப் போக்க ஆந்திராவில் உள்ள உபரித் தண்ணீரை தெலுங்கு கங்கை என்ற திட்டத்தின் மூலம்

சென்னைக்குக் கொண்டு வரத் திட்டங்கள் தீட்டி முடிவடையும் தறுவாயில் உள்ளது. இத்திட்டம் முடிவடைந்தவுடன் சென்னையில் தற்போது கோடைக் காலத்தில் ஏற்படும் தண்ணீர்த் தட்டுப்பாடு நீங்கும் என எதிர்பார்க்கலாம். மனித நேய உணர்வினால் தான் இத்திட்டம் நிறைவேறும் என்று கூறினால் அது மிகையாகாது.

அக்காலத்தில் வீணாகப் பாய்ந்தோடும் நீரை ஏரிகளில் தேக்கி வைத்துப் பாதுகாத்தது போல, தற்காலத்தில் நவீன திட்டங்களின் மூலம் அணைக்கட்டுகள் கட்டப்பட்டு நீரைத் தேக்கி வைத்து அதிலிருந்து மின்சாரத்தையும் உற்பத்தி செய்கிறார்கள். மேலும் இந்நீரை நீர்ப்பாசனத் திட்டத்திற்கும் பயன்படுத்தி கிராமங்களில் விவசாயத்தைப் பெருக்க வழிவகை செய்து வருகின்றனர்.

முற்காலத்தில் தவறு செய்த ஒருவனை ஊர் மன்றத்தினர் மரத்தில் கட்டி, அவன் தலையில் சுண்ணாம்பு நீற்றைப் பெய்து அவமானப்படுத்தியலிருந்து சிற்றூர்களில் கூட நல்லாட்சி நிலவிய தன்மையைப் போல, தற்காலத்தில் தவறு செய்கின்றவர்கள் நீதிமன்றங்கள் மூலம் தண்டனை பெறுகிறார்கள். இதனால் நாட்டில் ஒருமைப்பாட்டு உணர்வு பெருகி வருகின்றது. அன்று ஊர்க்காவலர், நகர்க்காவலர், தெருக்காவலர் இருந்து நாட்டை நல்ல முறையில் பாதுகாத்தது போல, தற்காலத்தில் இராணுவம், ஊர்க்காவல் படை, எல்லைப் பாதுகாப்புப் படை ஆகியவற்றைப் பயன்பத்தி நாட்டை நல்ல முறையில் காத்து வருகின்றனர். கைம்மை நோன்பின் துயரம் சங்ககாலத்தில் மிகுந்திருந்தது. இன்று விதவைகள் மறுவாழ்வுத் திட்டம் அமைத்து மனிதநேயத்தினால் அவர்களுடைய வாழ்க்கை மேன்மை அடைய வழி செய்கிறது.

இனத்துக்குள்ளே நடக்கும் போர் வெளியில் தெரிந்தால் வெட்கக் கேடு என்று உடன்பிறந்தார்க்கிடையே நடைபெற இருந்த போர் அக்காலத்தில் மனித நேய உணர்வினால் புலவர்களால் தடுக்கப்பட்டது. இக்காலத்தில் ஆங்காங்கே தலைதூக்கும் சில தீய சக்திகளால் ஏற்படும் சமுதாயப் போராட்டத்தைத் தடுப்பதற்குச் சில மனிதாபிமானிகள் முயன்றாலும் அப்போராட்டம் முற்றிலும் தடுக்கப்படவில்லை. இதற்குக் காரணம் சமுதாயத்தில் ஒற்றுமை குறைந்து வருவதே ஆகும்.

அறிவும், அறமும் ஓங்காதவாறு பெருந்தடை செய்யும் வயிற்றுக் கவலையைக் கொன்று ஒழிக்கப் பழந்தமிழகத்தில் உணர்வு மிக்க உரவோர் பலர் முயன்றுள்ளனர். குழந்தைகள் மீது அக்கால மன்னர்கள் கொண்ட மனிதநேயத்தைப் போல, தற்காலத்திலும் பள்ளிக் குழந்தைகளுக்காக இலவசச் சத்துணவுத் திட்டம் அமைத்து

அதன் மூலம் வயிற்றுக் கவலையைப் போக்குவதோடு மட்டுமல்லாமல், குழந்தைகள் கல்விகற்கும் ஆர்வத்தைத் தூண்டுவதாகவும் அமைகிறது. மனித நேயத்தின் அடிப்படையில் தான் இத்திட்டம் சிறந்த முறையில் நடைபெற்று வருகிறது என்பதில் ஐயமில்லை.

அவரவர் மனம் மகிழ ஆங்காங்கு சென்று அவரவரைப் புகழ்ந்து, பெறுவன பெற்றுக்கு கொண்டு வாழ விழையும் தன்னலப்பண்பு அக்காலச் சான்றோர்களிடம் எட்டுணையும் இல்லை. இக்காலத்தில் எல்லாத் துறையிலும் தன்னலப் பண்பே தலைவிரித்தாடுவதைக் காண்கிறோம். உயர்ந்த நோக்கம் கொண்டு விழுமிய வாழ்வு வாழ்ந்த சான்றோரை அக்கால அரசியல் உலகம் மதித்தது. அன்று போர் நடைபெறும் காலத்திலும் அறநெறி தவறாமல் போர் செய்தவர்களைப் புலவர்கள் தடுத்து நிறுத்திச் சமாதானத்தை உண்டாக்கியது போல, இன்றும் போர் நடைபெறாமல் இருக்க உலக நாடுகளிடையே சமாதானத்தை நிலை நாட்ட ஐக்கிய நாடுகள் சபை பெரிதும் பாடுபட்டு வருகிறது. மேலும் அக்காலத்தைப் போல் அல்லாமல், இன்று நவீன அணு ஆயுதங்களைப் பயன்படுத்தினால் உலகமே அழிந்து விடக் கூடிய அபாயத்திலிருந்து காக்க இச்சபை பெரிதும் உதவுகிறது.

இவ்வாய்வின் நான்காவது இயல் ‘சமூகவியல்’ கூறுகளில் மனிதநேயம் என்பதாகும். சங்க காலத்தில் பொது மொழியும், பொதுப் பண்பாடும் கொண்ட எண்ணிறந்த இனமக்கள் பல்வேறு நிலவியல் பகுதிகளில் வாழ்ந்தனர். நில இயல்புக்கு ஏற்ப மக்கட் பாகுபாடு அக்காலத்தில் இருந்தமை தெரிகிறது. தொழிலால் மட்டுமே பிரித்துக் காட்டப்பெற்ற பிரிவினர் இருந்தனர். இன்று இப்பாகுபாடில்லாமல் யாரும் எந்தத் தொழிலையும் செய்கின்ற வாய்ப்பும், வழியும், உள்ளது. அன்று துடியும், பறையும் கொண்டு ஒரு செய்தியை அனைவருக்கும் பரப்புகின்ற செயலானது இன்றும் சில கிராமங்களில் இருந்துவருகிறது. சமூகத்தில் உயர்ந்த நிலையில் இருந்தோர் பார்ப்பனராவார். தற்காலத்தில் சாதியற்ற சமுதாயம் உருவாக வேண்டும் என்று பலரும் கருதுகின்றனர்.

பண்டைத் தமிழ் மக்களின் மனவளமும், இன்றைய தமிழ் மக்களின் மனவளமும் மலைக்கும், மடுவுக்கும் உள்ள வேறுபாடாய் உள்ளன. தமிழனே தமிழனை அழிக்க நினைப்பதும், முயல்வதும், தமிழனே தமிழனின் வாழ்வையும், வளர்ச்சியையும் தீய்ப்பதும், மாய்ப்பதும் அன்றாடக் காட்சிகளாய் விட்டன. அரசர்கள்

கலைஞர்களிடத்துப் பெருமதிப்பு வைத்து அரசர்கள் எல்லாம் அவர்களைப் போற்றி அளவில்லாத பரிசில்களை வழங்கியும், கலைஞர்கள் செல்வ வாழ்வு வாழவில்லை என்பது சிந்தனைக்குரியது. கலை ஆக்கத்திற்கு அடிப்படையான உள்ளம் வானம்பாடி போன்றது. பொருளோடு தன்னைப் பிணித்துக் கொள்ள அது என்றைக்குமே விரும்புவதில்லை. அதனால் கலைஞர்கள் தங்கள் கலையில் மேலும் மெருகேற்றிக் கொள்வதே அவர்களின் வாழ்க்கை நோக்கமாக அமைகிறது. இந்த உண்மைகளைச் சிந்தித்து உணர்ந்து வாழ்ந்த சங்கால மக்கள் சமுதாய நலச் சிந்தனை வளத்தினர் என்பது தெளிவு. இந்த வளம்தான் சமுதாயத்திற்கு என்றைக்கும் தேவை.

சங்ககால மக்கள் தாம் வாழும் குடும்பத்தையும், சமுதாயத்தையும்,நாட்டையும், உலகையும் தம் வாழ்வுக்குத் தேவையான பிறவற்றையும் அறியவும், அறிந்து நல்வழியில் நடக்கும் கல்வி இன்றியமையாதது என்பதை உணர்ந்திருந்தனர். இக்காலத்தில் கல்வி கற்காதவர்களுக்கும், பெரியோர்களுக்கும் கல்வியைப் புகட்டுவதற்காக இலவசக் கல்வித் திட்டமும், முதியோர் கவ்வித் திட்டமும் சமுதாயத்தில் உருவாக்கப்பட்டுள்ளது. அக்காலத்தில் கல்விகற்றோர் குடி, செல்வம், வயது ஆகிய வேறுபாடு ஏதும் பாராட்டப் பெறாது சமுதாயத்தில் உயர்நிலையில் ஏற்கப் பெற்றனர். அறிவு, கொடைத் தன்மை மிகுந்த தமிழர் சமுதாயத்தில் கலைவளமும் தழைத்தோங்கியது. மான உணர்வும், நன்றியறிவும் தமிழர் போற்றிய தலை சிறந்த மனிதப் பண்புகளாகும். தீண்டாமை, தீமையில்லாச் சமுதாயம், தமிழ்ச் சமுதாயம் என்ற கருத்தினைக் கொண்டு பரந்த நோக்குடன் தமிழர் சங்க காலத்தில் வாழ்க்கைத் தேரைச் செலுத்தினர்.

இன்றைய சமுதாயத்தினரைப் போல், அன்றைய சமுதாயத்தினர் ஆண் குழந்தைகளை மட்டும் போற்றுபவராக அமையாமல், பெண் குழந்தைகளையும் போற்றும் பண்புடையவாராகத் திகழந்தனர் என்பது தெரியவருகிறது. புலவர்கள் வாழ்க்கை அக்காலத்தில் வறுமை வாழ்க்கையாகவே காணப்படுகின்றது. மக்களில் சிலர் செல்வ வாழ்க்யையும் மேற்கொள்ளாமல், வறுமையிலும் துன்பப்படாமல் இடைப்பட்ட வாழ்வு வாழ்ந்தமை எடுத்துக்காட்டப் பெற்றுள்ளது.

மனிதன் ஆவதும், அழிவதும், தன்னாலேதான் என்னும் விழுமிய கருத்தை அழுத்தமாக உணர்ந்து நடந்தனர் அக்காலத் தமிழர். கட்டடக்கலை, இசை, கூத்து முதலான நுண்கலைகளிலும், உண்மை, ஒழுக்கம், அன்பு, அருள், நட்பு முதலிய

நற்பண்புகளைப் பெற்றும், நலமுற வாழ்ந்ததனால் வையகத்தில் வாழ்வாங்கு வாழ்ந்தனர் எனலாம். இவ்வாறு நினைந்து, நினைந்து உவக்கும் அவர்தம் நேயம் - மனித நேயம் உயிர்ப் பயிர் செழிக்க உதவுதல் திண்ணம். அக்காலத்தில் அறிவுள்ளவனைத் தான் செல்வமுள்ளவனாகக் கருதினர். அத்தகையவனால் தான் உலகம் செழிக்கும் என முழுக்க, முழுக்க நம்பினர். இன்றைக்கு அந்த நம்பிக்கை வெறும் நட்சத்திரமாகி விட்டது. நெடுந்தொலைவில் நின்று மின்னிக் கொண்டிருக்கிறது.

பெரியவர்களைப் பேணிக் காப்போம் என்னும் நோக்கு எங்கு இருக்கிறதென்றே தெரியவில்லை. தற்போது ஆங்காங்கே திறக்கப்பட்டுள்ள முதியோர் இல்லங்களும், அனாதை ஆசிரமங்களும் இதற்குச் சான்று பகர்கின்றன. இன்று பணத்திற்கும், பதவிக்கும் வழங்கப்பட்டுள்ள முக்கியத்துவத்தைப் பண்புக்கும், தூய அன்புக்கும் ஒன்றுபட்டு வாழ வேண்டும் என்ற உயர்ந்த குறிக்கோளுக்கும் அளிக்கப்பட்டிருக்குமானால் நன்றாக இருந்திருக்கும். நமக்கு முன்னே வாழ்ந்தவர் வாழ்வை நினைத்துப் பார்க்கும் எண்ணம் அரும்புவிட்டால்தான், பசுமையான பயிரோடு இன்று கலந்து வளர்ந்திருக்கும் களையைப் பிடுங்கி எறியும் மனம் வரும்.

மக்களாகப் பிறந்தவர்களுக்குள்ளே அவர்கள் செய்கின்ற தொழிலால் சிறப்புடையவர்களாகப் போற்றப்படுவது பொருந்தாது. அவர்களிடையே காணப்படும் ஏற்றத் தாழ்வுகள் செயற்கையானவை. புறச்சார்பு உடையன. அப்புறப் போர்வையைக் கழற்றி எறிவோமானால் உள்ளே ஒருமைப்பாட்டைக் காணலாம் என்பதே நம்முடைய முன்னோர்கள் கண்ட உண்மையாகும். எனவே வேற்றுமைகளுக்கிடையே ஒற்றுமை காணுமாறு தூண்டுவதும், மனிதனை மனிதாக வாழுமாறு தூண்டுவதும், எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பதுவுமாகிய மனித இனநலக் கோட்பாட்டின் கூறுகள் சங்க நூல்களில் மிளிர்வதைக் காணலாம். பண்டைத் தமிழ் மக்கள் மக்களினத்தின், நல்வாழ்வில் ஆர்வம் காட்டி வந்தமைக்கு இப்பாடல்கள் சிறந்த சான்றாக அமைகிறது.

மனித இனத்தின் தீராச் சிக்கலாக இருந்து வருவது வயிற்றுப் பசியாகும். மனிதனாகப் பிறந்த ஒவ்வொருவனும் வளமாகவும், நலமாகவும், வாழப் பிறந்தவன். அப்படி வாழ வேண்டியவர்களுள் பலர் அன்றாட வயிற்றுப் பிழைப்பிற்குத் துன்பப்பட வேண்டியிருக்கிறது. போதிய அளவிற்கு உணவினைப் பெற முடியாமல் பட்டினி கிடந்து இறப்பவர்கள் மனித சமுதாயத்தில் அன்றும் இருந்தனர். இன்றும்

இருக்கின்றனர். அவர்களுடைய வயிற்றுக் கவலையை நீக்குவதற்குரிய வழிவகைகளைப் பற்றி அன்றைய சான்றோர்கள் பலர் சிந்தித்து செயல்பட்டுள்ளனர். இன்று இப்பொறுப்பை அரசு ஏற்றுக் கொண்டுள்ளது. ஆனால் அன்று அப்பொறுப்பை சமுதாயத் தலைவர்களே ஏற்றுக் கொண்டிருந்தனர். எனவே வளமாகவும், நலமாகவும், சீருடனும், சிறப்புடனும் வாழ்கின்றவர்களைக் காணும் பொழுது அறச்செயல்கள் செய்யுமாறு அச்சான்றோர்கள் அறிவுறுத்தியுள்ளமை தெரியவருகிறது.

வீரமும், ஈரமும் மனிதவாழ்வின் இரண்டு அடிப்படை அம்சங்களாகும். இவை இல்லாமல் மனிதகுல வாழ்வு இருந்ததில்லை சென்று போன உலகம் ஒவ்வொருவரைச் சுற்றி இயங்கியது. இன்றைய உலகம் பிரிவுகள் குறைந்து சிற்சிலரைச் சுற்றி இயங்குகிறது. நாளைய உலகமோ பிரிவுகள் மாய்ந்து எல்லோரையும் சுற்றி இயங்கப் போகிறது. அதுதான் நமது குறிக்கோள் உலகமாகும்.

ஒரு நாடு ஒருவனைச் சுற்றியே ஒரு அரசனின் குடை நிழலிலேயே இயங்கிய காலத்தில் வீரமும், ஈரமும் தனித்து உயர்ந்து நின்றன. ஒருவன் ஆட்சி, சமுதாய அமைப்பில் இவ்விரண்டிற்கும் முதன்மையிடம் இருந்து வந்தது. எவனால் கொல்லவும், வெல்லவும் முடிந்ததோ அவன் வீரனாவான். எவனால் கொடுக்கவும், பிறருடைய மனத்தைக் குளிர்விக்கவும் முடிந்ததோ அவன் வள்ளல் ஆவான். இந்த இரண்டின் தேவையை மிகுவிப்பதாகவே அக்காலச் சமுதாயம் அமைந்திருந்தது. ஈகைக் குணமும் சமுதாய வாழ்வில் தனக்கு இருந்து வந்த சிறப்பிடத்தைச் சிறுகச் சிறுக இழந்து வருகிறது. ஆட்சி இயல்களும், தொழில் துறைகளும், விரிந்து பரவாத பழங்காலத்தில் வறுமையைப் போக்க ஈகைப் பண்பு தேவையாக இருந்தது. இப்போதோ செல்வர்களாக இருப்பது சிலருக்குள்ள உரிமை என்ற பழம் போக்கு மாறிவிட்டது.

தொழில்கள் ஒரு சிலரின் வருவாயைப் பெருக்குவது பழைய நிலை. இன்று எந்தத் தொழிலும் பெரும்பாலோரின் வாழ்விற்கு வளம் தருவதாக அமைய வேண்டும். தொழிலின் பயன் ஒரு சிலரிடமே ஒதுங்கக் கூடாது என்னும் போக்கில் சமுதாயச் சிந்தனை உருவாகிவிட்டது. இந்த அடிப்படை நோக்கில் தொழில்கள் பெருகும்போது வருமானத்தில் ஏற்றத்தாழ்வு இருந்தாலும் இரந்துதான் வாழ வேண்டும் என்னும் இழிவான நிலை யாருக்குமே இராது. உழைத்து ஊதியம் பெறமுடியாதவர்களை அரசாங்கம் பராமரிக்க வேண்டும் என்ற திட்டம், இரத்தலையும், அதன் மேல்

வளர்கின்ற ஈகையையும் ஒழித்துவிடுகிறது.

கொடிய வறுமை இல்லை என்றால், வறுமை வயப்பட்டவர்க்குத் துணையாக வரும் வள்ளல் தன்மைக்கும் தேவையில்லை. அதை மிக உயர்ந்த பண்பாகப் போற்றிப் பாராட்டுவோரும் இருக்க மாட்டார்கள். இன்றைக்கு நாம் இந்த நிலையை அடைந்திராவிட்டாலும், நமது வாழ்க்கை இந்த உயர் சம ஒருமை நிலையை நோக்கியே இயங்குகிறது. சமுதாயத்தை அலசி, அதனை இயக்கும் பல்வேறு கலைகளிலும் இந்தப் போக்கு எழுந்து காண்பதைப் பார்க்கிறோம். தெய்வக் கொள்கை முதல், தினசரிக் கடமைகள் வரை எல்லாவற்றிலும் சண்டையில்லாச் சமுதாயமாகவும், வறுமையில்லா மக்கள் கூட்டமாகவும் வாழ்வதற்கான போக்குகளையே கடைப்பிடிக்க முயன்று வருகிறோம். இப்போதும் ஒவ்வொரு நாட்டிலும் அரசியல் கட்சிச் சண்டை இருக்கிறது.

சாதி, சமயக் கட்சி சண்டைகள் மனிதக் கூட்டங்களைத் தனித்தனியே பிரித்து வைத்தன. அரசியல் கட்சிச் சண்டையில் அப்படிப் பிரிந்து போக வாய்ப்பில்லை. சண்டை போட்டவர்களே ஒன்றாகக் கூடி அமர வேண்டிய கட்டாயத்தை அரசியல் ஏற்படுத்துகிறது. சமய, சமுதாயத் துறைகளிலும், வெவ்வேறு கருத்துகளும், போக்குகளும் உள்ளவர்கள் தனித்தனியே தான் வாழ வேண்டும் என்றிருந்த நிலை மாறிவிட்டது. எதிலும் சமாதான சகவாழ்வு வற்புறுத்தப்படுகிறது.

மனிதனின் பொது அறிவுப் பரப்பு விரிய, விரிய சமய பந்தங்கள் எல்லாம் மாற்ற முடியாத யான், எனது என்னும் தன்மூப்பு உணர்ச்சி மங்கி மடிந்து விடுகிறது. உயிர்களுக்கு அச்சம் காட்டிப் பிறரைப் பயமுறுத்துவது அநாகரிகம் என்ற எண்ணம் எழுந்துள்ளது. பிறன் ஒருவன் தன்கையை எதிர்ப்பார்த்து நிற்க வேண்டும் என்ற நிலை மாறி, பெரிய சாலையில் எல்லா வண்டிகளும் ஒருமித்துச் செல்வது போல அவரவர் வாழ்வை அவரவர் ஏற்று நடத்திச் செல்ல வேண்டும்.

உணவு, உடை, இருப்பிடம் முதலான அடிப்படைத் தேவைகளுக்கு ஒருவரை ஒருவர் நம்பியிருக்கக் கூடாது என்னும் மனவேட்கை எழுந்துவருகிறது. இந்த வகையில் இன்று நாம் காண்பது விடிவெள்ளியின் மங்கிய ஒளியே என்பது உண்மை. ஆனால் அதே விடிவெளிச்சம் பகல் வெளிச்சமாக மலரவேண்டும் என்பதே அனைவரின் ஆசையாகும். சமுதாய வாழ்வின் பல அம்சங்களிலும் அதற்கான அறிகுறிகளைப் பார்க்கிறோம். இந்த உலகம் ‘எல்லார்க்கும் எல்லாம்’ என்று

இருப்பதான இடம் நோக்கி நடக்கின்றது என்னும் குரல் அக்காலத்தின் கனவுக்குரல் அல்ல. விரைவில் உருவாகப் போகும் நனவை முன் உணர்ந்து, எழுந்த அறிவிப்புக் குரலாகும். உலகம் இன்று முதல் சங்கத் தமிழன் சொன்ன அந்த வழியில் நடப்பது என்று முடிவெடுத்து அதன்படியே மனித நேயத்தோடு வாழுமானால் இன்னும் சமுதாயம் சிறந்த வாழ்வு பெறும் என்பது திண்ணம்.

'இறையியல் கூறுகளில் மனிதநேயம்' என்பது இவ்வாய்வின் ஐந்தாவது இயலாகும். பழங்கால நாகரிகம் படைத்த எந்த நாட்டிலும் இறை வணக்கம் உண்டு. இறை நம்பிக்கையும் உண்டு. சங்ககால மக்களை அறநெறியிலே நடப்பதற்கு வழிகாட்டியது இறைவணக்கம் தான். அறிவும், கல்வியும் குறைந்திருந்த அநாகரிக காலத்தில் மக்கள் தெய்வத்திற்கு அஞ்சி வாழ்ந்ததால் தான் அவர்கள் அறநெறி தவறாமல் நடந்து வந்தனர். விலங்குகள் போல் வாழ்ந்த மக்கள், மனிதப் பண்புடன் வாழ்வதற்கு வழிகாட்டியது இறையியல் கொள்கையாகும். தெய்வ நம்பிக்கை இல்லாமல் மக்கள் வாழ்ந்த காலம் ஒன்று உண்டு. அது நாகரிகமற்ற காலம். மனிதர்களையே அடித்துத் தின்று காட்டுமிராண்டித்தனமாக வாழ்ந்தகாலம். வரலாற்றுக்கு எட்டாத காலம்.

இறையியல் நம்பிக்கைக்கு அடிப்படை அச்சம்தான் என்று கூறலாம். ஆனால் தெய்வம் உண்டு. அதற்கு நம்மைவிட மிகுந்த ஆற்றலுண்டு. அதனால் எதையும் செய்ய முடியும் என்ற எண்ணம் பிறந்த பிறகுதான் மனிதன் நன்மை, தீமைகளைப் பகுத்தறியத் தொடங்கினான். கட்டுப்பாட்டுடன் நடக்கத் தொடங்கினான். மக்களிடையே நல்ல குடும்ப வாழ்வு, அரசியல் அமைப்பு, சமுதாயக் கட்டுப்பாடு ஆகிய இவை இறைநம்பிக்கைக்குப் பிறகுதான் உண்டாயின. ஆயினும் கொடுமைக்கும், கொள்ளைக்கும் கூட தெய்வ நம்பிக்கை பயன்பட்டது என்ற இவ்வுண்மையை நாம் மறுக்க இலயாது.

சங்க கால மக்கள் ஐவகை நிலங்களில் வாழ்ந்தனர் என்பது, அவ்வந் நிலங்களின் இயல்புக்கு ஏற்ப தெய்வங்களை வழிபட்டனர் என்பது தெரிய வருகிறது. தமிழ் நாட்டில் வணங்கப்பட்டு வந்த தெய்வங்கள் இவை என்பதையும், தெய்வங்களைப் பற்றிய வரலாறுகளையும், அவ்வரலாறு கூறும் இலக்கியங்களையும், தமிழ் மக்கள் அறிந்திருந்தனர். அந்தணர் முதலிய பல வகுப்பினர் இருந்தனர். தெய்வங்களுக்குப் பலியிட்டும், திருவிழாக்கள் செய்தும் வணங்கினர். வேதங்கள் ஓதப்பட்டு,

வேள்விகள், நடைபெற்றன. உருவ வணக்கம், அருவ வணக்கம் என்று மக்கள் பல தெய்வங்களை வணங்கினாலும் அவர்கள் ஒருவரை ஒருவர் வெறுக்கவில்லை. இறைவணக்கம் காரணமாக அவர்களிடையே பிரிவினைகள் ஏற்படவில்லை. இச் செய்திகளைப் பத்துப் பாட்டுள் ஒன்றாகிய திருமுருகாற்றுப் படையால் அறிய முடிகிறது.

அக்காலத்தில் முருகனைப் பார்த்தவுடன், அல்லது பார்க்கும் சமயம் கிடைத்தால் வாயால் புகழ்ந்து பாடி, மனத்தால் வாழ்த்திக், கையைத் தலை மேலே குவித்துப் பணிந்து திருவடிகளில் வீழ்ந்து வணங்குவது முறையாக இருந்தது. அது போலத்தான் இன்றும் நாம் இறைவனை வழிபட்டு வருகின்றோம். முருகக் கடவுள் சீற்றம் மிக்கவர் என்பதை அக்கால அரசனின் சீற்றம் முருகனின் கோபத்திற்கு ‘முருகுறழ்ப் பகை’ என்று மதுரைக் காஞ்சி கூறுகின்றது. தலைவியின் நோயைக் கண்டு தெய்வக் குற்றத்தால் நேர்வது என்று தாய் அஞ்சுவதும், அதற்காக வெறியாடல் எடுப்பதும் அக்கால வழக்கமாக இருந்து வந்திருக்கின்றது.

பல்வேறு இனிப்புப் பொருட்களில் இருக்கின்ற சுவை இனிப்பு என்ற ஒன்றுதான். அதுபோல மனிதகுலம் பலவாறு பிரிந்திருந்தாலும் அவர்களிடையே உள்ள மனிதநேயம் ஒன்றுதான் என்பதையும் இறைவனைப் பல்வேறு உருவத்தில் வழிபட்டாலும், அவன் எல்லோரிடமும் பொழியக்கூடிய அருள் ஒன்றுதான் என்பதையும் சங்ககால மக்கள் அறிந்திருந்தனர். திருமகள் செல்வத்திற்குரிய தெய்வம் எனச் சங்ககால முதல் மக்கள் நம்பி வந்தமை தெரிகிறது. முருகன், திருமால், சிவபெருமான், கொற்றவை, திருமகள் போன்ற தெய்வங்களை வழிபட்டதோடு அமையாமல் இந்திரன், வருணண், பிரமன், அறக்கடவுள் போன்ற பிறதெய்வங்களை வழிபட்டு பயன் பெற்ற நிகழ்ச்சியையும் சங்கப்பாடல்கள் தெரிவிக்கின்றன.

அக்காலம் முதல் இக்காலம் வரை தர்மக் கடவுளாகிய கூற்றுவனுக்கு மக்கள் அஞ்சியிருந்தமை புலப்படுகிறது. மலைப்பக்கங்களில் தெய்வங்கள் உறைவதாக அக்கால மக்கள் நம்பினர். மலைப்பகுதியில் வானர மகளிர் இருப்பர் என்பதும், அவர்கள் செல்கின்றவர்களுக்குத் துன்பத்தைத் தருவர் என்றும், அவர்களைக் கண்டு வழிச் செல்வோர் அஞ்சுவர் என்பதும் பெறப்படுகிறது. நாக வழிபாடு அக்காலத்திலேயே இருந்தது என்பதும், கைகளைக் கொட்டி குழியிலிருக்கும் பாம்பை வெளியே வரவழைப்பர் என்ற செய்தியும் மலைபடுகடாத்தால் அறிந்து கொள்ள

முடிகிறது.

திருமணமாகாத பெண்கள் நீர்த்துறையில் பாவையை வைத்து வழிபடும் வழக்கம் அக்காலத்தில் இருந்திருக்கிறது. இன்றும் கிராமத்து மக்கள் திருமண நாளுக்கு முன்பாக தத்தம் வீட்டிலுள்ள தெய்வங்களுக்குப் படையலிட்டு வழிபடுவதைக் காணலாம். சுவர்ப்பாவை வழிபாடு, கடல் தெய்வ வழிபாடு, போன்றவையும் அக்காலத்தில் வழக்கில் இருந்தது. இன்று பெண்கள் மாலை நேரத்தில் விளக்கேற்றி இறைவனை வழிபடுதலைப் போல அன்றும் பெண்கள் வழிபட்டு வந்தனர். வேப்ப மரத்தைத் தெய்வமாக வணங்கும் வழக்கம் இன்று இருப்பதைப் போல அன்றும் இருந்தது என்பதை அகநானூறு உணர்த்துகிறது.

அக்காலத்தில் பெண்கள் கூந்தலை விரித்திருப்பது தீய சகுனமாகக் கருதப்பட்டது. இன்றும் மக்களிடையே இவ்வழக்கம் இருந்துவருகிறது. பெண் குழந்தைகளை அரசு தொட்டிலில் போடுகின்ற இக்கால நிலை அக்காலத்தில் இல்லை. பொதுவாக ஆண் குழந்தைகளை ஈன்றெடுத்த பாடல்கள் பல இருப்பினும் சிறப்பாக ஒரு பாடல் பெண் குழந்தையை வேண்டிப் பெற்ற நிகழ்ச்சியைக் குறிப்பிடுகிறது. அக்காலத்தில் குழந்தையைத் திருமால் காக்கவேண்டும் என்பதற்காக சங்கு, சக்கரம், வில், வாள், கதை என்ற ஐம்படைத் தாலியை அணிவித்து வணங்குவர். இந்த முறை காலப்போக்கில் மாறி நாய், தாயத்து, திறவுகோல் எனப் பொன், வெள்ளி, முதலான உலோகத்தால் செய்து குழந்தைகளின் அரைஞாண் கயிற்றில் கோர்த்துத் தற்காலத்தில் அணிகின்றனர்.

இக்காலத்தில் 'தூவி' என்று வழங்குகின்ற சொல்லை அக்கால மக்கள் பலி என்று பயன்படுத்தியுள்ளனர். சான்றாக, பூப்பலி, அரிசிப் பலி போன்ற சொற்கள் சங்கப் பாடல்களில் இடம் பெற்றிருத்லைக் காண முடிகிறது. இன்று விழாக்களின் போது கோயில்களில் கொடியேற்றுவதுபோல அன்றும் வெண்மையான துணியினால் ஆன கொடியேற்றியமை தெரிய வருகிறது.

திருமாலை வணங்கிச் செய்யும் திருவோண விழாவும், கார்த்திகை விளக்கீடும், பிறவாயாக்கைப் பெரியோனாகிய சிவபெருமானை வழிபடும் திருவாதிரை விழாவும் போன்ற விழாக்கள் எடுத்து சங்ககால மக்கள் இறைவழிபாடு செய்து, உள்நாட்டு மக்கள் தங்களுக்குள் அன்பையும், பாசத்தையும் பரிமாறிக் கொண்டனர் என்று தெரிகிறது. அக்காலத்தில் பெரிய மாடமாளிகைகளில் செம்மறிக் கடாக்களைப் பலி

கொடுப்பது போல தற்காலத்திலும் கிராமங்களில் விழாக்கள் நடைபெறும் பொழுது சிலர் நேர்த்திக் கடனாக இச்செயலைச் செய்து வருகின்றனர்.

போரிலே வீரமரணம் அடைந்த வீரர்களுக்கு நடுகல் வைத்து வணங்கியுள்ளனர். அந்த நடுகல்லிற்கு மயில் தோகையைச் சூட்டியுள்ளனர் என்பது தெரிகிறது. இவ்வழிபாடே பிற்காலத்தில் சிறு தெய்வ வணக்கமாகத் தோன்றியிருக்கலாம். மதுரைவீரன், சுடலை மாடன், இருளன், கறுப்பன் போன்ற சிறு தெய்வவழிபாடு நடுகல் வழிபாட்டிலிருந்து தோன்றியது என்று கருதுவதற்கு இடமுண்டு. தமிழகத்தின் செங்கல்பட்டு, தர்மபுரி மாவட்டங்களில் தனி நடுகற்களும், கல்வீடு அமைப்பில் உள்ள நடுகற்களும் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. பண்டைய நடுகற்களுள் பல, இன்றைய மக்களால் வழிபடப்படுகின்றன.

இன்று போலவே அன்றும் இறந்தோர்க்குப் பிண்டமும், நீரும் அளிப்பதற்கு ஆண்மகன் வேண்டும் என்ற நம்பிக்கை அக்கால மக்களிடையே இருந்தது என்பது தெரிய வருகிறது. இல்லறத்தில் இன்புற்று வாழ்ந்த பின்னரே இறுதியில் துறவை மேற்கொள்ள வேண்டும் என்ற கர்மயோக தத்துவத்தைச் சங்கப்பாடல் சுட்டுகிறது. இறந்த போனவர்களைத் தெய்வமாக வணங்கும் வழக்கம் அக்காலத்தில் இருந்தது. இவ்வழிபாடு தற்காலத்தில் திதி, திவசம், கன்னிபூசை, சேலை வைத்துப் பூசித்தல் என்று நடைபெறுகிறது. ஆண்டு தோறும் குறிப்பிட்ட நாளில் வீடுகளில் இந்நிகழ்ச்சி கொண்டாடப்பெறும்.

இன்று இறந்தவர்களுக்கு ஆண்டுக்கு ஒரு முறை இறந்த நாளன்றும், நல்ல காரியங்கள் நடைபெறும் போதும் அவர்களை வேண்டி அவர்கள் விரும்பிய பொருட்களைப் படையலிட்டு வழிபடுவதைப் போல அன்றும் நடுகல் வீரனுக்குப் போருக்கு புறப்படுவதற்கு முன்னும் வெற்றி பெற்றுத் திரும்பிய பின்னும் அவன் விரும்பிய பொருட்களைப் படையலிட்டு வழிபட்டமை அறிந்து கொள்ள முடிகிறது. கடவுளர்க்குத் திருவுரு அமைத்து வழிபட்டதைப் போல நடுகல் வீரர்க்கும் உருவம் அமைத்து வழிபட்டுள்ளனர். இன்றும் சிலர் அன்பு மிகுதியால் இறந்து போன தாய், தந்தையர்க்கு உருவம் அமைத்துக் கோயில் கட்டி வழிபடுகின்ற முறை இருந்துவருகிறது.

இன்று நாம் கோயில்களை அமைத்து வழிபடுவதுபோல, அன்று பல்வேறு சமயத்தைச் சார்ந்தவர்கள் பள்ளிகள் அமைத்தும் இறைவனை வழிபட்டனர். பௌத்தப்

பள்ளிக்கு முதுபெண்டிர் தம் குழந்தைகளை அழைத்துச் சென்று தெய்வ வழிபாடு நடத்தினர். சமணர்களின் பள்ளி அமண் பள்ளி என்று வழங்கப்பட்டது. சாவக நோன்பிகளாகிய சமணர்கள் அருகக் கடவுளை பூவும் புகையும் ஏந்தி வழிபட்டனர் என்பது தெரிகிறது.

அந்தணர் வழிபாடு செய்த இடம் அந்தணர் பள்ளி என்று வழங்கப்பட்டது. அந்தணர்கள் துறவு மேற்கொண்டு பொதுப்பணி ஆற்றினர். வேதம் ஓதுகின்ற உயர்ந்த செயலை இவர்கள் மேற்கொண்டனர். அதனால் மாமழை பொழிந்து, விளைபொருள் பெருகி இல்லறம் சிறக்கும் என்று சங்கத்தமிழர் நம்பினர். நாட்டு மக்கள், நாட்டு நலன் கருதி அரசன் பல வேள்விகள் நடத்திய செய்தியும், அவ்வேள்வியை நடத்துவதற்கு அந்தணரை நியமித்த செய்தியும் சங்கப்பாடல்கள் மூலம் தெரிய வருகிறது. அந்தணர்களைத் துன்புறுத்துவது பாவம் என்ற நம்பிக்கையும், அவர்கட்குப் பொன்னும், பொருளும் கொடுத்துப் பேண வேண்டும் என்ற உயர்ந்த மனிதநேயம் அக்கால மக்களிடையே நிலவியது. இவர்கள் வழிப்போக்கரின் பசியைத் தணித்து வழிநடத்திய செய்தியால் அவர்களின் மனிதநேயப் பண்பு புலப்படுகிறது.

அரச நீதியில் இறைமைப் பண்புகளைக் காண்பதிலும், நல்லற வேந்தனை மனித தெய்வமாகப் போற்றுவதிலும், அறம் தழுவா அரசன் அழிவான் என்று எச்சரிப்பதிலும், இயற்கை தெய்வங்களின் வழி மனிதநேயம் வளர்ந்த தன்மையும், செங்கோல், வேதம், தவம், கற்பு, வான் சிறப்பு இவை இறைமையின் உறுப்புகளே என்றும், அவை ஒன்றையொன்று சார்ந்தவை என்றும், முழுமையான மனித நேயத் தத்துவத்தை வழங்குவது சங்கத் தமிழ் நல்லுரை என்றும் தெரிய வருகிறது.

இவ்வாறு சங்ககாலத்திற்குப் பிறகு தோன்றிய பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் நீதி இலக்கியங்களில் மனித நேயம், அக இலக்கியங்களில் மனிதநேயம், ஐம்பெருங்காப்பியங்களில் மனித நேயம், கம்பராமாயணத்தில் மனித நேயம், இடைக்காலத்தில் தோன்றிய இலக்கியங்களுள் பக்தி இலக்கியங்களில் மனித நேயம், சிற்றிலக்கியங்களில் மனித நேயம் போன்ற பல்வேறு தலைப்புகளில் ஆய்ந்து அவற்றுள் பொதிந்து கிடக்கும் மனித நேயக் கருத்துகளை தமிழ்கூறும் நல்லுலகத்திற்கு அளித்தல் இனிவரும் ஆய்வாளர்களின் தலையாய கடனாகும்.

மேலும் தற்கால இலக்கியங்களுள் சிறுகதைகளில் மனிதநேயம், புதினங்களில் மனிதநேயம், நாடகங்களில் மனிதநேயம், கவிதைகளில் மனிதநேயம்,

பத்திரிகைகளில் மனிதநேயம், மனிதநேயத்தின் இன்றியமையாமை, காலந்தோறும் மனிதநேயத்தில் ஏற்பட்டு வரும் மாற்றங்கள், பொது மக்களிடத்து நிலவும் மனிதநேயம் முதலான தலைப்புகளில் ஆய்வு செய்ய இன்னும் வாய்ப்புகள் உள்ளன.